# வங்கியியல் சட்டமும் நடைமுறைகளும்

(பட்டப்படிப்பிற்குரியது)

எ. கார்டன்

க. நடராசன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை

# வங்கியியல் சட்டமும் நடைமுறைகளும்

(பட்டப்படிப்பிற்குரியது)



பேராசிரியர் எ. கார்டன்
முனைவர் க. நடராசன்



பதிப்புத்துறை

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை

பதிப்பு எண் : 132

விலை : ரூபாய் 140

பதிப்பு விவரங்கள் :

1. ஆசிரியர்கள் : (1-9 இயல்கள்) பேராசிரியர் எ. கார்டன், எம்.காம்., எம்.ஃபில்., வணிகவியல் துறை, அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி - 626 124.

(10-21 இயல்கள்) முனைவர் க. நடராசன், எம்.காம்., பிஎச்டி., வணிகவியல் துறை, வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி, மதுரை - 625 019.

2. தலைப்பு : வங்கியியல் சட்டமும் நடைமுறைகளும்

3. பதிப்பு

அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 625 021.

ஆ) பொதுப்பதிப்பாசிரியர் : முனைவர் ம.திருமலை, பதிப்பாளர்.

இ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை - 625 021.

ஈ) ஆண்டு : 1997

உ) பக்கங்கள் : 368

ஊ) பொருள் : வணிகவியல்

எ) படிகள் : 500

ஏ) அச்சும் அமைப்பும் : லிட்டில் ஸ்டார், மதுரை - 625 001

4. நூல் தயாரிப்பு ஆலோசனைக்குழு :

1. முனைவர் நீ. தாணுலிங்கம்
2. முனைவர் வெ. அழகப்பன்
3. பேராசிரியர் ந. மு. கணேசன்.

# வாழ்த்துரை

பேராசிரியர் கு. ஆளுடையபிள்ளை,
துணைவேந்தர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

ஓர் இனத்தின் பண்பாட்டு அடையாளங்களுள் இன்றிமையாதது அவ்வினத்திற்குரிய தாய்மொழியாகும். எனவே மொழியைப் பேணுவதும் வளர்ப்பதும் அம்மொழி பேசும் மக்களின் தலையாய கடமையாகும். ஓர் இனத்தின் மொழி வளரவளர, அவ்வினம் பண்பாட்டுத்துறையில் மேன்மையை அடையும்; மக்கள் இனம் மேன்மையை நோக்கி உயரஉயர, மொழி உயரும். எனவே மொழி வளர்ச்சியும் மக்களினத்தின் வளர்ச்சியும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்திருப்பவை. பண்ணும் ஓசையும் போல பழமும் சுவையும் போல ஒன்று கலந்து காணப்படுபவை தான் மொழி வளர்ச்சியும் மக்கள் பண்பாட்டு வளர்ச்சியும்!

இத்தகைய வளர்ச்சி நிலையைக் கருத்தில் கொண்டுதான் தமிழ்ப்புலவர் பெருமக்கள் மொழிக்கு ஆக்கம் சேர்க்கும் புதுவரவாக நூல்கள் எழுதப்படுதல் வேண்டும் என்று வற்புறுத்தினர். இறவாத புதுநூல்கள் தமிழ்மொழியில் எழுதப்படல் வேண்டும் என்ற சிந்தனைக்கு இணங்க, இன்று பல துறைகளிலும் நூல்கள் எழுதும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

தமிழக அரசின் மொழிக் கொள்கைக்கு இணங்க, தமிழ்மொழி வாயிலாக உயர்கல்வியைக் கற்பிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது. எனவே உயர்கல்விக்குரிய விரிவான தரமான பாடநூல்களைத் தக்க பேராசிரியர்களைக் கொண்டு எழுதுவிக்கும் திட்டம் தமிழக அரசினால் உருவாக்கப்பட்டுள்ளது. தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம் ஒருங்கிணைத்துச் செயற்படுத்தும் இத்திட்டத்தின் கீழ், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் வணிகவியல், வேதியியல் முதலான பாடங்கட்குரிய நூல்கள் எழுதப்பட்டு வருகின்றன. இவ்வரிசையில் **வங்கியியல் சட்டமும் நடைமுறைகளும்** என்ற இந்நூல் வெளிவருகின்றது. உயர்கல்வி பயிலும் மாணவர்களின் தேவையை நிறைவு செய்யும் வகையிலும் அவர்களது மொழித்திறனையும் கற்கும் திறனையும் வளர்க்கும் வகையிலும் இந்நூல் அமைகின்றது.

துறைதோறும் துறைதோறும் தமிழுக்கு ஆற்றப்பட்ட தொண்டாகவும் இந்நூல் கருதத்தக்கது.

உயர்கல்விக்குரிய இப்பாடநூல் மாணவர்கட்கு மட்டுமல்லாமல் அறிவுத் தேடலில் ஈடுபடும் பிறருக்கும் பயன்படும் நாளே தமிழ் இன அறிவு வரலாற்றில் பொன்னாளாகும்.

தமிழ்கூறு நல்லுலகம் இம்முயற்சிகளுக்குத் தக்க ஏற்பினை அளிக்கும் என்று நம்புவோமாக!

*கு. ஆளுடையபிள்ளை.*

# முகவுரை

ஒண்பொருள் இயற்றும் வணிகத்தின் இயல்புதனை இயம்பிடும் வணிகவியல் இன்றைய வாழ்வில் ஏற்றமிகு இடத்தைப் பெற்றுள்ளது. பல்கலைக்கழகங்களும் வணிகவியல் கற்பிப்பதை நோக்காகக் கொண்டுள்ளன. வணிகவியல் கற்போருக்கு வங்கியியல் சிறப்புப் பாடமாகத் திகழ்வதால், மாணாக்கர் நலம் கருதியும், வங்கியியல் குறித்து அறிய விழைவார் அறிந்து தெளிதற் பொருட்டும் "வங்கியியல் சட்டமும் நடைமுறையும்" என்ற நூலினை ஆக்கியுள்ளோம்.

பல்துறை அறிவு பெறுவதற்கு நூல்களைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் வேண்டும். அயல் மொழியினைக் காட்டிலும் தாய் மொழியில் கற்கும் போது புரிதற்கு எளிதாகிறது; சிந்தனை தூண்டப்படுகிறது; பாடத்தில் கவனம் செல்லுகிறது; ஆர்வம் மிகுகிறது. இஃது உளநூல் முடிவு மட்டுமன்று; தாய் மொழியைப் பயிற்று மொழியாகக் கொண்ட நாடுகள் நேரே கண்டறிந்த உண்மை.

'உள்ளத்தில் தோன்றும் கருத்தை வெளிக்காட்டுவதற்குத் தமிழைவிட எந்த மொழியும் இயைந்ததாக இல்லை' என்பது மேலை நாட்டாரும் உணர்ந்த - உணர்த்திய உண்மை. இன்று, எங்கும், எதிலும் தமிழ் வளரவும் இடம் பெறவும் வேண்டும் என்னும் ஆர்வம் பெருகியுள்ளது. 'தொண்டு செய்வாய்! தமிழுக்குத் துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே' என்ற புரட்சிக்கவியின் கட்டளையைக் கடமையாகக் கொண்டுள்ள நமது தமிழக அரசினர் 'தமிழ் நாடு மாநில உயர் கல்வி மற்றும் ஒருங்கிணைத்துச் செயற்படுத்தும் தமிழ் வழிப் பாடநூல்கள் தயாரிக்கும் திட்டத்தை' உருவாக்கி, உயர்கல்வியைத் தமிழில் பயிற்றுவிக்கத் தேவையான பாடநூல்களை எழுதும்படி பாடநூலாசிரியர்களை ஊக்குவித்து வருகின்றனர்.

தமிழ்வழி வங்கியியல் கற்பிக்க வேண்டும் என்ற ஆர்வம் மிக்க மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணை வேந்தரின் தூண்டுதலால் எழுச்சி பெற்ற யாம், தமிழால் முடியும் என்னும் உள்ளார்ந்த நம்பிக்கையுடன் செயற்பட்டுள்ளோம். மாணாக்கர் புரிந்து கொள்ளும்படி எளிய நடையிலும் தமிழ்க் கடலாரின் எண்ணவழி தூய தமிழிலும் கருத்துக்களை வழங்கியுள்ளோம். வங்கிகள் தொடர்பான வழக்குகள் பலவற்றின் தீர்வுகளை அடிப்படையாகக் கொண்டு வங்கியியல் நடைமுறைகளை விளக்கியுள்ளமை இவண் குறிப்பிடத்தக்கது.

எமது இந்நூல் விரைந்து வெளிவருவதற்கு அயரா ஆர்வம் காட்டிய பதிப்பாளரது அரும்பணி குறித்துப் பெருமையுறுகின்றோம்.

நூல் மேலும் சிறப்புறுதற்கான ஆக்கமுறு வழிமுறைகளை வரவேற்கிறோம்.

எ. கார்டன்,
க. நடராசன்

# பொருளடக்கம்

பக்கம்


| | | |
|---|---|---|
| 1. | வங்கியரும் - வாடிக்கையரும் | 1–50 |
| 2. | வைப்புகள் | 51–82 |
| 3. | செல்லேடு | 83–97 |
| 4. | வாடிக்கையர் - பல்வேறு வகையினர் | 98–133 |
| 5. | காசோலை | 134–157 |
| 6. | கருநிலைத்திருத்தம் | 158–170 |
| 7. | கீறல் | 171–190 |
| 8. | புறக்குறிப்பு | 191–212 |
| 9. | குறியிடுதல் | 213–221 |
| 10. | செலுத்தும் வங்கியர் | 222–244 |
| 11. | வசூலிக்கும் வங்கியர் | 245–257 |
| 12. | வங்கியரின் உரிமைகள் | 258–266 |
| 13. | கடனும் முன்பணமும் | 267–277 |
| 14. | பற்றுப் பொறுப்பினை ஏற்படுத்தும் முறைகள் | 278–293 |
| 15. | பிணையற்ற கடன் | 294–305 |
| 16. | கடன்களுக்கான பிணையங்கள் | 306–310 |
| 17. | பொருள்களின் மீது கடன் அளித்தல் | 311–316 |
| 18. | சரக்குரிமை ஆவணங்கள் மீது கடன் அளித்தல் | 317–326 |
| 19. | பங்கு மாற்றக ஆவணங்கள் மீது கடன் அளித்தல் | 327–332 |
| 20. | இதரப் பிணையங்கள் | 333–346 |
| 21. | துணைப்பணிகள் | 347–362 |

# வங்கியரும் - வாடிக்கையரும்
## (BANKER AND CUSTOMER)

"பொருள லல்லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்"

என்று 'பொருளின்' மாண்புதனை மன்பதைக்கு எடுத்து மொழிகின்றார் தெய்வப்புலவர் வள்ளுவர். மேலும், நாடென்பது நாடா வளமுடைத்தாய்த் திகழ 'செய்க பொருளை' எனவும் வலியுறுத்திக் கூறுகின்றார். எனவே தனியொருவருக்கும், நாட்டுக்கும் ஆக்கம் தரும் பொருள் வரும் வழிகளை ஆராய்ந்து பொருளைப் பெருக்குவது நல்லோர் கடன்.

பொருளைப் பெறவும், பெருக்கவும், ஈட்டவும் காக்கவும் ஏற்ற 'வைப்பு உழி' களாகத் திகழ்வனவே வங்கிகள். அறிவியல் திறம்கொண்டு புதுமை பல படைத்து, நிலவையும் எட்டிப் பிடித்துவிட்ட இன்றைய காலகட்டத்தில் மக்கள் வாழ்வில் இன்றியமையா இடம்பெற்று விட்டன வங்கிகள். 'வங்கியில்லா ஊர் பாழ்' எனும் புதுமொழி தோன்றும் வண்ணம் நாட்டின் பட்டி தொட்டிகளிலெல்லாம் வங்கிகள் தங்கள் பயனை வாரி வழங்கிக் கொண்டிருக்கின்றன.

வணிகர், வேளாளர், மருத்துவர், மாணாக்கர், மகளிர், தொழிலாளர் போன்ற அனைத்துத் துறையினருக்கும் ஊன்றுகோலாய் உறுதுணை அளித்து அவர்தம் தேவைகளை நிறைவேற்றுவதையே தம் சேவைகளாய்க் கொண்டு, நாடு 'தன்னிறைவு' பெறுவதையே நோக்காகக் கருதி செயலாற்றுகின்றனர் வங்கியர்.

இன்று, நாட்டின் நலன் கருதி வகை வகையான வங்கிகள் பெருகியுள. வாணிகத்தைப் பெருக்கும் வணிக வங்கி, தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையான தொழில் வங்கி, உழுதொழில் நலனுக்கென உருவான கூட்டுறவு வங்கி, அயல்நாட்டு வாணிப வளர்ச்சிக்கான அந்நிய செலாவணி வங்கி, கிராம நலன் கருதும் கிராம வட்டார வங்கி, சேமிப்புப் பெருக சேமிப்பு வங்கி, இவை அனைத்தையும் கண்காணித்துக் கட்டுப்படுத்தத் தலைமை வங்கி அல்லது மையவங்கி (Central Bank) என எண்ணிலடங்கா வங்கிகள் பணியாற்றுகின்றன. இத்தகை வங்கியியல் குறித்து அறிய விழைவது இயல்பே!

## வங்கியியல் தோற்றம்

வங்கியியல் பணி வெவ்வேறு நாடுகளில், வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு விதமாகத் தொடங்கப்பட்டிருப்பதால் 'வங்கி' என்ற சொல் குறித்தும் வங்கித் தொழிலின் தோற்றம் குறித்தும் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

'வங்கி' என்ற சொல் 'பெஞ்சு' என்று பொருள்படும். 'பாங்கோ' , அல்லது 'பாங்க்' (Bank) அல்லது 'பாங்கஸ்' (Bancus) என்ற ஃபிரன்ஞ்சு மூலச் சொல்லில் இருந்து பிறந்ததாகக் கூறுவர். கிறிஸ்து பிறப்பதற்குப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே யூதர்கள் 'பெஞ்சு' போன்ற மரப்பலகையில் காசுகளைப் பரப்பி வைத்து வட்டிக்குத் தந்தும், பண்டங்களைப் பெற்று காசுகளைக் கொடுத்தும் காசுத்தொழில் நடத்தினர். காசுக்காரர்கள் என்றழைக்கப்பட்ட அவர்கள் 'பெஞ்சுகளில்' அமர்ந்து இத்தொழிலைப் புரிந்ததால் 'பெஞ்சு' என்ற இருக்கையின் பெயர் தொழிலுக்கு ஆகி, பின்னர் மருவி 'பாங்க்' ஆயிற்று என்பர்.

மெக்லியோட் என்னும் அறிஞர், தனது 'வங்கித் தத்துவமும் நடைமுறையும்' என்ற நூலில் இக்கருத்தை மறுத்து, பணம் கொடுத்து வாங்குவோர் 'பெஞ்சியர்' என்று அழைக்கப்பட்டதில்லை என்கிறார்.

வங்கி என்ற சொல் 'ஒரு கூட்டு நிறுமத் தொகை' என்று பொருள்படும் 'பேக்' (Back) என்ற ஜெர்மானியச் சொல்லிலிருந்து தோன்றியிருக்கலாம் என்ற கருத்தும் நிலவுகிறது.

மேற்கூறிய கருத்துக்களால், பணத்தைக் கொடுத்து வாங்கும் பணியைக் குறிப்பனவே 'பாங்கோ', 'பேக்' போன்ற சொற்கள் என்ற கருத்து பெறப்படுகின்றது. எனவே பணம் பெறல் - தரல் அடிப்படையில் அமைந்த தொழிலே பின்னர் வங்கித்தொழில் என்ற பெருந்தொழிலாக வளர்ந்தது என்பதும், அத்தொழிலில் ஈடுபட்டோர் வங்கியர் எனப்பட்டனர் என்பதும் தெளிவு.

## வங்கியர்

வங்கித் தொழிலை மேற்கொண்டிருப்பவர்களை 'வங்கியர்' என்று கூறுவர். ஆனால் 'வங்கியர்' என்ற சொல்லின் இலக்கணத்தை வரையறுத்துக் கூறுவது எளிதன்று. ஏனெனில், வங்கியர் செய்யும் பணிகள் பல. பிறருடைய பணத்தைக் கொண்டு தம் அறிவுத் திறத்தால், தொழில் புரியும் இவர்கள், பணத்தை வைப்பாகப் பெறுபவர் மட்டுமல்லர்; 'முகவர்' களாகவும் பணிபுரிகின்றனர். வாடிக்கையருக்கு நிதிசார்ந்த பல நுட்பமான அறிவுரைகளை வழங்கும் அறிவுரையாளர்களாகவும் செயற்படுகின்றனர். எனினும், 'வங்கியர்' என்ற சொல்லின் இலக்கணத்தை வரையறுக்க சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அவற்றைக் கீழ்க்கண்ட தலைப்புகள் வாயிலாகக் காண்போம்.

(1) முற்காலக் கருத்து

(2) வங்கியியல் பேரறிஞர்களின் கருத்து

(3) இந்தியக் கருத்து

### (1) முற்காலக் கருத்து

முதன் முதலாவதாக, பதினெட்டாம் நூற்றாண்டில்தான்

வங்கியர் என்ற சொல்லுக்கு, வரைவிலக்கணம் காண முற்பட்டனர். 1882ஆம் ஆண்டில், மாற்றுச் சீட்டுச் சட்டம், வங்கியர் யார்? என்பதைக் கீழ்க்கண்ட வண்ணம் வரையறை செய்கிறது :—

"முறைப்படி பதிவு செய்து கொண்டோ அன்றி பதிவு செய்துகொள்ளாமலோ, வங்கித் தொழிலை மேற்கொள்ளும் ஒரு குழுவினரே வங்கியர் ஆவார்".

"வங்கியர் என்ற சொல், வங்கியராகச் செயற்படும் தனியொருவரையோ, ஒரு குழுமத்தையோ அன்றி ஒரு நிறுமத்தையோ உள்ளடக்கும்" என்பது மாற்றுமுறை ஆவணச் சட்டம் மூன்றாம் பிரிவு தரும் வங்கியர் குறித்த வரைவிலக்கணமாம். முதன் முதலாவதாக வகுக்கப்பெற்ற இவ்விலக்கணங்கள் வாயிலாக "வங்கித் தொழிலை மேற்கொள்பவர் வங்கியர்" என்பதைத் தவிர வேறு எந்தவிதமான தெளிவான விளக்கத்தையும் பெற இயலவில்லை.

### (2) வங்கியியல் பேரறிஞர்தம் கருத்து

'வங்கியர்' என்ற சொல்லுக்கு வரைவிலக்கணம் காண முற்பட்ட வங்கியியல் அறிஞர் சிலரின் கருத்துக்களை அவர்தம் கூற்றுக்கள் வாயிலாகக் காண்போம்.

#### 'மெக்லியோட்' தரும் இலக்கணம்

மெக்லியோட் என்னும் அறிஞரது கூற்றுப்படி, "ஒரு வங்கியரின் தலையாய தொழில், கடன் பெறுவதும் கடன் தருவதுமாகும். கடன் தொடர்பான நடவடிக்கைகளில் ஈடுபடுபவரே வங்கியர் ஆவார்" என்பது அவரது கருத்தாகும்.

#### டாக்டர். ஹார்ட் என்பாரது கருத்து

"எவரொருவர், பிறரொருவரிடமிருந்தோ, அல்லது அவருக்காகவோ நடப்பியல் கணக்கில் பணம் பெற்றுக் கொண்டு,

அவர், தம்மீது விடுக்கும் காசோலைகளை மதிப்பதைத் தம் இயல்பான தொழிலாகக் கொண்டுள்ளாரோ அவரே வங்கியர் ஆவார்".

**சர். ஜான் பேஜட் தரும் விளக்கம்**

"தனியொருவரோ, நிறுமமோ அன்றி வேறு எவராயினும் தன்னுடைய வாடிக்கையருக்காக வைப்புக் கணக்குகளையும் - நடப்புக் கணக்குகளையும் ஏற்காமலும், காசோலைப் படிவங்களை அளித்தல் - பணம் தருதல் போன்றவற்றைச் செய்யாமலும், கீறலிடப்பட்ட அல்லது கீறலிடப்படாத காசோலைகளை வசூலிக்காமலும் இருப்பாரானால் அவர் வங்கியர் ஆகார்" என்கிறார் சர். ஜான் பேஜட் என்னும் அறிஞர். மேலும் அவர், ஒரு வங்கியர் :-

(1) வங்கித் தொழிலை முழுநேரத் தொழிலாக ஏற்றிருக்க வேண்டும் என்றும்;

(2) பொதுமக்கள் அவரை வங்கியர் என ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும்;

(3) அன்றாட வாழ்விற்கு வழிசெய்வதாக அவரது வங்கித் தொழில் அமைய வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார்.

மேற்கண்ட அறிஞர்களின் கூற்றுகள் வாயிலாகப் பல்வேறு வைப்புகளைப் பெறுதல், கடன்களைத் தருதல், காசோலைகளை அளித்தல், காசோலைகளை மதித்தல் மற்றும் வசூலித்தல் போன்ற பணிகளைப் புரிபவரே வங்கியர் என அறிந்தோம்.

இவர்களும் வங்கியரது முகவர் பணி மற்றும் பொதுப் பயன்பணி குறித்து யாதும் கூறாத காரணத்தால் இவர்தம் விளக்கங்கள் முழுமையானவை அல்ல.

**(3) இந்தியக் கருத்து**

இந்திய வங்கி ஒழுங்குமுறைச் சட்டம் 'வங்கியர்' யார்

என்பதை வரையறுத்துள்ள முறை ஏற்றுக்கொள்ளத் தக்கதாக உள்ளது. 1949 ஆம் ஆண்டு வங்கி ஒழுங்குமுறைச் சட்டம் பிரிவு 5(ஆ)இன் படி, "கடன் கொடுப்பதற்காக அல்லது முதலீடு செய்வதற்காகப் பொது மக்களிடமிருந்து வைப்புகளைப் பெற்று, அவர்கள் கேட்டவுடனோ அல்லது வேறெந்த காலத்திலோ, காசோலை, பணவிடை அல்லது ஆணை வடிவில் இந்த வைப்புகளை உரியவருக்குத் திருப்பித் தரும் தொழில் வங்கித் தொழிலாகும். இத்தொழிலைச் செய்பவர் வங்கியர் ஆவார்". இச்சட்டம் தரும் இலக்கணப்படி பொதுமக்களிடமிருந்து வைப்புகளைப் பெறுதல், அந்த வைப்புகளைக் கடனாக அளித்தல் அல்லது முதலீடு செய்தல் இவையே வங்கியரது முதன்மைப் பணிகள் என அறிவுறுத்தினும், வங்கியர் ஆற்றும் துணைப்பணிகள் பலவற்றைக் குறிப்பிடாத காரணத்தால் இவ்விலக்கணமும் முழுமையானதல்ல எனலாம்.

**வங்கித் தொழிலொத்த தொழில் புரிவாரும் வங்கியராவாரா?**

இன்று, 'வங்கியர்' போலவே வங்கிப்பணி புரிவார் பலர் உளர். அவ்வாறு வங்கித் தொழிலுடன் இன்னும் பல தொழில்களைச் செய்வாரும், வங்கித் தொழிலுக்கு இணையான இயல்பு கொண்ட தொழில்களைச் செய்வாரும் 'வங்கியர்' ஆவாரா? என வினா எழல் இயல்பே!

**நாட்டுப்புற வங்கியரை 'வங்கியர்' என ஏற்கலாமா?**

நாட்டுப்புற வங்கியர், தமது சொந்தப் பணத்தைக் கடனாகத் தருவர். வைப்புகளை ஏற்கும் வழக்கம் அவரிடமில்லை. இவ்வாறு சொந்தப் பணத்தைக் கொண்டு கடன் வழங்கும் வங்கிப்பணி மேற்கொண்டோர் வங்கியர் ஆகார் என்ற உண்மையை *சம்யுக்த சமாஜன் எதிராகக் கோலி கல்யாணி* என்னும் வழக்கின் முடிவு வாயிலாக அறிகின்றோம். "எந்த ஒரு நிறுவனம் தன் சொந்தப் பணம் கொண்டு கடன் வழங்குகிறதோ அது ஒரு வங்கியல்ல" என்று மேற்கண்ட வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**வங்கித் தொழிலோடு வேறு தொழிலும் புரிவோர் வங்கியர் ஆவாரா?**

வங்கித் தொழிலையே முதன்மைத் தொழிலாகக் கொள்ளாமல் அத்துடன் வேறு பல தொழில்களையும் தமக்குரியதாகக் கொண்டிருப்போரை வங்கியர் எனல் தவறு என்று *சப்போர்டு எதிராக ஹென்றி* (Stafford Vs Henry) என்ற வழக்கின் மூலம் அறிகிறோம்.

**காசோலையை வழங்காதவர் வங்கியரா?**

நாட்டுப்புற வங்கியர் வங்கித் தொழிலுக்கு அடிப்படையான காசோலைகளை வழங்கும் இயல்பினர் அல்லர். எனவே அவரை 'வங்கியர்' என ஏற்க இயலாது.

**கடன் மட்டும் வழங்குவோர் - வைப்பு மட்டும் பெறுவோர் வங்கியரா?**

இன்றைய கால கட்டத்தில் இந்திய தொழில் வளர்ச்சிக் கழகம், இந்திய நிதிக் கழகம், மாநில நிதிக் கழகம் போன்ற பல கழகத்தினர் பெரும்பாலும் மக்களிடமிருந்து வைப்புகளை ஏற்காமல், கடன் மட்டும் வழங்குகின்றனர். மேலும் 'பாம்பே டையிங்', 'ரிலையன்ஸ்' போன்ற நிறுமங்கள் பொது வைப்பின் மூலம் மக்களிடமிருந்து வைப்புகளைப் பெற்று நிதி திரட்டுகின்றனர். இவர்கள் கடன் வழங்காது வைப்புகளை மட்டுமே பெறுகின்றனர். இவ்வாறு கடன் மட்டும் வழங்கு வோரும், வைப்புகள் மட்டும் பெறுவோரும் வங்கித் தொழிலின் ஒரு பகுதியை மட்டுமே செயலாக்குவோர் ஆதலால் அவர்களும் வங்கியராகார்.

## வாடிக்கையர்

'வாடிக்கையர்' என்ற சொல் வங்கியியலில் இன்றியமையாத இடம்பெறும் ஒரு சொல்லாகும். இச்சொல்லின் இலக்கணத்தைத் துல்லியமாக வரையறுப்பதென்பது சற்றுக் கடினமான

செயலேயாகும். வங்கி ஒழுங்குமுறைச் சட்டம் மற்றும் மாற்று முறை ஆவணச் சட்டம், இவை கூட வாடிக்கையரை 'இன்னார்' எனத் துல்லியமாகச் சுட்டவில்லை. எனினும் வங்கியரைப் பொறுத்த வரை வாடிக்கையர் என்ற சொல் மிகவும் இன்றியமையாத ஒரு சொல்லாகும். மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 131இன்படி வங்கியர், வாடிக்கையருக்காக நன்னம்பிக்கையுடனும் கவனத்துடனும் காசோலைகளை வசூலித்தால் மட்டுமே சட்டமுறைப் பாதுகாப்பினைப் பெறுவர். இவ்வாறு வங்கியருக்கு மிகவும் வேண்டப்பட்டவராகிய 'வாடிக்கையர்' என்ற சொல் குறித்து அன்று முதல் இன்று வரை வழங்கிவரும் கருத்துக்கள் பல. அவற்றை முறையே வங்கியியல் தொடக்க கால நிலை, அதனை அடுத்த காலக்கோட்பாட்டு நிலை, தற்கால நிலை என நிரல்படுத்தி ஆராயப்புகுவோம்.

## வங்கியியல் தொடக்க கால நிலை

வங்கியியல் தொடங்கிய காலத்தில் வங்கியில் கணக்கு வைத்திருப்போரை வாடிக்கையர் என்றனர். *'கிரேட் வெஸ்டர்ன் ரயில்வே கம்பெனி எதிராக லண்டன் மற்றும் கவுண்டி பாங்கு'* (Great Western Railway Company Vs London and County Bank) என்ற வழக்கின்படி "ஒருவரை வாடிக்கையர் எனக் கொள்ள வேண்டுமானால் அவர் ஒரு வங்கியில் வைப்புக் கணக்கு வைத்தல் மூலம் வங்கியருடன் தொடர்புள்ளவராக இருத்தல் வேண்டும்" என்று தீர்ப்பானது. இவ்வாறாக, தொடக்க காலத்தில், ஒருவர் ஒரு வங்கியில் ஒரு கணக்கைத் தொடங்கினாலே அவர் வாடிக்கையர் ஆவார் என்ற நிலை நிலவியது.

மேற்கண்ட கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருப்பினும், சிலர் அதனை மறுத்தனர். "ஒருவர் வங்கியொன்றில் கணக்கு வைத்திருப்பதால் மட்டுமே அவரை வாடிக்கையர் என வரையறுத்திடுதல் கூடாது" என லார்டு பிராம்டன் என்பார் கருத்துரைக்கின்றார். எவ்வாறாயினும் ஒருவர், ஒரு வங்கியின் வாடிக்கையராக வேண்டுமெனில் அவ்வங்கியில் ஏதேனுமொரு கணக்கைத் தொடங்குதல் தேவை என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றாம்.

### காலக்கோட்பாட்டுக் கால நிலை

வங்கியியல் தொடக்க காலத்தை அடுத்து, வங்கியியல் மேலும் வளர்ச்சியுற்றது. இதனால், 'வாடிக்கையர்' என்ற சொல்லின் இலக்கணமும் செம்மையுற்றது. சர். ஜான் பேஜட் என்பார் தரும் விளக்கம் தகவுடையது. 'வாடிக்கை' என்ற சொல்லை உள்ளடக்கியது 'வாடிக்கையர்' என்ற சொல்லாதலால், ஒருவர் 'வாடிக்கையர்' என்ற நிலையை எய்த அவர் சிறிது காலமாவது வங்கி நடவடிக்கைகளில் தொடர்ந்து செயல்பட்டிருக்க வேண்டும். வெறும் கணக்கு வைத்தலாகிய தொடர்பின் மூலம் மட்டுமே 'வாடிக்கையர்' ஆகிவிட இயலாது என்கிறார். "வாடிக்கையர் என்ற நிலையை அடைய, ஒருவர் வங்கியர் நன்கு கண்டுக் கொள்ளக்கூடிய முறைகளில் அவருடன் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் அல்லது வங்கியியல் தொடர்பான செயல்களை அடிக்கடி மேற்கொள்ளும் பழக்கமுடையவராக இருத்தல் வேண்டும்" என்பர் சர் ஜான் பேஜட். கால அடிப்படையில் இவ்விளக்கம் அமைந்துள்ளதால் இதனைக் காலக்கோட்பாடு (Duration Theory) என்றும் குறிப்பிடுவர். *"மேத்யூஸ் எதிராக வில்லியம்ஸ் பிரவுன் & கோ"* (Mathews Vs Williams Brown & Co.) என்னும் வழக்கிலும் இவ்வாறு காலத்தை அடிப்படையாகக் கொண்ட கருத்தே எடுத்துரைக்கப்பட்டது. காலக்கோட்பாடு 'வாடிக்கையர்' என்ற சொல்லைச் சரிவர வரையறுப்பதுபோலத் தோன்றினாலும், சில சிக்கல்களால் இதனையும் முழுமையான விளக்கமாக ஏற்க இயலவில்லை. எத்தனை முறை? என்னென்ன நடவடிக்கைகளை வாடிக்கையர் மேற்கொண்டிருக்க வேண்டும் என்பனவற்றைத் துல்லியமாகக் கணக்கிட்டுக் கூறுவது கடினமாக இருந்தபடியால் மேற்கண்ட கால அடிப்படையிலான விளக்கமும் ஏற்குமாறில்லை.

### தற்காலத்தில் நிலவும் கருத்து

சர். ஜான் பேஜட் என்பாரின் காலக் கோட்பாடு இன்று முற்றிலுமாக மறுக்கப்பட்டுவிட்டது. ஒருவர், ஒரே ஒருமுறை வங்கியருடன், வங்கி நடவடிக்கையில் தொடர்பு கொண்டால் கூட அவர் வாடிக்கையரே என்பது இன்றைய கருத்து. மேலும்

சொல்லப்போனால், குறிப்பிட்ட ஒருவர் தன்பெயரில் கணக்குத் தொடங்கும்படியாக வங்கியரை வேண்டிக்கொண்ட நிலையில், வங்கியர் அதற்கு உடன்பட்ட அந்நொடியிலேயே அவர் வாடிக்கையராகி விடுவார் என்பதே தற்போதைய விளக்கம்.

*லேட்ப்ரோக்கிற்கு எதிராக டோட்* (Ladbroke Vs Todd) என்னும் வழக்கில் பெயில்ஹெக் என்னும் நீதிபதி சர். ஜான் பேஜட்டின் கருத்திற்கு எதிராகத் தீர்ப்பு செய்திருப்பது இதனை நன்கு விளக்கும். ஒருவர் முதல் முறையாகக் காசோலையைக் கொடுக்க, அதனை வசூலிக்கும்படியாக, வங்கியர் ஏற்றுக்கொண்ட அக்கணமே அவர் வாடிக்கையர் ஆகிவிடுகிறார் என பெயில் ஹெக் மேற்குறிப்பிட்ட வழக்கில் தீர்ப்பளிக்கிறார். *வருமானவரி ஆணையருக்கு எதிராக ஆங்கிலேய ஸ்காட்டிஸ் மற்றும் ஆஸ்திரேலிய வங்கி* (Commissioner of Taxation Vs English Scottish and Australian Bank) வழக்கின் தீர்ப்பிலும் வாடிக்கையர் என்ற உறவுமுறைக்குக் காலம் ஒரு பொருட்டல்ல என்று வலியுறுத்தப்பட்டது.

மேலும், *சவோரி & கோ எதிராக லாயிட்ஸ் பாங்க்* (Savory & Co. Vs Lloyds Bank) என்னும் வழக்கில் திரு. ஸ்மித் என்பார், தான் களவாடிய ஒரு காசோலையை லாயிட்ஸ் வங்கியரிடம் அளித்து அதனை வசூலித்து, ரெட்ஹில் கிளையில் தனது மனைவியின் கணக்கில் வரவு வைக்குமாறு கூறினார். உண்மையில், திரு. ஸுமித்தின் மனைவியாருக்கு அவ்வங்கியில் கணக்கேதும் இல்லை. எனினும் "வசூலிக்கும்" பொருட்டு, வங்கியர் திரு. ஸுமத்திடமிருந்து காசோலையைப் பெற்றுக் கொண்டமையால், அவ்விநாடி முதல் திருமதி. ஸுமித் ஒரு வாடிக்கையரே" என நீதிமன்றம் தீர்ப்பளித்தது. மேற்கண்ட தீர்ப்புகள் வாயிலாக, காலக்கோட்பாடு அறவே மறுக்கப்பட்டதைக் கண்டோம். 'வாடிக்கையர்' ஆவதற்குக் காலமும் நடவடிக்கைகளும் பொருட்டாகா என்பதும் இதனால் தெளிவாகிறது.

வங்கியின் மூலம் சில்லறை பெறுதல், பாதுகாப்புப் பெட்டக

வசதி பெறல் போன்ற தற்செயல் நிகழ்வுகளால் ஒருவர் வங்கியின் வாடிக்கையர் என்ற நிலையை எய்த இயலாது. வங்கியியல் தொடர்பான நிகழ்வுகள் அல்லது நடவடிக்கைகள் மூலமாக மட்டுமே ஒருவர் வாடிக்கையர் என்ற நிலையை அடையலாம்.

சுருங்கக் கூறின், ஒருவர் ஒரு குறிப்பிட்ட வங்கியின் வாடிக்கையராக வேண்டுமெனில், கீழ்க்கண்ட விதிமுறைகளுக்கு உட்படல் வேண்டும் :–

(1) வங்கியருடன் ஏதேனுமொரு கணக்கு வைத்திருத்தல் தேவை.

(2) வங்கியருடன் ஏதேனும் ஒரு நிகழ்வு மூலமாவது தொடர்பு கொண்டிருத்தல் வேண்டும்.

(3) நிகழ்வுகளைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டுமென்று வலியுறுத்தப்படாவிட்டாலும் எதிர்பார்க்கப் படுகிறது.

(4) நிகழ்வுகள் அனைத்தும் வங்கியியல் தொடர்புடன் விளங்குதல் தேவை.

## வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையிலான உறவு நிலை

இருவர் தம்முள் முரண்படுங்கால் அவ்வழக்கில் தீர்வு காண அவர்களுக்கிடையே நிலவும் உறவுமுறையைக் காண்பது அவசியம். உறவுமுறையின் அடிப்படையில்தான் முரண் பாட்டைச் சீர்செய்ய இயலும். இக்கருத்தின் அடிப்படையில் வங்கியர் - வாடிக்கையர் இவர்களுக்கிடையிலான உறவுநிலை பற்றி அறிந்து கொள்வது அடிப்படைத் தேவையாகும். வங்கியர்-வாடிக்கையர் உறவுமுறையினை இருவகைப்படுத்துவர்.

(1) பொது உறவுமுறை

(2) சிறப்பு உறவுமுறை

## பொது உறவுமுறை

ஒருவர், வங்கியரிடம் ஏதேனுமொரு கணக்கைத் தொடங்குவதன் மூலம் அவருடன் தொடர்பு கொண்டு அவர்தம் வாடிக்கையர் ஆகின்றார். இவ்வாறு வங்கியர் - வாடிக்கையர் இருவருக்கிடையே ஏற்படும் தொடர்பே உறவாக மலரும். இது எத்தகைய உறவுநிலை என ஆராய்வோம்.

### ஒப்படைவு செய்நர் - பெறுநர் (Bailor - Bailee) உறவு நிலவுகிறதா?

ஒப்படைவு பெறுநர் - ஒப்படைவாகப் பெற்ற பொருட்களை உள்ளவாறே மாற்றம் ஏதுமின்றி பெறுநர் பெறவிழைந்தபோது திருப்பி அளித்திடல் வேண்டும். இதுவே ஒப்படைவு பெறுநருக்குரிய இலக்கணம். ஆனால் இன்று வங்கியர் இத்தகைய ஒப்படைவு பெறுநருக்குரிய இலக்கணப்படி நடக்கின்றனரா?

(1) வாடிக்கையரிடம் பெற்ற பணத்தை பெற்றபடியே திரும்ப ஒப்படைப்பதே ஒப்படைவு பெறுநர் செயல். அவ்வாறின்றி வங்கியர் அதே அளவு தொகையைத் திருப்பி அளிக்கின்றனர்.

(2) ஒப்படைவு பெறுநரானால் வாடிக்கையரது பணத்தை அவரது ஒப்புதல் இன்றி முதலீடு செய்ய இயலாது. வங்கியர் முதலீடு செய்கின்றனர்.

(3) ஒப்படைவு பெறுநர் ஒப்படைவுப் பொருள் மூலம் பெறும் வருமானம் முழுவதையும் ஒப்படைக்கின்றனரா எனில் அதுவும் இல்லை. எனவே இந்நிலையில் வங்கியர் ஒப்படைவுபெறுநர் என்ற உறவு நிலைக்குள்ளாகார்.

### ஒப்படைவு பெறுநராகச் செயலேற்றல்

வங்கியர் சில சூழல்களில் ஒப்படைவுபெறுநராகக் கருதப்படுவர். ஒப்படைவு செய்வோர் தம் பொன்னணி

கலன்களை வங்கியரிடம் ஒப்படைக்குமிடத்து, அவற்றை ஒப்படைவாகப் பெற்ற வங்கியர் வட்டி தருவதில்லை. மாறாக ஒப்படைவு செய்நர் பொருளைப் பாதுகாக்க வாடகை அளிக்கின்றார். எனவே பாதுகாப்பு வசதி செய்வதற்காக ஒப்படைவுப் பொருளைப் பெறும்போது மட்டுமே வங்கியர் ஒப்படைவு பெறுநராகவும், வாடிக்கையர் ஒப்படைவு செய்நராகவும் செயற்படுகின்றனர்.

**பொறுப்புரிமையர்-பயன்பெறுநர்(Trustee-Beneficiary) உறவு நிலவுகிறதா?**

பொறுப்புரிமையர் ஒருவரது உடைமைகளை அவருக்காகப் பொறுப்பேற்று தம்மிடம் வைத்துக்கொண்டு, உடைமைக்குரியோரின் பயன் கருதி நேர்மையுடன் பணிபுரிவோரே பொறுப்புரிமையர் எனப்படுவர். பயன்பெறுநரின் ஒப்புதலின்றியோ மற்றும் பொறுப்புரிமை ஆவணத்திற்குட்படாமலோ பொறுப்புரிமையர் தன் விருப்பப்படி செயற்பட இயலாது. மேலும் தம்முடைய நிகழ்வுகள் பற்றிய தெளிவான கணக்குகளைப் பயன் பெறுநரிடம் ஒப்படைத்தல் வேண்டும். வங்கியர் இங்ஙனம் பொறுப்புரிமையருக்குரிய இலக்கணப்படி செயலாற்றுகின்றனரா?

(1) வங்கியர் தாம் பெற்றுக் கொண்ட வைப்புத் தொகையைப் பயன்படுத்தும்போது வாடிக்கையரின் ஒப்புதலைப் பெறுவதில்லை.

(2) வாடிக்கையரிடமிருந்து வைப்புத் தொகையைப் பெறும்போது எந்தவிதமான பொறுப்புரிமை ஆவணத்தையும் பெறுவதில்லை.

(3) வைப்புத்தொகையை வாடிக்கையரிடம் திருப்பித் தரும்போது தாம் மேற்கொண்ட நடவடிக்கைகள் குறித்த விரிவான கணக்குகளை ஒப்படைப்பதும் இல்லை. மேற்கண்ட காரணங்களால் வங்கியர் பொறுப்புரிமையர் அல்லர் என்பது அங்கை நெல்லி!

## வங்கியர் பொறுப்புரிமையராகச் செயலேற்றல்

வங்கியர் ஒருசில சூழல்களில் பொறுப்புரிமையராகக் கருதப்படுவர். ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக வாடிக்கையரது பணத்தைப் பெற்ற வங்கியர் அதனைச் செயற்படுத்தும் காலம் வரை அப்பணத்தைப் பொறுப்பேற்றவராகக் கருதப்படுவார் என்பதை *ஆஃபிசியல் அசைனி ஆஃப் மதராஸ் எதிராக ஜே. டபிள்யூ. இர்வின்* (Official Assignee of Madras Vs J.W. Irwin) என்னும் வழக்கின் முடிவு தெரிவிக்கின்றது. மேற்படி வழக்கில் ஒரு குறிப்பிட்ட தொகை, பங்குகளைப் பெறுவதற்காக என்ற குறிப்பிட்ட நோக்கத்துடன் செலுத்தப்பட்டது. ஆனால், நோக்கம் நிறைவேற்றுவதற்கு முன்பே வங்கி கலைந்து விட்ட நால் குறிப்பிட்ட நோக்கிற்காகச் செலுத்தப்பட்ட அத்தொகைக்கு வங்கியர் பொறுப்புரிமையர் ஆவார் என முடிவுரைக்கப்பட்டது.

வங்கியர் ஒரு காசோலையை வசூல் செய்யும்பொருட்டு வாடிக்கையரிடமிருந்து பெற்றபின், பணத்தை வசூலிக்கும் வரை காசோலையைப் பொறுப்பேற்றுள்ள பொறுப்புரிமையராகவே கருதப்படுவார். ஆனால் பணம் வசூலான பின் அத்தொகைக்கு அவர் பொறுப்புரிமையர் ஆகார். *ஜோகின்சன் எதிராக ஸ்விஸ் பேங்கிங் கார்பரேஷன்* (Joachinson Vs Swiss Banking Corporation) என்ற வழக்கில் மேற்கண்ட வண்ணம் தீர்ப்பு வழங்கப்பட்டது.

## முகவர் - முதல்வர் உறவு

“மற்றொருவருக்காகப் பணிபுரிபவரும், மூன்றாம் நபருடன் தொடர்பு கொள்ள இடைநிலையாளராக விளங்குபவருமான ஒருவரே முகவர்” என இந்திய ஒப்பந்தச் சட்டம் 182ஆவது பிரிவு கூறுகிறது.

மேற்கண்ட முகவருக்குரிய இலக்கணப்படி வங்கியர் செயற்படுகின்றனரா? எனக் காண்போம்.

(1) வங்கியா வாடிக்கையரின் வைப்புத் தொகையைப் பயன்படுத்தும்போது அவர்தம் ஆணைமூலமோ அன்றி ஒப்புதல் பெற்றோ பயன்படுத்துவதில்லை.

(2) வாடிக்கையரின் வைப்புத்தொகையாகிய முதலினைக் கொண்டு ஈட்டும் வருமானம் முழுவதையும் வாடிக்கையருக்கே வழங்கிவிடுவதில்லை.

(3) தம்முடைய பணிகள் குறித்த விரிவான கணக்குகளின் பட்டியலை ஒப்படைப்பதும் இல்லை.

(4) வைப்புத்தொகையைப் பெறும்போது வாடிக்கையரிட-மிருந்து ஒப்புறுதிக்கழிவுத் தொகையினைப் பெறுவதுமில்லை.

எனவே, முதல்வரின் ஆணைப்படி நடத்தல், முதல்வரின் முதலினைக் கொண்டு ஈட்டிய வருமானத்தை முற்றுமாக அவருக்கே வழங்கிவிடல், கணக்கொப்புவித்தல், ஒப்புறுதிக்கழிவு பெறல் போன்ற முகவருக்குரிய இலக்கணப்படி ஒழுகாத வங்கியர் முகவரும் ஆகார், வாடிக்கையர் முதல்வரும் ஆகார் என்பது உறுதி.

### வங்கியர் முகவராகச் செயலேற்றல்

ஒரு வங்கியர் தம் வாடிக்கையருக்காகப் பங்குகளை வாங்கி விற்றல், பங்காதாயம் வசூலித்தல், காப்பீட்டு முனைமம் செலுத்துதல் போன்ற பணிகளைப் புரியும்போது வங்கியர் முகவராகவும் வாடிக்கையர் முதல்வராகவும் உறவுகொள்ளும் நிலை ஏற்படுகிறது.

### வங்கியர் - வாடிக்கையர் உறவு எத்தகையது?

மேற்கண்ட உறவுநிலைகள் மறுக்கப்பெற்ற நிலையில் அவர்தம் உறவுநிலை யாது என்பதை அறிய ஆவல் எழுவது இயல்பு! ஒரு வங்கியர் தம் வாடிக்கையரிடமிருந்து வைப்புத் தொகையைப் பெறுங்கால், வாடிக்கையர் தொகையைக் கேட்கும் போது திருப்பி அளிக்க வேண்டிய 'கடனாளி' என்ற நிலையினை அடைகின்றார். எனவே வங்கியர் 'ஒரு கடனாளி' என்ற உறவு நிலையிலேயே செயற்படுபவராகின்றார். "ஒரு வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் முதனிலையான உறவு கடனாளி - கடனீந்தோர்

என்பதே. மேலும், வாடிக்கையரின் கணக்கு நிலையைப் பொறுத்தே அவரவர் உறவுநிலை இன்னதென்பது அறியப்படும்" என ஜான். பேஜட் என்பார் வங்கியர் - வாடிக்கையர் உறவுநிலை பற்றி மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றார்.

### வங்கியர் - சலுகைபெற்ற கடனாளி

வங்கியர், வாடிக்கையரது வைப்பைப் பெறும்போது 'கடனாளி' என்ற நிலையை அடைந்தாலும், 'இயல்பான கடனாளி' என்ற நிலையிலிருந்து வேறுபடுகின்றார். இவ்வேறுபாடுகளின் அடிப்படையில் சலுகைபெற்ற கடனாளி என்று அழைக்கப் பெறுகின்றார். சலுகைபெற்ற கடனாளி என்ற முறையில் அவர் பெறும் சலுகைகள் பற்றிக் காண்போம்.

### (1) கடனீவோரை நாடிச் செல்லத் தேவையில்லை

பொதுவாக, கடனாளி கடன் ஈவோரை நாடிச் செல்வது இயல்பு. ஆனால் வங்கியர் வாடிக்கையரை நாடிச் செல்வதில்லை. வைப்பிற்காகப் பணம் செலுத்த வாடிக்கையரே வங்கியரை நாடி வருகின்றனர்.

### (2) கடனீந்தோர் கடனாளியை நாடிச் செல்லல்

மேலும், வாடிக்கையர் தமது பணத்தைத் திரும்பப் பெறுவதற்காக கடனாளி நிலையில் உள்ள வங்கியரைத் தாமே நாடி வருகின்றனர். ஆனால் சாதாரண கடனாக இருந்தால், கடனாளியே கடனீந்தோரை நாடிச் சென்று தான் பெற்ற பணத்தைத் திரும்பச் செலுத்துதல் வேண்டும்.

### (3) வாய்மொழி ஆணையை ஏற்கத் தேவையில்லை

பொதுவான வாணிகக் கடன்களைப் பொறுத்தவரை கடனாளியிடமிருந்து பணத்தை வாய்மொழி மூலமே வசூலித்து விடலாம். ஆனால் வங்கியரைப் பொறுத்தவரை வாடிக்கையரின் வாய்மொழி ஆணை செல்லாது. பணத்தைத் திரும்பப்பெற விழையும் கடனீந்தோர் கடனாளியாகிய வங்கியரிடம் எழுத்து

மூலமே வெளிப்படையாக வேண்டிக்கொள்ள முடியும். இந்த விதி *ஜோகிம்ஸன் எதிராக ஸ்விஸ் பேங்கிங் கார்பரேஷன்* (Joachinson Vs Swiss Banking Corporation) என்ற வழக்கில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**(4) இடத்தின் இன்றியமையாமை**

பொதுவாகக் கடன் பெற்றோர் கடனை எந்த இடத்திலும் திருப்பிக் கொடுக்கலாம். வங்கியராகிய கடனாளியரைப் பொறுத்தவரையில், வாடிக்கையர் எந்த குறிப்பிட்ட வங்கிக் கிளையில் பணத்தை வைத்துள்ளாரோ அந்தக் கிளையின் மூலமே திருப்பித் தருவர்.

**(5) காலம் நிர்ணயிக்கும் சலுகை**

இயல்பாகக் கடனாளி எந்த வேளையிலும் தான் பெற்ற பணத்தைக் கடன் ஈந்தவரிடம் திருப்பித் தரலாம். ஆனால், வங்கியரோ தமக்குரிய பணி நேரத்தில் மட்டுமே பணத்தைத் திருப்பி வழங்குவர். வங்கி நேரம் சட்டப்படி தீர்மானிக்கப்பட்டுள்ளது. *அரபு வங்கி எதிராகப் பார்க்கிளேஸ் வங்கி* (Arab Bank Vs Barclays Bank) என்ற வழக்கில் மேற்படி தீர்ப்பு வழங்கப்பட்டது.

**(6) பிணையம் தேவையில்லை**

பொதுவாக, கடனாளி பிணையப் பொருளினைக் கொண்டே கடன் பெறுவர். ஆனால் வங்கியரோ வாடிக்கையரிடமிருந்து பிணையமேதுமின்றியே பணம் பெறுகின்றனர். இது ஒரு சிறப்புச் சலுகையே!

**(7) காலவரையறைச் சட்டத்தினின்று விலக்கு**

ஒரு வணிகக் கடனைப் பொறுத்தவரை, கடன் உறுதிப் பத்திரம் மூன்று ஆண்டுகட்குச் செல்லுபடி ஆகும். மூன்று ஆண்டுகட்குள் கடன் செலுத்தப்படாவிட்டால் வராக்கடனாகக் கருதப்படும் என காலவரையறைச் சட்டம் (Law of Limitation Act)

இயம்புகிறது. ஆனால் வங்கியர் இதனிலிருந்தும் விதி விலக்குப் பெறுகின்றனர். எவ்வாறெனில், வங்கியரைப் பொறுத்தவரை மூன்றாண்டு கால வரையறை என்பது வாடிக்கையர் பணம் கேட்டு ஆணையிட்ட நாள் முதற்கொண்டுதான் தொடங்கும். ஆனால் பணமோ வங்கியரிடம் வாடிக்கையர் கேட்டவுடனேயே அளிக்கப்பட்டுவிடுவதால் இச்சட்டம் இங்கு செயற்பட வழியே இல்லாமற்போய் விடுகிறது. இவ்வாறே காலவரையறை வைப்பு இரசீது ஒப்படைக்கப்பட்ட நாளிலிருந்து மூன்று ஆண்டுகள் கணக்கிடப்படும். ஆனால் காலவரையறை வைப்பின் முதிர்வு நாளன்றே வாடிக்கையர் இரசிதை ஒப்படைத்ததும் வங்கியர் பணத்தைத் திருப்பி அளித்து விடுவராதலால், மேற்கண்ட விதி காலவரையறை வைப்பிற்கும் பொருந்தாது என்று புலனாகிறது.

### (8) கணக்கு முடித்தலில் உள்ள வேறுபாடு

வணிகக் கடன் கணக்கினை ஒரு கடனாளி தான் நினைத்த நேரத்தில் முற்றுப்பெறச் செய்யலாம். ஆனால் வங்கியரோ (கடனாளி) வாடிக்கையரின் (கடன் ஈந்தோர்) ஒப்புதல் பெற்றே அவர்தம் கணக்கை முடிக்கலாம்.

### கடனீவோராக வங்கியர்

ஒரு வங்கியர் தன் வாடிக்கையரிடம் வைப்பைப் பெறும்போது கடனாளியாகக் கருதப்படுகிறார் என்று கண்டோம். ஆனால் ஜான் பேஜட் என்பவரது கூற்றுப்படி, வாடிக்கையரின் கணக்கினைப் பொறுத்து வங்கியர் கடனீவோராக மாறும் இடங்களும் உள என்றறிந்தோம். அதன்படி வங்கியர் வாடிக்கையருக்குக் கடன், ரொக்கக் கடன் மற்றும் மேல்வரைப் பற்று போன்ற கடன்களை அளிக்கும் நிலைகளில் கடனீவோராகின்றார். இந்நிலையிலும் வங்கியர் ஒரு சலுகைபெற்ற கடனீவோராகவே திகழ்கின்றார். எவ்வாறெனில் கடன் ஈயும் போது வங்கியர் வாடிக்கையரிடமிருந்து பிணையம் பெறும் உரிமை அவருக்குண்டு. மேலும் வாடிக்கையருக்குக் கடன் ஈயும் நிலையில் காலவரையறைச் சட்ட விதியும் வங்கியருக்குப் பொருந்தும் விதியும் உண்டு. மேற்கண்ட வண்ணம் வங்கியர்

ஒரு சலுகைபெற்ற கடனாளியாகவும் மற்றும் கடனீவோராகவும் செயல்படுகின்றார்.

## சிறப்பு உறவுமுறை

வங்கியருக்கும் வாடிக்கையருக்குமிடையே நிலவும் பொதுவான உறவுமுறைகள் பற்றி அறிந்தோம். இவை தவிர, வேறு எந்த உறவுமுறையினரிடையேயும் காணப்படாத சில சிறப்பியல்புகள் வங்கியர் - வாடிக்கையர் உறவில் மட்டுமே இடம் பெறுகின்றன. எனவே இவ்விருவருக்குமிடையிலான சிறப்புறவின் தன்மைகள் பற்றி அறிவது நம் கடனாகும். அவையாவன :—

### I. சட்டப்படி காசோலையை மதிக்கும் கடன்

வாடிக்கையர் ஒருவர் ஒரு வங்கியில் தனது கணக்கைத் தொடங்கும் நிலையில் வங்கியர் - வாடிக்கையர் உறவும் தொடர்கிறது. வாடிக்கையர் தனது தேவைகளின்போது பணத்தைத் திருப்பி எடுக்கும் நோக்குடன்தான் வங்கியில் பணத்தை வைக்கின்றார். எனவே அவர் தனது தேவைக்காக வங்கியர் மீது காசோலை வரையும்பொழுது அதனை மதிப்பது அவர்தம் சட்டபூர்வமான கடமையாகிறது. இதனை இந்திய மாற்றுமுறை ஆவணச் சட்டம் 1881இன் பிரிவு 31 பின்வருமாறு கூறுகிறது :—

"வாடிக்கையரின் கணக்கில், வேண்டிய அளவு இருப்பு இருந்தால் அவர் விடுக்கும் காசோலையை வங்கியர் மதிக்க வேண்டும். மேலும், ஏற்ற காரணங்களின்றி காசோலையை வங்கியர் அவமதித்தால் அதனால் வாடிக்கையருக்கு ஏற்படும் இழப்புகட்கு வங்கியரே பொறுப்பேற்றல் வேண்டும்".

மேற்கண்ட சட்டப்படி, வாடிக்கையரது காசோலைகளை மதிப்பது வங்கியரின் மறுக்கமுடியாத கடமை என்பது வலியுறுத்தப் பெறுகிறது.

வரைமுறைகளுக்குட்பட்ட கடமையே

சட்டப்படி, காசோலையினை மதித்தல் வங்கியரது கடனெனினும், கண்மூடித்தனமாக அனைத்து காசோலைகளையும் மதித்தல் இயலாது. மதித்தற்குரிய வரையறைகள் சில உள. அவ்வரையறைகள் பற்றிக் காண்போம்.

(அ) வாடிக்கையரின் கணக்கில் தேவையான அளவு பணம் இருத்தல்

வங்கியர் ஒருவர், தன் வாடிக்கையரின் காசோலையை மதிக்கும் கடன் வாடிக்கையரது வங்கியிருப்பின் அடிப்படையில் தான் அமையும். வாடிக்கையரின் கணக்கில் போதுமான அளவு பணம் இல்லாத வேளையில், அவரது காசோலையை மதிக்கத் தேவையில்லை. ஆனால், மேல்வரைப் பற்றிற்குரிய ஏற்பாடுகளை வாடிக்கையர் செய்திருந்தால், அவரது கணக்கில் தேவையான அளவு பணமில்லாவிடினும் காசோலையை வங்கியர் மதிக்க வேண்டும். *'ரெயினர் எதிராக ஹாம்பிராஸ் பாங்கு* (Rayner Vs Hambros Bank) என்னும் வழக்கின் முடிவு மேற்கண்ட கருத்தை வலியுறுத்துகிறது.

வாடிக்கையரின் கணக்கில் போதிய தொகை இல்லாத நிலையில், தவறுதலாக வங்கியர் காசோலையை ஒருமுறை மதித்துவிட்டாரானால், வாடிக்கையர் மீண்டும் இவ்வாறு போதிய பணமில்லாத நிலையிலும் காசோலையை மதிக்க வேண்டும் என எதிர்பார்க்கும் சூழல்கள் உருவாகக் கூடும். எனவே வங்கியர், வாடிக்கையர் கணக்கில் உள்ள இருப்புத்தொகையை நினைவிற்கொண்டு கவனத்துடன் செயல்படல் தேவை.

(ஆ) முறையான காசோலையில் மட்டுமே வரைதல்

சட்டப்படி, வங்கியரால் அச்சிடப்பட்டு வழங்கப்படும் முறையான காசோலைகளில் மட்டுமே வரைதல் வேண்டும். அத்தகைய காசோலைகள் மட்டுமே வங்கியரால் மதிக்கத் தக்கவை.

(இ) செவ்வையான காசோலை வரைதல்

வாடிக்கையர், காசோலையில் விவரங்களை, முழுமையாக

*சீரிய முறையில் வரைந்திருந்தால் மட்டுமே அக்காசோலையை வங்கியர் மதித்தல் வேண்டும்.*

(ஈ) தொகையை முறையான நெறியில் பயன்படுத்தல்
(Proper application of funds)

ஒரு குறிப்பிட்ட காரணத்துடன் வங்கியில் வைப்புக்கணக்கு தொடங்கப்பட்டிருக்குமானால், அதற்கென வரையப்பட்ட காசோலைகளை மட்டுமே வங்கியர் மதித்தல் தேவை. முறையற்ற நெறியில் வரையப்படும் காசோலைகளை மறுத்துவிடலாம். சான்றாக, ஒரு பொறுப்புரிமை அமைப்பின் கணக்கில் உள்ள தொகையை, பயன்பெறுநருக்கல்லாமல், பொறுப்புரிமையர் தனது சொந்தத் தேவைக்காகப் பயன்படுத்த வேண்டி காசோலை வரைந்தால் அக்காசோலையை வங்கியர் மதிக்கத் தேவையில்லை.

(உ) வங்கி நெறிமுறைகட்குட்பட்டு காசோலையை சமர்ப்பித்தல்
(Proper Presentation)

காசோலையை, வாடிக்கையர் எந்த வங்கியில் கணக்கு வைத்துள்ளாரோ அந்த குறிப்பிட்ட வங்கியில், குறிப்பிட்ட வங்கிப் பணி நேரத்தில்தான் செலுத்த வேண்டும் என்றெல்லாம் நெறிமுறைகள் வகுக்கப் பெற்றுள்ளன. மேலும், காசோலை வரையப்பட்ட நாளிலிருந்து ஆறு மாத காலம் வரையே அது மதிக்கப்பெறும் இயல்பினது என்பதும் வங்கி நெறிமுறையாம். இந்நெறிமுறைகளுக்கு உட்பட்டு சமர்ப்பிக்கப்படும் காசோலைகள் மட்டுமே மதித்தற்குரியவை.

(ஊ) சட்டத்தடையுள்ள வைப்புகள் மீதான காசோலைகள்

பற்றுகைஆணை போன்ற சட்டமுறைகளால் தடைசெய்யப் பெற்ற அல்லது நிறுத்தி வைக்கப்பட்டுள்ள வைப்புத்தொகை மீதான காசோலைகளை வங்கியர் மதியாது மறுத்துவிடலாம்.

*சட்டக் கடமையை மீறல்*

மேற்கூறிய காரணங்களை முன்னிட்டு ஒரு வங்கியர் காசோலைகளை மறுத்தல் தவறாகாது. இவற்றை மீறி, கவனக்

குறைவால் காசோலைகளை மதிக்கத் தவறிவிட்டால், சட்டத்தை மீறிய குற்றத்திற்கு ஆளாகி தண்டனைக்குள்ளாவார்.

இவ்வாறு ஒரு வங்கியர் காசோலையைக் கருத்தூன்றிப்பாராமல் மதிக்கத் தவறினால் கவனக்குறைவு, ஒப்பந்தம் மீறல் ஆகிய குற்றங்களுக்கு ஆளாகக் கூடும். கவனத்துடன் செயற்பட்டபோதும் எதிர்பாராதவிதமாக ஒரு செப்பமான காசோலைக்குப் பணம் செலுத்தத் தவறியிருக்கலாம். இதனால் வாடிக்கையரது நற்பெயருக்குக் களங்கம் விளையுமாயின், அதனால் ஏற்படக்கூடிய நற்பெயர் இழப்பு மற்றும் பல இழப்புகளுக்கும் வங்கியரே பொறுப்பேற்க வேண்டும். *மார்செட்டி எதிராக வில்லியம்ஸ்* (Marzetti Vs Williams) என்ற வழக்கில் லார்டு டெடர்டென் மேற்கண்ட வண்ணம் தீர்ப்பு வழங்கியுள்ளார்.

## வாடிக்கையருக்கு மட்டுமே கடமைப்பட்டவர்

வங்கியரொருவர் காசோலை ஒன்றினைக் கவனக்குறைவு காரணமாக, மதிக்க மறுத்துவிடுங்கால், அவர், அக்காசோலையை வரைந்த தமது வாடிக்கையருக்கு மட்டுமே பொறுப்பேற்கும் கடமைப்பட்டவரேயன்றி வேறெவருக்கும் கடமைப்பட்டவரல்லர்.

## இழப்பீட்டுத்தொகையை மதிப்பிடல் (Assessment of damages)

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 31-இன்படி, காசோலை ஒன்றினை ஒரு வங்கியர் தம் கவனக்குறைவால் மதிக்க மறுத்ததின் விளைவாக தனது வாடிக்கையருக்கு ஏற்பட்ட அனைத்து இழப்புகளுக்கும் ஈடு செய்யும் பொறுப்பினர் ஆவார். இவ்விழப்பீட்டுத் தொகை, காசோலையின் மதிப்பைப் பொறுத்தல்லாமல் வாடிக்கையரின் நற்பெயருக்கு ஏற்பட்ட களங்கத்தைப் பொறுத்தே அமையும். எனவேதான் 'காசோலையின் தொகை குறையக் குறைய இழப்பீட்டுத் தொகை உயரும்' என்ற கொள்கை பின்பற்றப்படுகிறது. உண்மையில் ஒரு வாடிக்கையரின் குறைந்த அளவு தொகைக்கான காசோலை மதியாது மறுக்கப்படும்போதுதான் அவருக்கு அதிக அளவு நற்பெயர் இழப்பு ஏற்படுகின்றது.

## பெயரளவு இழப்பீடும் பேரளவு இழப்பீடும்
## (Nominal damages & Substantial damages)

வங்கியரது கவனக்குறைவால் நிகழ்ந்த காசோலை மறுப்பு அல்லது அவமதிப்புக்கு அவரே பொறுப்பேற்று இழப்பீட்டுத் தொகை வழங்க வேண்டும். இவ்விழப்பீடு இருவகைப்படும். அவையாவன,

(1) பெயரளவு இழப்பீடு (Nominal damage)

(2) பேரளவு இழப்பீடு (Substantial damage)

பொதுவாக ஒரு வாடிக்கையர் தனக்கு ஏற்பட்ட இழப்பினை நிறுவும்போது அவருக்கு, பெயரளவிலான (Nominal) இழப்பீட்டுத் தொகையையே அளிப்பர். இதற்கு மாறாக கீழ்க்கண்ட இரு சூழல்களில் அவர் பேரளவு அல்லது சிறப்பு இழப்பீட்டினை (Special damages) வேண்டலாம்.

(1) திருமண ஒப்பந்தத்தை மீறும்போது,

(2) போதிய தொகை கணக்கில் இருந்தபோதும், வணிகரான ஒரு வாடிக்கையரின் காசோலையை மதிக்க மறுத்தபோதும்.

இரண்டாவதாகக் குறிப்பிட்டுள்ள விதியே வங்கியருக்குப் பொருந்தும் விதியாகும். இழப்பீட்டுத் தொகை நிர்ணயித்தில், வாடிக்கையரின் 'நற்பெயர் இழப்பே' முதலிடம் பெறுகிறது. ஒரு வணிகரான வாடிக்கையரின் காசோலை அவமதிக்கப்படும்பொழுது அவரது நற்பெயருக்கு மிகுதியும் களங்கம் ஏற்படுமாதலால் அவருக்கு இழப்பீட்டுத்தொகை பேரளவில் அதாவது மிகுதியாக வழங்கப்படும். வணிகர் அல்லாதோரின் காசோலைகளைத் தவறாக அவமதிப்பதால் அவரது நற்பெயருக்கு மிகுதியும் களங்கம் ஏற்படுவதில்லையாதலால் அவருக்கு பெயரளவிலேயே இழப்பீட்டுத் தொகை வழங்கப்பெறும்.

வங்கியரொருவர் வேண்டுமென்றே ஒரு வாடிக்கையரது காசோலையை அவமதிப்பாரானால், அதற்கான 'பழி இழப்பீடு' (Vindictive damage) செலுத்த வேண்டியவராவார்.

மேற்கண்டவற்றால் ஒப்பந்தத்தை மீறல், கவனக்குறைவு, பழி இவை காரணமாகக் காசோலைகள் மறுக்கப்படும்போது, வாடிக்கையருக்கு வங்கியர் மீது வழக்குத் தொடுக்க உரிமையுண்டு என அறியலாம்.

## வழக்குகளில் வழங்கப்பெற்ற தீர்வுகள்

*'நியூ சென்டரல் ஹால் எதிராக யுனைட்டெட் கமெர்ஷியல் பாங்க் லிமிடெட்'* (New Central Hall Vs United Commercial Bank Ltd.) என்ற வழக்கில், காசோலையைத் தவறாக அவமதித்தல் என்பது காசோலைக்குரியோரது நற்பெயர் கெடலாகிய பேரிழப்பைத் தருவதால், வணிகராகிய வாடிக்கையர் பேரளவு இழப்பீடு அல்லது சிறப்பு இழப்பீட்டினைப் பெற இயலும். வணிகரல்லாதார் பெயரளவு இழப்பீடு பெறுவர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

*'கிப்பன்ஸ் எதிராக வெஸ்மின்ஸ்டர் பாங்கு'* (Gibbons Vs Westminster Bank) என்ற வழக்கில் திருமதி. கிப்பன்ஸ் என்ற வணிகரல்லாத வாடிக்கையர் தனது நிலக்கிழாருக்கு வாடகைக்குரிய £ 9-16-0 தொகைக்கு ஒரு காசோலையை அளித்தார். அக்காசோலை தவறாக அவமதிக்கப்பட்டது. இதற்குரிய இழப்பீட்டுத் தொகையாக 40 ஷில்லிங்ஸ் அளவு அதாவது பெயரளவு இழப்பீடு வழங்கும்படி நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது. திருமதி. கிப்பன்ஸ் ஒரு வணிகரல்லர் என்பதால் மேற்கண்ட வண்ணம் தீர்ப்பு சொல்லப்பட்டது.

*இஸ்டெர்லிங் எதிராக பார்கிலேசு பாங்க் லிமிடெட்* (Sterling Vs Barclays Ltd.) என்ற வழக்கில் திருமதி. இஸ்டெர்லிங் அவர்களின் காசோலை தவறாக அவமதிக்கப்பட்டது. அவர் ஒரு வணிகராக இருந்தும் அவருக்குப் பெயரளவு இழப்பீட்டுத் தொகையே வழங்கப்பட்டது. இதற்கு முன்னர், இருமுறை இவ்வாறு இவரது காசோலைகள் மதிக்கப்பெறாமல் மறுக்கப் பட்டபோது அவர் வழக்குத் தொடுக்கவில்லை என்பதும், அன்றாடங் காய்ச்சியாகிய எளிய வணிகர் அவர் என்பதுமே மேற்கண்ட தீர்வுக்குரிய காரணங்களாகக் கருதப்பட்டன.

*டேவிட்சன் எதிராக பார்கிலேசு பாங்கு லிமிடெட்* (Davidson Vs Barclays Bank Ltd.) வழக்கில் குதிரைப் பந்தய அலுவலகத்தில் பதிவு அலுவலராகப் (book maker) பணிபுரியும் டேவிட்சன் என்பாரது, குறைந்த அளவு தொகைக்கான காசோலையை வங்கியர் தவறுதலாக அவமதித்து விட்டனர். இது அவருடைய தொழிலைப் பாதிக்குமளவிற்கு நற்பெயர் இழப்பினை ஏற்படுத்தியதால் பேரளவு இழப்பீட்டுத் தொகையான £ 250 அவருக்கு வழங்கப்பட்டது.

*கனரா பாங்கு எதிராக ஐ.வி. இராஜகோபால்* (Canara Bank Vs I.V.Rajagopal) என்ற வழக்கில் வங்கியர், தனது வாடிக்கையரான ஐ.வி. இராஜகோபால் வரைந்த 294.40 ரூபாய்க்கான காசோலையைத் தவறாக அவமதித்த காரணத்தால் அவர் தனது வேலையை இழந்ததாக நீதிமன்றத்தில் நிறுவப்பட்டது. அந்த வாடிக்கையர் வேலையிழப்பாகிய பெருந்துன்பத்திற்காளாகியிருப்பதால் பேரளவு அல்லது சிறப்பு இழப்பீடாக ரூ.14,000 வழங்கப்பட்டது.

பொதுவாக, ஒரு வாடிக்கையர் வணிகர் அல்லாதவராயின் பெயரளவு இழப்பீடு மட்டுமே பெறுவர். எனினும் அவர் காசோலை அவமதிப்பால் தனக்கு ஏற்பட்ட பெரும் இழப்பினை நிறுவினர் எனில் பேரளவு அல்லது சிறப்பு இழப்பீடு பெறுவர். மேற்கண்ட சான்றுகள் மூலம், இழப்பீட்டுத் தொகை ஒருவரது 'நற்பெயர் இழப்பின்' அடிப்படையிலேயே நிர்ணயம் செய்யப்பெறும் அல்லது தீர்மானிக்கப்படும் என்பது தெளிவுறுகிறது.

### *மாற்றுச்சிட்டை மதிக்கும் கடமையினரா?*

ஒரு வங்கியர், சட்டப்படி தனது வாடிக்கையர் வரைந்த மாற்றுச் சிட்டை மதிக்க வேண்டிய கடமையினர் அல்லர். எனினும் தற்போது அவர் தம் வாடிக்கையருக்காக மாற்றுச்சிட்டை மதிக்கும் பொறுப்பை ஏற்றுள்ளனர். ஒரு வாடிக்கையர் தான் ஏற்றுக்கொண்ட மாற்றுச்சிட்டிற்கு தனது வங்கியில் பணம் பெறுமாறு ஏற்பாடு செய்திருப்பின், இதனை மாற்றுச்சிட்டு இடங்குறித்தல் (Domiciliation of a bill) என்று அழைக்கிறோம்.

முன்னேற்பாடு

பொதுவாக, வங்கியர் தமது வாடிக்கையரின் இடங்குறிக்கப்பட்ட மாற்றுச்சிட்டை மதித்தல் போன்ற பணிகளை எந்தவித முன்னேற்பாடுமின்றி ஏற்றுக்கொள்ளார். அவ்வாறு ஒருமுறை ஏற்றுக் கொள்வாரானால், வாடிக்கையர் மீண்டும் அவ்வாறே எதிர்பார்க்கும் பழக்கம் ஏற்பட்டுவிடும். இப்பழக்கமே வழக்கமாக மாறிவிடாமல் காத்துக் கொள்ளும் பொருட்டே முன்னேற்பாடு வேண்டப் பெறுகின்றது.

ஈட்டுறுதிப் பத்திரம்

மாற்றுமுறை ஆவணச் சட்டம், பிரிவு 85இன்படி காசோலைக்கு வழங்கப்படும் சட்டமுறைப் பாதுகாப்பு மாற்றுச்சிட்டுக்கு வழங்கப்படுவதில்லை. வங்கியர் தாமாகவே தமது வாடிக்கையரின் மாற்றுச்சிட்டை மதிக்க முன் வருவதால் வாடிக்கையரிடமிருந்து ஈட்டுறுதிப் பத்திரம் ஒன்றை எழுதிப்பெறல் தேவை. மாற்றுச்சிட்டை மதித்தலால் வங்கியருக்கு ஏதேனும் இழப்புகள் நேரிடும் சூழல் ஏற்படின் ஈட்டுறுதிப் பத்திரம் பாதுகாப்பளிக்கும்.

முன்னெச்சரிக்கையாக மேற்கொள்ள வேண்டியவை

மேற்கூறிய பாதுகாப்பு ஏற்பாடுகளுக்கப்பாலும் சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை வங்கியர் மேற்கொள்ள வேண்டும்.

(அ) மாற்றுச் சிட்டில் தேவையான அனைத்து விவரங்களும் நிறைவு செய்யப்பட்டுள்ளதா எனப்பார்த்தல்,

(ஆ) போதுமான அளவு முத்திரையிடப்பட்டுள்ளதா என சோதித்தல்,

(இ) மாற்றுச்சிட்டு செலுத்துதற்குரிய காலத்தைக் கவனித்தல்,

(ஈ) மாற்றுச்சீட்டில் உள்ள கையொப்பம் சீராக உளதா என நோக்கல்.

மேற்கண்ட முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் வங்கியரின் பாதுகாப்புக்கு உறுதி தருவனவாம்.

## II. வங்கியரின் பற்றுரிமை

வங்கியர் - வாடிக்கையரிடையே நிலவும் மற்றொரு உறவு பற்றுரிமை உறவாகும். வாடிக்கையர் ஒப்படைத்துள்ள பொருட்கள் மீதும், ஆவணங்கள் மீதும் வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு.

### பற்றுரிமை என்றால் என்ன?

ஒருவரது கடன் தீரும் வரை, அவர் பிணையமாகத் தந்துள்ள பொருட்களைக் கடனீந்தோர் தம்மிடம் தக்கவைத்துக் கொள்ளும் உரிமையே பற்றுரிமை ஆகும்.

இந்திய ஒப்பந்தச் சட்டம் (Indian Contract Act) பிரிவு 171இன் படி ஒரு வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்களை பிணையமாக வைத்திருப்பதற்கு எந்தவிதமான ஒப்பந்தமும் இல்லாத நிலையிலும் அப்பொருட்கள் மீது வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு என்பது அறியவருகின்றது.

### பற்றுரிமை வகைகள்

பற்றுரிமை, தனிப்பற்றுரிமை மற்றும் பொதுப்பற்றுரிமை என இருவகைப்படும்.

### தனிப்பற்றுரிமை

தனிப்பற்றுரிமை என்பது ஏதேனும் ஒரு நடவடிக்கைக்கு மட்டுமே உரியது.

சான்றாக, தையற்காரரிடம் தையற்கூலியினைக் கொடுக்கும் வரை தைக்கக் கொடுத்த துணி மீது அவருக்குப் பற்றுரிமை உண்டு. கூலியினைக் கொடுத்ததும் தைத்த துணியினைத் தந்து

விடவேண்டும். கூலியினை அவர் பெறும் வரை மட்டுமே உள்ள பற்றுரிமை தனிப்பற்றுரிமையாகும்.

### பொதுப்பற்றுரிமை

ஒரு வங்கியர் ஒரு குறிப்பிட்ட கடனுக்கு மட்டுமன்றி, தனது வாடிக்கையர் திருப்பித்தர வேண்டிய அனைத்து கடன்களுக்கும் அவரிடமிருந்து பெற்ற பிணையப்பொருட்கள் அனைத்தையும் தக்கவைத்துக் கொள்ளும் உரிமையே பொதுப்பற்றுரிமை ஆகும். கடனாளி - கடனீந்தோர் இருவருக்கிடையிலான அனைத்து நடவடிக்கைகளுக்கும் பொருந்துவதே பொதுப் பற்றுரிமை.

### வங்கியர் பற்றுரிமை

இருவகைப் பற்றுரிமைகளுக்கும் வங்கியர் உரிமையுடையார் எனினும், பெரும்பாலும் பொதுப்பற்றுரிமையே வங்கியரது பற்றுரிமையாக விளங்கும்.

வாடிக்கையர் செலுத்த வேண்டிய கடன்களுக்காக, பிணையமாக்கப்பட்டுள்ள அனைத்துப் பொருட்கள் மற்றும் பத்திரங்கள் போன்றவற்றைத் தக்க வைத்துக்கொள்ளும் உரிமை வங்கியருக்கு உண்டு. இவ்வாறு வங்கியர் பொதுப் பற்றுரிமைக்குரியவர் ஆவார்.

*பிராண்டோ எதிராக பார்னெட்* (Brandao Vs Barnett) என்ற வழக்கில், 'பிணையப்பொருட்கள் மீது பற்றுரிமை செலுத்தக் கூடாது' என்ற நிபந்தனையின் பேரில் அளிக்கப்பட்ட பிணையப் பொருட்களைத் தவிர, ஏனைய பிணையப்பொருட்கள் அனைத்தின் மீதும் வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு என தீர்ப்பாயிற்று.

### பற்றுரிமையை நிலைநாட்டும் சூழல்கள்

கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் ஒரு வங்கியர் பற்றுரிமையை நிலைநாட்டலாம் :–

1. பற்றுரிமை மேற்கொள்ளுவதற்குத் தடையான ஒப்பந்தம் ஏதும் இருத்தல் கூடாது.

2. வங்கியர் என்ற நிலையில் மட்டுமே பொருட்களை வங்கியர் பெற்றிருத்தல் வேண்டும்.

3. சட்டத்திற்குட்பட்ட முறையில் மட்டுமே, வாடிக்கையரது சொத்துக்களை வங்கியர் பெறவேண்டும்.

4. ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஒப்படைத்திருத்தல் கூடாது.

மேற்கண்ட நான்கு நிபந்தனைகளின் அடிப்படையிலேயே வங்கியர் பிணையப் பொருளைப் பற்றுரிமையாக்கலாம்.

**பற்றுரிமை, ஒப்பந்தத்தினைப் பொறுத்து அமையும்**

வாடிக்கையர் ஒருவர் நகைகளைப் பிணையமாக்கி, கடன் பெற்று, பின்னர் அக்கடனை அடைத்துவிட்டார். ஆனால், அவர் பொறுப்பேற்றுள்ள மற்றொரு கடன் தீர்க்கப்படாததால், வங்கியர் மேற்கண்ட பிணையப் பொருளாகிய நகைகள் மீது பற்றுரிமை கொள்ளலாம் என்பதற்குரிய ஒப்பந்தம் ஏதும் இல்லாத காரணத்தால் அவற்றின் மீது பற்றுரிமை கொள்ள இயலாது என்று *கே. ஜெகதீஷ்வர ரெட்டி எதிராக ஆந்திர வங்கி* (K.Jegathishwar Reddy Vs Andhra Bank, 1988) என்ற வழக்கில் தீர்ப்பு அமைந்துள்ளது.

வாடிக்கையர் ஒருவர் வங்கியொன்றில் நகைமீது இருகடன்களும், பயிர்மீது ஒரு கடனும் பெற்றார். நகைமீதான கடன்களைத் திருப்பி அளித்துவிட்டார். ஆனால் பயிர்மீதான கடனுக்காக, வங்கியர், நகைமீது பற்றுரிமை கொண்டார். இதனை எதிர்த்து, வாடிக்கையர் வழக்குத் தொடர்ந்தார். பயிர் மீதான கடனை அரசு தவிர்த்து விட்டதாலும், தான் நகைமீதான கடனைத் திருப்பி அளித்து விட்டதாலும், பயிர் மீதான கடனுக்காக நகை மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளக் கூடாதென வழக்கிட்டார்.

வாடிக்கையர் கடன் பெற்றபோது, 'தான் பெறும் கடன்கள் அனைத்திற்கும் நகையே பிணையப் பொருளாகும்' என ஒப்பந்தம் செய்திருந்தமையால், வங்கியர் நகைமீது பற்றுரிமை கொள்ளலாம் என்றும், பயிர்க்கடன் தவிர்வு செய்யும் திட்டம் தனியார் வங்கிக்குப் பொருந்தாதாகையாலும் வங்கியருக்கு வாடிக்கையரது நகைமீது பற்றுரிமை உண்டு' என *வைசியா வங்கி எதிராக அக்கம் மல்லிகார்ஜுன ரெட்டி* (Vysya Bank Ltd., Vs Akkam Mallikarjuna Reddy) என்ற வழக்கில் தீர்ப்பாயிற்று.

**பற்றுரிமை - ஓர் உள்ளுறை அடகு (Implied Pledge)**

கடனைத் திரும்பச் செலுத்துவதற்குரிய முயற்சிகள் மேற்கொள்ளப்படாத நிலையில், தேங்கிக் கிடக்கும் நாட்பட்ட கடன்களுக்குரிய பிணையப்பொருளை அடகுப் பொருள்போலக் கையாளலாம் என்பதால், பற்றுரிமை என்னும் சொல் அடகு என்னும் பொருளை உட்கிடக்கையாகக் கொண்டுள்ளது என்பது தெளிவு! எனவே வங்கியரின் பற்றுரிமையை உள்ளுறை அடகு என்று கொள்வதில் தவறில்லை.

வங்கியர், திருப்பிச் செலுத்தப்படாத, நாட்பட்ட கடன்களுக்கான பிணையப் பொருள்மீது பற்றுரிமை கொள்வதுடன், தகுந்த முறையில் வாடிக்கையருக்கு அறிக்கை விடுத்தபின் அதனை விற்கும் உரிமையையும் பெறுவார். *டேவர்ஜஸ் எதிராக சேன்டமன்* (Deverages Vs Sandeman) என்னும் வழக்கில், வாடிக்கையருக்கு ஒருமாத கால தவணை அளித்து அறிக்கை விடுத்தால் போதும் எனத் தீர்ப்பாயிற்று.

'வங்கியரின் பற்றுரிமை பிற சாதாரண பற்றுரிமைகளைக் காட்டிலும் மிகுதியான உரிமைகளைப் பெற்றது' என வங்கியியல் அறிஞர் சர். ஜான் பேஜட் தனது 'வங்கியியல் சட்டம்' என்ற நூலில் கருத்துரைக்கின்றார்.

பொதுவாக, பிணையப்பொருளை விற்கும் உரிமை, அடகு முறைக்கு மட்டுமே உண்டு. மேற்கண்டவாறு பிணையப் பொருளை விற்கும் உரிமையைப் பற்றுரிமை பெறுவதாலேயே

அதனை உள்ளுறை அடகு என்று கூறுகிறோம். ஆனால், அடகில் போலன்றி, வங்கியர் சில குறிப்பிட்ட சூழல்களில் மட்டுமே பற்றுரிமையாகக் கொண்ட பிணையப் பொருளை விற்கும் உரிமையைப் பெறுவர் என்பது குறிப்பிடத்தக்கது.

### மாற்றுமுறை ஆவணங்களும் அவை போல்வனவும்

மாற்றுமுறை ஆவணங்கள் மற்றும் அவை போன்ற அனைத்து ஆவணங்கள் மீதும் வங்கியர் பற்றுரிமை கொள்ளலாம்.

*மியா எதிராக குரி* (Mia Vs Curri) என்ற வழக்கில், மாற்றுச்சீட்டு, காசோலை, கடனுறுதிச் சீட்டு போன்ற மாற்றுமுறை ஆவணங்கள் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளலாம் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

வாடிக்கையருக்கு உரிமையில்லாத ஆவணங்களாயிருப்பினு அவற்றை வங்கியர் நல்லெண்ணத்துடன் பிணையப் பொருளாகப் பெற்றுக் கொண்டமையால் அவற்றின் மீதும் பற்றுரிமை கொள்ளலாம். நல்லெண்ணத்துடன் பிணையப் பொருளைப் பெற்று முறையான உரிமையாளராகத் (Holder in due course) திகழ்வதால் வாடிக்கையரைக் காட்டிலும் வங்கியர் சிறந்த உரிமையர் எனக் கருதப்பெறுவார்.

### பாதுகாப்புப் பெட்டக வைப்புகளின் மீது பொதுப் பற்றுரிமை இல்லை

ஆவணங்கள், அணிகலன்கள் மற்றும் விலை உயர்ந்த பொருட்களை பாதுகாப்புப் பெட்டக வைப்புகளாக வங்கியர் வாடிக்கையரிடமிருந்து பெறுகின்றனர். இவ்வாறு பாதுகாப்புப் பெட்டகங்களில் வைப்பதற்காகவோ அன்றி ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகவோ வாடிக்கையர் ஒப்படைத்த பொருட்கள் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ள இயலாது என *போலக் எதிராக முல்லா* (Pollock Vs Mulla) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. இதனையே வங்கியியல் அறிஞர் சர் ஜான் பேஜட் என்பாரும் வலியுறுத்துகிறார்.

ஆனால், வாடிக்கையர் பாதுகாப்புப் பெட்டக வாடகைக் கட்டணத்தைச் செலுத்தாதிருந்தால் அதனுள் உள்ள பொருட்கள் மீது வங்கியருக்குத் தனிப்பற்றுரிமை உண்டு.

**குறிப்பிட்ட நோக்குடன் ஒப்படைக்கப்பட்ட பொருட்களின் மீது பற்றுரிமை இல்லை**

*கிரீன் ஹால் எதிராக யூனியன் பாங்கு ஆஃப் மான்செஸ்டர்* (Greenhalgh Vs Union Bank of Manchester) என்ற வழக்கில், மாற்றுமுறை ஆவணம் அல்லது வேறு எந்த ஆவ்ணமாகிலும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன் வங்கியரிடம் ஒப்படைவு செய்யப்பட்டிருந்தால் அதன்மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளலாகாது என்று தீர்ப்பாயிற்று. ஒரு குறிப்பிட்ட நோக்குடன் வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் பொருளுக்கு அந்நோக்கம் நிறைவேறும்வரை அவரே பொறுப்புரிமையாளராவதால் (Trustee) பற்றுரிமை கொள்ள இயலாது.

*கே. ஜெகதீஷ்வர ரெட்டி எதிராக ஆந்திர வங்கி, நிஜாமபாத்* (1988) (K. Jagatheshwar Reddy Vs Andhra Bank, Nizamabad (1988) என்ற வழக்கில், "ஒரு குறிப்பிட்ட கடனுக்காக மட்டும்" என்ற ஒப்பந்தத்தின் பேரில் பெற்ற பிணையப் பொருள் மீது பற்றுரிமை கொள்ளுதல் கூடாது என்று முடிவு கூறப்பட்டது.

**கவனக்குறைவாக தவறவிட்ட பொருட்கள்மீது பற்றுரிமை கொள்ள இயலாது**

ஒரு வாடிக்கையரது கவனக்குறைவால், சட்டமுறையிலன்றி தம் கையகப்பட்ட பொருட்கள் மீது வங்கியருக்குப் பற்றுரிமை கிடையாது. வங்கியர் ஒருவர், ஒரு வாடிக்கையருக்கு சில பிணையப் பொருட்கள் பேரில் கடன் தர மறுத்துவிட்ட நிலையில், வாடிக்கையர் அப்பொருட்களை வங்கி எல்லைக்குள்ளேயே தவறுதலாக மறந்துவிட்டு விட்டார். சட்டத்திற்குப் புறம்பான முறையில் வங்கியருக்கு உடைமையாகிவிட்ட அப்பொருட்கள் மீது பற்றுரிமை கொள்ளும் உரிமை அவருக்கு இல்லை என *லூகாஸ் எதிராக டோரின்* (Lucas Vs Dorrien) என்ற வழக்கில் முடிவாயிற்று.

**மீட்கப்படாத பொருட்கள் மீது பற்றுரிமை**

வாடிக்கையர் ஒருவர் தனது கடனைச் செலுத்தித் தீர்த்த பின்னும், அதற்காக பிணையமாக்கிய பொருட்களை மீட்டெடுத்துச் செல்லாதிருப்பின், தம்மிடம் உள்ள அப்பிணையப் பொருட்கள் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளலாம் எனவும், அப்பிணையப் பொருட்களை எடுத்துச் செல்லாத நிலையில் அவை மீண்டும் வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்டவையாகவே கருதப்படும் என்றும் *இலண்டன் அன்ட் குளோப் ஃபினான்ஸ் கார்ப்பொரேஷன்* (London and Globe Finance Corporation) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

**கடன் பத்திரங்கள் மேலும் வட்டிச்சீட்டின் மேலும் பற்றுரிமை**

வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்ட கடன் பத்திரங்கள் மற்றும் பங்காதாயச் சீட்டு இவற்றின் மீது பற்றுரிமை கொள்ளும் உரிமை வங்கியருக்கு உண்டு. வங்கியர் ஒரு வசூலிக்கும் முகவராகக் கருதப்படுவதால் பற்றுரிமை கொள்ளும் உரிமையைப் பெறுகின்றார். லார்டு சார்லி மேற்கண்ட கருத்தை ஏற்கவில்லை. எவ்வாறேனும், பாதுகாப்பு நோக்குடன் வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்கள் மீது வங்கியருக்குப் பற்றுரிமை கிடையாது என்பதே பொருள்.

கடன் பத்திரங்கள் மற்றும் வட்டிச்சீட்டு இவற்றின் மீது வங்கியருக்குப் பற்றுரிமை உண்டா? இல்லையா? என்பதை "வசூலிக்க / பாதுகாக்க தேர்வு" என்ற தேர்வுமுறை மூலம் தெரிவு செய்தபின் முடிவு செய்யலாம். "வசூலிக்கும் பொருட்டு, வங்கியரே கடன் பத்திரத்துடன் இணைந்துள்ள வட்டிச் சீட்டினைத் துண்டித்து, பயன்படுத்தலாம்", என்ற ஒப்பந்தத்துடன் வாடிக்கையர் கடன் பத்திரத்தை வங்கியரிடம் ஒப்படைத்திருப்பாரானால், கடன் பத்திரத்தின் மீதும் அத்துடன் இணைந்துள்ள வட்டிச்சீட்டின் மீதும் வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு. மாறாக, வாடிக்கையர் வட்டிச் சீட்டினைத் தானே கையாளுவதற்குரிய ஒப்பந்தத்துடன் கடன் பத்திரத்தை ஒப்படைத்திருப்பாரெனில், பாதுகாப்பு நோக்குடன் அதனை

ஒப்படைத்ததாகக் கருதி, வட்டிச்சிட்டின் மீதான பற்றுரிமை வங்கியருக்கு மறுக்கப்படும். ஆனால், கடன் பத்திரத்தைப் பொறுத்தவரை அதன்மீது வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு.

### வரையறுக்கப்பட்ட காலக் கடனும் பற்றுரிமையும்

கால வரையறையுடன் பெறப்பட்ட கடன்தொகை வரையறுக்கப்பட்ட காலம் முடியும் வரை, அதற்காக ஒப்படைக்கப்பட்ட பொருட்கள் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ள இயலாது. இவ்வாறே, முதிர்வு நாள் வரும் முன்னரே வட்டம் செய்து வழங்கப்பட்ட மாற்றுச்சிட்டுக்குரிய பிணையப் பொருட்கள் மீதும் முதிர்வு நாள் வரும் வரை பற்றுரிமை கொள்ள இயலாது.

### வைப்புகளின் மீது பற்றுரிமை இல்லை

வாடிக்கையர் ஒருவர் செலுத்த வேண்டிய கடனுக்காக அதே வாடிக்கையரது வைப்புக் கணக்கின் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ள இயலாது. ஆனால் அவர் தரவேண்டிய கடனுக்காக வைப்புக் கணக்குகளை இணைக்கும் உரிமை வங்கியருக்கு உண்டு.

பிரிவு 171இன்படி ஒரு வங்கியரிடம் ஒப்படைக்கப்பட்ட பிணையங்கள் மீது மட்டுமே அவருக்குப் பற்றுரிமை உண்டு என்று கூறப்படுகிறது. ஒப்படைவாகப் பெற்ற பொருட்களை பெற்றது பெற்றபடியே திருப்பித்தருதல் வேண்டும் என்பது விதி. ஆனால், ஒரு வைப்பைப் பொறுத்தவரையில், பெற்றது பெற்றபடியே (அதே ரூபாய்த் தாள்கள், காசுகள்) திருப்பித் தரத் தேவையில்லை. தொகையின் அளவு மாறாமல் அளிக்கப் பெறும். இக்காரணத்தால், வைப்பினை ஒப்படைவுப் பொருளின் கீழ் கொண்டு வர இயலாது. எனவே வைப்பின்மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளவும் கூடாது. *அஃபிஷியல் லிக்குயூடேட்டர், ஹூயுமன் பாங்க் லிமிடெட், எதிராக கே.பி.டி. நாடார் அண்ட் அதர்ஸ்* (Official Liquidator, Human Bank Ltd., Vs K.P.T. Nadar & Others) என்னும் வழக்கில், வாடிக்கையர் ஒருவர் பணத்தை வங்கியில் வைப்புக் கணக்கில் செலுத்தியவுடனேயே, வங்கியர் அதன்

உடைமையாளராகி விடுகின்றமையால் பற்றுரிமை என்ற பேச்சுக்கே அங்கு இடமில்லை எனத் தீர்ப்பாயிற்று.

**காலவரையறை இரசிது மீது பற்றுரிமை**

காலவரையறை வைப்பின்மீது வங்கியர் பற்றுரிமை கொள்ள இயலாதென்பதைக் கண்டோம் என்றாலும் காலவரையறை வைப்பு இரசிது பிணையமாக்கப்படுமானால் அதன்மீது வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு. ஆனால் வாடிக்கையர் அந்த இரசிதின் மீது வருவாய் டூ த்திரை (Revenue Stamp) பொறித்துக் கையொப்பமிட்டிருக்க வேண்டும் என்பதை, *யூனியன் பாங்க் ஆ்ஃப் இந்தியா எதிராக வேணுகோபாலன்* (Union Bank of India Vs Venugopalan) வழக்கின் தீர்ப்பு வாயிலாக அறிகிறோம்.

**பற்றுரிமை பற்றி மேலும் சில கருத்துக்கள்**

(1) ஒரு கூட்டாண்மை நிறுவனத்திடமிருந்து வரவேண்டிய கடன்களுக்கு அந்நிறுவனத்தின் கூட்டாளியது வைப்புக் கணக்கின்மீது வங்கியர் பற்றுரிமை கொள்ள இயலாது.

(2) ஒரு பொறுப்புரிமையரது பொறுப்புடைமைக் கணக்கினை இயக்குபவர் செலுத்த வேண்டிய கடனுக்காக, பொறுப்புடைமைப் பொருள் மீது வங்கியர் பற்றுரிமை கொள்ளல் கூடாது.

(3) திருடப்பட்ட கடன் பத்திரம் வங்கியரிடம் விற்பனைக்காக வந்த நிலையில், அதன் உரிமையாளர் அதனைக் கேட்டு வருவாரானால் அப்பத்திரத்தின் மீது வங்கியருக்குப் பற்றுரிமை கிடையாது.

(4) காலவரையறைச் சட்டம் வங்கியரின் பற்றுரிமையைத் தடை செய்ய இயலாது.

(5) ஒரு மாற்றுச்சிட்டை அதன் முதிர்வு நாள் வரை பாதுகாப்பாக வைத்திருந்து, முதிர்வு நாளிற்குப்

பின்னர் வசூலிக்க வேண்டும் என்ற ஒப்பந்தத்துடன் வங்கியர் பெற்றிருப்பாரானால், முதிர்வு நாள் வரை அம்மாற்றுச்சீட்டின் மீது வங்கியருக்குப் பற்றுரிமை கிடையாது. மாற்றுச்சீட்டை வசூலித்துக் கொடுப்பது வங்கியர்தம் பணியாதலால் அதனை வசூலிக்கும்போது அதன்மீது பற்றுரிமை உண்டு.

## மறைமுக அல்லது உடைமையற்ற பற்றுரிமை (Nagative Lien or Non-possessory Lien)

மறைமுகப் பற்றுரிமையை உடைமையில்லாப் பற்றுரிமை என்றும் அழைப்பர். நம்பிக்கைக்குரிய சிலருக்குக் கடன் வழங்கும்போது வங்கியர் பிணையப்பொருளை உடைமை கொள்ளார். வாடிக்கையரின் பிணையப்பொருட்கள் அவரிடமே இருக்கும். ஆனால், "கடனைத் திருப்பிச் செலுத்தும் வரை அவ்வுடைமைகளை வேறு எதற்கும் பிணையமாக்கேன் என்றும், கடனைத் திருப்பிச் செலுத்தாவிடில் பிணையப் பொருட்களை வங்கியரிடம் ஒப்படைத்து விடுவேன்" என்றும் உறுதி ஒப்பந்தம் செய்திருப்பார். இவ்வாறு மேலே குறிப்பிட்டது போன்ற நிலையில் வங்கியருக்கு பிணையப்பொருள் மீது நேரடியான உடைமை உரிமை இல்லாவிட்டாலும் மறைமுகமான உரிமை இருப்பதால் அதனை மறைமுகப் பற்றுரிமை அல்லது உடைமையற்ற பற்றுரிமை என்கிறோம்.

## III. வாடிக்கையரின் கணக்குகளை இரகசியமாக வைத்தல்

வாடிக்கையரின் கணக்குகளை இரகசியமாக வைத்துக் கொள்வது வங்கியரின் கடமையாகும். வங்கி ஊழியர்கள் ஒவ்வொருவரும் தமது வாடிக்கையரின் கணக்குகளை இரகசியமாக வைத்திருப்பதாக உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும். வாடிக்கையரின் நிதி நிலைமை, கணக்கின் தன்மை போன்ற விவரங்களை வெளியிடுதல் கூடாது.

இரகசியம் காக்கும் முறை 1868ஆம் ஆண்டில் நடந்த *ஹார்டி எதிராக வெஸ்லி* (Hardy Vs Veasley) என்ற வழக்கிற்குப்

பிறகு பழக்கத்திற்கு வந்துவிட்டதெனினும், 1924ஆம் ஆண்டு முதல்தான் வங்கியரின் கடமையாக வலியுறுத்தப்பட்டது. 1924ஆம் ஆண்டு நடந்த டோர்னியர் (Tournier) வழக்கு மூலம் 'இரகசியம் காத்தல்' வங்கியரின் இன்றியமையாத கடமை என உறுதி செய்யப்பட்டது. *டோர்னியர் எதிராக நேஷனல் ப்ரொவின்ஷியல் அண்ட் யூனியன் பேங்க் ஆஃப் இங்லாண்டு லிமிடெட்* (Tournier Vs National Provincial and Union Bank of England Ltd.,) என்ற வழக்கில் வங்கியர் தனது வாடிக்கையருக்கும் குதிரைப் பந்தயக்காரருக்கும் உள்ள தொடர்பை வெளியிட்டதன் விளைவாக, வாடிக்கையர் தனது வேலையை இழக்க நேரிட்டது.

வாடிக்கையரின் வேலையிழப்புக்குக் காரணமாகியவர் வங்கியரே. தம்மிடம் வாடிக்கையர் வைத்துள்ள கணக்குகள் மற்றும் நிதி நிலைமைகளை பற்றிய விவரங்களை இரகசியமாக வைத்திருக்க வேண்டிய வங்கியர் அதனை மீறியதால்தான் வாடிக்கையருக்கு இழப்பு ஏற்பட்டது என்றும் அதனை ஈடுசெய்வது அவரது பொறுப்பு என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது. இவ்வாறு, 'இரகசியம் காத்தல்' வங்கியரது சட்டபூர்வமான கடமை என வலியுறுத்தப்பட்டது.

1970ஆம் ஆண்டில் வங்கிய நிறுமச் சட்டத்தின் பிரிவு 13இன்படி தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் வாடிக்கையரின் கணக்குகளை இரகசியமாக வைத்திருத்தல் வேண்டுமென வலியுறுத்தப்பட்டது. பொதுவாக வங்கியர் அனைவருமே தங்கள் தொழில் தொடர்பான கோட்பாட்டின் காரணமாக தமது வாடிக்கையரின் கணக்குகளை இரகசியமாகவே வைத்துள்ளனர்.

வங்கியியல் அறிஞர் ஜான் பேஜட், "வாடிக்கையர் கணக்கின் இரகசியம் வாடிக்கையரின் கணக்குகள் முடிவடைந்த கணக்குகளாகிவிட்டபின்னும், ஏன்? வாடிக்கையர் இறந்த பின்னும் கூட காக்கப்பட வேண்டும்" என்கிறார். வாடிக்கையரின் கணக்கிருப்பு பற்றாக இருப்பினும், வரவாக இருப்பினும் அவற்றைப் பற்றிய சிறு நடவடிக்கையைக் கூட வங்கியர் வெளியிடக் கூடாது.

'இரகசியம் காத்தல்' வங்கியரின் கடமை எனினும், முற்றிலுமாக அம்முறையினைப் பின்பற்றுவதும் இயலாது. குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் வாடிக்கையரது கணக்கின் நிலவரங்களை வெளியிடுவது தேவையானதாக ஏற்றுக் கொள்ளப்படும். நீதிபதி பேங்கஸ் என்பாரது கருத்துப்படி கீழ்க்கண்ட நான்கு சூழல்களில் வங்கியர், ஒரு வாடிக்கையரின் கணக்குகளின் விவரத்தை வெளியிட உரிமை பெறுகின்றார்.

(1) சட்ட வலியுறுத்தல் காரணமாக

(2) பொதுமக்கள் நலன் கருதி

(3) வங்கியரின் நலன் கருதி

(4) வாடிக்கையரின் வெளிப்படையான அல்லது மறைமுகமான ஒப்புதல் பெறுமிடத்து.

### (1) சட்ட வலியுறுத்தல் காரணமாக, வாடிக்கையரின் இரகசியத்தை வெளியிடல்

குறிப்பிட்ட சூழ்நிலைகளில், வாடிக்கையரது கணக்குகளை வெளியிடுமாறு சட்டம் வங்கியரை வலியுறுத்துமானால் அதனை வங்கியர் மறுக்க இயலாது. வங்கியர், வாடிக்கையருக்குக் கடமைப்பட்டுள்ளவாறு தனது நாட்டின் சட்டதிட்டங்கட்கும் கடமைப்பட்டவராதலால் சட்டத்திற்குப் பணிய வேண்டுவது அவசியமாகிறது.

**கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் வாடிக்கையரது கணக்கினை வெளியிடும்படி வங்கியரிடம் சட்டம் பணிக்கலாம்**

(அ) வங்கியர் ஏட்டுச் சான்றுச் சட்டம் 1981 (Bankers Book Evidence Act) பிரிவு 4 இன்படி ஒரு வங்கியர் அவரது வாடிக்கையரின் கணக்குகளையோ அல்லது அதன் படிகளையோ வெளியிடுமாறு கேட்டுக் கொள்ளப்படலாம்.

(ஆ) இந்திய வருமானவரிச் சட்டம் பிரிவு 285இன்படி ஒரு குறிப்பிட்ட நிதியாண்டில், வைப்புகள் வாயிலாக ரூ.10,000 மற்றும் அதற்கு மேலும் வட்டித்தொகையினைப் பெற்ற வாடிக்கையரது பெயர்களை வெளியிடுமாறு வருமானவரி அதிகாரிகள் கட்டளையிடலாம். மேலும் வங்கியரது பேரேட்டுக் கணக்குகளை எப்போது வேண்டுமானாலும் சோதனையிடும் உரிமை வருமானவரி அதிகாரிகளுக்கு உண்டு.

(இ) இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டம் பிரிவு 45இன்படி இந்திய ரிசர்வ் வங்கிக்கு, வாடிக்கையரது கணக்குகளின் நிலவரத்தை வங்கியரிடமிருந்து பெறும் உரிமை உண்டு.

(ஈ) வங்கியியல் ஒழுங்காற்றுச் சட்டம் 1949 பிரிவு 26இன்படி ஒவ்வொரு வங்கியரும் பத்து ஆண்டுகளாகக் கேட்பாரற்று இருக்கின்ற கணக்குகள் பற்றிய ஆண்டறிக்கையை ரிசர்வ் வங்கிக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

(உ) அன்பளிப்பு வரிச்சட்டம் (Gift Tax Act) பிரிவு 36இன்படி அன்பளிப்புவரி அதிகாரிகள் வங்கியரிடம் கணக்கு ஏடுகளைக் காண்பிக்குமாறு கேட்டு, சோதனை செய்யலாம்.

(ஊ) அந்நிய செலாவணி ஒழுங்குமுறைச் சட்டம் 1973, மற்றும் செலாவணி கட்டுப்பாட்டுச் சட்டம் 1947 இவற்றின்படி, மேற்கண்ட சட்டவிதிகளை மீறியதாக ஒருவர்மீது ஐயம் ஏற்படின் அவரது நிதிநிலவரத்தை வங்கியரிடமிருந்து அறிந்து கொள்வதற்கு அரசு அதிகாரிகட்கு சட்டப்படி அதிகாரம் உண்டு.

(எ) நீதிமன்றம் பிறப்பித்த பற்றுகை ஆணை அல்லது கைப்பபற்று ஆணைப்படி (Garnishee Order) வங்கியர் தமது வாடிக்கையரின் கணக்குகளை வெளியிட்டாக வேண்டும்.

## 2. பொதுமக்கள் நலன்கருதி வெளியிடல்

தனியொருவர் நலனில் அக்கறை செலுத்துதலினும் பொதுமக்கள் நலனில் அக்கறை செலுத்துவதே இன்றியமையாதது. ஆகவே பொதுமக்களின் நலன் கருதி, தனியொரு வாடிக்கையரின் நலன் பாதிக்கப்படுவதைப் பொருட்படுத்தாது குறிப்பிட்ட சூழல்களில் அவரது கணக்குகளை வங்கியர் வெளியிட நேரலாம்.

(1) மிகையான அரசியல் நோக்குடன் ஒரு கணக்கில் பணம் செலுத்தப்பட்டிருப்பின் அக்கணத்தை வெளியிடலாம்.

(2) சட்டத்திற்குப் புறம்பான ஓர் அமைப்பின் கணக்கை வெளியிடலாம்.

(3) நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடிய தீவிரவாத அமைப்பின் கணக்குகளை வெளியிடலாம்.

(4) போர்க்காலங்களில் பகைவரது கணக்குகளை வெளியிடலாம்.

## 3. வங்கியரின் நலன் கருதி வெளியிடல்

வங்கியர் நலனுக்கு ஊறுவிளைவிக்கக் கூடிய சூழல்களில், தம் நிலையைக் காத்துக் கொள்ளும் பொருட்டு, வங்கியர் தமது வாடிக்கையரது கணக்குகளை வெளியிடுவர். இவ்வாறு நேரக்கூடிய சூழல்கள் சிலவற்றைக் காண்போம் :-

### (1) பொறுப்புறுதி அளித்தவரிடம் வெளியிடுதல்

கடனைத் திரும்பச் செலுத்தத் தவறிய வாடிக்கையரது கணக்குகளை, அவருக்குப் பொறுப்புறுதி அளித்தவரிடம் வெளிப்படுத்தலாம்.

### (2) உடன் வங்கியரிடம் வெளியிடுதல்

வங்கியர் தம்மையொத்த உடன் வங்கியருடன் தமது வாடிக்கையர் பற்றிய தகவல்களைப் பரிமாறிக் கொள்வது

இயல்பு. எனவே குறிப்பிட்ட ஒரு வாடிக்கையரது கணக்கின் விவரங்களை மற்றொரு வங்கியர், குறிப்பிட்ட காரணத்திற்காக வினவுவாரானால் அவருக்கு உதவும் பொருட்டு அவரது வினாக்களுக்கு விடையளித்தாக வேண்டும். இவ்வாறு உதவினால்தான், பின்னர் தானும் தேவைப்படும்போது மற்றொருவரின் கணக்கின் விவரம் அறிய அவ்வங்கியரை நாட இயலும். வட்டம் செய்து பணம் பெறும் பொருட்டு கொணரப்படும் மாற்றுச்சிட்டிற்குப் பணம் வழங்க விழையும் வங்கியர், மாற்றுச்சிட்டினை ஏற்றவர் பற்றி அறியும் பொருட்டு அவர் கணக்கு வைத்துக்கொண்டிருக்கும் வங்கியரிடம் அவரது கணக்கின் நிலவரம் பற்றி வினவலாம். விடையளிக்க வேண்டியதும் வங்கியரது பொறுப்பாகக் கருதப்படும். வங்கியரிடையே நிலவும் நட்பின் அடிப்படையில் உருவாகிய இவ்வழக்கம் இன்று வங்கியரின் பொதுவான நாகரிகமாகக் (Common courtesy) கருதப்படுகிறது.

### *(3)* வங்கியர் தமது செயல் முறையானது என நிறுவும் பொருட்டு வெளியிடல்

வங்கியர் தாம் முன்பு செய்தது முறையானதே என்பதை நிறுவும் பொருட்டு, தனது வாடிக்கையரின் கணக்குகளை வெளியிடல் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இதனை *'சுந்தர்லாண்டு எதிராக பார்கிலேசு பாங்கு'* (Sunderland Vs Barclays Bank) என்னும் வழக்கின் மூலம் அறியலாம்.

சுந்தர்லாண்டு என்பாரின் மனைவி துன்னுனர் (Tailor) பெயரில் வரைந்த காசோலையை வங்கியர் அவமதிப்பு செய்தார். அதற்குரிய தக்க காரணத்தைத் தன் கணவரிடம் தெரிவிக்கும்படி திருமதி. சுந்தர்லாண்டு தொலைபேசி மூலம் கேட்டுக் கொண்டார். தமது செயல் முறையானதே என்பதை நிறுவும் பொருட்டு வங்கியர், திருமதி. சுந்தர்லாண்டு குதிரைப்பந்தயத்திற்காகக் (Book Maker) காசோலைகள் வரைந்த உண்மையை வெளியிட்டார். பந்தயத்தின் பொருட்டுச் செலுத்திய இறுதிக் காசோலைக்குப்பின், கணக்கில் பணம் இல்லாத காரணத்தால் துன்னுனர் மீது வரையப்பட்ட காசோலையை மறுக்க வேண்டியதாயிற்று எனவும்

கூறினார். மேற்கண்ட விவரத்தை, தான் விரும்பாத விதத்தில், தன் கணவரிடம் வெளியிட்டமைக்காகத் திருமதி. சுந்தர்லாண்டு வங்கியர் மீது வழக்குத் தொடர்ந்தார். வழக்கின் தீர்ப்பு கீழ்க்கண்ட காரணங்களால் வங்கியருக்கு ஏற்பவே அமைந்தது :-

(அ) வங்கியர் தன் நலன் கருதியே வாடிக்கையரின் இரகசியத்தை வெளியிட வேண்டியதாயிற்று.

(ஆ) கணவன் மனைவியரிடையே இரகசியம் காக்கத் தேவையில்லை.

(இ) திருமதி. சுந்தர்லாண்ட், தன் கணவரிடம் காசோலை அவமதிப்பிற்கான காரணத்தைத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டதால் அவரது அனுமதியின் காரணமாகவே இரகசியம் வெளியிடப்பட்டது.

இவ்வாறு வங்கியர் தமது செய்கை முறையானது என்பதைத் தெளிவாக்கும் பொருட்டு, தேவையான இடங்களில் இரகசியத்தை வெளியிடலாம் என்பது தெரிய வருகின்றது.

## (4) வெளிப்படையாகவோ அல்லது குறிப்பாகவோ வாடிக்கையரின் ஒப்புதல் பெற்று வெளியிடல்

வாடிக்கையர், வெளிப்படையாகவோ அல்லது குறிப்பாகவோ ஒப்புதல் அளிக்காமல், அவரது கணக்கினை வங்கியர் வெளியிடக்கூடாது என்பது இவ்விருவரிடையே உள்ள ஒப்பந்தத்தின் உள்உறையும் பொருளாம். அவ்வாறானால் வாடிக்கையரின் ஒப்புதலின்பேரில் அவரது கணக்கினை வெளிப்படுத்தலாம் அன்றோ!

(அ) வணிக நோக்கத்திற்காக (Trade reference) வாடிக்கையரது நிதிநிலையினை அறிந்து கொள்ள விரும்பிய ஒருவரை, அவ்வாடிக்கையர்தானே வங்கியரிடம் வழிப்படுத்தியிருந்தால் அவரது கணக்குகளை வங்கியர் வெளியிடலாம்.

(ஆ) வாடிக்கையருக்குப் பொறுப்புறுதி அளிக்க விரும்புபவர் வாடிக்கையரது நிதிநிலைமை பற்றி அறியும் பொருட்டு வங்கியரை நாடினால், தேவைப்பட்ட அளவு விவரங்களை மட்டும் தெரிவிக்கலாம். இவ்வாறான சூழல்களில் வாடிக்கையரின் ஒப்புதலை எழுத்துமூலம் பெற்றுக் கொள்ளல் தேவை.

**இரகசியம் வெளியிடுங்கால் மேற்கொள்ள வேண்டிய தற்காப்புச் செயற்பாடுகள்**

வாடிக்கையரின் கணக்குகளை வெளியிடும்போது கவனக்குறைவுடன் செயற்பட்டால் அதனால் ஏற்படும் அனைத்து இழப்புகளுக்கும் வங்கியரே பொறுப்பேற்க வேண்டும். தனது தேவையற்ற வெளியிடுகையால் வாடிக்கையருக்கு இழப்பு நேரா வண்ணம் கவனமாகச் செயல்பட வேண்டும். இன்றேல், தனது கவனக் குறைவால் ஏற்படும் வாடிக்கையரின் இழப்புகளுக்கு ஈடு செய்ய வேண்டிய நிலை ஏற்படும்.

வங்கியர் வாடிக்கையர் பற்றிய தவறான தகவல்களைத் தந்துவிடக் கூடாது. அவ்வாறு தகவல்கள் தவறாக இருந்து விடுமானால், மூன்றாமவர் ஒருவருக்கு இழப்பீடு செலுத்த வேண்டிவரும். எனவே வாடிக்கையரது கணக்குகளை வெளியிடுங்கால் வங்கியர் பின்பற்ற வேண்டிய கொள்கைகள் சில உள. அவையாவன :

(1) தகவல்களில் தவறு இருத்தல் கூடாது.

(2) பொதுவான தகவல்களை மட்டுமே தரல் வேண்டும். கணக்குகளை உள்ளதை உள்ளபடி எடுத்துரைத்து விடக்கூடாது.

(3) வாடிக்கையரின் வெளிப்படையான ஒப்புதல் பெற்ற பின்னரே தகவல்களை வழங்க வேண்டும்.

(4) வாடிக்கையருக்கு மிக்க நன்மை தரத்தக்க அல்லது

மிக்க தீமை விளைவிக்கத்தக்க தவறான கருத்துக்களை வெளியிடக்கூடாது. இன்றேல் இவற்றால் ஏற்படும் இழப்புகட்கு வங்கியரே பொறுப்பேற்க நேரிடும்.

(5) தாம் பொறுப்பு ஏற்கக் கூடிய நிலை ஏற்பட்டுவிடா வண்ணம் நுண்ணறிவுடன் தகவல்களை வழங்க வேண்டும். முன்னேற்பாடாக வங்கியர், "தகவல்களை மிகவும் இரகசியமான முறையில், எங்களது பொறுப்பிற்கு அப்பாற்பட்டவகையில்" வழங்குகிறோம் என்ற உறுதிமொழியையும் இணைத்தே தகவல் தரும் முறை பின்பற்றப்படுவது நோக்கற்குரியது.

*பாம்புரி எதிராக பாங்க் ஆஃப் மாண்ட்ரியல்* (Bombury Vs Bank of Montreal) என்ற வழக்கில், "வங்கியின் மேலாளர் வழங்கிய தகவலுக்கு வங்கி பொறுப்பல்ல என்றும், மேலாளர் கையொப்பமிட்டிராவிடில் அவரும் அதற்குப் பொறுப்பேற்க இயலாது" என்றும் தீர்ப்பாயிற்று. மேலும், வங்கியிலிருந்து வழங்கப்பட்ட தகவல்களுடன் "மிகவும் இரகசியமாக, விருப்பு வெறுப்பற்று வழங்கப்படுகிறது" என்ற உறுதிமொழியும் இணைக்கப்பட்டிருந்தால் இதற்கு வங்கியர் பொறுப்பேற்க வேண்டியதில்லை என்று அறுதியிட்டுரைக்கப்பட்டது.

(6) கூடுமானவரை வங்கியர் தமது உடன் வங்கியருக்கு மட்டுமே வாடிக்கையர் பற்றிய தகவல்களை அறிவித்தல் நலம்.

(7) காசோலையைக் கொணர்பவரிடம், வங்கியர் எக்காரணத்தை முன்னிட்டும் தமது வாடிக்கையரின் கணக்கிருப்பை, துல்லியமாக வெளியிடுதல் கூடாது.

## IV. வங்கிக் கட்டணம் வசூலிக்கும் உரிமை

வங்கியர் வாடிக்கையரிடமிருந்து வங்கிக் கட்டணம் வசூலித்தல் என்பது இவ்விருவரிடையேயும் நிலவும்

உறவுமுறையின் மற்றொரு சிறப்புக்கூறாகும். இவ்வாறான கட்டணத்தை வாடிக்கையரின் ஊதியமற்ற கணக்குகள் மீதே வசூலித்தனர். இங்கிலாந்தில் இக்கட்டணம் வசூலித்தல் மிகவும் இயல்பான வங்கி நடைமுறையாக விளங்கியது. ஆனால் இந்தியாவில் மக்களிடையே வங்கிக் கணக்குத் தொடங்கும் பழக்கம் மிகல் வேண்டும் - இதற்குக் கட்டணம் ஒரு தடையாக இருத்தல் கூடாது என்ற நல்நோக்குடன் இக்கட்டணம் வசூலிக்கும் முறை நடைமுறைப்படுத்தப் படாமலிருந்தது.

ஆனால், வங்கியரின் பொதுவான இலாபம் ஈட்டும் திறன் குறைந்ததால், தற்போது இக்கட்டணம் வசூலிப்பதை நடைமுறைப்படுத்தி விட்டனர்.

இக்கட்டணத்தை, சேவைக் கட்டணம் (Service charges), கையாளும் கட்டணம் (Handling charges), வங்கிக் கட்டணம், நிகழ்வுக் கட்டணம் (Incidental charges), வசூலிக்கும் கட்டணம் (Collection charges), மதிப்பிடு கட்டணம் (Appraisal charges) எனப் பலவாறு குறிப்பிடுகின்றனர். இக்கட்டணத்தைப் பொறுத்தவரை வங்கியர்களுக்கிடையே ஒரு பொதுவான விதிமுறை இருப்பினும், இவைகள் வங்கிக்கு வங்கி மாறுபடுகின்றன.

## V. கூட்டுவட்டி வசூலிக்கும் உரிமை

பொதுவாக, சட்டம் கூட்டு வட்டி விதிப்பதற்கு அனுமதி வழங்கவில்லை. எனினும், வங்கியருக்கு மட்டும் இதில் விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. வங்கியர் ஒவ்வொரு காலாண்டு இறுதியிலும் தாம் அளித்த கடனுக்கு வட்டி விதிக்கின்றனர். இவ்வாறே தம் வாடிக்கையரின் வைப்புகளின் மீதும் ஒவ்வொரு அரை ஆண்டு இறுதியிலும் வட்டி தருகின்றனர்.

*நேஷனல் பேங்க் ஆஃப் கிரீஸ் எதிராக பைநியோஸ் சிப்பிங் கம்பெனி* (National Bank of Greece Vs Pinios Shipping Company) என்ற வழக்கில் பிணையக்கடன் மீதோ அல்லது பிணையமில்லாத கடன் மீதோ விதிக்கப்படும் வட்டியையும் சேர்த்து அசலாகக் கருத வங்கியருக்கு உரிமை உண்டு என்று தீர்மானிக்கப்பட்டது.

*சின்டிகேட் பாங்க் எதிராக வெஸ்ட் பெங்கால் சிமெண்ட் லிமிடெட்* (Syndicate Bank Vs West Bengal Cement Ltd.) என்ற வழக்கில் மேற்கூறிய கருத்தினையே தீர்ப்பாக வழங்கியுள்ளது.

எனவே மூன்று மாதங்களுக்கொருமுறை கொடுக்கப்படாத வட்டியைக் கணக்கிட்டு, அத்தொகையை அசல் தொகையுடன் சேர்ப்பது நடைமுறையில் ஒரு வழக்கமாக உள்ளது. இதன் காரணமாக, அடுத்த வட்டி கணக்கிடும் காலத்தில், முன்பு கடன் கணக்குடன் இணைக்கப்பட்ட வட்டித் தொகையையும் சேர்த்து வட்டி கணக்கிடப்படும்.

## VI. காலவரையறைச் சட்டத்தினின்று விலக்கு

வங்கியருக்குக் காலவரையறைச் சட்டத்தினின்று விலக்கு அளிக்கப்பட்டுள்ளமை மற்றுமொரு சிறப்புக்கூறாகும். இதனைப் பற்றி முன்னரே கண்டுள்ளோம். ஒரு சாதாரண கடனைப் பொறுத்தவரையில், மூன்று ஆண்டுகட்குள் அதனைச் செலுத்தாவிட்டால் அது வராக்கடனாகக் கருதப்படும் என காலவரையறைச் சட்டம் இயம்புகிறது. ஆனால், வங்கியர் இதனிலிருந்து விதிவிலக்குப் பெறுகின்றனர். காலவரையறைச் சட்டம் 1963, பிரிவு 22இன்படி, மூன்றாண்டு காலவரையறை என்பது வாடிக்கையர் பணம் கேட்டு ஆணையிட்ட நாள் முதற்கொண்டுதான் தொடங்கும். ஆனால், பணமோ வங்கியரிடம் வாடிக்கையர் கேட்டவுடனேயே அளிக்கப்பட்டு விடுவதால், இச்சட்டம் இங்கு செயற்பட வழியே இல்லாமற்போய் விடுகிறது. இவ்வாறு வங்கியர் பெற்ற கடனாகக் கருதப்படும் வைப்புகளுக்கு காலத்தடை எதுவும் கிடையாது. எனினும், நடைமுறையில் வங்கியர் பெற்ற அக்கடனாகிய வைப்புக்கும் ஒரு குறிப்பிட்ட கால அளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. வங்கியியல் ஒழுங்குமுறைச் சட்டம் பிரிவு 26 இன் படி, ஒரு வங்கியர் பெற்ற அக்கடனை வாடிக்கையர் பத்து ஆண்டுகளுக்குள் திருப்பித் தரும்படி கேட்காவிடில் அது காலாவதியானதாகக் கருதப்படும்.

காலவரையறை வைப்பைப் பொறுத்தவரையில், காலவரையறை வைப்பு இரசீது ஒப்படைக்கப்பட்ட

நாளிலிருந்து மூன்று ஆண்டுகள் கணக்கிடப்படும். ஆனால் காலவரையறை வைப்பின் முதிர்வு நாளன்றே வாடிக்கையர் இரசிதை ஒப்படைத்ததும் வங்கியர் பணத்தைத் திருப்பி அளித்து விடுவராதலால், மேற்கண்ட விதி, காலவரையறை வைப்பிற்கும் பொருந்தாது எனப் புலனாகிறது.

ஒரு பாதுகாப்புப் பெட்டக வைப்பைப் பொறுத்தவரையில், இந்த மூன்று வருட காலம் கேட்பு விடுக்கப்பட்ட நாளிலிருந்து கணக்கிடப்படும். மேல்வரைப்பற்றைப் பொறுத்தவரையில், மூன்று வருட காலம் அது பயன்படுத்தப் பெற்ற நாளிலிருந்து கணக்கிடப்படும்.

மேற்கூறியதுபோல், வங்கியியல் நடைமுறையில், எந்த வங்கியரும் பத்து ஆண்டுகள் முடியும் வரை காத்திருப்பதில்லை. ஒரு கணக்கில் ஒரு வருடத்திற்கு எந்தவித நடவடிக்கையும் நடைபெறாவிடில், அக்கணக்கு 'இயக்கமற்ற கணக்கு' (dormant account) என குறிக்கப்படும். அவ்வாறு குறிக்கப்பட்ட இரண்டாண்டுகளுக்குப் பின்னர், அது செயலற்ற கணக்காக (Inoperative account) மாற்றப்படும். அதன்பின்பு, ஐந்து ஆண்டுகள் கழித்து அவ்வங்கியின் மத்திய அலுவலகத்திற்கு அது மாற்றப்பட்டுவிடும்.

மக்கட்பணியையே தம் தலையாய கடனாகக் கொண்டொழுகும் வங்கியர் தொழில் மேன்மையுறு தொழில் என்பதில் ஐயமில்லை. வாடிக்கையர் வாழ்வை வளமாக்கி, நாட்டின் நலத்தைப் பெருக்கும் வங்கியர் - வாடிக்கையர் நல்லுறவு என்றென்றும் நிலைத்திருக்கப் பணி பல புரிந்து சிறப்பது வங்கியரின் கடமையன்றோ!

## வங்கியருக்கும் வாடிக்கையருக்குமிடையே உள்ள உறவுமுறையை விளக்கும் வரைபடம்

வங்கியருக்கும் வாடிக்கையருக்குமிடையே உள்ள உறவுமுறை

- பொதுவான உறவுமுறை
  - ஒப்படைவு பெறுநர் அல்லர்
  - பொறுப் புரிமைர் அல்லர்
  - முகவர் அல்லர்
  - கடனாளர் - கடனாளி உறவுமுறை
    - சலுகைக் கடனாளி
    - சலுகைக் கடனாளர்
- சிறப்பு உறவுமுறை
  - காசோலையை மதிக்க வேண்டிய கடமை
  - வங்கியரின் பற்றுரிமை
  - வாடிக்கையயரின் கணக்குகளை இரகசியமாக வைத்திருத்தல்
  - வங்கிக்கட்டணம் வசூல் செய்யும் உரிமை
  - கூட்டுவட்டி வசூலிக்கும் உரிமை
  - காலவரையறைச் சட்டத்தில் இருந்து விதிவிலக்கு

**சலுகைக் கடனாளி**

(1) கடனீவோரை நாடிச் செல்லத் தேவையில்லை
(2) கடனீந்தோர் கடனாளியை நாடிச் செல்லல்
(3) வாய்மொழி ஆணையை ஏற்கத் தேவையில்லை
(4) இடத்தின் இன்றியமையாமை
(5) காலம் நிர்ணயிக்கும் சலுகை
(6) பிணையமில்லாமல் பணம் பெறுதல்
(7) காலவரையறைச் சட்டத்தினின்று விலக்கு
(8) கணக்கு முடித்தல்

**சலுகைக் கடனாளர்**

வாடிக்கையர் கடன் வழங்கும்போது பிணையங்கள் பெறமுடியாது. ஆனால் வங்கியர் கடன் வழங்கும்போது பிணையத்தின் அடிப்படையில் மட்டுமே வழங்கப்படுகிறது.

## பயிற்சி வினாக்கள்

**ஒருபக்க விடைக்குரியவை :**

*(1)* வங்கியர் என்பவரைப் பற்றி நீவர் அறிவது யாது?

*(2)* வாடிக்கையர் என்பவர் யார்? ஒரு வாடிக்கையராகத் திகழ, தேவையான நிபந்தனைகள் யாவை?

*(3)* சர். ஜான் பேஜட்டின் 'காலக்கோட்பாடு' பற்றி நீவிர் அறிவது யாது?

*(4)* காசோலை தவறாக அவமதிக்கப்படும் போது, இழப்பீட்டுத் தொகை எவ்வாறு மதிப்பிடப்படும்?

*(5)* பெயரளவு இழப்பீடு மற்றும் பேரளவு இழப்பீடு இவற்றை வேறுபடுத்துக.

*(6)* பொதுப்பற்றுரிமை என்றால் என்ன? அது தனிப்பற்றுரிமையிலிருந்து எங்ஙனம் வேறுபடுகின்றது?

*(7)* உடைமையற்ற பற்றுரிமை என்பது யாது?

*(8)* பொதுமக்கள் நலன்கருதி எவ்வெச் சூழ்நிலைகளில் வங்கியர் வாடிக்கையரின் கணக்கினை வெளியிடலாம்?

*(9)* இரகசியம் வெளியிடுங்கால் மேற்கொள்ள வேண்டிய தற்காப்புச் செயற்பாடுகள் யாவை?

*(10)* வங்கியருக்குக் காலவரையறைச் சட்டத்தினின்று எவ்வாறு விலக்கு அளிக்கப்பட்டுள்ளது?

*(11)* இயக்கமற்ற கணக்கிற்கும் செயலற்ற கணக்கிற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

*(12)* வங்கிக் கட்டணங்கள் பற்றி சிறுகுறிப்பு வரைக.

*(13)* 'பற்றுரிமை - ஓர் உள்ளுறை அடகு' - விளக்குக.

மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக் குரியவை.

(1) "வங்கியர் ஒரு சலுகை பெற்ற கடனாளி" - விவாதிக்க.

(2) "வங்கியருக்கும் வாடிக்கையருக்குமிடையேயுள்ள உறவு முதன்மையாக கடனாளிக்கும், கடனீந்தோருக்குமிடையே உள்ளதைப் போன்றது" விளக்குக.

(3) வங்கியர் மற்றும் வாடிக்கையர் - இவர்களின் இலக்கணம் தந்து இவர்களுக்கிடையே நிலவும் பொது உறவுமுறை பற்றி விளக்குக.

(4) ஒரு வங்கியருக்கும் அவரது வாடிக்கையருக்குமிடையே நிலவும் சிறப்பு உறவுமுறை பற்றி விவாதிக்க.

(5) வங்கியியல் சட்டப்படி வாடிக்கையரின் காசோலையை வங்கியர் மதிக்க வேண்டும் என்பது பற்றிய சட்டத்தை விளக்குக. தவறான அவமதிப்பினால் ஏற்படும் விளைவுகளை வழக்குகளின் வாயிலாக வெளிக்கொணர்க.

(6) வங்கியரின் பற்றுரிமை என்பது யாது? எத்தகைய சூழ்நிலைகளில் பற்றுரிமையின் அதிகாரத்தை நிலைநாட்டலாம்?

(7) வங்கியர் தமது வாடிக்கையரின் கணக்கு பற்றிய இரகசியங்களைக் காப்பாற்ற வேண்டிய சட்டப்பூர்வமான கடமையை ஆராய்க.

(8) வாடிக்கையரின் கணக்கு இரகசியங்களைக் காத்தல் பற்றிய வங்கியரின் கடமை யாது? இரகசியத்தை வெளியிடுங்கால் மேற்கொள்ள வேண்டிய தற்காப்புச் செயற்பாடுகள் யாவை?

2

# வைப்புகள்
## (DEPOSITS)

"ஒரு வங்கியர் பொதுமக்களிடமிருந்து பெறும் சேமிப்புத் தொகையே வைப்பு எனப்படும்".

பொதுமக்களிடமிருந்து சேமிப்புகளை வைப்புத் தொகையாகப் பெறுவதே வங்கியரின் தலையாய பணி. வங்கித் தொழிலின் மூலாதாரம் அல்லது ஆணிவேர் 'வைப்பு' எனில் மிகையிலது. வைப்புகள் பெருகப் பெருக வங்கியரின் வருவாயும் பெருகும் வாய்ப்புண்டு. 'வெள்ளத் தனைய மலர்நீட்டம் போல் வைப்பின் அனையது வங்கியரின் வருவாயுயர்வு' எனலாம். தங்களது வருமானத்தின் ஊற்றுக்கண்களாகத் திகழும் பல்வேறு வைப்புகள் மூலம் மக்களிடத்தே மிஞ்சும் பணத்தைத் திரட்ட முற்படும் வங்கிகளிடையே ஏற்படும் போட்டிகள் காரணமாக, நாடோறும் புதிய புதிய வைப்புத் திட்டங்கள் அறிமுகமாகிக் கொண்டே உள்ளன. வாழையடி வாழை, முத்துக்குவியல், திருமகள் திருமணத் திட்டம், சீர்வரிசைத் திட்டம், மறுமுதலீட்டுத் திட்டம், பருவகால வைப்பு போன்ற பலவும் இவண் குறிப்பிடத் தக்கன. இத்தகைய கவர்ச்சிமிகு திட்டங்களின் மூலம் மக்களின் கவனத்தை ஈர்த்து, வைப்புகளைப் பெருக்குவதில் நாட்டம் கொண்டிருக்கும் வங்கியர் இன்று போட்டிமிகு சூழலில் உள்ளனர்.

வைப்புகளை வரவேற்பதில் ஆர்வம் காட்டும் வங்கியர் அவற்றைத் தொடங்கும்போதும் மிகுந்த கவனம் செலுத்த வேண்டியது அவசியம். ஏனெனில், வைப்புகளை ஏற்குங்கால் வங்கியர் ஒரு கடனாளி என்ற நிலையில்தான் உள்ளார். கடனாளி என்ற நிலையில் எதிர்பாராத பல இடர்ப்பாடுமிக்க சூழல்கள் அவருக்கு எதிர்ப்படக் கூடும். வைப்புகளைத் தொடங்கும் மக்கள் பலதரப்பட்டவராய் இருப்பர். வெவ்வேறான நோக்கங்களுடன் வைப்புதனைத் தொடங்குவர். சில வாடிக்கையர் வைப்பு தொடங்குவதின் நோக்கம் கடன் வாங்குதலாக இருக்கலாம். இவ்வாறான சூழல்களில் வங்கியர் தற்காப்புச் செயற்பாடுமிக்கோராய் விளங்க வேண்டும்.

## பொதுவான தற்காப்புச் செயற்பாடுகள்

### 1. விண்ணப்பப் படிவம்

வைப்புக் கணக்கினைத் தொடங்க விரும்பும் ஒரு வாடிக்கையர், முதலாவதாக, வங்கியர் அளிக்கும் அனைத்து விவரங்களும் அடங்கிய விண்ணப்பப் படிவம் ஒன்றை நிரப்பிக் கையொப்பமிட்டுத்தருதல் தேவை. வெவ்வேறு வங்கியரும், வெவ்வேறு விதமாக அச்சிடப் பெற்ற விண்ணப்பப் படிவங்களைப் பயன்படுத்துவர். மற்றும் வைப்பு வகைகளுக்கேற்பவும், வாடிக்கையருக்குத் தக்கவும் மாறுபட்ட தன்மை கொண்ட விண்ணப்பப் படிவங்களும் உண்டு.

விண்ணப்பப் படிவங்களில் வங்கியர் தத்தமது வங்கிச் சட்ட விதிகளையும், நெறிமுறைகளையும் குறிப்பிட்டிருப்பர். அத்துடன் குறிப்பிட்ட வைப்பிற்குரிய விதிமுறைகளையும் அச்சிட்டிருப்பர். நடப்புக் கணக்கிற்கான விண்ணப்பப் படிவத்தில் விதிமுறைகள் மிகுந்திருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

## கணக்குத் தொடங்குவதற்கான மாதிரி விண்ணப்பப்படிவம்
(Specimen of an application form for opening an account)

### சேரன் வங்கி

சேமிப்புக் கணக்குத் தொடங்குவதற்கான விண்ணப்பப் படிவம்

பெறுநர்
கிளை மேலாளர்,
சேரன் வங்கி - - - - - - - - கிளை.

ஐயா,

நான்/நாங்கள் கீழ்க்கண்ட விவரப்படி என்/எங்களது பெயரில் சேமிப்புக் கணக்கு ஒன்று ஆரம்பிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்/கிறோம்.

முழுப்பெயர் :

தந்தை/கணவர்/
பாதுகாவலரது பெயர் :

முகவரி :

தொழில்/அலுவல் :

மார்பளவு
நிழற்படம்
ஒட்டவும்

நான்/நாங்கள் தங்கள் சேமிப்பு வங்கி கணக்கு விதிகளுக்குட்பட்டு நடப்பேன்/போம்.

இக்கணக்கின் இயக்க நெறி *

பிறந்த நாள் ** 19

அறிமுகம் செய்பவர்
பெயரும் முகவரியும்
கையொப்பம்

தங்கள் உண்மையுள்ள,

கணக்கு வைப்பவர் /
காப்பாளர்(கள்)

* கூட்டுக் கணக்காயிருந்தால் குறிப்பிட வேண்டியது
(1) இருவரில் ஒருவர் அல்லது எஞ்சியவர்
(2) இருவரும் அல்லது எஞ்சியவர்

** வயது வராதவர் கணக்காணால்

**விண்ணப்பப் படிவத்தின் பின்பக்க மாதிரி**

**சேமிப்புக் கணக்கிற்கான மாதிரிக் கையொப்பச் சிட்டு**

கணக்கின்
பெயர் ________________ தேதி

கணக்கு எண் [ ]

| பெயர் | மாதிரிக் கையொப்பம் |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |

## 2. மாதிரிக் கையொப்பம் (Specimen signature)

வாடிக்கையரிடமிருந்து வங்கியர் அட்டைகளில் மூன்று அல்லது நான்கு மாதிரிக் கையொப்பங்களைப் பெற்று அவற்றை அகர வரிசைப்படுத்தி, கோப்புக்களில் நிரல்பட அடுக்கி வைப்பர். தற்போது மாதிரிக் கையொப்பங்களை, விண்ணபப்பப்படிவத்தின் பின்புறமே பெற்றுக்கொள்கின்றனர். வங்கியர், வாடிக்கையரின் காசோலையை மதிக்கும் ஒவ்வொரு முறையும் காசோலையில் உள்ள கையொப்பத்தினையும் மாதிரிக் கையொப்பத்தையும் ஒப்பு நோக்கி உண்மை தெளிவது அவர்தம் கடன்.

## 3. அறிமுகக் கடிதம் (Letter of Introduction)

"ஒரு வாடிக்கையர் தனது கணக்கினைத் தொடங்க வேண்டுமானால் தகுதியான ஒருவரின் அறிமுகத்துடன்தான் தொடங்க வேண்டும்" என்ற விதியைக் கடைப்பிடித்து அதன்படி வாடிக்கையரைக் கணக்குத் தொடங்க அனுமதிப்பது வங்கியரின் கடமை. பொதுவாக, வங்கியர் - வாடிக்கையர் இருவருக்கும் தெரிந்த, நம்பிக்கைக்கும், நன்மதிப்பிற்கும் உரிய, செல்வாக்குப் பெற்ற நல்லார் ஒருவரிடத்திலிருந்து அறிமுகக் கடிதமொன்றினைப் பெற்று வரும்படி வாடிக்கையரை வங்கியர் வற்புறுத்துவர். வாடிக்கையரை, அறிமுகக் கடிதமின்றி கணக்குத் தொடங்க வங்கியர் அனுமதிப்பாரானால் தொல்லை தரும் பின்விளைவுகளை எதிரிட நேரும். சான்றாக, புதிய வாடிக்கையர் ஒருவர் கணக்கு ஒன்றைத் தொடங்கியதும் அவருக்கு வங்கியர் காசோலை ஏடு ஒன்றினை வழங்க வேண்டும். புதிய வாடிக்கையர் நம்பத்தகாதவராக இருப்பின், வழங்கப் பெற்ற காசோலை ஏட்டினைத் தவறான முறையில் பயன்படுத்தக் கூடும். இத்தகைய பின்விளைவுகளைத் தடுக்கும் பொருட்டே 'நல்லார்' ஒருவரின் அறிமுகக் கடிதம் தேவையாகிறது.

மேலும் வாடிக்கையரை அறிமுகப்படுத்தும் நல்லார், பொறுப்பு மிக்கவராய் நடந்து கொள்ளுதல் அவசியம். ஒருவேளை அவர் வாடிக்கையரைப் பற்றித் தரும் தகவல் தவறானதாக இருந்து, வாடிக்கையரால் வங்கியருக்கு இழப்பு நேரிடின் அவ்விழப்புதனை ஈடு செய்யும் பொறுப்பு அறிமுகம் செய்தவரையேச் சாரும் என்ற தீர்ப்பு *பிளட் நாக் & சன்ஸ் எதிராக யுனைடெட் கிங்டம் வங்கி* (Blood nok & Sons Vs United Kingdom Bank) என்ற வழக்கின் மூலம் வழங்கப்பட்டுள்ளது. எனவே அறிமுகம் செய்வோரும் கவனத்துடனும், பொறுப்புடனும் செயற்பட வேண்டும் என்பதும் இதனால் வலியுறுத்தப்படுகிறது.

### அறிமுகக் கடிதத்தின் இன்றியமையாமை

அறிமுகக் கடிதம் பெறுவதின் காரணமாக வங்கியர் பல சிக்கல்களையும் தீய பின்விளைவுகளையும் தவிர்த்து விடலாம். அவ்வாறு தவிர்த்து விடக்கூடிய சில சிக்கல்கள் குறித்துக் காண்போம்.

மோசடியின் மூலமும் கவனமற்ற மேல்வரைப் பற்றினாலும் நேரக்கூடிய சிக்கல்களைத் தவிர்க்கலாம். நொடிப்பினால் மீளமுடியாத இழப்பில் தவிப்பவரால் ஏற்படவிருக்கும் சிக்கல்களின்றும் பாதுகாக்கப் பெறலாம். மாற்றுமுறை ஆவணச் சட்டப்பிரிவு 131இன்படியிலான கவனக் குறைவுக்கு ஆளானவர், மற்றும் தவறான தகவலாளி போன்ற குற்றங்களுக்காளாகாமலும் வங்கியரைத் தடுக்கும் நற்பணியினைச் செய்கிறது அறிமுகக் கடிதம். தீய பண்புகள் உள்ளவரின் செயல்களுக்கு உடந்தையாவதனின்றும் தடுக்கிறது. இவ்வாறு பல வழிகளில் அறிமுகக் கடிதம் வங்கியருக்குப் பாதுகாப்பான வேலியாக அமைகிறது. இதனைக் கீழே காண்போம்.

### (அ) மோசடியிலிருந்து பாதுகாப்பு

மோசடியைத் தவிர்க்கும் முன்னெச்சரிக்கைக் கருவியாக அறிமுகக் கடிதம் பயன்படுகின்றது. நாணயமற்ற ஒருவருக்குக் காசோலை ஏட்டினை வழங்குவதை அறிமுகக் கடிதம் தவிர்க்கின்றது. நாணயமற்ற ஒருவர் காசோலைகளைத் தவறாகப் பயன்படுத்தி, கணக்கில் இருக்கும் பணத்திற்கு அதிகமாக காசோலைகளை வரைந்து மற்றவர்களிடம் கொடுத்து அவர்களை எளிதாக ஏமாற்றிவிடலாம். இவ்வகை மோசடியிலிருந்து வங்கியலரைப் பாதுகாப்பதற்கு அறிமுகக் கடிதம் வேண்டற்பாலதே!

### (ஆ) கவனமற்ற மேல்வரைப்பற்றினால் நேரக்கூடிய பண இழப்பிலிருந்து பாதுகாப்பு

சில வேளைகளில் வங்கி அலுவலர், வாடிக்கையரது இருப்பில் போதுமான பணம் இல்லாததைக் கவனத்திற் கொள்ளாது, தவறுதலாக அவரது காசோலையை மதித்துப் பணம் வழங்கி விடுவதுண்டு. மேல்வரைப்பற்று ஏற்பட்டுவிடும் இந்நிலையில் வாடிக்கையர் நன்னடத்தையும், நாணயமும் கொண்டோராக இருப்பின் மட்டுமே தொகையை மீட்க இயலும். இவ்வாறு நாணயம் கொண்டோரை மட்டுமே அறிமுகப்படுத்தக் கூடிய அறிமுகக் கடிதம் வங்கியரை பண இழப்பில் இருந்து பாதுகாக்கும் கருவியாகிறது.

**(இ) பொறுப்பு நீங்கா நொடிப்பு நிலை (Undischarged bankrupt) அடைந்தவரிடமிருந்து பாதுகாப்பு**

புதிய வைப்புக் கணக்கினைத் தொடங்க விரும்பும் ஒருவர் பொறுப்பு நீங்கா நொடிப்பு நிலை அடைந்தவராய் இருந்து, இவ்வுண்மை வங்கியருக்குத் தெரியாமலிருக்குமாயின், அவரிடமிருந்து பெற்ற வைப்புகளுக்கு வங்கியர் பதிலளிக்கக் கடமைப்பட்டவராவார். அன்னார் பெயரில் அனுமதியின்றி வைப்புக்கணக்குத் தொடங்குதல் தவறான செயலாகும். இத்தகைய இடர்களை அறிமுகக் கடிதம் தவிர்க்கின்றது.

**(ஈ) மாற்றுமுறை ஆவணச் சட்டப்பிரிவு 131ன்படி கவனக்குறைவிலிருந்து பாதுகாப்பு**

வங்கியர் அறிமுகக் கடிதம் இல்லாமல் ஒரு வைப்புக் கணக்கை ஆரம்பித்தால், அது மாற்றுமுறை ஆவணச் சட்டப்பிரிவு 131இன்கீழ், கவனக்குறைவு என்று கருதப்பட்டு, ஒரு வசூலிக்கும் வங்கியர் தனது சட்டப்பூர்வமான பாதுகாப்பை இழக்க நேரிடும். *லேட்புரோக் எதிராக டாட்* (Ladbroke Vs Todd) என்ற வழக்கில் அறிமுகக் கடிதம் இல்லாமல் கணக்கைத் தொடங்கியது வங்கியரின் கவனக் குறைவான செயலே என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

**(உ) தவறாகத் தகவலளிப்பதிலிருந்து பாதுகாப்புத் தருதல்**

வங்கிகள் தங்களுக்கிடையில் தங்களது வாடிக்கையரின் நிதிநிலைமையினைப் பற்றிக் கருத்துக்களை பரிமாறிக் கொள்ளுதல் வழக்கம். ஒரு அறிமுகக் கடிதம் இல்லாதபோது, சரியான தகவல்களைப் பரிமாறிக் கொள்ள இயலாது. அறிமுகக் கடிதம் இன்றேல் தவறான தகவல்களைக் கூட பரிமாறிக் கொள்ளும் நிலை ஏற்படலாம்.

**(ஊ) தீய பண்புள்ளோரிடமிருந்து பாதுகாப்பு**

ஒரு புதிய கணக்கினைத் தொடங்க விரும்பும் ஒருவர் நன்னடத்தை உள்ளவரா? நற்பண்புகள் கொண்டவரா? போன்ற கேள்விகளுக்கு ஒரு அறிமுகக் கடிதத்தின் மூலமே நாம் பதில் காண இயலும். நன்னடத்தை இல்லாத ஒருவர் கணக்குத் தொடங்குதலை ஒரு அறிமுகக் கடிதம் தடை செய்கின்றது.

## 4. நேர்காணல் (Interview)

ஒரு புதிய கணக்கைத் தொடங்கும் வாடிக்கையரை அது தொடர்பாக நேரிற்கண்டு கலந்துரையாடுவது மூலம் அவரைப் பற்றிய பல விவரங்களைத் திரட்ட இயலும். பின்னர் ஏற்படவிருக்கும் மோசடிகளைத் தடுக்க இந்நேர்காணல் முறை உதவுகிறது.

## 5. ரொக்கத்தில் கணக்கு ஆரம்பித்தல்

பொதுவாக ஒரு புதிய கணக்கைத் தொடங்கும்போது, ரொக்கம் வாயிலாகவே ஆரம்பித்தல் அவசியம். அவ்வாறானால், பணம் எங்கிருந்து வந்தது? எப்படி வந்தது? போன்ற கேள்விகளைக் கேட்கத் தேவையில்லை. ஆனால், ஒரு காசோலை மூலம் கணக்கு ஆரம்பிக்கும்போது வங்கியர் பல இடர்ப்பாடுகளைச் சந்திக்க நேரிடும். சான்றாக, அக்காசோலையின் மீது அந்நபருக்கு உரிமை உண்டா? என்று நன்கு ஆராய்ந்த பின்னரே கணக்கைத் தொடங்க வேண்டும். பின்னால் உரிமைக் கோளாறு இருப்பது கண்டுபிடிக்கப்பட்டால், அதற்கு வங்கியரே பொறுப்பாவார் என்று *லேட்புரோக் எதிராக டாட்* (Ladbroke Vs Todd) வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டது.

## 6. செயலுரிமை ஆணையைப் பெறுதல் (Mandate)

ஒரு புதிய வாடிக்கையர் தனது கணக்கினைச் செயலாக்கும் பொறுப்பை வேறு ஒருவருக்கு அளிக்கலாம். அவ்வமயம் அவர் வங்கியருக்கு, செயலுரிமை ஆணையை எழுத்து மூலம் அளித்தல் அவசியம். அதுவே கணக்கைச் செயலாக்குவதற்கான ஒப்பந்தமாகச் கொள்ளப்படும். செயலாக்க உரிமை பெற்றவரின் பெயர், மற்றும் மாதிரிக்கையொப்பம் முதலியவற்றை செயலுரிமை ஆணை பெற்றிருத்தல் வேண்டும்.

## 7. ஆவணங்களை ஆய்தல்

புதிய கணக்கு ஆரம்பிப்பவர் ஒரு நிறுமமாக இருப்பின், அதனின் அமைப்பு முறையேடு, சங்க நடைமுறை விதிகள்,

மற்றும் துணைச்சட்ட விதிகள் (Bye Law) போன்றவற்றை ஆய்வு செய்தல் அவசியம். இன்னும் சில சமயங்களில் பொறுப்புரிமை ஆவணம் (Trustdeed) மேலாண்மைக் கடிதம் (Letter of administration) போன்ற ஆவணங்களை ஆராய வேண்டிய சூழ்நிலைகள் ஏற்படுகின்றன. அந்தந்த இடச்சூழலுக்கேற்ப அந்தந்த ஆவணங்களை ஆராய வேண்டும். இல்லாவிடில், தவறுகளுக்கு வங்கியர் பொறுப்பேற்க நேரும். சான்றாக, *லும்ஸ்டன் அன்டு கம்பெனி எதிராக இலண்டன் டிரஸ்டி சேவிங் பாங்கு* (Lumsden & Co. Vs London Trustee Saving Bank) என்ற வழக்கில், ஆஸ்திரேலியாவிலிருந்து அண்மையில் வந்திருந்த வாடிக்கையரின் அந்நிய நாட்டுக் கடவுச்சீட்டை (Passport) சரிபார்க்காதது வங்கியரின் கவனக்குறைவான செயல் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

## 8. சிறப்புச் சட்ட அறிவு

வங்கியர் பலதரப்பட்ட வாடிக்கையர்களுடன் தொடர்பு கொண்டிருப்பதால், அவர் பல சிறப்புச் சட்டங்களுக்கு ஏற்பச் செயல்பட வேண்டும். ஆகவே அச்சட்டங்களின் பல்வேறு பிரிவுகளையும் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். வங்கியர், இந்திய நிறுமச் சட்டம், இந்தியக் கூட்டாண்மைச் சட்டம், பல்வகையான நொடிப்புச் சட்டங்கள், வேறுபட்ட பொறுப்புரிமைச் சட்டங்கள், கூட்டுறவுச் சங்கச் சட்டம் போன்ற சட்டங்களின் விதிகளுக்கு முரண்படாமல் செயலாற்றல் தேவை.

## 9. உட்செலுத்துச் சீட்டு (Pay-in-slip), காசோலை ஏடு, மற்றும் செல்லேடு அளித்தல்

புதிய கணக்கு ஒன்றினைத் தொடங்கும்போது, வாடிக்கையருக்கு உட்செலுத்துச் சீட்டு ஏடு, காசோலை ஏடு மற்றும் செல்லேடு போன்றவை வழங்கப்படுகின்றன. ரொக்கம், காசோலை மற்றும் மாற்றுச்சீட்டு போன்றவற்றைக் கணக்கில் வைப்பு செய்வதற்கு உட்செலுத்துச் சீட்டு பயன்படுகின்றது. வாடிக்கையர் தனது ஏட்டில் பதிவு செய்து கொள்வதற்கு வசதியாக, அதில் ஒரு அயற்பகுதிச் சீட்டும் (Counterfoil) உண்டு.

## உட்செலுத்துச் சீட்டின் மாதிரிப் படிவம்
(Specimen of a pay-in-slip)

**சேரன் வங்கி**

--------------- கிளை

சேமிப்புக் கணக்கு

தேதி.......19

........................ அவர்களின்

சேமிப்பு வங்கிக்கணக்கு எண்.........இல்

வரவு வைப்பதற்கு ரூ.

(எழுத்தில்) ........................

மட்டும் செலுத்தப்பட்டது.

| | ரூ. | பை. |
|---|---|---|
| ரொக்கம் | | |
| காசோலைகள் | | |
| மொத்தம் | | |

காசாளர் மேலாளர்

| நோட்டுகள் | ரூ. | பை. |
|---|---|---|
| x 100 | | |
| x 50 | | |
| x 20 | | |
| x 10 | | |
| x 5 | | |
| x 2 | | |
| x 1 | | |
| நாணயங்கள் | | |
| மொத்தம் | | |

காசோலைகளும், ரொக்கமும் தனித்தனி சீட்டுகளில் எழுதப்பட வேண்டும்

பக்கம் [ ]

**சேரன் வங்கி**

--------------- கிளை

சேமிப்புக் கணக்கு தேதி ..............19

.............................................. அவர்களின்

சேமிப்பு வங்கிக் கணக்கு எண் [ ] இல்

வரவு வைப்பதற்கு ரூபாய் (எழுத்தில்) ............

............................ மட்டும் செலுத்தப்பட்டது.

செலுத்தியவர் ..........

கையொப்பம்.

காசாளர் **மேலாளர்**

வாடிக்கையர் ஒருவர் தான் வங்கியில் செலுத்தியிருந்த தொகையிலிருந்து தனக்குத் தேவையான பணத்தை எடுப்பதற்குப் பயன்படும் வண்ணம் பத்து முதல் நூறு வரையிலான காசோலைகளை உள்ளடக்கிய காசோலை ஏடு ஒன்று அளிக்கப் பெறும். வாடிக்கையர் காசோலை மூலம் பணத்தை எடுக்கலாம். அவர் அவ்வாறு காசோலையைப் பயன்படுத்த விரும்பாவிடில், எடுப்புச் சிட்டின் (Withdrawal slip) மூலம் பணத்தைப் பெறலாம். ஆனால் எடுப்புச்சிட்டுடன் செல்லேட்டையும் இணைத்தே அனுப்புதல் வேண்டும்.

### எடுப்புச் சிட்டின் மாதிரிப் படிவம்
### (Specimen of a Withdrawal Slip)

பேரேட்டு பக்கம்........ கையெழுத்துச் சுருக்கம்

இந்த ஆணைப் படிவத்துடன்
செல்லுப்புத்தகத்தையும் கொண்டு வரவும்.

சேமிப்பு வங்கிக்கணக்கு எண்............ தேதி 19

சேரன் வங்கி . . . . . . . . . . கிளை

எனக்கு அல்லது இதைக் கொண்டு வருபவருக்கு ரூபாய்

(எழுத்தால் குறிப்பிடுக) . . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . . மட்டும் கொடுக்கவும்

ரூ.

(வைப்பாளர் கையொப்பம்)

ஒவ்வொரு வாடிக்கையருக்கும் அளிக்கப்பெறும் செல்லேடு, வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையிலான நடவடிக்கைகளை உள்ளடக்கித் திகழும். செல்லேட்டின் இயல்பும் பயனும் குறித்து 'செல்லேடு' என்னும் தலைப்பின் கீழ் விரித்துரைக்கப்பட்டுள்ளது

## 10. மார்பளவு நிழற்படம் (Passport size photograph)

தற்போது, வங்கிக் கணக்கினைத் தொடங்குவதற்கான விண்ணப்பப்படிவத்தில் மார்பளவு நிழற்படத்தையும் ஒட்ட வேண்டும் என்ற விதி கடைப்பிடிக்கப்படுகிறது. ஆள் மாறாட்டத்தைத் தடுக்க இதுவே சிறந்த வழி என்பதில் ஐயமில்லை!

## வைப்புகளைப் பற்றிய மற்றும் சில விவரங்கள்

1. ஒவ்வொரு வைப்பும், வங்கியின் சொத்தாகக் கருதப்படுகின்றது.

2. வைப்புகளின் பாதுகாப்பிற்கு வங்கியரே பொறுப்பாகின்றார்.

3. ஒருவர் பெயரில் கணக்குத் தொடங்குவதற்கும் மற்றும் மறுப்பதற்கும் வங்கியருக்கு அனைத்து அதிகாரமும் உண்டு. *ஃபேசலி எதிராக லிக்ஸ் நேஷனல் பேங்க்* (Faselli Vs Liggs National Bank)

4. வாடிக்கையர் ஒருவர் தனது கணக்கில் செலுத்தும் பொருட்டு வங்கியில் பணியாற்றும் ஒருவரிடம் அளித்த பணத்தை அவர் கையாடல் செய்துவிட்டால், வங்கி அதற்குப் பொறுப்பாகாது. ஆனால், பணிநேரத்தில் அவ்வண்ணம் நிகழ்ந்திருந்தால், அதற்கு வங்கியே பொறுப்பேற்கும் என்று *ஸ்டேட் பாங்க் இந்தியா எதிராக ஷியாமா தேவி* (State Bank of India Vs Shyama Devi) வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது

## வைப்புகளின் வகைகள்

பொதுவாக வைப்புகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அவையாவன :

(1) கேட்பு வைப்பு (Demand deposit)

(2) கால வைப்பு (Time deposit)

மேலும், கேட்டவுடன் தரவேண்டிய வைப்புகளை பலவகையாகப் பிரிக்கலாம். அவற்றில் சில முக்கிய வைப்புகள் பின்வருமாறு :

(1) நடப்பு வைப்பு (Current deposit)

(2) சேமிப்பு வைப்பு (Savings deposit)

(3) தொடர் வைப்பு (Recurring deposit)

## நடப்பு வைப்புக் கணக்கு (Current Deposit Account)

நடப்பு வைப்புக் கணக்கில் பணத்தை எந்த வேளையிலும் உட்செலுத்தவும் மற்றும் எடுக்கவும் முடியும். இக்கணக்கிலிருந்து பணத்தை காசோலையின் வாயிலாகத்தான் எடுக்க முடியும். பொதுவாக இக்கணக்கில் வட்டி ஏதும் வழங்கப்பட மாட்டாது. இதற்கு மாறாக, வாடிக்கையரின் கணக்கு பற்றோ அல்லது வரவோ காண்பித்தாலும், அதன்மீது வங்கிக் கட்டணங்களை (bank charges) வசூலிக்கின்றது. மேலும், இக்கணக்கில் மேல்வரைப்பற்று ஏற்படின், அதன்மீது நாள் வட்டி கணக்கிடப் படுகின்றது.

நடப்பு வைப்புக் கணக்கில் வட்டி ஏதும் வழங்காவிடினும், வாடிக்கையர் கீழ்க்கண்ட காரணங்களால், இதனைப் பெரிதும் விரும்புகின்றனர் :—

(1) நடப்பு வைப்புக் கணக்கில் மேல்வரைப்பற்று வசதி உண்டு.

(2) காசோலை வசதி, முகவர் மற்றும் பொதுப்பயன் சேவைகள் போன்ற பல பயன்கள் இக்கணக்கின் வாயிலாகக் கிடைக்க வாய்ப்பு மிகுதி.

நடப்பு வைப்புக் கணக்கு வைத்திருப்போர், குறைந்த அளவு ரூ.500ஐ தம் கணக்கில் வைத்திருக்க வேண்டும். இல்லையெனில் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் ரூ.1 வீ தம் அவர் கணக்கில் பற்று வைக்கப்படும். இவ்வகை வைப்புகள் கேட்டவுடனே கொடுக்க வேண்டியிருப்பதினால், வங்கியர் அதன் மீது அதிக அளவில் ரொக்கக் கையிருப்பு வைத்திருக்க வேண்டும். இக்கணக்கிற்கு வட்டி வழங்கப்படாததற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

**நடப்புக் கணக்கின் சிறப்பியல்புகள் (Special features of curreent acccount)**

பொதுவாக, நடப்புக் கணக்கு கீழ்க்கண்ட சிறப்பியல்புகளைப் பெற்ற ஒரு கணக்காகத் திகழ்கின்றது.

**(1) பணம் பெறுவதற்கும் மற்றும் செலுத்துவதற்கும் தடை இல்லை**

நடப்புக் கணக்கு வைத்திருக்கும் ஒருவர் தனது கணக்கில் பணம் செலுத்துவதற்கும் மற்றும் பெறுவதற்கும் தடை ஏதும் இல்லை. ஒரே நாளில் எத்தனை முறை வேண்டுமானாலும் பணம் செலுத்தலாம்; பணம் பெறலாம். எந்தவி தத் தடையுமின்றி இந்தக் கணக்கினை இயக்குவிக்கலாம்.

**(2) சேவை நோக்குடன் தொடங்குதல்**

மற்ற வைப்புகள் போன்று சேமிப்பு மற்றும் வட்டிபெறும் நோக்கோடு இதனைத் தொடங்குவதிலலை. வாடிக்கையர் தம் வசதிக்காகவே தொடங்கப்பட்ட கணக்கே நடப்புக் கணக்காகும் பொதுவாக வணிகர் போன்ற வாடிக்கையர் நாள்தோறும்

தமக்குக்கிட்டும் பணத்தையும் காசோலையையும் உடனே இக்கணக்கில் செலுத்தி காசோலை வசூலிப்பின் பொறுப்பை வங்கியரிடமே விட்டுவிடுகின்றனர். அதுபோன்று, தாம் கொடுக்க வேண்டிய பணத்திற்குப் பதிலாக இக்கணக்கின் மீது காசோலைகளை வரைந்து அனுப்பிவிடுகின்றனர். இவ்வாறு பல தொல்லைகளிலிருந்து வணிகர் விடுபடுகின்றனர். ஆகவே சேவை நோக்கோடு ஆரம்பிக்கப்பட்ட கணக்காக இது திகழ்கின்றது. இது வணிகர்களுக்கு ஏற்றதொரு கணக்காக விளங்குகிறது.

### (3) அதிகப்பற்று பெறும் வசதி

நடப்புக் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கையருக்கு மட்டுமே அதிகப்பற்று பெறும் வசதி உண்டு. மற்ற கணக்கில் இச்சலுகை கிடைப்பதில்லை. இது வணிகர்களுக்குக் கிட்டிய ஒரு பெரும்பேறாகும். வாடிக்கையருக்குப் பணம் மிகவும் தேவைப்படும் நேரத்தில், நடப்புக்கணக்கில் போதிய பணம் இல்லாவிட்டாலும், முன் அனுமதியுடன் மேல்வரைப்பற்று செய்ய வசதி அளிக்கப்படுகின்றது.

### (4) வட்டியில்லாத கணக்கு

வாடிக்கையர் தம் கணக்கில் இருக்கும் வரவு தொகைக்கு இக்கணக்கில் வட்டி கிட்டாது. வங்கியர் வாடிக்கையருக்கு இக்கணக்கின் வாயிலாக, பல்வேறு பணிகளைப் புரிவதால், இக்கணக்கினை முறையாகப் பேணிக்காக்க அல்லது பேணுதற்கு அவர் தமக்குச் செலவு மிகும். எனவே, வாடிக்கையர் தமக்கு வட்டிகிட்டாவிடினும், வேறு பல்வகையில் உதவும் இக்கணக்கினை விரும்பி வரவேற்கின்றனர். உதவும் தன்மையினால் பெரிதும் வரவேற்கப்படும் இக்கணக்கினைச் சேவைக்கணக்கு எனில் பொருந்தும்!

### (5) வங்கிக் கட்டணம் வசூலித்தல்

நடப்புக் கணக்கைக் கையாளுவதற்கு வங்கிக்கு அதிக செலவாகும் என்று பார்த்தோம் ஆகவே இக்கணக்கை

முறையாகப் பேணுதற்கு வங்கியர் நடப்புக் கணக்கு வைத்திருப்போரிடமிருந்து கட்டணம் வசூலிக்கின்றனர். இக்கட்டணத்தைச் சேவைக்கட்டணம், கையாளுவதற்குரிய கட்டணம், வங்கிக் கட்டணம், நிகழ்வுக் கட்டணம் எனப்பலவாறு குறிப்பிடுகின்றனர். இக்கட்டணம் வங்கிக்கு வங்கி வேறுபடுகின்றது. நடப்புக் கணக்கின் மூலம், பல சலுகைகளைப் பெறுவதால் வாடிக்கையர் இக்கட்டணத்தை ஒரு பொருட்டாகக் கொள்ளார். இக்கட்டணம் ஆறு மாதத்திற்கொருமுறை வாடிக்கையரின் கணக்கில் பற்றாக வைக்கப்படும்.

**(6) காசோலை வாயிலாக இயக்குவித்தல்**

நடப்புக் கணக்கிலிருந்து பணத்தைக் காசோலை வாயிலாகத்தான் எடுக்க முடியும். அதிக அளவில் காசோலைகள் செலுத்தப்படுவதும் மற்றும் வரையப்படுவதும் நடப்புக் கணக்கின் மீதுதான் என்பது குறிப்பிடத்தக்கது.

## சேமிப்பு வைப்புக் கணக்கு

சிறிய அளவில் சேமிப்பவர்களுக்கென்றே உருவாக்கப்பட்ட கணக்கு சேமிப்புக் கணக்காகும். இக்கணக்கினைத் தொடங்க விரும்புவோர் குறைந்த அளவு ரூபாய் ஐந்து செலுத்தித் தம் கணக்கைத் தொடங்கலாம். சில வங்கிகளில் இத்தொகை இருபது ரூபாயாகவுள்ளது. மிகக் குறைந்த அளவாக செலுத்தவோ மற்றும் எடுக்கவோ நிர்ணயிக்கப்பட்டிருக்கும் தொகை ரூ.1 ஆகும். குறைந்த அளவுத் தொகையாக ரூ.5ஐ தம் கணக்கில் எப்போதும் வைத்திருக்க வேண்டும். காசோலை வசதியளிக்கப்பட்டிருப்பின், இத்தொகை ரூ.250 ஆக இருக்க வேண்டும்.

**சேமிப்புக் கணக்கின் சிறப்பியல்புகள்**

**(1) பணம் பெறுவதற்குத் தடை**

சேமிப்புக் கணக்கு வைத்திருக்கும் ஒருவர் தனது கணக்கிலிருந்து பணம் எடுப்பதற்குத் தடைகள் சில உள. பொதுவாக ஆறு தினங்களில் ஐம்பது எடுப்புகளுக்குத்தான் அனுமதி

அளிப்பர். அதேபோன்று அதிக அளவில் பணம் எடுப்பதற்கும் முன் அனுமதி தேவை. 'சேமிப்பு மனப்பான்மையை' உருவாக்கி வளர்ப்பதே இக்கணக்கின் நோக்கமாதலால் இத்தகைய கட்டுப்பாடுகள் உள. எனினும் நடைமுறையில் இக்கட்டுப்பாடுகள் பெரும்பாலும் செயற்படுத்தப்படுவதில்லை.

### (2) அடிப்படை நோக்கம் சேமிப்பு என்பதே

சேமிக்கும் பழக்கத்தை மக்களிடையே உருவாக்கி வளர்க்கும் குறிக்கோளுடன் தொடங்கப்பட்ட இக்கணக்கின் அடிப்படை நோக்கம் 'சேமிப்பு' என்பதே. எனவேதான் கணக்குத் தொடங்குவதற்குத் தேவையான தொகையையும், கணக்கிலிருக்க வேண்டிய தொகையையும் மிகவும் குறைவாகவே நிர்ணயித்துள்ளனர்.

### (3) அதிகப்பற்று பெறும் வசதி சேமிப்புக் கணக்கில் இல்லை

பொதுவாக, சேமிப்புக் கணக்கில் மேல்வரைப் பற்று பெறும் வசதி இல்லை. தற்போது, சேமிப்புக் கணக்கு வைத்திருப் போருக்கு உடனடி கடனாக ரூ.2,500 வரை வழங்க வசதி செய்யப்பட்டுள்ளது. ஆனால், வங்கியர் உவந்து ஏற்கும்படியான நடவடிக்கைகளையுடைய வாடிக்கையருக்கு மட்டுமே இவ்வசதி கிட்டும். மேலும், வணிகர் அல்லாதோரின் வணிகத் தொடர்பற்ற பிற வெளியூர் நடவடிக்கைகளுக்கான காசோலைகளுக்கு மட்டுமே இவ்வசதி அளிக்கப்படும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### (4) வட்டியுடன் கூடிய கணக்கு

வாடிக்கையருக்கு, தமது கணக்கில் இருக்கும் வரவுத் தொகைக்கு வட்டி வழங்கப்படுகின்றது. பொதுவாக இவ்வட்டியின் விகிதம் 5 விழுக்காடு ஆகும். இவ்விகிதம் இந்திய ரிசர்வ் வங்கியின் ஆணைப்படி அவ்வப்போது மாற்றி அமைக்கப்படும். சேமிப்புக் கணக்கில் ஒரு மாதத்தில் 10ஆம் தேதியிலிருந்து அந்த மாதம் கடைசி வரை உள்ள குறைந்த அளவுத் தொகைக்கு வட்டி கணக்கிடப்படும்.

### (5) எடுப்புச் சீட்டு மூலமாக பணம் எடுத்தல்

பொதுவாக சேமிப்புக் கணக்கிலிருந்து பணம் எடுப்பதற்கு எடுப்புச் சீட்டையே பயன்படுத்த வேண்டும். இதனைச் செல்லேட்டுடன் இணைத்துத் தந்தால்தான் பணம் தரப்படும். தற்பொழுது, இக்கணக்கு வைத்திருப்போருக்கு, காசோலை வசதி விரிவுபடுத்தப்பட்டுள்ளது. இதனால்தான், தற்போது இக்கணக்கிற்கும் வங்கியர், வாடிக்கையரை அறிமுகக் கடிதம் பெற்று வருமாறு வற்புறுத்துகின்றனர்.

### (6) வங்கிக் கட்டணம் வசூலிப்பதில்லை

சேமிப்புக் கணக்கில் சேவைக்கட்டணங்கள், கையாளும் கட்டணங்கள் போன்ற கட்டணங்களை வசூலிப்பதில்லை. எனினும், காசோலை வசூலிப்பதற்கான கட்டணங்கள் உண்டு. இக்கணக்கினை ஆரம்பித்து ஒரு ஆண்டுக்குள் முடித்துவிட்டால், சேவைக்கட்டணமாக ரூ.10 வசூலிக்கப்படும்.

இந்தியாவில் வங்கிகள் மட்டுமின்றி, அஞ்சல் அலுவலகங்களும் இச்சேமிப்பு வங்கி வசதியை மக்களுக்கு அளிக்கின்றன. அஞ்சல் பணியையும் மற்றும் சேமிப்புப் பணியையும் சேர்த்து சேவை செய்வதால், அஞ்சல் அலுவலகத்தின் மூலமான சேமிப்புத் திட்டங்கள் மக்களிடையே பெருமளவில் வரவேற்பைப் பெற்று வளர்ந்து வருகின்றன.

## தொடர் வைப்புக் கணக்கு (Recurring Deposit Account)

தொடர் வைப்புக் கணக்கென்பது சேமிப்புக் கணக்கின் ஒரு பகுதியேயாகும். இக்கணக்கில் மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தவணைத் தொகையைச் சேமித்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஒரு பெருந்தொகையைப் பெறுமாறு வகை செய்யலாம். இக்கணக்கு, 'சிறுதுளி பெருவெள்ளம்' என்ற பழமொழிக்கேற்றாற்போற் செயற்படுகின்றது.

இக்கணக்கினை மாதத்தவணை ரூ.5 அல்லது 5இன் மடங்காகக் கொண்டு தொடங்கலாம். அதிக அளவு மாதத்

தவணையாக ரூ.1000 வரை செலுத்தலாம். மாதத்தவணை 12ல் இருந்து 72 மாதத்திற்குள் வேறுபடலாம். இறுதித்தவணையினைச் செலுத்திய 30 நாட்களுக்குப் பின்னர் மொத்தத் தொகையும் வாடிக்கையருக்கு வழங்கப்படும்.

## தொடர் வைப்புத் திட்டம்

மாதத் தவணையாக ரூபாய் ஐந்தினைக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட ஒரு கணக்கின் பல்வேறு காலங்களுக்கேற்றாற் போல் கிடைக்கும் முதிர்வுத் தொகை (Maturity Value) கீழே உள்ள அட்டவணையில் தரப்பட்டுள்ளது :-

| காலம் (மாதங்களில்) | முதிர்வுத்தொகை (Maturity Value) | காலம் (மாதங்களில்) | முதிர்வுத்தொகை (Maturity Value) |
|---|---|---|---|
| 12 | 64.01 | 63 | 438.75 |
| 24 | 136.06 | 72 | 526.73 |
| 36 | 224.14 | 84 | 656.80 |
| 39 | 247.34 | 96 | 803.29 |
| 48 | 321.95 | 108 | 968.12 |
| 60 | 434.10 | 120 | 1153.64 |

ஒவ்வொரு வாடிக்கையரும் தம் தவணைத் தொகையை, அதனைச் செலுத்தவேண்டிய தேதியிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தியிருக்க வேண்டும். இல்லையெனில், எஞ்சிநிற்கும் அத்தவணைத் தொகையின் மீது ரூ.5க்கு 4 பைசா வீதம் ஒவ்வொரு மாதத்திற்கும் வட்டி வசூலிக்கப்படும்.

ஒரு தொடர் வைப்புக் கணக்கு வைத்திருப்போர், தமது வைப்புக்கணக்கினைப் பிணையமாக வைத்துக் கடன் பெறும்

வசதி அளிக்கப்பட்டுள்ளது. இதுவரை தாம் செலுத்திய தொகையிலிருந்து 75 விழுக்காடு கடனாகப்பெறலாம். தொடர் வைப்பின் மீது அளிக்கப்படும் வட்டி விகிதத்தை விட 2 விழுக்காடு அதிகமாக அக்கடன் மீது வசூலிக்கப்படும். இதில் அளிக்கப்படும் வட்டி சேமிப்புக் கணக்கிற்கான வட்டி விகிதத்தைவிட அதிகமாயிருக்கும். காலவரையறை வைப்பின் மீது வழங்கப்படும் வட்டி விகிதத்திற்கு ஒத்து இருக்கும்.

## காலவரையறை வைப்புக் கணக்கு
## (Fixed Deposit Account)

வாடிக்கையரால் வரையறுக்கப்பட்ட காலத்துக்குப் பின்னரே திருப்பித்தரப்படும் வைப்பே காலவரையறை வைப்பு என்று அழைக்கப்படும். காலவரையறை 30 நாட்களிலிருந்து 5 வருடங்கள் வரை வேறுபடக்கூடும். 5 வருடங்களுக்கு மேலான காலத்துக்குக் கணக்கு ஆரம்பித்தால், வட்டி வீதம் வருடத்திற்கு 15% என்ற அளவிலேயே இருக்கும்.

இங்கிலாந்து வங்கியியல் முறைப்படி, இவ்வைப்புத் தொகையை ஒரு வாடிக்கையர் விரும்பியவுடன் பெற இயலாது. 'வரையறுத்த' காலத்திற்கு முன்னரே வாடிக்கையர் தமது தொகையைப் பெற விரும்பினால் முன்னறிவிப்புத் தருதல் தேவை. முன்னறிவிப்புடன் தொகையைப் பெற வங்கியர் அனுமதிப்பர். பொதுவாக, இவ்வைப்புத் தொகை, வாடிக்கையர் வரையறுத்த காலம் வரை திருப்பித் தரப்பட மாட்டாது.

### காலவரையறை வைப்புக்கணக்கின் சிறப்பியல்புகள்

#### கணக்குத் தொடங்குதல்

காலவரையறை வைப்பினைத் தொடங்க விரும்பும் ஒருவர் அதற்குரிய விண்ணப்பப் படிவத்தினை நிரப்பித் தருதல் வேண்டும். வைப்பாளரின் பெயர், வைப்பின் கால அளவு மற்றும் தொகை போன்றவற்றை மிகத் தெளிவாகக் குறிப்பிட வேண்டும். வைப்பிற்குரிய விதிகளும் நடைமுறைகளும் விண்ணப்பப் படிவத்திலேயே காணப்படும். மேலும் மாதிரிக்

கையொப்பத்திற்கான இடம் அதிலேயே ஒதுக்கப்பட்டிருக்கும். இக்கணக்கில் அடிக்கடி நடவடிக்கைகள் நிகழ வாய்ப்பில்லையாதலால், இக்கணக்கைத் தொடங்க அறிமுகக் கடிதம் கூட தேவையில்லை. மேலும் இக்கணக்கு எந்தச் சூழ்நிலையிலும் பற்று காண்பிக்க வாய்ப்பே இல்லை.

### வட்டி வழங்கல்

காலவரையறை வைப்புகளுக்கு, தற்போது கவர்ச்சிகரமான வட்டிவீதம் வழங்கப்படுகின்றது. ஆகவே, மொத்த வைப்புகளில், 70 விழுக்காடு வைப்புகள் தற்போது காலவரையறை வைப்புகளாகவே உள. காலவரையறைக்கு ஏற்றாற்போல் வட்டிவீதமும் மாறுபடுகின்றது. *1.2.1997* முதல், இந்திய வங்கியியல் வரலாற்றிலேயே அதிக அளவு வட்டி வீதமான 15 விழுக்காடு, காலவரையறை வைப்புகளுக்கு வழங்கப்பெறுதல் குறிப்பிடத்தக்கவொன்றாம்.

*1.2.1997*இல் இருந்து அமலுக்கு வந்துள்ள வட்டிவீதங்கள் பின்வருமாறு :-

| வரிசை எண் | வைப்புகளின் காலம் | வருட வட்டி வீதம் |
|---|---|---|
| 1. | 30 நாட்களுக்கு மேல் 45 நாட்கள் வரை | 9% |
| 2. | 45 நாட்களுக்கு மேல் ஒரு வருடத்துக்குள் | 10% |
| 3. | ஒரு வருடத்துக்கு மேல், 3 வருடங்கள் வரை | 14% |
| 4. | 3 வருடங்களுக்கு மேல் | 15% |

30 நாட்களுக்கென ஆரம்பிக்கப்பட்ட வைப்பிற்கே 9 விழுக்காடு வட்டிவீதம் வழங்கப்படுகிறது.

**வரி கழிப்புத் திட்டம் (Tax deduction scheme) காலவரையறை வைப்பிற்கு விரிவாக்கப்பட்டுள்ளது**

காலவரையறை வைப்பின் வட்டி வீதம் கவரக்கூடிய வகையில் இருந்தாலும், வரி கழிப்புத் திட்டம் 1991-92ல் இருந்து இவ்வைப்புகளின் மீதும் அமல்படுத்தப்பட்டுள்ளது. இதன்படி வருடத்திற்கு ரூ.10,000க்கு மேல் ஒருவர் வட்டியின் வாயிலாக வருமானம் பெற்றால், அந்த வருமானத்திற்குரிய வரியை வங்கியர் கழித்தபின்னர், மீதியுள்ள தொகையைத்தான் வாடிக்கையருக்கு வழங்குவர். இவ்வாறு வரி பெறுதல் என்பது, கடும் போட்டி மிகுந்த காலகட்டத்தில் உள்ள வங்கியருக்கு முன்னேற்றத்தின் முட்டுக்கட்டையாகவே உள்ளது எனலாம்.

**வைப்புக்கான காலவரையறை**

காலவரையறை வைப்பிற்கான, குறைந்த அளவு கால எல்லை முப்பது நாட்கள் எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இந்திய வங்கியர் மன்றத்தின் அறிவுரைப்படி இவ்வைப்பின் அதிகஅளவு கால எல்லை பத்து ஆண்டுகள் என வகுக்கப்பெற்று அதன்படியே வங்கிகளில் செயலாக்கம் பெறுகின்றது. இதன்படி, வங்கியர், எந்த ஒரு காரணத்தை முன்னிட்டும் இவ்வைப்பின் கால எல்லை பத்து ஆண்டுகட்கு மேற்பட்டால் அதனை ஏற்றுக் கொள்ளார். வரையறுக்கப்பட்ட காலம் முடிவுறும் நாள் ஒரு விடுமுறை நாளாக இருப்பின், வைப்பின் கால எல்லை அதற்கடுத்த வேலை நாளாகக் கொள்ளப்படும்.

**கடனாளி, கடனீந்தோர் உறவு**

காலவரையறை வைப்பைப் பொறுத்தவரையில், வங்கியர் ஒரு கடனாளியாகவே கருதப்படுகின்றார். முதிர்வுத் தேதி (Due date) முடிந்தபின்னர் உள்ள காலங்களுக்கு வட்டி ஏதும் கொடுக்கப்படாவிட்டாலும் கூட, அவர் தொடர்ந்து ஒரு கடனாளியாகவே இருக்கின்றார். முதிர்வுத் தேதிக்குப் பின்னர் இவ்வைப்பானது ஒரு கேட்பு வைப்பாகக் (Demand deposit) கருதப்படும் என்று *ஹிந்துஸ்தான் கமர்சியல் பாங்க் லிமிடெட் எதிராக ஜக்டர் சிங்* (Hindustan Commercial Bank Ltd. Vs Jagtar Singh) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. ஆகவே தவணை

நாள் முடிந்த பின்னரும் வங்கியர் கடனாளியாகவே திகழ்கின்றார். அவர் ஒரு ஒப்புடைவு பெறுபவர் அல்லது பொறுப்புரிமையர் எனக் கருதப்பட மாட்டார்.

**காசோலைகளை ஏற்பதில்லை**

காலவரையறை வைப்புக் கணக்கிலிருந்து வாடிக்கையர் காசோலையின் வாயிலாக பணம் பெற இயலாது. தேவைப்பட்டால், இக்கணக்கிலுள்ள தொகையைத் தனது சேமிப்புக் கணக்கிற்கோ அல்லது நடப்புக் கணக்கிற்கோ மாற்றும்படி கேட்டுக்கொண்டு பின் அதன் மீது காசோலையை வரையலாம். இவ்வாறன்றி ஒரு காலவரையறை வைப்புக் கணக்கின் மீது, காசோலை வரைய இயலாது.

**முதிர்வுக் காலத்திற்கு முன்னரே பணம் பெறுதல்**

காலவரையறை வைப்புக் கணக்கின் நெறிமுறைப்படி, வாடிக்கையர் தான் வரையறுத்திருந்த கால எல்லை முடிவடையும் முன்னரே வைப்புத் தொகையைப் பெற இயலாது என்பது பொதுவிதி. ஆனால் அவருக்குப் பணம் மிகவும் அவசியமாகத் தேவைப்பட்டால் காலவரையறை வைப்பின் இரசீதைப் பிணையமாக வைத்துக் கடன் பெறலாம். முதிர்வுக் காலத்திற்கு முன்னரே இவ்வைப்பு அவசியம் தேவை என்ற சூழ்நிலை ஏற்பட்டால், அதற்காக ஒரு விதிமுறையும் வரையப்பட்டுள்ளது. முதிர்வுக் காலத்திற்கு முன்னரே ஒரு வாடிக்கையர் தனது வைப்புத் தொகையைப் பெற விரும்பினால், அவர் அந்த வைப்பிற்குரிய கால வட்டி வீதத்திலிருந்து ஒரு விழுக்காடு இழக்க நேரிடும்.

சான்றாக, ஒருவர் 15% வட்டியில் மூன்று வருடங்களுக்குப் பணத்தைக் காலவரையறை வைப்பில் வைத்துள்ளார் எனக் கொள்வோம். அவர் 1 வருட முடிவிலேயே அதைத் திரும்ப எடுக்க விரும்பினால், அவருக்கு 14 விழுக்காடு (15% – 1% = 14%) வட்டிகிட்டும் என்று கணக்கிடக் கூடாது. ஒரு வருடத்திற்குரிய வட்டி 10%. இதிலிருந்து அவர் 1% வட்டி இழக்க வேண்டியது வரும். ஆகவே, 9% வட்டி மட்டுமே கிட்டும் என்பதைக் கருத்திற்கொள்ள வேண்டும்.

## வாரிசுதாரர் வசதி

தால்வார் கமிட்டியின் பரிந்துரையின்படி 29.3.1985லிருந்து எல்லாவித வைப்புகளுக்கும் வாரிசுதாரர் வசதி (Nomination facility) செய்யப்பட்டுள்ளது. வாடிக்கையர் தனது வாரிசு உரிமையரை நியமிக்கவும், நீக்கவும், மாற்றவும் அதிகாரம் பெற்றவராவார். எனவே வாடிக்கையர் தனது வாரிசுரிமையரை நியமிக்கவோ, நீக்கவோ அன்றி மாற்றவோ விரும்பினால் மேற்கண்ட ஒவ்வொன்றிற்கும் உரிய தனித்தனியான விண்ணப்பப் படிவங்களைப் பயன்படுத்தலாம். தனக்குத் தேவையான விண்ணபப்பப்படிவத்தைப் பெற்று, நிரப்பி வங்கியரிடம் கொடுத்து இவ்வசதியினை அனுபவிக்கலாம்.

## வருமான வரிக்குட்பட்டது

இந்திய வருமான வரிச்சட்டம், 1961, பிரிவு 226இன்படி., வருமான வரி அலுவலர்கள் இக்கணக்கினைக் கைப்பற்ற அதிகாரம் பெற்றுள்ளனர். அவ்வாறு, இவ்வதிகாரத்தை வருமானவரி அலுவலர்கள் பயன்படுத்தும் போது வங்கியர் அதற்கு உடன்பட வேண்டும். மேலும், ரூ.50,000ம் அதற்கு மேற்பட்ட தொகையும் கொண்ட கணக்குகளைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்க வருமானவரி அதிகாரிக்கு அதிகாரம் உண்டு.

## கூட்டுக் கணக்குகள்

காலவரையறை வைப்பினை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களின் பெயரில் தொடங்கினால், அதனைக் கூட்டுக்கணக்கு என்று அழைக்கின்றோம். இவ்வாறு கூட்டுக்கணக்கு ஒன்றைத் தொடங்கும்போது, விண்ணப்பப் படிவத்தில் விண்ணப்பிப்போர் அனைவரது கையொப்பத்தையும் பெறவேண்டும். மற்றும் கணக்கு முடிக்கும் போது இரசீதில் அனைவரது கையொப்பத்தையும் பெறவேண்டும். இவர்களில் எவரேனும் இறந்துவிட்டால், விண்ணப்பப் படிவத்தில் குறிக்கப்பட்டுள்ள நிபந்தனையின்படி வைப்புத்தொகையைத்

திருப்பித் தரவேண்டும். நிபந்தனை இல்லாவிடில், பல சிக்கல்கள் ஏற்பட வாய்ப்புண்டு. ஒரு வாடிக்கையர் மாய்ந்தபின்னர் எஞ்சியிருப்பவரிடம் (Survivor) வைப்புத் தொகையைக் கொடுப்பதற்குச் சட்டம் இடம் தரவில்லை. குறிப்பாக, எஞ்சியிருப்பவருக்கும் மறைந்தவரின் சட்டபூர்வ உரிமையாளருக்கும் இடையே உரிமை குறித்து முரண்பாடு ஏற்படின், நீதிமன்றத்தின் மூலமாகத்தான் இதற்குத் தீர்வு காண இயலும்.

*மெக்யவாய் எதிராக பெல்பாஸ்ட் பேங்கிங் கம்பெனி* (Mc Evoy Vs Belfast Banking Company) என்ற வழக்கில், “ஒரு திட்டவட்டமான நிபந்தனையில்லாத கூட்டுக்கணக்கின் வாடிக்கையரில் ஒருவர் மறைந்தபின் அந்த வைப்புத் தொகையை, அடுத்துள்ள எஞ்சியிருப்பவரிடம் கொடுக்கும் உரிமை வங்கியருக்குக் கிடையாது” என்று திட்டவட்டமாகத் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. இச்சிக்கல்களைத் தவிர்க்க வேண்டும் என்றால், ஒரு கூட்டுக் கணக்கினைத் தொடங்கும்போதே திட்டவட்டமாக நிபந்தனைகளை எழுத்து மூலம் பெறுதல் அவசியம். குறிப்பாக ‘யாரேனும் ஒருவர் அல்லது எஞ்சியிருப்பவர்’ (either or survivor) என்ற முறையில் காலவரையறை வைப்புக்கணக்குத் தொடங்கினால், எஞ்சியிருப்பவருக்கு எந்தச் சிக்கலும் இல்லாமல் வைப்புத் தொகையைத் திரும்பக் கொடுக்க முடியும்.

**காலவரையறை வைப்பும் - காலவரையறைச் சட்டமும்**

காலவரையறைச் சட்ட விதிகளின்படி எந்தவொரு கடனும் வழங்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று வருட முடிவில் ஒரு கெடுகடந்த கடனாக (Time barred debt) மாறிவிடுகின்றது. இத்தகைய கடன்களை வசூலிக்கவே முடியாது. ஆனால் இந்த விதிகள் காலவரையறை வைப்பைப் பொறுத்தவரையில் வேறுவிதமாகச் செயல்படுகின்றன. இவ்வைப்பினைப் பெறுவதற்கு, காலவரையறை வைப்பின் இரசீதினை முதிர்வு நாளன்று ஒப்படைத்தல் வேண்டும் என்ற நிபந்தனை உண்டு. ஆகவே எந்த நாளன்று அதனை ஒப்படைக்கிறோமோ, அந்த நாளிலிருந்து மூன்று வருட காலம் கணக்கிடப்படும். ஆனால்,

வைப்பின் இரசிதினைச் சமர்ப்பிக்கும்போது, ஒப்படைவு செய்வோருக்குப் பணம் உடனே கிடைத்துவிடும். எனவே காலவரைச் சட்டவிதி இதற்குப் பொருந்தாது. இந்த நிபந்தனை இல்லாவிடின், முதிர்வுத் தேதியிலிருந்து மூன்று வருடங்கள் கணக்கிடப்பட்டு, அது கெடுகடந்த கடனாக மாறிவிடும். வாடிக்கையர் அதனைத் திரும்பப்பெற இயலாது.

## காலவரையறை வைப்பு இரசீது

வங்கியர் ஒரு வாடிக்கையரிடமிருந்து இவ்வைப்பில் பணம் பெற்றதற்கு ஆதாரமாகக் கொடுக்கப்படும் இரசிதே காலவரையறை இரசிது என்று அழைக்கப்படும்.

காலவரையறை வைப்புக் கணக்கைத் தொடங்கும்போது பணத்தை வங்கியர் பெற்றுக்கொண்டதற்கு அடையாளமாக ஒரு இரசீது வழங்கப்படும். அதுவே காலவரையறை வைப்பு இரசீது என்று அழைக்கப்படும். இது கா.வை.இ. (F.D.R.) என்று பொதுவாக அழைக்கப்படுகின்றது. இதில் வைப்பு வைத்தவரின் பெயர், வைப்புத் தொகை, வட்டி வீதம், வைப்பு முதிர்வடையும் நாளன்று கொடுக்கப்படும் தொகை ஆகியவை தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்கும்.

## காலவரையறை வைப்பு இரசிதின் பிற விவரங்கள்

1. எண்
2. தேதி
3. வங்கி மற்றும் இடப்பெயர்
4. முதிர்வு நாள்
5. வைப்பாளரின் பெயர்
6. வைப்புத்தொகை

7. வைப்புக் காலம்

8. வட்டி வீதம்

9. முதிர்வுத் தொகை

10. மேலாளர் கையொப்பம்.

காலவரையறை இரசீதின் மாதிரிப் படிவம்

சேரன் வங்கி

மதுரைக் கிளை

எண் : 146789 முதிர்வு நாள் :

நாள் : 19

. . . . . . . . . . . . . . . . . . . . .அவர்களிடமிருந்து

ரூபாய் (எழுத்தால்) . . . . . . . . . . . . . . . . . . .காலவரையறை

வைப்புத்தொகையாக ....... % வட்டி வீதத்தில்

.......... மாதங்கட்குப் பின்னர் திருப்பி அளிக்கும்படி

பெறப்பட்டுள்ளது.

ரூ.

காசாளர் மேலாளர்

## காலவரையறை இரசிதின் சிறப்பியல்புகள்

### (1) முதிர்வு நாளன்று ஒப்படைவு செய்தல் (Surrender)

காலவரையறை வைப்பின் இரசீதினை மிகவும் கவனத்துடன் பாதுகாத்தல் இன்றியமையாத ஒன்றாம். முதிர்வு நாளன்று இதனை ஒப்படைவு செய்தால்தான் வங்கியிலிருந்து பணம் பெறமுடியும். அவ்வாறு ஒப்படைவு செய்யும்போது, இரசீதின் பின்புறம் குறிப்பிட்டுள்ள இடத்தில் ஸ்டாம்பு(முத்திரைச் சீட்டு) ஒட்டி அதன்மீது கையொப்பமிட்டுத் தரவேண்டும். இதனை இரசீது தீர்வு செய்தல் (discharge of F.D.R.) என அழைக்கின்றோம்.

### (2) இரசீது தொலைந்துவிட்டால்

மேற்கண்ட காலவரையறை வைப்பின் இரசீதினை வாடிக்கையர் தொலைத்துவிட்டால் வங்கியர் அவரிடமிருந்து இழப்பீட்டு உறுதிப் பத்திரம் (Indemnity Bond) ஒன்றை எழுதிப் பெறல்வேண்டும். இவ்வாறு இழப்பீட்டு உறுதி பெற்றபின் வங்கியர் வாடிக்கையருக்கு காலவரையறை வைப்பு இரசீதின் படிதனை வழங்குவர். இழப்பீட்டு உறுதிப் பத்திரத்தைப் பெறுவதால் வங்கியருக்கு இழப்பு நிகழ வாய்ப்பில்லை. வாடிக்கையர் இரசீதை கவனமாகப் பாதுகாப்பாரானால் சிக்கல் எழ வாய்ப்பே இல்லை!

### (3) அரசு வருவாய் முத்திரை வரியிலிருந்து விலக்கு

இந்திய முத்திரைச் சட்டத்தின்படி ரூ.500க்கு மேற்பட்ட அனைத்து இரசீதுகளிலும் அரசு வருவாய் முத்திரை ஒட்ட வேண்டும் என்பது விதியாகும். ஆனால் காலவரையறை இரசீதிற்கு மட்டும் முத்திரைவரி விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. காலவரையறை வைப்பு மக்களிடையே வரவேற்புப் பெறவேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையிலேயே இவ்வரிவிலக்கு அளிக்கப் பட்டுள்ளது.

**(4) மாற்றுமுறை ஆவணம் ஆகாது**

காலவரையறை இரசீது ஒரு மாற்றுமுறை ஆவணம் ஆகாது. இதனை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு எளிதாக மாற்ற முடியாது. எனவேதான், இரசீதிலேயே "மாற்றத்தக்க தல்ல" என்று குறிப்பிடப்பட்டிருக்கும். ஆகவே, இதனை காசோலை போன்று புறக்குறிப்பு (endorsement) செய்து வேறொருவருக்கு மாற்றித்தர இயலாது. *அப்துல் ரஹ்மான் எதிராக சென்ட்ரல் பேங்க் ஆப் இந்தியா* (Abdul Rehiman Vs Central Bank of India) என்ற வழக்கில், காலவரையறை வைப்பு இரசீது ஒரு மாற்றுமுறை ஆவணம் ஆகாது; ஆகவே அதனை வெற்று புறக்குறிப்பின் (Blank endorsement) வாயிலாக பிறருக்கு மாற்ற இயலாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

**(5) உரிமை மாற்றம் செய்தல் (Assignment)**

காலவரையறை வைப்பு என்பது ஒருவகையில் வாடிக்கையரிடமிருந்து வங்கியர் பெற்ற கடனே. கடன்களை உரிமை மாற்றம் செய்யச் சட்டம் வழி வகுக்கின்றது. அதுபோன்றே இக்கடனையும் வாடிக்கையர், இந்திய சட்டப்படி உரிமை மாற்றம் செய்ய இயலும். உரிமை மாற்றம் செய்ய விரும்பும் வாடிக்கையர், வங்கியருக்கு அது குறித்து முன்னறிவித்துவிட்டு, உரிமை மாற்றுக் கடிதம் வாயிலாக உரிமையை மாற்றிக் கொள்ளலாம். உரிமை மாற்றுக் கடிதம் மற்றும் காலவரையறை இரசீது இவற்றின் துணைகொண்டு மாற்றுரிமை பெற்றவர் (assignee) வங்கியிலிருந்து பணம் பெற்றுக் கொள்ளலாம்.

**(6) இறக்கும் தருவாயில் நன்கொடையாக வழங்கல்**

இறக்கும் நிலையில் உள்ள ஒரு வாடிக்கையர் தனது காலவரையறை வைப்பை, தான் விரும்பும் ஒருவருக்கு நன்கொடையாக வழங்கலாம். நன்கொடை பெறுநரைப் (Donee) பற்றிய அனைத்துத் தகவல்களையும் வங்கியருக்குத் தெளிவுறுத்தல் அவசியம். ஆனால், நன்கொடை தருநர் (Donor) இறந்த பின்னரே பெறுநர் அவ்வைப்பின்மீது உரிமை கொள்ளக்

கூடும். நன்கொடை அளித்தவர் பிழைத்துக் கொள்வாரானால் நன்கொடை செல்லுபடியாகாது என்பது விதி.

**(7) கடன் காரணமாக நீதிமன்றத்திலிருந்து பற்றுகை ஆணைவரின் (Garnishee order)**

சிவில் வழக்குமுறைச் சட்டம் ஆணை 21 விதி 46இன் படி, ஒரு வாடிக்கையரின் காலவரையறை வைப்புத் தொகையாகிய பற்றுகைப் பொருளைக் கைப்பற்றி வைத்திருக்கும்படி, பற்றுகைப் பொருள் வைத்திருப்பவராகிய வங்கியருக்கு நீதிமன்றம் ஆணை பிறப்பிக்குமானால் அதனை நிறைவேற்ற வேண்டியது அவர் கடமையாகும். நீதிமன்ற ஆணையில் குறிப்பிட்டுள்ள தொகையையோ அன்றி முழுத்தொகையையோ பற்றிவைத்தல் வேண்டும். நீதிமன்றம் தனியொருவர் கணக்கின்மீது ஆணை பிறப்பித்திருந்தால் அதனை மட்டுமே கைப்பற்றி வைத்தல் வேண்டும். கூட்டுக்கணக்கில் உள்ள தொகையைப் பற்றுகை செய்ய இயலாது. ஆனால் கூட்டுக்கணக்கின் மீதும் சேர்த்து ஆணையிடப்பட்டிருக்குமானால், இரண்டினையும் சேர்த்துப் பற்றுகை செய்யலாம்.

**(8) இரசீதின் மீது பற்றுரிமை (Lien)**

காலவரையறை வைப்புத்தொகை மீது வங்கியருக்கு எந்தவிதமான பற்றுரிமையும் கிடையாது. எனினும், வாடிக்கையர் தனது காலவரையறை இரசீதைப் பிணையமாக வைத்து வங்கியரிடமிருந்து கடன் பெறும் வசதி உண்டு. இக்கடனுக்கு, வாடிக்கையரின் காலவரையறை வைப்புத் தொகைக்குரியதாக வங்கியர் நிர்ணயித்துள்ள வட்டிவீதத்தை விட இரண்டு விழுக்காடு அதிகமான வட்டி வசூலிக்கப்படும். பொதுவாக, வைப்புத் தொகையில் 75 விழுக்காடு மட்டுமே கடனாக அளிக்கப்பெறும்.

தனது வைப்புத் தொகையைக் கடனாகப் பெற விழையும் வாடிக்கையர், காலவரையறைவைப்புத்தொகை இரசீதின் பின்புறம் அரசு வருவாய் முத்திரை ஒட்டி அதன்மீது கையொப்பமிட்டு, அதனைப் பிணையமாக வங்கியரிடம் தருதல் தேவை. அவ்வாறு பிணையமாக்கப்பட்ட இரசீதின் மீது

வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு என *யூனியன் பேங்க் ஆப் இந்தியா எதிராக வேணுகோபாலன்* (Union Bank of India Vs Venugopalan) வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. இதனால் பிணையமாக்கப்பட்ட காலவரையறை இரசீதின் மீது வங்கியருக்குப் பற்றுரிமை உண்டு என்பது அறிய வருகின்றது.

**(9) காலவரையறை இரசீதும் மாறாட்டமும் (Conversion)**

ஒருவர் தனக்கு உரிமையற்ற பிறர் பொருளைத் தன் பொருள்போற் கருதி அதனைப் பயன்படுத்துவதை மாறாட்டம் என்கிறோம். சட்டப்படி இது ஒரு பெருங்குற்றமாகும்.

காலவரையறை இரசீது, வங்கியர், வாடிக்கையரின் தொகையைப் பெற்றுக் கொண்டதற்கான ஒரு அடையாளச் சீட்டே அன்றி காசோலை போல பணம் வழங்குதற்குரிய ஆணைச்சீட்டு அன்று. எனவே வாடிக்கையர் காலவரையறை வைப்புக்கணக்கு வைத்துள்ள வங்கியரைத் தவிர, வேறு எந்த ஒரு வங்கியரும், அக் காலவரையறை இரசீதினை ஏற்றுக்கொண்டு வாடிக்கையருக்கு வசூல் செய்து தர இயலாது. அவ்வாறு ஏதேனும் ஒரு வங்கியர் மேற்கண்ட விதிக்குப் புறம்பாக, பணம் வசூலிப்பாரானால் அவர். 'மாறாட்டம்' செய்த குற்றத்திற்காளாவார்.

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

(1) அறிமுகக் கடிதம் என்பது யாது? அதனின் இன்றியமையாமையை எடுத்துரைக்க.

(2) உட்செலுத்துச் சீட்டிற்கும் எடுப்புச் சீட்டிற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

(3) நடப்புக் கணக்கின் ஏதாவது நான்கு முக்கிய சிறப்பியல்புகளை விளக்குக.

(4) சேமிப்புக் கணக்கின் நோக்கம் யாது? அந்நோக்கத்தினை சேமிப்புக் கணக்கு செயற்படுத்தும் விதம் குறித்து வரைக.

(5) தொடர் வைப்புத் திட்டம் பற்றி சிறு குறிப்பு வரைக.

(6) காலவரையறைச் சட்டம் காலவரையறை வைப்பிற்கு பொருந்துவது எங்ஙனம்?

(7) காலவரையறை வைப்பு இரசீதின் மாதிரிப் படிவம் தந்து அதில் காணப்படும் விவரங்களைக் கூறுக.

(8) காலவரையறை வைப்பு இரசீதின் மீது வங்கியருக்கு பற்றுரிமை உண்டா என்பதனை வழக்கு ஒன்றின் வாயிலாக விவரிக்க.

(9) "வணிகர் பெரும்பாலும் நடப்புக் கணக்கினை விரும்புகின்றனர்" – ஏன்?

(10) காலவரையறை வைப்பிற்கு விரிவாக்கப்பட்டுள்ள வரி கழிப்புத் திட்டம் பற்றி சிறு குறிப்பு வரைக.

மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை

(1) காலவரையறை வைப்பு இரசீதின் மாதிரிப் படிவம் தந்து அதனின் சிறப்பியல்புகளை விவரிக்க.

(2) நடப்பு வைப்புக் கணக்கு மற்றும் சேமிப்பு வைப்புக் கணக்கு - இவற்றை வேறுபடுத்துக.

(3) புதிதாக கணக்கு ஒன்று தொடங்கும்போது வங்கியர் எடுக்க வேண்டிய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் யாவை?

(4) காலவரையறை வைப்புக் கணக்கைப் பொறுத்த வரையில், ஒரு வங்கியரின் சட்டபூர்வமான நிலையினை விவாதிக்க.

(5) வைப்புகளை வகைப்படுத்தி அவற்றின் சிறப்புத் தன்மைகளை விவரிக்க.

3

# செல்லேடு
## (PASS BOOK)

"ஒரு வாடிக்கையரின் வங்கிக் கணக்கை உள்ளடக்கி, வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையே மாறிமாறிச் சென்று வரும் சிறுஏடு செல்லேடு".

ஒரு வாடிக்கையர், வங்கியியல் நடப்புக்கணக்கு, சேமிப்புக் கணக்கு, தொடர்கணக்கு போன்றவற்றைத் தொடங்கலாம். வாடிக்கையர் தான் தொடங்கிய கணக்குகளில் பணம் செலுத்தும்போதும் எடுக்கும்போதும் அவர் செலுத்தும் மற்றும் எடுக்கும் தொகைகளை, அவர் பெயரில் உள்ள கணக்கில் வங்கியர் பதிவு செய்து கொள்வர். வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையே நிகழும் நடவடிக்கைகள் அனைத்தும் அவர் பெயரில் உள்ள கணக்கில் குறிக்கப் பெறுவதால் இக்கணக்கினைப் பற்றிய முழு விவரங்களையும் வங்கியர், வாடிக்கையருக்கு அவ்வப்போது அறிவிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எனவே வாடிக்கையரது கணக்குகளைக் கையடக்கமாக ஏடு ஒன்றில் குறித்து அவரிடம் வழங்குகின்றனர் வங்கியர். இவ்வாறு வங்கியர் வாடிக்கையர் இருவருக்கும் இடையிலான நடவடிக்கைகளை உள்ளடக்கிய சிறுஏடுதான் செல்லேடு.

வாடிக்கையரின் கணக்கினைத் தாங்கி, ஒரு வங்கியர் மற்றும் வாடிக்கையர் இவர்களுக்கிடையே அடிக்கடி கைமாறிச் சென்று வரும் ஏடு இது என்பதால் இதனைச் செல்லேடு என்கிறோம்.

வாடிக்கையரின் கணக்கைப் பதிவு செய்து கொண்டுள்ள பேரேட்டில் உள்ள கணக்கின் நகலாக்கமாகவே இவ்வேடு இருப்பதால் இதனை வங்கிக் கணக்கு நகலேடு எனவும்

அழைக்கலாம். படியெடுக்கப்பட்டுள்ளது போன்றிருப்பதால் 'படியேடு' எனலும் பொருந்தும். இவ்வாறு பேரேட்டில் உள்ள வாடிக்கையரது கணக்கின் மறுபதிவாகத் திகழ்கிறது செல்லேடு!

வாடிக்கையரின் பயன்பாட்டிற்காக அவரது கணக்கின் விவரங்களை வங்கியர் இவ்வேட்டில் பதிவு செய்து தருகின்றனர். இவ்வாறு வங்கியரால் வாடிக்கையாளருக்குப் பயன்தரும் வகையில் உருவாக்கப்படும் செல்லேடு, வங்கித்துறையில் மிக இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது.

## செல்லேட்டின் பயன்

செல்லேட்டின் மூலம், வாடிக்கையர் தனது வங்கி இருப்பையும் மற்றும் வங்கியோடு தொடர்புடைய நடவடிக்கைகளையும் தனது கணக்குடன் ஒப்பிட்டுச் சரி பார்த்துக் கொள்ள இயலுகிறது. செல்லேட்டின் மூலம், வாடிக்கையர் தனது பண இருப்பின் நிலவரத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதால் காசோலையில் தேவையான தொகையைத் துணிந்து வரைய இயலுகிறது. வாடிக்கையரது இருப்பிற்குரிய வட்டி எவ்வளவு கிட்டியுள்ளது என்பதை அறிந்து கொள்ளவும் செல்லேடு உதவுகிறது. இவ்வாறு செல்லேடு வாடிக்கையருக்குப் பல பயன்களைத் தரும் நல்லேடாக விளங்குகிறது.

## செல்லேடு தயாரிக்கும் முறை

செல்லேடு தயாரிப்பதில் வங்கியர் மிகுந்த கவனம் செலுத்துதல் தேவை.

### பதிவு செய்தல்

வாடிக்கையர் செலுத்தும் பணம் மற்றும் காசோலைகள் வரவு பக்கத்திலும், அவர் எடுக்கும் பணம் மற்றும் வழங்கும் காசோலைகள் பற்றுப் பக்கத்திலும் பதிவு செய்யப்படும். இவ்வாறு வாடிக்கையருக்குரிய பணம் அனைத்தும் வரவு பக்கத்திலும், அவர் தரவேண்டியவை அனைத்தும் பற்று பக்கத்திலும் பதிவு செய்யப்படும்.

வங்கியருக்கு மட்டுமே செல்லேட்டில் பதிவு செய்யும் உரிமை உண்டு. செல்லேட்டில் தவறுதல்கள் ஏற்படின் அவற்றை வாடிக்கையர் தாமாகவே திருத்திக் கொள்ள இயலாது. ஆகவே செல்லேட்டினை அடிக்கடி வங்கியரிடம் கொடுத்து கணக்கினைச் சரிபார்த்துப் பதிவு செய்து பெற்றுக் கொள்ள வேண்டும்.

**செல்லேடு தயாரிக்கப் பயன்படுத்தப்படும் பல்வேறு முறைகள்**

செல்லேடு தயாரிப்பதில் பல்வேறு முறைகள் பின்பற்றப்படுகின்றன. அவையாவன :—

(1) பேரேட்டுக் கணக்கு முறை (Ledger account system)

(2) அட்டவணை முறை (Tabular form system)

(3) பேரேட்டுத் தனித்தாள் முறை (Loose leaf ledger card system)

(4) நிழற்பட நகலாக்க முறை (Photostat copy system)

**(1) பேரேட்டுக் கணக்கு முறை (Ledger account system)**

செல்லேட்டினை, பேரேட்டுக் கணக்குப் போன்று இரண்டு பக்கங்கள் கொண்டவாறு தயாரிக்கலாம். பற்றுப் பதிவுகளை இடதுகைப் பக்கமும் வரவுப்பதிவுகளை வலதுகைப் பக்கமும் பதிவுசெய்து கொள்ளலாம். இம்முறைப்படி சிறிய வடிவில் செல்லேட்டினைத் தயாரிப்பது மிகவும் கடினமானதும், சிக்கன மற்றதுமாகையால் வங்கியர்கள் இம்முறையினைக் கையாளுவதில்லை.

**(2) அட்டவணை முறை (Tabular form system)**

பல பகுப்புகள் கொண்ட ஒரு அட்டவணை முறையில் வாடிக்கையரின் கணக்குகள் குறிக்கப்படுதலுக்கு அட்டவணைமுறை என்று பெயர். இம்முறையில் ஒரு பக்கத்திலேயே நடவடிக்கைகளைப் பதிவு செய்ய முடிகிறது. எளிய, சிக்கனமான இம்முறையையே பெரும்பாலான வங்கியர்

பின்பற்றுகின்றனர். இதனின் மாதிரிப் படிவம் ஒன்றை, கீழே காணலாம்.

## செல்லேட்டின் மாதிரிப் படிவம்

## நவீன வங்கி

## சேமிப்புக் கணக்கு

பெயர் : மகிழ்நன் கணக்கு எண் : *161*

தொழில் : பொறியியலாளர் பக்க எண் : *637*

முகவரி : வாகைச் சாலை, மதுரை.

| தேதி | விவரங்கள் | எடுப்புகள் | வைப்புகள் | இருப்பு | கையொப்பச் சுருக்கம் (Initials) |
|---|---|---|---|---|---|
| *1997* | | | | | |
| ஜூன் *5* | ரொக்கம் | .... | *2,000* | *2,000* | இதனை பதிவு செய்யும் வங்கி எழுத்தரின் கையெழுத்து சுருக்கம் |
| " *11* | காசோலை *47022* | .... | *3,000* | *5,000* | |
| " *14* | காசோலை *74132* | *2,000* | .... | *3,000* | |
| " *21* | ரொக்கம் | .... | *1,500* | *4,500* | |
| " *25* | காசோலை *74133* | *3,000* | .... | *1,500* | |
| " *28* | காசோலை *32033* | .... | *3,000* | *4,500* | |
| " *30* | வட்டி | .... | *50* | *4,550* | |

### (3) பேரேட்டுத் தனித்தாள் முறை (Loose Leaf Ledger Card System)

மிக வேகமாக முன்னேறிவரும் அறிவியல் துறையின் அரிய கண்டுபிடிப்புகளான கணிப்பொறிகள் வங்கியருக்கும் உதவும் கரங்களாகி விட்டன. வங்கியர், கணிப்பொறியின் துணைகொண்டு ஒரு நொடிப் பொழுதில வாடிக்கையரின் கணக்குகளை முறைப்படி நகலெடுத்துத் தந்துவிடுகின்றனர். இம்முறைப்படி தனியான ஏடு என்று ஒன்றில்லாததால் கணக்கு நகல் அவ்வப்போது வாடிக்கையரின் பார்வைக்கு கணிப்பொறி மூலம் தயாரிக்கப்பட்ட தனித்தாளில் அனுப்பப்படும்.

### (4) நிழற்பட நகலாக்க முறை (Photostat Copy System)

மேலை நாடுகளில் வங்கியர், வங்கியின் பேரேடுகளில் உள்ள வாடிக்கையரின் கணக்கு நடவடிக்கைகளை அப்படியே நிழற்படமாக்கி அந்நகலினைத் தருகின்றனர். இதுவே நிழற்பட நகலாக்கமுறை எனப்படுகிறது. செலவினை மிகுவிக்கும் இம்முறை இந்தியாவில் செயற்படுவதில்லை.

### செல்லேடு - ஒரு ஆதாரபூர்வமான ஏடாகுமா?

ஒரு வங்கியரால் தனது வாடிக்கையருக்கு தரப்படும் அவரது கணக்கின் நகலேடாகிய செல்லேடு எந்த அளவு அவ்விருவரின் தொடர்புக்கும் பொறுப்பேற்கிறது? ஒரு செல்லேட்டில் காணப்படும் கணக்கு தீர்க்கப்புட்ட கணக்காகுமா? (Settled Account) இந்நிலையில் செல்லேட்டின் பணி யாது? போன்ற வினாக்களுக்கு விடை காண்பது எளிதன்று. மாற்றுமுறை ஆவணச் சட்டத்திலோ அன்றி வேறு எந்தச் சட்டத்திலோ இதனைப் பற்றிய தெளிவான விளக்கம் ஏதும் இல்லை. எனவே வங்கியின் பழக்கமுறை மற்றும் வங்கியரின் பட்டறிவு (experience) இவற்றின் துணை கொண்டே விளக்கம் காண இயலும்.

வங்கியியல் அறிஞர்தம் கூற்றுக்களையும், அவற்றின் வழிப்பட்ட வழக்குகளின் தீர்வுகள் சிலவற்றையும் நோக்குவதன் மூலம் மேற்கண்ட வினாக்களுக்கு விடை காண இயலுமா? எனக் காண்போம்.

***சர். ஜான் பேஜட் என்ற வங்கியியல் அறிஞர்,*** "ஒரு வங்கியருக்கும் ஒரு வாடிக்கையருக்கும் இடையே நடைபெறும் நடவடிக்கைகளின் முடிவடைந்த மற்றும் வினாத்தொடுக்க இயலாததுமான பதிவுருவாக அமைவதே செல்லேட்டின் முறையான பணியாகும்" ***என்கிறார்.***

***அன்னாரின் கருத்தை அடியொற்றி,*** *டேவாயன்ஸ் எதிராக நோபிள்* (Devaynes Vs Noble) ***என்ற வழக்கில் நீதிமன்றம் பின்வருமாறு தீர்ப்பளித்தது :–***

"ஒரு வாடிக்கையருக்குச் செல்லேடு அனுப்பப்படும்போது அதிலுள்ள பதிவுகளை அவர் பரிசீலனை செய்து அதில் ஏதேனும் பிழைகள் இருப்பின் அவற்றை உடனடியாக வங்கியரின் கவனத்திற்குக் கொண்டு வந்து நேர் செய்தல் வேண்டும். அவ்வாறின்றி அவர் வாளாவிருந்துவிடுவாரானால் அப்பதிவுகள் சரியானவையே என வாடிக்கையாளர் ஏற்றுக்கொண்டதாகவே கருதப்படும்".

***மேற்கண்ட வழக்கின் தீர்ப்பு இவ்வாறிருக்க, பின்னர் எழுந்த வழக்குகள் இக்கருத்துக்களை ஏற்கவில்லை.*** *கெப்டிகலா ரப்பர் எஸ்டேட் கம்பெனி லிமிடெட் எதிராக நேஷனல் பேங்க் ஆப் இந்தியா லிமிடெட்* (Keptigalla Rubber Estate Co. Ltd Vs National Bank of India Ltd) ***என்ற வழக்கில் நீதிபதி 'ப்ரே' வழங்கும் கருத்து பின்வருமாறு :–***

"ஒரு வாடிக்கையர் செல்லேட்டினை வங்கியிலிருந்து பெற்று பின் எந்தவிதமான மறுப்பும் இன்றி அதனைத் திருப்பி அளித்து விட்டால், அது ஒரு முடிவடைந்த அல்லது தீர்க்கப்பட்ட கணக்காகிவிடும் என்ற கருத்துக்கே இடமில்லை. அப்படி கருதினால், அது ஒரு அறிவீனமான செயலேயாகும்".

***இதுபோன்று,*** *கனரா வங்கி எதிராக கனரா சேல்ஸ் கார்ப்பரேஷன் மற்றும் அதர்ஸ்* (Canara Bank Vs Canara Sales Corporation & Others) ***வழக்கில் கீழ்க்கண்ட தீர்ப்பு வழங்கப்படுகிறது :–***

“வங்கியர், வாடிக்கையருக்குச் செல்லேட்டை அனுப்புங்கால், வாடிக்கையர் அதில் உள்ள தவறுகளைச் சுட்டிக்காட்டாத காரணத்தால், அது ஒரு முடிவடைந்த கணக்கு என்று ஏற்பதற்கு எவ்வித ஒப்பந்தமும் கிடையாது”.

மேற்கூறிய வேறுபட்ட கருத்துக்களினால், செல்லேட்டின் நேரிய பணி யாது என்பதைத் தெள்ளத் தெளிவாக அறிந்துகொள்ள இயலவில்லை. எனவே செல்லேட்டின் பணிகள் குறித்த பிறநாடுகளின் கருத்துக்களை, குறிப்பாக அமெரிக்க நாட்டினரின் கருத்தை அறிவது அவசியமாகிறது.

**அமெரிக்காவில் செல்லேட்டின் நிலை**

அமெரிக்க நாட்டில் ஒரு செல்லேட்டின் நிலை வங்கியருக்குச் சாதகமாகவே அமைந்துள்ளது. அங்கே ஒரு செல்லுப் புத்தகம் வங்கியர் மற்றும் வாடிக்கையருக்குமிடையே நிகழும் நடவடிக்கையின் அதிகாரபூர்வமான குறிப்புப் புத்தகமாக விளங்குகிறது. அங்கேயுள்ள ஒவ்வொரு வாடிக்கையருக்கும் தமது செல்லேட்டினைப் பரிசீலனை செய்யும் கடமை வற்புறுத்தப்படுவதால் இந்நிலை கைகூடுகின்றது. செல்லேட்டினைப் பரிசீலிக்கும் கடமை வாடிக்கையருக்குரியதாக விளங்குவதால், செல்லேடு தன்னிடம் அனுப்பப்படும் ஒவ்வொரு முறையும் வாடிக்கையர் அதனை மிகவும் கவனத்துடன் சரிபார்க்க வேண்டும். அவர் வாளா இருந்துவிட்டால் எல்லாப் பதிவுகளையும் சரி என்று ஏற்றுக் கொண்டார் என்று பொருளாகும். அச்சூழலில் அக்கணக்கு ஒரு முடிவடைந்த கணக்காகவே எடுத்துக் கொள்ளப்படும். இதனை வலியுறுத்தி *மோர்கன் எதிராக யுனைடெட் ஸ்டேட்ஸ் மாட்கேஜ் & டிரஸ்ட் கம்பெனி* (Morgan Vs United States Mortgage & Trust Company) வழக்கில் கீழ்க்கண்ட வண்ணம் தீர்ப்பு வழங்கப் பட்டுள்ளது.

“செல்லேட்டின் பதிவுகளைச் சரிபார்க்க வேண்டியது வாடிக்கையரின் தலையாய கடமையாகும். அவ்வாறு சரிபார்க்குங்கால் பிழைகள் ஏதேனும் இருப்பின் அதனை விரைந்து வங்கியரின் கவனத்திற்குக் கொண்டுவருதல் வேண்டும். தவறினால் அதன் விளைவுகளுக்கு அவரே பொறுப்பாளியாவார்

**இந்தியாவில் செல்லேட்டின் நிலை**

இந்தியாவில் ஒரு செல்லேட்டின் நிலை சரியாக வரையறுக்கப் பெறவில்லை. இந்தியாவில் செல்லேட்டினைப் பரிசீலனை செய்யும் கடமை வாடிக்கையருக்குரியதாக வற்புறுத்தப்படாமையே இதற்குரிய காரணமாகும். வாடிக்கையர் செல்லேட்டினைப் பரிசீலனை செய்யாவிடில், அவர் அதனை ஒரு முடிவடைந்த கணக்கு என்று ஏற்றுக்கொண்டுவிட்டதாக எடுத்துக் கொள்ள இயலாது. ஆகவே ஒரு செல்லுப் புத்தகத்திலுள்ள பதிவுகளின் உண்மையான விளைவு யாதெனக் கண்டறிய, ஒவ்வொரு பதிவினையும் எடுத்து ஆராய்தல் அவசியம். ஒரு செல்லுப்புத்தகத்தின் பதிவுகளை இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன :

*(1) சரியான பதிவுகள்*

*(2) தவறான பதிவுகள்*

**சரியான பதிவுகளின் நிலை**

ஒரு சரியான பதிவைப் பொறுத்தவரையில் எந்தவிதச் சிக்கலும் எழாது. ஆகவே அது ஒரு வங்கியருக்கும் வாடிக்கை யருக்குமிடையே ஒரு முடிவடைந்த கணக்காகி விடுகிறது.

**தவறான பதிவுகளின் நிலை**

தவறு செய்தல் மனித இயல்பு. ஆகவே ஒரு வங்கியர் செல்லேட்டில் தவறாகப் பதிவு செய்ய வாய்ப்புண்டு. பிழைகளுடன் கூடிய கணக்கினை ஒரு முடிவடைந்த கணக்காக எடுக்கமுடியாது. அவ்வாறானால், அவற்றின் விளைவுகள் யாவை? இதற்கு விடை காண, அந்தத் தவறான பதிவின் தன்மையை ஆராய வேண்டும். இதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

*(1) வாடிக்கையருக்குச் சாதகமான பதிவுகள்*

*(2) வங்கியருக்குச் சாதகமான பதிவுகள்.*

**வாடிக்கையருக்குச் சாதகமான பதிவுகளின் விளைவுகள் (Effects of entries favourable to a customer)**

செல்லுப் புத்தகத்தில் வரவுப் பதிவுகள் அதிகமாகச் செய்யப்பட்டு அல்லது பற்றுப் பதிவுகள் குறைவாகவோ அல்லது பதியாமலோ இருந்தால், இப்பதிவுகள் வாடிக்கையருக்குச் சாதகமான நிலையை உருவாக்கும். மேலும், ஒரு முறை வரவு வைக்க வேண்டிய தொகையை இருமுறை வரவு வைத்துவிடலாம். ஒருவர் கணக்கில் வரவு வைப்பதற்குப் பதிலாக மற்றொருவர் கணக்கில் வரவு வைத்துவிடலாம். இப்பதிவுகளை ஒரு வாடிக்கையர் நம்ப முடியுமா என்று கேட்டால் அதற்கு பதில் 'ஆம்' என்றே கூறவேண்டும். இதற்குக் காரணம், எல்லா பதிவுகளையும் வங்கியர்தான் பதிவு செய்துள்ளார். ஆகவே செல்லேட்டினை வங்கியருக்கு எதிரான சாட்சியாகப் பயன்படுத்தலாம். மேலும், அத்தவறுகளைக் கண்டுபிடித்து நேர் செய்து கொள்ள வேண்டிய கடமையும் வாடிக்கையருக்குக் கிடையாது. ஆகவே வங்கியரால் எழுதப்பட்ட பதிவுகளை வாடிக்கையர் உண்மை என்று நம்பிச் செயல்படுவதைச் சட்டம் தடை செய்யவில்லை. சட்டம் வாடிக்கையருக்குச் சாதகமாகவே உள்ளது.

இவ்வாறு, செல்லுப்புத்தகத்தில் பிழையான இருப்புக் காட்டப்பட்டிருந்து அது வாடிக்கையருக்குச் சாதகமாக இருக்கும் போது, அதனை நம்பி, அதன் பேரில் வாடிக்கையர் காசோலை ஒன்றை அனுப்பியிருந்தால், அதற்குப் பணம் கொடுக்காமல் மறுக்க வங்கியருக்கு உரிமை கிடையாது. அவ்வாறு மறுக்கப்பட்டால், அது ஒரு பிழையான மறுப்பு என்று கருதப்பட்டு அதற்கான இழப்பீட்டுத் தொகையைச் செலுத்த வேண்டிய பொறுப்பு அந்த வங்கியருக்கு ஏற்படும். மேற்கூறிய தீர்ப்பு *ஹாலண்ட் எதிராக மேன்செஸ்டர் லிவர்பூல் டிஸ்ட்ரிக் பேங்கிங் கம்பெனி* (Holland Vs Manchester Liverpool District Banking Co) வழக்கில் வழங்கப்பட்டுள்ளது.

மேலும், வாடிக்கையர் தன் செல்லுப்புத்தகத்தில் காட்டப்பட்டிருந்த தவறான தொகையை நம்பி நல்லெண்ணத்துடன்

(good faith) பணத்தை வங்கியிலிருந்து எடுத்திருக்க வேண்டும். அவ்வாறு எடுக்கப்பட்ட பணத்தை வங்கியர் மீண்டும் பெற இயலாது. *ஸ்கைரிங் எதிராக கிரீன்வுட்* (Skyring Vs Greenwood) வழக்குப்படி, செல்லுப்புத்தகத்தில், வங்கியரது பிழையின் விளைவாக, ஒரு பெருந்தொகையை ஒரு இராணுவ அதிகாரி வரவுப் பக்கத்தில் பெற்றிருந்தார். அத்தொகையை உண்மையாகவே தனக்கு உரியதெனக் கருதி, நல்லெண்ணத்தில் அதனை எடுத்துச் செலவழித்துவிட்டார். அத்தொகையை அவர் திரும்பச் செலுத்த வேண்டியதில்லை என்று வழக்குமன்றத்தில் தீர்ப்பானது குறிப்பிடத்தக்கது.

இதுபோன்று *ஒகே பௌடன் & கம்பெனி எதிராக இந்தியன் பாங்க் லிமிடெட்* (Oaklay Bowden & Co Vs The Indian Bank Ltd ) என்ற வழக்கிலும், வங்கியர், தமது வாடிக்கையாளர் கணக்கில் தவறுதலாக இருமுறை வரவு வைத்துவிட்டனர். இத்தவறு ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகுதான் கண்டுபிடிக்கப்பட்டது. இதற்கிடையில், வாடிக்கையர், அத்தொகையை தனக்குரியதென்று நம்பி செலவழித்துவிட்டார். வங்கியர் அத்தொகையைக் கேட்டபோது, வாடிக்கையர் தர மறுத்துவிடவே வழக்குத் தொடர வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இத்தொகையை வங்கியர் திரும்பப்பெற இயலாது என சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியது. இதுவும் முன்னர் கண்ட கருத்தையே வலியுறுத்துகிறது.

ஆகவே, வாடிக்கையருக்குச் சாதகமான தவறான பதிவுகள் கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் ஒரு முடிவடைந்த கணக்காக எடுத்துக் கொள்ளப்படும் :-

(1) வாடிக்கையர் தவறாகப் பதிவு செய்யப்பட்டதை உண்மையானது என நம்பி செயற்பட்டிருந்தால்,

(2) வாடிக்கையர் அப்பதிவுகளை முழுமையாக நம்பி நல்லெண்ணத்துடன் காசோலையை வரைந்து அனுப்பியிருந்தால்,

(3) வங்கியர்தம் கவனக்குறைவால் ஏற்பட்ட தவறான பதிவுகளை அவ்வாறே (அப்படியே) வாடிக்கையருக்கு அறிவித்திருந்தால், (*ஸ்மித் எதிராக காக்ஸ் & கம்பெனி* Smith Vs Cox & Co)),

(4) பதிவுகள் தவறானவை என்பதை உண்மையிலேயே அறியாதிருந்தால்,

(5) ஒரு வங்கி ஊழியர் வேண்டுமென்றே செய்த தவறை நம்பி வாடிக்கையர் செயல்பட்டிராத நிலையில் (*பிரிட்டிஷ் மற்றும் நார்த் ஐரோப்பிய வங்கி எதிராக ஜால்ஸ்டின்* British & North European Bank Vs Zalztien),

(6) வாடிக்கையர் செல்லேட்டின் பதிவு தவறு என்பதை நன்றாக அறிந்தும் மோசடி செய்யும் நோக்குடன் காசோலையை எழுதியிராமல் இருக்கும் நிலையில்.

மேற்கண்ட சூழல்களில், வங்கியர் தாம் செய்த தவறினைத் திருத்த இயலாதா? என்ற வினா எழக் கூடும். ஒரு வங்கியர் தனது தவறினை கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டுத் திருத்தலாம்.

(1) வாடிக்கையர் அத்தவறினை நம்பி, பணம் எடுத்திராத நிலையில்,

(2) வாடிக்கையருக்குத் தவறினை உடனே அறிவித்தால்,

(3) அத்தவறினை நேராக்கும் வரை காசோலையினை மதிக்கும் நிலையில்.

"காலம் தாழ்த்தத் தாழ்த்த தவற்றைத் திருத்தும் வாய்ப்பு மிகவும் அருகி விடும்"

என்னும் விதி இதற்கு மிகவும் பொருந்தும்.

**வங்கியருக்குச் சாதகமான பதிவுகள் (Entries favourable to a banker)**

ஒரு வங்கியர், செல்லுப்புத்தகத்தில் வரவுப் பதிவுகளைக் குறைவாகப் பதிவு செய்திருக்கலாம் அல்லது பதிவு செய்யாமலும் விட்டிருக்கலாம். மேலும் பற்றுப் பதிவுகளில் கூடுதலான தொகையினைப் பதிவு செய்திருக்கலாம். இவ்வாறான சூழ்நிலைகளில் பதிவுகள் வங்கியருக்குச் சாதகமாக அமையக்கூடும். எனவே தவறுதலாக, வங்கியருக்குச் சாதகமாக அமைந்த இப்பதிவுகளை ஒரு முடிவடைந்த் கணக்காகக் கொள்ளலாமா? எனில் 'இயலாது' என்பதே விடையாம். வங்கியரால் செய்யப்பட்ட இத்தவறுகளுக்கு வாடிக்கையர் பொறுப்பாளியாகார். எனவே இத்தவறுகளோடு கூடிய பதிவினை ஒரு முடிவடைந்த கணக்காகக் கருத இயலாது.

ஆனால், இதற்கு ஒரு விதிவிலக்கு உண்டு. ஒரு வாடிக்கையர் அப்பதிவுகளை நேரானவை என ஏற்றுக் கொள்வதற்கேற்றாற்போல் நடந்து கொண்டால் அப்பதிவுகள் ஒரு முடிவடைந்த கணக்காகவே கருதப்படும். எடுத்துக்காட்டாக, செல்லேட்டினைப் பரிசீலனை செய்யும் கடமை வாடிக்கையருக் குரியதன்று. எனினும் அவர் தானாகவே முன்வந்து அக்கடமையை ஏற்று, ஒவ்வொரு பதிவிலும் கவனம் செலுத்தி பரிசீலனை செய்தும், ஐயத்திற்கு இடமான பதிவுகளுக்கான விளக்கங்களைக் கேட்டும் தெளிவு காண்பாரானால், அவர் தனது செயலின் மூலம் அப்பதிவுகளை, நேரானவையே என ஏற்றுக் கொண்டார் என்றே பொருள். எனவே, அதன் பின்னர் அப்பதிவுகளைத் தவறுடையன என அவர் கூற இயலாது. இதனை *வாக்லியானோ பிரதர்ஸ் எதிராக பேங்க் ஆப் இங்கிலாந்து* என்னும் வழக்கு மூலம் தெளிவாக அறியலாம்.

*வாக்லியானோ பிரதர்ஸ் எதிராக பேங்க் ஆப் இங்கிலாந்து* வழக்கில், வாடிக்கையர் தனது செல்லேட்டினை வங்கியிலிருந்து அவ்வப்போது பெற்று ஒவ்வொரு பதிவையும் மிக்க கவனத்துடன் சரிபார்த்து, செலுத்தப்பட்ட காசோலைகளுடன் அதனை ஒப்பிட்டுக் காண்பது வழக்கம். இவ்வாறு ஆழ்ந்த கவனம் செலுத்தி சோதித்த பின்னரே செல்லேட்டை வங்கிக்குத் திருப்பி

அனுப்புவதை வழக்கமாகக் கொண்டவர். ஒருமுறை தான் செலுத்தாத காசோலையின் பதிவு தனது செல்லேட்டில் இருப்பதைக் கண்டுபிடிக்கத் தவறிவிட்டார். பின்னர் அதைக் கண்டுபிடித்தபோது வங்கிதான் அதற்குப் பொறுப்பேற்க வேண்டும் என வழக்குத் தொடர்ந்தார். ஆனால் வழக்கின் முடிவு வங்கியருக்குச் சாதகமாகவே அமைந்தது.

**வழக்கின் முடிவு அமைந்த விதம்**

வாடிக்கையர் ஒவ்வொரு முறையும் செல்லேட்டைப் பெற்று கவனத்துடன் சரிபார்த்திருந்த தனது செயலால் அப்பதிவினை ஒரு முடிவடைந்த பதிவாக அல்லது கணக்காக ஏற்றுக் கொண்டார் என்றே பொருளாகும். ஆதலால், அவரது கவனக் குறைவால் கண்டுபிடியாது விட்ட தவறுகளுக்கு அவரே பொறுப்பேற்க வேண்டும். வங்கி பொறுப்பேற்க வேண்டியதில்லை எனத் திட்டவட்டமாகத் தீர்ப்பாயிற்று.

மேற்கண்டவாறு வங்கியருக்குச் சாதகமாக அமைந்த மற்றொரு வழக்கின் தீர்ப்பையும் காண்போம். *பாலகிருஷ்ண பிரமானிக் எதிராக பொவானிபூர் பாங்கிங் கார்ப்பரேஷன்* (Balakrishna Pramanick Vs Bhowanipore Banking Corporation) என்ற வழக்கைக் கொண்டு வந்த வாடிக்கையரும் செல்லேட்டில் உள்ள பதிவுகளை கவனமாகச் சரிபார்த்து, ஐயம் ஏற்படும் இடங்களுக்கான விளக்கமும் கேட்டுத் தெரிந்து கொள்ளும் இயல்பினர். ஆனால், ஒருமுறை வங்கியர் மாத விகிதத்தில் கூட்டுவட்டி விதித்து அவரது செல்லேட்டில் பற்றுப் பக்கத்தில் பதிவு வைத்திருந்ததை கண்டுபிடிக்கத் தவறி விட்டார். பின்னர் அப்பிழையினைக் கண்டுபிடித்தபோது அதனை மீண்டும் மாற்றித் தரும்படி முறையிட்டார். வங்கியர் மறுக்கவே வழக்குத் தொடர்ந்தார். வாடிக்கையர் செல்லேட்டின் பதிவுகளில் ஆழ்ந்த கவனம் செலுத்தி சரிபார்த்து, ஐயங்களையும் தெளிவாக்கிக் கொள்ளும் இயல்புடையவர். ஆதலால், அவர் தனது செயலால் அத்தவறான பதிவையும் சரியானதாக ஏற்றுக் கொண்டதாகவே பொருள்படும். எனவே தனது செயலால் அவராகவே சரியான்தாக ஏற்றுக் கொண்டுவிட்ட பிழையை, பின்னர் மறுக்கும் உரிமை அவருக்கு

இல்லையாதலால் வழக்கின் முடிவு வங்கியருக்குச் சாதகமாகவே முடிந்தது.

"ஒரு வாடிக்கையர் தனது செல்லேட்டினைப் பரிசீலிக்கும் கடமையைத் தானாகவே முன்வந்து ஏற்றுக்கொள்ளும்போது, தனது கவனக்குறைவால் பதிவுகளைச் சரியாகச் சோதிக்காவிட்டால், அதனால் ஏற்படும் தவறுகளுக்கு அவரே பொறுப்பேற்க வேண்டும்" என்ற உண்மை மேற்கண்ட வழக்குகளின் மூலம் புலனாகிறது.

மேற்கண்ட கருத்துக்கள் வாயிலாக, செல்லுப் புத்தகத்திலுள்ள பதிவுகள் முற்றிலும் சரியானவை என்றோ, அவை முடிவடைந்த கணக்குகளாக ஏற்றுக்கொள்ளப் பட்டவை என்றோ கருதுவதற்கு இடமில்லை என்பது பெறப்படுகிறது. எனவே வாடிக்கையரின் பதிவுகளைத் தாங்கி, வாடிக்கையருக்கும் வங்கியருக்கும் இடையே மாறிமாறிச் செல்லக்கூடிய செல்லுப் புத்தகம் ஒரு முடிவடைந்த கணக்கின் நகல் என அறுதியிட்டுக் கூறுவதற்கிடமில்லை. எனவே செல்லுப்புத்தகத்தில் பதிவு செய்யும் கடப்பாடுடைய வங்கியர், சிறு தவறுகூட ஏற்படா வண்ணம் ஆழ்ந்த கவனத்துடன் பதிவு செய்வாரானால் எந்தவிதச் சிக்கலும் உருவாகாது. அத்துடன் வாடிக்கையருக்கும் மிகுந்த பாதுகாப்பாக அமையும் என்பதில் ஐயமில்லை!

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

(1) செல்லேட்டின் இலக்கணம் தந்து அதனின் பயனைக் கூறுக.

(2) இந்தியாவில் செல்லேடு தயாரிக்க வங்கியரால் பயன்படுத்தப்படும் முறையை விளக்குக.

(3) செல்லேட்டின் பணி பற்றி சர். ஜான் பேஜட்டின் கருத்து யாது?

(4) அமெரிக்காவில் நிலவும் செல்லேட்டின் நிலையை விளக்குக.

(5) செல்லேட்டில் காணப்படும் வாடிக்கையருக்குச் சாதகமான தவறான பதிவுகளின் விளைவுகள் யாவை?

(6) செல்லேட்டில் காணப்படும் வங்கியருக்குச் சாதகமான தவறான பதிவுகளின் விளைவுகளை விவாதிக்க.

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

(1) "ஒரு வங்கியருக்கும் ஒரு வாடிக்கையருக்கும் இடையே நடைபெறும் நடவடிக்கைகளின் முடிவடைந்த மற்றும் வினாத் தொடுக்க இயலாததுமான பதிவுருவாக அமைவதே செல்லேட்டின் முறையான பணியாகும்" - விவாதிக்க.

(2) "ஒரு செல்லேட்டினையே தீர்க்கப்பட்ட கணக்காக நம்பி செயல்பட இயலாது" - விளக்குக.

(3) ஒரு செல்லேட்டின் முறையான பணியினை தக்க வழக்குச் சான்றுகளுடன் விளக்குக.

# 4

## வாடிக்கையர் - பல்வேறு வகையினர்

வங்கியில் கணக்குத் தொடங்க விரும்பிய வாடிக்கையர் ஒருவரது பெயரில் வங்கியர் கணக்குத் தொடங்கும்போதே, அவ்விருவரிடையேயும் ஓர் ஒப்பந்தம் உருவாகிவிடுகிறது. இந்த ஒப்புறவு நிலை நீடித்து நிலவ வேண்டுமாயின் வாடிக்கையருக்கு ஏற்புடைய சில தகுதிகள் தேவை. சமுதாயத்தின் பல்வேறு நிலைகளிலும் உள்ள வெவ்வேறு வகையினரான வாடிக்கையருடன் தொடர்பு கொள்ளும் வங்கியர் தமது தற்காப்புக் கருதி மிகுந்த கவனத்துடன் செயல்பட வேண்டும். வாடிக்கையர் தம் நிலைக்கேற்ப செயலாற்ற வேண்டுவது வங்கியரது இன்றியமையாக் கடமையாகிவிடுவதால் பல்வேறு வகைப்பட்ட வாடிக்கையர் பற்றி அறிவது அவசியமாகிறது.

இளையர், மணமான மகளிர், மனக்கோட்டியர், கட்குடியர், எழுத்தறிவில்லார், வாணிபத்தில் ஈடுபடா நிறுவனங்கள், கூட்டு வாணிப நிறுவனம், கூட்டுப்பங்கு நிறுமம், கூட்டுக் கணக்கு, பொறுப்புரிமையர், நிறைவேற்றாளர் போன்ற வெவ்வேறு வகையினராம் வாடிக்கையருடனும் வங்கியர் தொடர்பு கொள்ளுங்கால் மேற்கொள்ள வேண்டிய தற்காப்பு ஏற்பாடுகள் பற்றிக் காண்போம்.

### இளையர்

இந்திய வயது வந்தோர் சட்டம் 1875 பிரிவு 3இன்படி 18 வயதிற்குட்பட்ட யாவரும் 'இளையர்' என்று கருதப்படுவார். காப்பாளர் துணை இருப்பின் 21 வயது வரை 'இளையர்' என்றே கொள்ள வேண்டும் என்பது சட்டம். இங்கிலாந்தில் 21 வயது வரை ஒருவரை இளையர் என்று கருதுகின்றனர்.

**இளையருக்குச் சட்டம் அளிக்கும் சிறப்பு உரிமைகள்**

(1) இந்தியச் சட்டத்தில் 'இளையர்' அனுபவிக்கும் நன்மைகள் பலவாதலால் 'சட்டத்தின் செல்லக் குழந்தைகள் இளையர்' என்று கூறுவர். இந்திய ஒப்பந்தச் சட்டம் பிரிவு 11இன்படி 'இளையர் ஒருவரால் செய்யப்படும் ஒப்பந்தம் செல்லாது என்பதால் வங்கியர் - வாடிக்கையராகிய இளையர் இவர்களிடையே உள்ள ஒப்பந்தமும் அறவே செல்லாததாகிவிடும் என்பதில் ஐயமில்லை. *மோரி பிபீ எதிராக தரம்தாஸ் கோஸ்* (Mohri Bibee Vs Dharamdos Ghose) என்ற வழக்கும் இதனையே மெய்ப்பிக்கும்.

(2) இளையர் ஒருவர் தான் தக்க வயது எய்தியவர் எனப் பொய் புகன்று கடன் பெற்றால் அதனைத் திருப்பித் தரும்படி அவரை வலியுறுத்த இயலாது.

(3) வயதுரிமை அடைந்த ஒருவர் தான் இளையராய் இருந்த காலத்தில் பெற்ற கடனுக்காகப் பற்றுச் சீட்டு அளித்தால் அதுவும் செல்லாது.

(4) வங்கியர் - இளயரான வாடிக்கையர் இவர்களுக் கிடையிலான ஒப்பந்தம் செல்லாது ஆகையால் இளையருக்காக அளிக்கப்படும் பொறுப்புரிமையையும் ஏற்க இயலாது என *கௌட்டஸ் அண்டு கம்பெனி எதிராக ப்ரௌனி லெக்கி அண்டு அதர்ஸ்* (Couttus & Co. Vs Brownee Lecky and others) என்ற வழக்கில் தீர்ப்பாயிற்று.

(5) இந்திய ஒப்பந்தச் சட்டம் பிரிவு 11இன்படி, ஒரு இளையர் தனது வாழ்வின் இன்றியமையாத் தேவைக்காகப் பெற்ற கடனைத் தவிர பிற கடன்களைத் திருப்பித் தரும்படி அவரை வங்கியர் வற்புறுத்தக் கூடாது.

(6) இளையர் ஒருவர் தன் வாழ்வின் இன்றியமையாத் தேவைக்காக அன்றி பிறவற்றுக்காகப் பெற்ற கடனுக்கான பிணையப் பொருட்களை அவர் அக்கடனைத் திருப்பிச் செலுத்தாவிடினும் அவரிடமே மீண்டும் அளித்துவிட வேண்டும்.

(7) இளையர் மற்றொருவரது பொருளைப் பிணையமாக்கியிருப்பினும் அதனையும் திருப்பி அளித்துவிட வேண்டும் என்கிறது சட்டம்.

(8) இளையர் ஒருபோதும் பொறுப்புரிமையராகச் செயல்பட இயலாது.

(9) ஒரு கூட்டு நிறுவனத்தின் நலன்களை அனுபவிக்க அதன் கூட்டாளியாகிய இளையர் ஒருவருக்கு உரிமை உண்டு எனினும், அந்நிறுவனத்தின் கடன்களுக்கு அவர் பொறுப்பேற்கத் தேவையில்லை. இந்திய கூட்டாண்மைச் சட்டம் 1932 பிரிவு 30இன்படி இளையர் ஒருவர் வயதுரிமை அடைந்து ஆறு திங்களுக்குள் அக்கூட்டு நிறுவனத்துடன் தான் கூட்டாளியாகச் செயல்பட இயலுமா, இயலாதா என்பதைத் தெளிவுபடுத்திவிட வேண்டும். இன்றேல், அவர் கூட்டாண்மைக்கு உடன்பட்டதாகக் கருதி அந்நிறுவனத்தின் செயல்களுக்கு பொறுப்பேற்க வேண்டியராவார்.

(10) இளையர், வயதுற்றவரின் முகவர்ராகச் செயற்படலாம்.

(11) இளையர் நிறைவேற்றாளராக நியமிக்கப்படலாம். ஆனால் தக்க வயது அடைந்த பின்னரே அவரது பணியினைத் தொடங்க இயலும்.

(12) மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 26இன்படி இளையர் ஒருவருக்குக் காசோலை, மாற்றுச்சீட்டு, கடனுறுதிப் பத்திரம் போன்றவற்றை வரையவும் புறக்குறிப்புச் செய்யவும் உரிமை உண்டு.

(13) இளையர் அளித்த பொறுப்புறுதி செல்லாது.

(14) எந்த நிலையிலும் இளையர் ஒரு நொடித்துப் போனவராகக் கருதப்படார்.

இளையருக்குப் பாதுகாப்பு அளிக்கும் நோக்குடன் சட்டம் பலவகையில் தனது விதிகளைத் தளர்த்தியுள்ளதைக் கண்டோம். பட்டறிவில்லாக் காரணத்தால் இளையரால் எப்பொருள் பற்றியும் துல்லியமாக முடிவெடுக்க இயலாது என்பதாலும், தீய நோக்கம் கொண்டோரால் ஏமாற்றப்படலாம் என்பதாலுமே மேற்கண்ட சலுகைகள் அளிக்கப் பெறுகின்றன. ஆனால் இளையர் சட்டத்தைத் தவறான முறையில் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. இதனை லார்டு கென்யன், "மேற்கண்ட சலுகைகளை இளையர் பாதுகாக்கும் கேடயம் போல் பயன்படுத்த வேண்டுமேயன்றி அழிக்கும் வாளாகப் பயன்படுத்துதல் கூடாது" என்கிறார். எனவே சட்டத்தின் மூலம் பெறும் நலன்களை ஆக்கம் தரும் வழிகளில் பயன்படுத்துவதே இளையர்தம் கடமையாகும்.

### வங்கியர் கடமை

இளையராகிய வாடிக்கையருடன் தொடர்புகொள்ளுங்கால் வங்கியர் மிகவும் கவனத்துடன் செயல்படல் வேண்டும். தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு அவர் மேற்கொள்ள வேண்டிய சில முன்னோடியான செயல்கள் குறித்துக் காண்போம்.

(1) இளையருக்கு, மாறாது ஒன்று போல கையொப்பம் இடத்தெரியும் வயது அதாவது பத்து வயது ஆன பின்பே வங்கியில் கணக்குத் தொடங்க அனுமதிக்க வேண்டும். சேமிப்புக் கணக்கில் எப்பொழுதும் வரவு இருப்பு இருக்கும் வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

(2) தக்க அகவை எய்திய காப்பாளர் பெயரிலேயே வங்கியில் கணக்குத் தொடங்க அனுமதிக்க வேண்டும்.

காப்பாளர் - இளையர் இருவர் பெயரிலும் கூட்டுக் கணக்குத் தொடங்க அனுமதிக்கலாம். மேற்கண்ட நிலையில் இளையருக்காக வங்கி நடவடிக்கைகள் அனைத்தையும் மேற்கொள்ளும் பொறுப்பு காப்பாளருக்கு உரியது. இளையர் முகவராகச் செயல்படலாம். இளையர் தக்க அகவை எய்தியதும் காப்பாளர் அக்கணக்கைச் செயல்படுத்த அனுமதிக்கலாகாது.

(3) இளையர் மற்றும் தக்க அகவை எய்திய ஒருவர் இவர்களின் கூட்டுக் கடனுறுதிச்சீட்டு பெற்ற பின்னரே கடன் தருதல் வேண்டும். தக்க அகவை எய்தியோரிடமிருந்து இழப்பீட்டுப் பத்திரம் பெறுதல் தேவை.

(4 இளையர் இறந்துவிட்டால் அவருடைய வரவில் இருக்கும் தொகை அவரது உரிமையருக்கு வழங்கப்படும்.

## மணமான மகளிர்

மணமான மகளிர் வங்கியில் கணக்குத் தொடங்க வங்கியர் அனுமதியளிக்கலாம். மணமான பெண் தனது காசோலைகளை வரையவும், புறக்குறிப்பிடவும், மாற்றுச்சீட்டு வரையவும் உரிமை உடையவர். ஆனால் பெண்கள் கணவனின் அனுமதி பெற்றே கணக்குத் தொடங்க வேண்டும் என்றிருந்த காலமும் உண்டு. "திருமணத்தின் போது ஒரு பெண்ணுக்குரிய அனைத்துச் சொத்துக்களும் கணவனுக்கே உரிமையாகிவிடும். பெண்ணுக்குச் சொத்துரிமை இல்லை" என்ற பண்டைய நிலை இன்று மாறிவிட்டது. எனவே வங்கியில் தமது கணக்குகளைத் தாமே தொடங்கவும் தொடரவும் மணமான பெண்களுக்கு உரிமை உண்டு.

### மணமான மகளிரின் இன்றைய நிலை

இன்றைய, மணமான மகளிர் கணவனின் அனுமதியின்றி

வங்கியில் கணக்குகளைத் தொடங்கும் உரிமை பெற்றவராவர். இந்து திருமணச் சட்டம் 1956இன்படி மணமான இந்து மகளிர் தங்கள் பெயரிலும் சொத்துக்கள் வைத்திருக்க அனுமதிக்கப் படுகின்றனர். மேலும் இந்திய வாரிசுரிமைச் சட்டம் 1925 மற்றும் மணமான மகளிர் சொத்துரிமைச் சட்டம் 1874 இவற்றின்படி மணமான மகளிர் தங்களுக்கென்று தங்கள் பெயரில் சொத்துக்களை உடைமையாகக் கொள்ள உரிமையுடையவர் ஆவர்.

மணமான பெண் குறிப்பிட்ட சொத்தில் வருவாயை மட்டும் அனுபவிக்க உரிமை பெற்று, சொத்தின் உடைமை உரிமை அவளுக்கு இல்லாமலும் இருக்குமானால் அச்சொத்தைப் பிணையமாகக் கொண்டு அதன் மீது கடன் அல்லது அதிகப்பற்று அளித்துவிடுதல் கூடாது.

மணமான பெண் தான்பெற்ற கடனுக்குத் தன் கணவரை பொறுப்பாளியாக்கக் கூடிய சூழல்கள் :-

(1) மணமான பெண் தனது வாழ்க்கைத் தேவைகளுக்காகக் கடன் பெறும் போது,

(2) இல்லத்தின் தேவைகளுக்காக கணவரின் முகவராகச் செயற்படுங்கால்.

**சட்டம் மூலம் மகளிர் பெறும் சில நலன்கள்**

கடன் செலுத்தாமைக்கு சிறைத் தண்டனை அளிக்கக்கூடாது. வாணிகத்தில் ஈடுபட்டிருந்தாலொழிய ஒரு பெண்ணை நொடிப்பு நிலைக்குள்ளாக்கக் கூடாது.

**வங்கியர் கடமை**

(1) மணமான பெண்கள் தொடங்கும் கணக்கில் வரவு இருப்பு இருக்கும் வண்ணம் பார்த்துக் கொள்வது தேவை. கணக்கில் வரவு இருப்பு இருக்கும்வரை வங்கியருக்கு ஏதம் ஏற்பட வழியில்லை.

(2) மணமான பெண் கடன் கேட்கும்போது பிணையப் பொருளுக்கான சொத்து அவர் பெயரில் உள்ளதா என்பதை அறிய வேண்டும்.

(3) மணமான பெண்ணின் கடனைப் பொறுப்பேற்க அவரது கணவரின் ஒப்புதலைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

(4) எழுத்தறிவில்லாத மணமான பெண் கணக்குத் தொடங்கும்போது கணக்குத் தொடங்கும் படிவத்தில் அவருடைய இடதுகைப் பெருவிரலை அழுத்தி கையொப்பம் பெறல் தேவை.

மேற்கண்டவற்றால் ஒரு வங்கியர் மணமான பெண் கணக்குத் தொடங்குவதற்குத் துணைபுரியலாமேயன்றி கடன் வழங்குவதில் நாட்டம் செலுத்தக் கூடாது என்றும் அவ்வாறு கடன் வழங்க வேண்டிய நிலை ஏற்படுமானால் தற்காப்புடன் செயல்பட வேண்டும் என்பதும் அறியப்பட்டது.

## மனக்கோட்டியர்

பித்துற்றோர் மனநிலை கோடியவர் ஆவர். அத்தகையோரால் செவ்வனே சிந்தித்து ஆக்கமுடைய முடிவுகளை எடுக்க இயலாதாகையால், வங்கியருடன் எந்தவிதமான ஒப்பந்தமும் செய்துகொள்ள இயலாது. இந்திய ஒப்பந்தச் சட்டம் 1972இன்படி பித்துற்றவர் ஒப்பந்தம் செய்துகொள்ளும் தகுதியிழந்தவராகக் கொள்ளப்படுகின்றனராதலால் வங்கியில் அவர் கணக்குத் தொடங்க அனுமதி இல்லை.

பித்துற்றவர் அந்நிலை எய்துமுன் அதாவது தெளிந்த மன நிலையுடையவராக இருந்தபோது கணக்குத் தொடங்கியிருப்பாரானால், சட்டப்படி தகுதியிழந்தவராகார்.

இந் நாட்டில், சட்டப்படி வங்கியர் தாம் விரும்பினால் மனக்கோட்டியர் கணக்குத் தொடங்குவதை ஏற்றுக் கொள்ளலாம்; விரும்பாவிடில் தவிர்த்து விடலாம். இந்தியச் சட்டம் மனக்கோட்டியர் கணக்குத் தொடங்குவதை எற்பதில்லை.

### வங்கியர் கடமை

(1) மனநிலை கோட்டியவர் அதாவது பித்தர் ஒப்பந்தம் செய்யும் தகுதியிழந்தவராதலால், அவர் நிலையை நன்கு அறிந்த எந்த வங்கியரும் அவருடன் ஒப்பந்தம் செய்யார். ஆனால் தெளிவான மனநிலையில் கணக்குத் தொடங்கிய ஒருவருக்கு மனப்பிறழ்ச்சி ஏற்பட்டு விடுமானால், பித்துற்றவருடன் செய்யும் ஒப்பந்தம் செல்லாது என்ற சட்டப்படி அவரது கணக்கில் வங்கியர் பற்று வைக்க இயலாது என்பதால் மேற்கண்ட வாடிக்கையரின் மனப்பிறழ்ச்சி பற்றி அறிய வந்தவுடன் அவரது வங்கி நடவடிக்கைகளை, மேற்கொண்டு செயல்படாவண்ணம் தற்காலிகமாக நிறுத்திவிட வேண்டும்.

(2) தனது வாடிக்கையர் மனப்பிறழ்ச்சியுற்றது உண்மையே என்பதை நிறுவுவதற்கான சான்றுறுதி பெற்ற பின்னரே அவரது வங்கிக் கணக்குத் தொடர்பான நடவடிக்கைகளை நிறுத்தி வைக்க வேண்டும்.

(3) வங்கியரது மனக்கோட்டி பற்றி அறியும்வரை அவரது காசோலைகளை மதிப்பது தவறாகாது. ஆனால் வாடிக்கையரின் மனநிலை பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்வதற்கு முன்பே அவரது காசோலைகளை அவமதித்துவிட்டாரானால், தவறான அவமதிப்புச் செய்த குற்றத்திற்காளாவார்.

(4) மனக்கோட்டியருக்காக, நீதிமன்றம் பொறுப்பாளர் ஒருவரை நியமிப்பதுண்டு. வங்கியர் பாதுகாப்பான முறையில் அப்பொறுப்பாளர் வரையும் காசோலைகளை மதிக்கலாம்.

(5) நீதிமன்றம் நியமித்த பொறுப்பாளர் அல்லது காப்பாளர் இவர்களில் ஒருவரிடம் மனக்கோட்டம் கொண்டவரின் கணக்கில் எஞ்சியிருக்கும் தொகையை ஒப்படைத்தல் வங்கியரது வழக்கமாகும்.

## கட்குடியர்

(1) கள்ளுண்டு களித்திருக்கும் ஒருவர் ஒப்பந்தத்தின் உட்பொருளை அறியக்கூடிய ஆற்றல் அற்று அறிவு மயங்கிய நிலையில் இருப்பாராதலால் அவரது ஒப்பந்தம் இந்திய நாட்டுச் சட்டப்படி செல்லாது. ஆங்கிலேய சட்டப்படி குடிகாரர் ஒருவரது ஒப்பந்தம் வங்கியரின் விருப்பு வெறுப்பிற்கேற்ப செயலாக்கம் பெறும் என்பர்.

(2) வாடிக்கையர் ஒருவர் குடிப்பழக்கத்திற்கு அடிமையானவர் என்பதை வங்கியர் அறியாமலிருக்கலாம். ஆனால் வாடிக்கையர் ஒரு காசோலையை வரைந்த பின்னர், கள்ளுண்ட மயக்கத்தில் (போதையில்) அதனை வரைந்ததாகவும், வங்கியர் அதனை அறிவர் என்றும் கூறி அந்த ஒப்பந்தத்தை முறித்துக் கொள்ளலாம். இச்சூழ்நிலையில் வங்கியர் இதற்குப் பொறுப்பேற்க வேண்டிய நிலை ஏற்படும். எனவே வாடிக்கையர் குடிபோதையில் காசோலையைக் கொணர்வாரானால் வங்கியர் தமக்கும் வாடிக்கையருக்கும் அறிமுகமான ஒருவரது முன்னிலையில்தான் அக்காசோலைக்குப் பணம் வழங்க வேண்டும். இவ்வாறு உண்மையை விளம்பக்கூடிய ஒருவர் முன் காசோலைக்குப் பணம் வழங்குவது வங்கியருக்குப் பாதுகாப்புமிக்க செயல் என்பதில் ஐயமில்லை.

## எழுத்தறிவற்றவர்

(1) எழுதவும் படிக்கவும் தெரியாதவரே எழுத்தறிவற்றவர். வங்கிக் கணக்குத் தொடங்க விரும்பும் எழுத்தறிவற்றவர் கையொப்பமிட அறியார் ஆதலால் தனது இடது கைப் பெருவிரல் குறியைக் கையொப்பத்திற்குப் பதிலாகப் பதித்தல் வேண்டும். அவரை நன்கு அறிந்த ஒருவர் இடது கைப்பெருவிரல்

குறிக்கருகில் கையொப்பமிட்டுச் சான்று அளிக்க வேண்டும். விண்ணப்பிப்பவரின் பெயர், முகவரி, மற்றும் அறிமுகம் செய்பவரின் பெயர், வங்கிக் கணக்கு எண் போன்றவையும் விண்ணப்பப் படிவத்தில் இடம்பெற வேண்டும்.

(2) விண்ணப்பம் செய்பவரின் நிதி நிலைமை, கணக்குத் தொடங்குவதற்கான காரணம், போன்றவற்றை வங்கியர் அறிதல் வேண்டும்.

(3) வாடிக்கையரின், அண்மையில் எடுத்த இரு மார்பளவு நிழற் படங்களையும் பெற்று ஒன்றைப் பேரேட்டிலும் மற்றொன்றை செல்லேட்டிலும் ஒட்டுதல் வேண்டும்.

(4) வங்கிக் கணக்கில் இருக்க வேண்டிய குறைந்த அளவு தொகை எவ்வளவு என்பதை வங்கியர் வாடிக்கையருக்குத் தெரிவிக்க வேண்டும்.

(5) வாடிக்கையரின் உடைமைக்குரியவராக நியமிக்கப் பட்டவரின் பெயர் விண்ணப்பப் படிவத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும்.

(6) வாடிக்கையர் ஒவ்வொரு முறையும் பணம் எடுக்கும் பொருட்டு வங்கிக்கு நேரடியாக வரல் அவசியம். அத்துடன் வங்கி அதிகாரி முன்னிலையில் பெருவிரல் குறியிடுதல் தேவை.

## கூட்டு வாணிப நிறுவனம்
## (Partnership Firm)

இந்திய கூட்டு வணிகச் சட்டம் 1932 பிரிவு 4இன்படி, "பலர் ஒருங்கிணைந்து நடத்தும் ஒரு தொழிலை அவர்கள் அனைவரும் இணைந்து நடத்தினாலும் அல்லது அவர்களுக்காக அவர்களில் ஒருவர் நடத்தினாலும் அத்தொழில் மூலம் கிட்டும் இலாபத்தை குறிப்பிட்ட விகிதப்படி அவர்களுக்குள் பிரித்துக் கொள்வதற்க

ஒப்பந்தம் செய்து கொண்ட அவர்களுக்கிடையிலான தொடர்பு நிலையே கூட்டு வாணிபம்" எனப்படும். இவ்வகை நிறுவனங்களோடு வங்கியர் தொடர்பு கொள்ளும்போது, ஒவ்வொரு நிறுவனத்தைப் பற்றியும் மற்றும் அவைகளைக் கட்டுப்படுத்தும் சட்டத்தைப் பற்றியும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். எனவே ஒரு கூட்டாண்மை நிறுவனத்தின் பெயரில் கணக்குத் தொடங்கும்போது கீழ்க்கண்ட முன்னேற்பாடுகளை வங்கியர் மேற்கொள்ளுதல் தேவை :

**கணக்குத் தொடங்குதல்**

பொதுவாக, ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்ட கூட்டாளிகள் சேர்ந்து கணக்குத் தொடங்குவதற்கான விண்ணப்பப் படிவத்தை நிறைவு செய்து அளிக்கும்போது வங்கியர் ஒரு கூட்டாண்மை நிறுவனத்தின் பெயரில் கணக்கைத் தொடங்குவர். இந்திய கூட்டு வணிகச் சட்டம் 1932, 19(2)(b) பிரிவின்படி ஒரு தனிப்பட்ட கூட்டாளியின் பெயரில். அவரது நிறுவனத்தின் சார்பாக வங்கிக் கணக்குத் தொடங்குவதற்கு அனுமதி அளிக்கப்படவில்லை. மேலும் *அலயன்ஸ் பாங்கு எதிராக கீயர்லி* (Alliance Bank Vs Kearly) என்ற வழக்கில், ஒரு கூட்டு நிறுவனத்தின் சார்பாக ஒரு கூட்டாளிக்குத் தன்னுடைய பெயரில் வங்கிக் கணக்குத் தொடங்குவதற்கு அதிகாரமில்லை எனத் தீர்ப்பு வழங்கியுள்ளது. அவ்வாறு, அவர் தன் பெயரிலேயே கணக்குத் தொடங்கினால், அது அவரது தனிக்கணக்காகக் கருதப்படும். மற்ற கூட்டாளிகள் அதற்குப் பொறுப்பாளராகார். எனவே, ஒரு கூட்டு நிறுவனத்தின் பெயரிலேயே கணக்குத் தொடங்க வேண்டும் என்பது நன்கு புலனாகின்றது.

**கூட்டாண்மைப் பத்திரம்**

வங்கிக் கணக்குத் தொடங்குமுன் சான்றளிக்கப்பட்ட கூட்டாண்மைப் பத்திரத்தின் நகல் ஒன்றை வங்கியர் பெற வேண்டும். அதன் மூலம் நிறுவனத்தின் நோக்கம், முதல், கடன்பெறும் அதிகாரம், தொழில் பற்றிய முழு விவரம், அனைத்துக் கூட்டாளிகளின் முகவரி, அவர்களின் அதிகாரங்கள் போன்றவற்றை வங்கியர் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

### பதிவு செய்யப்பட்ட நிறுவனம்

மேலும், நிறுவனம் பதிவு செய்யப்பட்டுள்ளதா என்பதை பதிவுச் சான்றிதழின் நகல் ஒன்றினைப் பெற்று தெரிந்து கொள்ள வேண்டும். பதிவு செய்யப்படாத நிறுவனங்களுடன் வங்கியர் தொடர்பு கொள்வது நன்றன்று. இவ்வகையான நிறுவனங்களின் கூட்டாளிகளை வங்கி நடவடிக்கைகளுக்கு பொறுப்புடையவராக்க இயலாது.

### செயல்முறை ஆணை

செயல்முறை ஆணை இன்றி ஒரு கூட்டாண்மையின் கணக்கினைச் செவ்வனே செயற்படுத்த இயலாது. எனவே, அனைத்துக் கூட்டாளிகளும் இணைந்து கையொப்பமிட்ட செயலுரிமை ஆணை ஒன்றை வங்கியர் பெறுதல் அவசியம். அந்த ஆணை கிழ்க்கண்ட விவரங்களை உள்ளடக்கியுள்ளதாக விளங்க வேண்டும் :-

### (அ) கணக்கைச் செயற்படுத்த அதிகாரம் வழங்கப்பட்ட கூட்டாளி/ கூட்டாளிகள்

நிறுவனத்தின் கணக்கைச் செயற்படுத்த அதிகாரம் வழங்கப்பட்ட கூட்டாளிகளின் பெயர்கள், முகவரி மற்றும் அவர்களின் மாதிரிக் கையொப்பங்கள் ஆகியவை செயலுரிமை ஆணையில் தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். நிறுவனத்தின் நிதி பாதுகாப்பினைக் கருதி, நிறுவனத்தின் கணக்கினை ஒருவருக்கும் மேற்பட்ட கூட்டாளிகள் செயற்படுத்துவது நல்லது. கூட்டாளி ஒருவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தை அகற்றிவிட மற்ற கூட்டாளிகளுக்கு உரிமை உண்டு. இதைப்போன்று, அதிகாரம் வழங்கப்பட்ட கூட்டாளி ஒருவர் வரைந்த காசோலைக்கு, மற்ற எந்த கூட்டாளியும் பணம் செலுத்தத் தடை ஆணை பிறப்பிக்கலாம்.

### (ஆ) வழங்கப்பட்ட அதிகாரத்தின் வரையளவு

ஒரு கூட்டாளிக்கு வழங்கப்பட்ட அதிகார வரம்பினை வங்கியர் நன்கு கவனித்துச் செயற்பட வேண்டும். மாற்றுச்சீட்டு எழுதுவது, ஏற்பது, புறக்குறிப்பு செய்வது, நிறுவனத்தின் சொத்துக்களை அடமானம் வைப்பது, நிறுவனத்தின் கணக்கில் மேல்வரைப்பற்று வைப்பது போன்ற அதிகாரங்கள் அதிகார வரம்புக்குட்பட்டுள்ளனவா? என்பதை வங்கியர் கவனிக்க வேண்டும்.

### கூட்டாளியின் சொந்தக் கணக்கு

பொதுவாக, கூட்டாளி ஒருவர் கூட்டு வணிக நிறுவனம் கணக்கு வைத்துள்ள அதே வங்கியில் தனது சொந்தக் கணக்கையும் தொடங்க வாய்ப்புண்டு. இவ்விரண்டு கணக்குகளும் வெவ்வேறான தன்மையைக் கொண்டுள்ளதால், வங்கியர் கிழ்க்கண்டவற்றைக் கருத்திற் கொள்ள வேண்டும்.

(அ) இரண்டு கணக்குகளையும் இணைக்கவோ அல்லது அவற்றின் மீது பற்றுரிமை மற்றும் ஈடுசெய் உரிமைகளைச் செயல்படுத்தவோ இயலாது.

(ஆ) நிறுவனத்திற்குரிய காசோலையை, மற்ற கூட்டாளிகள் ஒப்புதலின்றி ஒரு கூட்டாளியின் சொந்த கணக்கிற்கு வசூலிக்கக் கூடாது. அவ்வாறு வசூலித்தால் மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 131 அளிக்கும் பாதுகாப்பை வங்கியர் இழக்க நேரிடும்.

(இ) ஆனால், ஒரு கூட்டாளிக்குச் செலுத்தும்படி, அந்த கூட்டாண்மை நிறுவனத்தின் கணக்கின் மீது வரைந்த காசோலையை, வங்கியர் அந்தக் கூட்டாளிக்குக் கண்டிப்பாகச் செலுத்த வேண்டும். ஏனெனில், அவர் ஒரு செலுத்தும் வங்கியராகச் செயல்படுவதால், அந்தக் காசோலைக்கு பணம் மறுக்கப்படுவது ஒரு தவறான அவமதித்தல் என்று கருதப்படும்.

(ஈ) ஒரு கூட்டாளியின் அனுமதியோடு, அவர் சொந்தக் கணக்கில் உள்ள பணத்தை, கூட்டாண்மை நிறுவனத்தின் கணக்கிற்கு மாற்றலாம். ஆனால், நிறுவனத்தின் கணக்கிலிருந்து சொந்தக் கணக்கிற்கு மாற்றவே முடியாது.

### அடமானம் வைப்பது

கூட்டு வணிகச் சட்டம் பிரிவு 19இன்படி, ஒரு நிறுவனத்தின் சொத்தை விற்பதற்கு அல்லது அடமானம் வைப்பதற்கு ஒரு கூட்டாளிக்கு உரிமை அளிக்கப்படவில்லை. அதே சமயம், சொத்து மாற்றுச் சட்டம் பிரிவு 8இன்படி, சொத்தின் மீதான ஒருவரின் உரிமையை, அவர் மற்றவருக்கு மாற்றித் தரலாம். இரு சட்டங்களின் பிரிவுகளையும் சேர்த்து ஆராய்ந்தால், ஒரு நிறுவனத்தின் கடனுக்காக அடமானம் ஏற்படுத்தும்போது, அடமானப் பத்திரத்தில் அனைத்துக் கூட்டாளிகளும் கையொப்பமிட வேண்டும் என்பது நன்கு புலனாகிறது. இல்லையெனில், கூட்டாளிகள் தங்களது பொறுப்பிலிருந்து நழுவிவிடக் கூடும்.

### இளையர் கூட்டாளியானால்

ஒரு கூட்டாண்மை நிறுவனத்தில் இளையர் எவரேனும் கூட்டாளியாக இடம்பெற்றிருந்தால், அவரின் பிறந்த தேதியை கவனமாகக் குறித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், அவர் வயதுரிமை அடைந்த பிறகு, அவரின் பொறுப்பும் மாறுபடும்.

### கூட்டாகவும் மற்றும் தனித்தனியாகவும் பொறுப்பேற்றல்

ஒரு கூட்டாண்மை நிறுவனம் வங்கியரிடமிருந்து கடன் பெறும்போது, ஒவ்வொரு கூட்டாளியிடமிருந்து "கூட்டாகவும் மற்றும் தனித்தனியாகவும்" பொறுப்பேற்க ஒரு வாக்குறுதிச் சீட்டை வங்கியர் பெற்றுக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஒரு சீட்டைப் பெறுவதால் கடனைத் திருப்பித் தராதபோது கூட்டாளிகள் அனைவர் மீதும், அல்லது தனித்தனியாக ஒவ்வொருவர் மீதும் வங்கியர் எளிதாக வழக்குத் தொடரலாம்.

## கூட்டாளியின் விலகல்

கூட்டாண்மை நிறுவனத்திலிருந்து ஒரு கூட்டாளி விலகும் போது, அவர் விலகிய செய்தியை வங்கியருக்கு அறிவித்தல் வேண்டும். அவ்வாறு அறிவிக்காவிடில், அவர் விலகிய நாளுக்குப்பின் அந்த நிறுவனம் பெற்ற கடனுக்கு அவரே பொறுப்பாளி ஆவர்.

ஒரு கூட்டாளி விலகும்போது, நிறுவனத்தின் கணக்கு பற்று காண்பிக்குமேயானால், வங்கியர் அந்த நிறுவனத்தின் கணக்கை இருப்புக் கட்டி முடித்துவிட்டு ஒரு புதிய கணக்கை அந்த நிறுவனத்தின் பெயரில் தொடங்க வேண்டும். இல்லையெனில், மற்ற கூட்டாளிகள் செலுத்திய தொகை பழைய கணக்கிலே வரவு வைக்கப்படும்.

கிளைடோன் விதிப்படி முதலில் செலுத்தப்பட்ட தொகை நிரல் முறைப்படி (வரிசை முறைப்படி) முதலில் ஏற்பட்ட கடனை அடைப்பதற்கு ஒதுக்கீடு செய்யப்படும். எனவே விலகிய அல்லது ஓய்வு பெற்ற கூட்டாளி தனது பொறுப்பிலிருந்து விடுபட்டு விடுவர். அவர் ஓய்வு பெறும்போது நிறுவனக்கணக்கில் உள்ள பற்று, மற்ற கூட்டாளிகள் செலுத்திய தொகைகளினாலே சரிக்கட்டப்படுகிறது. எனவே வங்கியர் நிறுவனத்தின் பழைய கணக்கினை இருப்புக்கட்டி வேறொரு கணக்குத் தொடங்க வேண்டும்.

## கூட்டாளியின் இறப்பு

ஒரு கூட்டாளியின் இறப்புக் காரணமாக அந்த கூட்டாண்மை நிறுவனத்தைக் கலைக்கலாம் அல்லது கலைக்காமலும் இருக்கலாம். நிறுவனம் கலைந்து விடாத சூழ்நிலையில், நிறுவனத்தின் கணக்கு, வரவு இருப்பைக் காண்பித்தால், வங்கியர் அந்தக் கணக்கைத் தொடர்ந்து செயற்படுத்தலாம். அதனைச் செயற்படுத்துவதற்கு ஒரு புதிய செயலுரிமை ஆணையை மற்ற கூட்டாளிகளிடமிருந்து பெறுதல் அவசியம். மேலும் நிறுவனத்தின் கணக்கு வரவு இருப்பைக் காண்பிக்கும்போது, இறந்துபோன கூட்டாளியின்

வாரிசுதாரருக்கு எஞ்சியுள்ள கூட்டாளியரே பொறுப்பு என்று *பேக்ஹவுஸ் எதிராக சார்ல்டன்* (Backhouse Vs Charlton) என்ற வழக்கில் திர்ப்பு வழங்கப் பட்டுள்ளது. எனினும், அந்த நிறுவனத்தின் கணக்கு, பற்று காண்பிக்குமேயானால், அக்கணக்கை முடித்து இருப்புக் கட்டியபின் வேறொரு புதிய கணக்கினை அந்த நிறுவனத்தின் பெயரில் தொடங்க வேண்டும். இல்லையெனில், கிளேடோன் விதிப்படி, இறந்த கூட்டாளிக்கான பொறுப்பு இல்லையென்றாகி விடும்.

**கூட்டாளியின் மனக்கோட்டி நிலை மற்றும் நொடிப்பு**

கூட்டாளியின் நொடிப்பு சட்டப்படி நிறுவனத்தைக் கலைப்பதற்கு ஏதுவாகும். அவ்வாறே, ஒரு கூட்டாளியின் மனக்கோட்டி நிலை காரணமாகவும் நிறுவனத்தைக் கலைத்துவிடலாம். இச்சூழ்நிலைகளில், நிறுவனத்தின் கணக்கு வரவு இருப்பைக் காண்பித்தால், அந்த நிறுவனத்தைக் கலைக்கும் பொருட்டு வங்கியர் அக்கணக்கினைத் தொடர்ந்து செயற்படுத்தலாம். எனினும், அந்தத் தொகையில் நொடித்த கூட்டாளியின் பங்கினை, பிற கூட்டாளிகள் அவரது பொறுப்புரிமையரிடம் ஒப்படைக்க வேண்டும். நிறுவனத்தின் கணக்கு பற்று இருப்பைக் காண்பித்தால், நொடித்தவரின் பொறுப்பினை நிர்ணயிக்கும் பொருட்டு வங்கியர் அந்த நிறுவனத்தின் கணக்கை முடித்து இருப்புக் கட்டி விடவேண்டும். மேலும், நொடித்த கூட்டாளி ஒருவர் வரைந்துள்ள காசோலையை வங்கியர் ஏற்றுக் கொள்ளக்கூடாது. கூட்டாளி ஒருவர் மனநோயாளியாகிவிட்டாலும் வங்கியர் மேற்கண்டவாறே செயற்பட வேண்டும்.

## கூட்டுப் பங்கு நிறுமம்

கூட்டுப் பங்கு நிறுமம் என்பது சட்டத்தால் உருவாக்கப்படும் ஓர் அமைப்பு. எனினும் செயற்கையாக உருவாக்கப்படும் ஒரு தனி மனிதனை ஒத்தது. தனியொரு மனிதனது இயக்கத்தைப் போன்றே இதன் இயக்கமும் அமையும். நிறுமம், நிறும உறுப்பினர்களிலிருந்து தனித்து இயங்கக் கூடியதாகக்

கருதப்படுவதால் ஒப்பந்தம் செய்துகொள்ளும் தகுதியைப் பெறுகிறது. நிறுமம் அதன் தோற்றம் முதல் முடிவு வரை சட்டத்திற்கு ஆட்பட்டது. ஆனால் மக்களாகிய முகவர்களால் செயற்படுவது. மேற்கண்ட இயல்புகளால் நிறுமம், மாறுபட்ட தன்மையுடன் கூடிய சிறப்பு வாடிக்கையராகின்றது. எனவே வங்கியர் கூட்டுப்பங்கு நிறுமத்துடன் தொடர்பு கொள்ளுங்கால் தக்க முன்னேற்பாடுகளை மேற்கொள்ள வேண்டியவராகின்றார்.

**வங்கியர் மேற்கொள்ள வேண்டிய முன்னேற்பாடுகள்**

(1) ஒரு நிறுமத்தின் பெயரில் கணக்குத் தொடங்குமுன் அந்நிறுமம் சட்டப்படி உருவாக்கம் பெற்றதுதானா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். நிறுமம் நிறுவப்பட்டதற்கான சான்றாகிய, பதிவாளர்களால் அளிக்கப்படும் கூட்டுருவாக்கச் சான்றிதழின் துணைகொண்டு இதனை உறுதி செய்து கொள்ளலாம்.

(2) அடுத்து, அந்நிறுமத்தின் அமைப்பு முறையேடு (Articles of Association), சங்க நடைமுறை விதி (Memorandum of Association) போன்றவற்றின் படிகளை வங்கியர் கேட்டுப் பெற்று அவற்றை ஆழ்ந்து படித்தல் தேவை. நிறுமத்தின் அமைப்பு முறையேடு வாயிலாக நிறுமத்தின் பெயர், பதிவு அலுவலகம், அதன் அமைவிடம், நிறுமத்தின் நோக்கங்கள், மூலமுதல், உறுப்பினர்களின் பொறுப்பு போன்ற செய்திகளை அறிந்து கொள்ளலாம். மன்ற நடைமுறை விதிகள் என்பது நிறுமத்தின் அகநிர்வாகம் பற்றிய ஒழுங்கு விதிகள் மற்றும் நடைமுறை விதிகள் இவற்றை விளக்கும் ஆவணமாம். இதன் மூலம் நிறுமத்தின் இயக்குநர், செயலர், அலுவலர் ஆகியோர்தம் அதிகாரங்கள், கடமைகள், பொறுப்புகள் போன்றவற்றை வங்கியர் தெளிவாகத் தெரிந்து கொள்ளக்கூடும்.

(3) 'வரையறுக்கப்பட்ட பொது நிறுமம்' தொழில் தொடங்குவதற்கான சான்றிதழ் பெறுவது வழக்கம். அத்தொழில் தொடக்கச் சான்றிதழின்' படி ஒன்றினையும் வங்கியர் பெறல் தேவை. மேற்கண்ட ஆவணங்கள் மற்றும் அவற்றின் பொருளடக்கத்தின் மீது வங்கியருக்கு ஏதேனும் ஐயம் ஏற்படின் கூட்டு நிறுமங்களின் பதிவாளர்கள் மூலம் தெளிவுபடுத்திக் கொள்ளல் தேவை.

(4) புதிதாகத் தொடங்கப்பட்ட நிறுமமாக இருக்குமானால் அதன் இயக்குநர்களின் பெயர்கள் ஆவணத்தில் பதிவு பெற்றுள்ளதா என்பதை நுணுகி நோக்கி அறிதல் வேண்டும்.

(5) வளர்ச்சி பெற்ற நிறுமமாயின், அதன் தற்போதைய இருப்புநிலைக் குறிப்பு, இலாப நட்டக் கணக்கு இவற்றின் படிகளைக் கேட்டுப் பெற்று கவனமாகப் படித்தல் தேவை. அந்நிறுமத்தின் நிதி நிலையும் வளர்ச்சி வேகமும் வங்கியருக்கு நிறைவளிக்குமானால் மட்டுமே அந்நிறுமத்தின் பெயரில் கணக்குத் தொடங்க அனுமதித்தல் நலம்.

### இயக்குநர் குழுவின் தீர்மானம்

நிறுமத்தின் பெயரில் கணக்குத் தொடங்க வேண்டும் என முடிவெடுத்தல் இயக்குநர் குழுவின் பணியாகும். அவ்வாறு கணக்குத் தொடங்கத் தீர்மானித்த பின்னர், தாம் எந்த வங்கியில் கணக்குத் தொடங்க முடிவெடுத்துள்ளனரோ அந்த வங்கிக்குத் தமது குழுவின் தீர்மானங்கள் அடங்கிய தீர்மான நகலை செயலர் மூலம் அளித்தல் வேண்டும். நிறைவு செய்யப்பட்ட விண்ணப்பப் படிவத்துடன் தீர்மான நகலையும் பெறுவது வங்கியருக்குப் பாதுகாப்பு தரக்கூடிய செயலாம். தீர்மான நகலினைப் பெற்ற வங்கியர் அதில் இயக்குநர் குழுவின் தலைவர் மற்றும் செயலர் ஆகியோர் கையொப்பமிட்டுள்ளனரா எனக் கூர்ந்து நோக்கல் தேவை.

**செயலுரிமை ஆணை**

(1) நிறும இயக்குநர் குழுவின் முடிவுகள் அடங்கிய தீர்மான நகலுடன் அவர்தம் கணக்கினைச் செயற்படுத்த செயலுரிமை ஆணையையும் பெற வேண்டியது வங்கியர் கடமை. நிறுமத்தின் கணக்கைச் செயற்படுத்த அதிகாரம் பெற்றோரின் பெயர்களையும் மாதிரிக் கையொப்பங்களையும் செயலுரிமை ஆணையில் பொறித்திருப்பர். காசோலையில் உள்ள கையொப்பம் நிறுமத்திற்காக என்பது தெளிவாக இல்லாவிடில் நிறுமம் காசோலைக்குப் பொறுப்பேற்காது; இயக்குநர்கள் தாமே பொறுப்பேற்க வேண்டிய நிலை ஏற்படும் என *லாண்டஸ் எதிராக மார்கஸ்* (Landes Vs Marcus) என்னும் வழக்கில் முடிவு செய்யப்பட்டது.

(2) செயலுரிமை ஆணையில் வங்கிக் கணக்கினைச் செயலாக்கும் அதிகாரம் கொண்டோருக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமை இயல்பு, அதிகார எல்லை போன்றவற்றை செயலுரிமை ஆணையில் தெளிவாகச் சுட்டியிருத்தல் தேவை. செயலுரிமை பெற்றவருக்கு முன்பணம் அளித்தல், பிணையம் அளித்தல் இவற்றிற்கான உரிமைகள் வழங்கப்பட்டுள்ளனவா என்பதைத் தெளிவாகத் தெரிந்து செயற்படல் இன்றியமையாததாம்.

(3) செயலுரிமை ஆணையில் ஏதேனும் மாற்றங்கள் நிகழ்ந்திருப்பின், புதிய தீர்மானம் நிறைவேற்றப் பட்டதற்கான 'தீர்மான நகலை' வங்கியரிடம் அளிக்க வேண்டும்.

(4) நிறும இயக்குநர் குழுவினர் மாறினாலும் செயலராகச் செயற்படுபவர் மாறினாலும் உடனுக்குடன் அதனை வங்கியருக்கு அறிவித்துவிட வேண்டும். அவ்வாறு செயலுரிமை ஆணை மூலம் அறிவிக்கத் தவறினால் அம்மாற்றத்தின் விளைவுகட்கு வங்கியர் பொறுப்பாகார்.

**கடன் பெறும் அதிகாரம்**

கவனம் மிக்க வங்கியர் ஒரு நிறுமத்திற்குக் கடன் வழங்கும் முன்னர் அந்நிறுமத்தின் கடன்பெறும் அதிகாரங்கள் குறித்து அறிந்துகொள்ள முற்படுவர். ஒவ்வொரு நிறுமமும் கடன்பெறவும் தனது உடைமைகளை அடகு வைப்பதற்கும் மறைமுக உரிமை பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. அந்நிறுமத்தின் இயக்குநர் குழுவினரே கடன்பெறும் அதிகாரத்தைச் செயற்படுத்தும் ஆற்றலினராவார். நிறுமத்தின் சங்க நடைமுறை விதியில் (Articles of Association) அந்நிறுமம் மற்றும் அதன் இயக்குநர்களுக்குரிய அதிகார வரம்பு குறிக்கப் பெற்றிருக்கும். நிறும இயக்குநர்கள் தமக்கு அளிக்கப்பட்டுள்ள கடன்பெறு அதிகார வரம்பிற்கும் அப்பாற்பட்ட அளவில் மிகுதியான கடனைப் பெறுதல் 'வரம்பு மீறிய செயலாகக்' கருதப்படும். அச்செயல் ஏற்றுக் கொள்ளப்படுதலும் தள்ளப்படுதலும் இயக்குநர் குழுவின் முடிவைப் பொறுத்தது. நிறுமம் இவ்வரம்பு மீறிய செயலை ஏற்றுக் கொள்ளாவிடில் இதன் விளைவுகளுக்குப் பொறுப்பேற்காது. எனவே நிறுமம் கடன் கேட்டு விண்ணப்பிக்கும்பொழுதே, கடன் தொகை, குறித்த வரம்புக்குள் அமைந்துள்ளது என்பதற்கான சான்றிதழையும், கடன் பெறுவதற்கு உரிமை வழங்கும் தீர்மான நகலையும் இயக்குநரிடமிருந்து வங்கியர் பெறல் வேண்டும்.

*ஜான்சன் ஃபாரின் பேட்டன்ட் லிமிடெட்* (Johnson Foreign Patent Ltd) சார்பான வழக்கில், சங்க அமைப்பு விதியில் கடன் தொகை முன்னுரிமை முதல் தொகையை விடக் கூடுதலாக இருக்கக் கூடாதென வலியுறுத்தப்பட்டிருந்தது. ஆனால் நிறுமம் எந்தவிதமான முன்னுரிமைப் பங்கு முதலும் வழங்கவில்லை. அவ்வாறு, முன்னுரிமைப் பங்கு வழங்காதவரை, கடன் பெறுவதற்கு வரம்பு தேவையில்லை என மேற்கண்ட வழக்கில் முடிவாயிற்று.

நிறுவனச் சட்டம் 1956 இன்படி ஒரு நிறுமம் பெற விழையும் கடன்தொகை, அந்நிறுமத்தின் முதல் மற்றும் பொதுக் காப்புத்தொகை இவற்றின் கூட்டுத் தொகையைக் காட்டிலும்

மிகுதியாக இருத்தல் கூடாது. மேற்கண்டவாறு முதல் மற்றும் பொதுக்காப்புத்தொகை இவற்றின் கூட்டுத் தொகை வரம்பே முடிந்த முடிவான வரம்பாகும். எனவே ஒரு நிறுமத்தினர் கடன் வாங்குவதற்காக வங்கியரை அணுகும்போது தாம் கடன் பெற விரும்பும் தொகையானது நிறும கடன்பெறு வரம்பிற்கு உட்பட்டதே என்பதை உறுதிப்படுத்த வேண்டும். கடன், நிறுமம் வகுத்த வரம்புக்குட்பட்டது என்பதற்குரிய சான்றிதழ் மற்றும் உரிமை வழங்கு தீர்மான நகல் ஆகியவற்றை இயக்குநரிடமிருந்து வங்கியர் பெறுவது அவர் தமக்குப் பாதுகாப்பளிக்கும்.

### கடன் பெறுவதின் நோக்கம்

நிறுமத்தின் தொழிலுக்கென வாங்கப்பட்ட கடனை, நிறும அமைப்பு ஏடு அனுமதிக்காத வேறு ஏதேனும் ஒரு நோக்கத்திற்காகப் பயன்படுத்திவிட்ட நிலையில் வங்கியர் அதனை அறியாமலிருந்தால் அவர் அதற்குப் பொறுப்பாளியாகார். இதனை வங்கியர் அறிந்திருந்தால் நிறுமக் கணக்குச் செயல்பாட்டினை உடனே நிறுத்திவிட வேண்டும். இவ்வாறு நிறும முறையேட்டினை மீறிச் செயற்படும் சூழல்களில் நிறுமம் பொறுப்பேற்காது. எனவே வங்கியர் கடன் வழங்கும்போது, அக்கடன், அமைப்பு முறையேட்டினது நோக்கத்திற்கு உட்பட்டதுதானா என நன்கு சோதித்தல் நலம்.

### நிறும உள் நிர்வாகம்

நிறுமம் சிறப்பாக இயங்குவதற்காக நிறுமத்திற்குள் சில நிர்வாக விதிகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. அத்தகைய உள் நிர்வாக விதிகள் பற்றி சங்க நடைமுறை விதியில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கும். எனவே, சங்க நடைமுறை விதிப்படி நிறுமம் இயங்குகிறதென்ற நம்பிக்கையுடன் வங்கியர் உள்நிர்வாக விதிகள் பற்றிக் கவலைப்படாமல் கடன் வழங்கலாம்.

### பற்றுப் பொறுப்பு பதிவு செய்தல்

நிறுவனச் சட்டம் 1956 பிரிவு 125இன்படி வங்கியர் ஒரு கடனுக்காகப் பெற்ற பிணையப் பொருளை அதனைப் பெற்ற

நாளிலிருந்து முப்பது நாட்களுக்குள் நிறுமப் பதிவாளரிடம் பதிவு செய்துவிட வேண்டும். இல்லையெனில் அதே பொருளை இன்னொருவர் குறிப்பிட்ட வங்கியருக்குப் பின்னர் பிணையமாகப் பெற்றும் அவர்களுக்கு முன்பே பதிவும் செய்துவிட்டால், முதலாவதாகப் பதிவு செய்தவருக்கே முன்னுரிமை கிடைக்கும்.

*இந்திய பாரத வங்கி எதிராக ஹரியானா இரப்பர் இண்டஸ்ட்ரீஸ் அன்டு அதர்ஸ்* (State Bank of India Vs Haryana Rubber Industries & others) வழக்கில், பிணையப் பொருளைப் பெற்ற முப்பது நாட்களுக்குள் அறிவித்தல் மட்டுமே வங்கியர் கடமை; பதிவு செய்வது பதிவாளர் கடமை என்று முடிவு கூறினர்.

**இயக்குநரின் சொந்தக் கணக்கும் நிறுமத்தின் கணக்கும்**

நிறுமம் கணக்கு வைத்திருக்கும் வங்கியிலேயே அதன் இயக்குநர் தனது சொந்தக் கணக்கினையும் வைத்திருப்பாரானால் அவரது கணக்கினைக் கையாளுவதில் வங்கியர் மிகுந்த கவனம் செலுத்துதல் தேவை. நிறுமம் - இயக்குநர் இவர்கள் இருவரது கணக்குகளிலும் குழப்பம் நேரிடாது தனித்தனியாகச் செயலாக்கல் வேண்டும்.

நிறுமத்திற்கான காசோலைகளை இயக்குநரது சொந்தக் கணக்கில் வசூல் செய்து விடக் கூடாது. அவ்வாறு ஏதேனும் தவறு நிகழ்ந்துவிடின், நிறுமத்தின் பணத்தை இயக்குநரின் பணமாக மாற்றிய குற்றத்திற்கு வங்கியர் ஆளாகக் கூடும். இந்நிலையில் ஏற்படும் நிறும இழப்புகளுக்கு வங்கியரே பொறுப்பேற்க நேரும். மேலும் மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 131இன் படியான பாதுகாப்பு உரிமையையும் இழப்பர். எனவே இயக்குநர் பெயரிலான காசோலைகளைக் கருத்தூன்றி கவனித்தல் கவலையைத் தவிர்க்கும்.

**பழைய நிறுமம்**

முன்னரே உருவாகிய பழைய நிறுமம் ஒன்று கணக்குத் தொடங்கும்படி விண்ணப்பித்திருந்தால், அந்நிறுமத்தின் தகுந்த

உறுதிச்சான்றுடன் கூடிய முந்தைய ஆண்டறிக்கை மற்றும் கணக்குப் பட்டியல் போன்றவற்றைக் கேட்டுப் பெறல் வேண்டும். அவற்றின் மூலம் அந்நிறுமத்தின் நடப்பு நிதி நிலவரம் மற்றும் வளர்ச்சி நிலையை அறிந்து கொள்வதுடன் அதன் பொருள் ஈட்டும் திறனையும் வங்கியர் அறிந்து கொள்வது எளிது. நிறுமத்தின் நிதி நிலைமை மிகச் சிறப்பாக, வங்கியருக்கு நிறைவு தருவதாக அமையுமானால் அந்நிறுமத்தின் பெயரில் கணக்குத் தொடங்கவோ, அதன் தேவைகளை எதிர்கொள்ளவோ தயங்கத் தேவையில்லை. இவ்வாறு வங்கியர் தமது நிலையைப் பாதுகாத்துக் கொள்ள முன்னேற்பாடுகள் செய்வது விரும்பத்தக்கது.

### நிறுமக் கலைப்பு

நிறுமம், நிறும உறுப்பினர்கள் அல்லது கடனீந்தோரால் கலைவதுண்டு. மற்றும் நீதிமன்றத்தின் ஆணை மூலம், வற்புறுத்தலுக்கு உள்ளாகிக் கலைதலும் உண்டு. நிறுமக் கலைப்புக்கான செயல்கள் தொடங்கும்போதே அதன் இயக்குநர்கள் மற்றும் அதிகாரிகளின் அதிகாரங்கள் தாமே ஆற்றல் இழப்பது இயல்பு. நிறுமக் கலைப்பு எவ்வாறு நிகழ்ந்தாலும் அதன் கலைப்பாளருக்கு நிறுமத்தின் கணக்கைச் செயற்படுத்தும் உரிமை உண்டு. எனவே, அவரே காசோலைகளுக்குப் பொறுப்பேற்பர். ஆகவே, இயக்குநர்களால் வரையப்படும் காசோலைகளை மதித்தல் கூடாது. நிறுமக் கலைப்பிற்கான ஏற்பாடுகள் பற்றிய செய்தியை அறிந்தவுடனேயே வங்கியர் நிறுமம் தொடர்பான கணக்குகளை செயற்படுத்துவதை நிறுத்திவிட வேண்டும். அதன் பின்னர் நிறுமக் கலைப்பாளரின் கருத்துரைகளுக்கேற்பவே செயற்பட வேண்டும்.

## சங்கங்கள், மன்றங்கள் மற்றும் வியாபார நோக்கமற்ற இயக்கங்கள்

சங்கங்கள், மன்றங்கள், இயக்கங்கள் போன்ற அமைப்புகள் கணக்குத் தொடங்கும் நோக்குடன் வங்கியரை அணுகும்போது, வங்கியர் முதற்கண், மேற்கண்ட அமைப்புகள் சட்டப்படி பதிவு

பெற்றவையா என்பதைத் தெரிந்து கொள்வது வேண்டற்பாலது. பதிவு பெறாதவையாக இருப்பின் அவற்றின் அனைத்து உறுப்பினர்களையும் வங்கியின் செயல் நிகழ்வுகளுக்குப் பொறுப்புடையோராக்குதல் இயலாதவொன்றாம். பதிவு செய்யப்பட்ட அமைப்பாக இருப்பின் அந்த அமைப்பின் பெயரில் துணிந்து கணக்குத் தொடங்கலாம்.

நடைமுறையில் பெரும்பாலான அமைப்புகள் சட்ட முறைப்படி பதிவு செய்யப்படாதவையாகவே உள்ளன. இவற்றின் மீது வழக்குத் தொடர இயலாது. இவற்றின் அதிகாரிகளும் பொறுப்பேற்க இயலாது. எனவே பெரும்பாலான வங்கியினர் குறிப்பிட்ட ஒருவரின் பெயரில் கணக்குத் தொடங்கி அக்கணக்கினைக் குறிப்பிட்ட அமைப்பிற்குரியதாகக் குறித்துக் கொள்வர். 'கிருஷ்ணமூர்த்தி - நெல்லை கிரிக்கெட் மன்றக் கணக்கு' என்ற பெயரில் கணக்கிருக்குமானால், கிருஷ்ணமூர்த்தி என்பவர் அம்மன்றத்தின் கடனுக்கு பொறுப்பேற்க வேண்டியவரராவர். இவ்வாறான சூழல்களில் வங்கியர் பெருஞ்செல்வந்தர் ஒருவரிடம் பொறுப்புறுதி பெற்றுக்கொள்வது பாதுகாப்பான நெறியாம்.

### செயலுரிமை ஆணையும் தீர்மானமும் (Mandate and Resolution)

மேற்கண்டவாறு சில முன்னேற்பாடுகளைச் செய்தபின் வங்கியர், இயக்கம், சங்கம் போன்ற அமைப்புகளிடமிருந்து செயலுரிமை ஆணையைப் பெறவேண்டும். குறிப்பிட்ட ஓர் அமைப்பு, குறிப்பிட்ட வங்கியைத் தனது கணக்கு வைப்பதற்குரிய வங்கியாகத் தேர்ந்தெடுத்ததை உறுதிப்படுத்தும், தீர்மான நகல் ஒன்றையும் செயலுரிமை ஆணையுடன் வங்கியர் பெறல் வேண்டும். கணக்கைச் செயற்படுத்தக்கூடிய அதிகாரம் பெற்ற அதிகாரிகளின் அதிகாரங்கள் குறித்து அதில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்க வேண்டும். அத்துடன் செயலாக்க அதிகாரம் பெற்ற அதிகாரிகளின் மாதிரிக் கையொப்பமும் இருத்தல் தேவை. அத்தீர்மான நகலில் குறிப்பிட்ட அமைப்பின் தலைவர், செயலர் ஆகியோர் கையொப்பமிட்டிருத்தல் தேவை.

### மன்ற விதிகள்

மன்றம், சங்கம் போன்ற இவ்வமைப்புகளின் விதிகள் அடங்கிய படிவம் ஒன்றையும் வங்கியர் பெற்று கோப்பில் பாதுகாப்பாக வைத்துக் கொள்ளுதல் பின்னர் ஒப்பு நோக்கிச் செயற்பட உதவும்.

### அதிகாரிகள் மாறுதல்

மேற்கண்ட அமைப்புகளின் அதிகாரிகள் – குறிப்பாகக் காசோலையை இயக்க அதிகாரம் பெற்ற அதிகாரி மாறினால் உடனே மாற்றம் நிகழ்ந்ததை உறுதிப்படுத்தும் தீர்மான நகல் ஒன்றை புதிய அதிகாரியின் மாதிரிக் கையொப்பத்துடன் பெறல் வேண்டும்.

### கடன் பெறல்

மேற்கண்ட அமைப்புகளுக்குக் கடன்பெறும் தகுதி இல்லையெனினும் குறிப்பிட்ட விதிமுறைகளுக்கு உட்பட்டு கடன்பெறும் நிலை இன்று பரவலாகக் காணப்படுகிறது. குறிப்பிட்ட அமைப்பின் பொதுக்குழுவினரின் ஒப்புதல் பெற்றபின் கடன்பெறல் கூடும். இத்தகையோர் கடன்பெற வங்கியரை அணுகுங்கால் வங்கியர், 'கடன்பெறு ஒப்புதல் தீர்மான நகலை' அவரிடம் கேட்டுப் பெறல் வேண்டும்.

### வங்கியருக்குப் பாதுகாப்பு

வங்கியர், குறிப்பிட்ட அமைப்புகளுக்காகக் கடன் வழங்கும்போது, பெருஞ்செல்வர் ஒருவரிடம் பொறுப்புறுதி பெறுதல் நன்று. அல்லது அமைப்பின் உடைமைகளைப் பிணையமாகக் கொள்ளலும் ஏற்புடைய செயலாகும்.

### மன்றத்தின் கணக்கும் சொந்தக் கணக்கும்

மன்றத்தின் கணக்கும் அதனைச் செயற்படுத்தும் அதிகாரம்

பெற்றவரின் சொந்தக் கணக்கும் ஒரே வங்கியில் இருக்குமானால்:

(அ) இரு கணக்குகளையும் இணைத்தல் கூடாது.

(ஆ) அவற்றின் மீது பற்றுரிமையும் ஈடுசெய் உரிமையும் கிடையாது.

(இ) மன்றத்தின் பெயரில் வந்த காசோலையை, அக்கணக்கினைச் செயற்படுத்துபவரின் சொந்தக் கணக்கில் வசூலிக்கக் கூடாது.

## நிறைவேற்றாளர் (Executor) மற்றும் பொறுப்புரிமையாளர் (Trustee)

இறந்துவிட்ட ஒருவரது உயில் அல்லது விருப்பாவணம் இவற்றை நிறைவேற்றுவதற்காக நியமிக்கப்பட்டிருப்பவரே நிறைவேற்றாளர் எனப்படுவார். இவ்வாறே, இறந்து போன ஒருவரின் சொத்துக்களை அவரது உயிலின் அடிப்படையில் அல்லது பொறுப்புரிமை ஆவணத்தின் அடிப்படையில் பாதுகாக்கும் பொருட்டு நியமிக்கப்பட்டிருப்பவரே பொறுப்புரிமையாளர் என அழைக்கப்படுவார். சில சமயங்களில் ஒருவருக்கு மேற்பட்ட நிறைவேற்றாளர்களோ அல்லது பொறுப்புரிமையர்களோ நியமிக்கப்படலாம். அவர்கள் தங்களது பெயரில் கணக்குத் தொடங்குவதற்காக வங்கியரை அணுகலாம். இவர்கள் பெயரில் கணக்குத் தொடங்குவதற்கு முன் கீழ்க்கண்ட முன்னெச்சரிக்கைகளை வங்கியர் மேற்கொள்ள வேண்டும் :-

### (1) விருப்பாவணம் மற்றும் பொறுப்புரிமை ஆவணத்தின் நகல்கள்

சூழ்நிலைக்கேற்ற வண்ணம் வங்கியர் விருப்பாவணத்தின் நகலையோ அல்லது சான்றளிக்கப்பட்ட பொறுப்புரிமை ஆவணத்தின் நகலையோ பெற்றுக் கொள்ளல் தேவை. அவர்தம் பெயர்கள், அதிகாரங்கள், கடமைகள் போன்றவற்றை ஆவணத்தின் மூலம் அறிந்து கொள்ள வேண்டும். மேலும் அன்னார் முறைப்படி நியமனம் பெற்றவரா என்பதையும் அந்த ஆவணத்தின் வாயிலாக அறிந்து கொள்ள இயலும்.

**(2) கூட்டு நிறைவேற்றாளர்கள் மற்றும் கூட்டு பொறுப்புரிமையர்கள்**

சில சூழ்நிலைகளில் ஒருவருக்கு மேற்பட்ட நிறைவேற்றாளர்களோ அல்லது பொறுப்புரிமையர்களோ நியமிக்கப்படலாம். இவ்வாறான சூழ்நிலையில், வங்கியர் மிகவும் கவனத்துடன் செயல்பட வேண்டும்.

(அ) மேற்கண்டோர் தம் அதிகார வரம்பு பற்றி தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

(ஆ) கூட்டுக்கணக்கினைச் செயற்படுத்த வேண்டிய முறை செயலுரிமை ஆணையில் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளதா என நோக்கல் தேவை.

(இ) அவ்வாறு குறிக்கப்பட்டிராத நிலையில், ஒரு நிறைவேற்றாளர் மற்றவரின் சார்பாகக் கூட்டுக்கணக்கினைச் செயற்படுத்தலாம். ஆனால், கூட்டுப் பொறுப்புரிமையர்களைப் பொறுத்தவரையில், ஒருவர் சார்பாக மற்றொருவர் கணக்கினைச் செயற்படுத்த முடியாது. எனவே, அனைவரும் சேர்ந்து கணக்கினைச் செயற்படுத்தவேண்டும். காசோலையிலும் அனைவரும் கையொப்பமிடல் வேண்டும். நிறைவேற்றாளர்களில் எவரேனும் இறந்தாலோ அல்லது நொடித்த நிலையை அடைந்தாலோ, வங்கியர் எஞ்சியரை கணக்கினை செயற்படுத்த அனுமதி அளிக்கலாம். ஆனால், பொறுப்பாளர்களில் எவரேனும் இறந்தாலோ அல்லது நொடித்த நிலை அடைந்தாலோ, மற்ற நிறைவேற்றாளர்களுக்கு அக்கணக்கினைச் செயற்படுத்துவதற்கு அதிகாரம் கிடையாது என்பது பொதுவிதி. ஆதலால், வங்கியர், பொறுப்புரிமைக் கணக்கை நிறுத்தி விட வேண்டும்.

**(3) செயலுரிமை ஆணையும் மாதிரிக் கையொப்பமும்**

மேற்கூறிய கூட்டுக் கணக்குத் தொடங்கும்போது வங்கியர் தெளிவான செயலுரிமை ஆணையைப் பெறவேண்டும். மேலும்

அக்கணக்கைச் செயற்படுத்த அதிகாரம் பெற்றுள்ளவர்களின் மாதிரிக் கையொப்பத்தையும் பெற வேண்டும்.

(4) கடன் வாங்குவதற்கான அதிகாரம்

நிறைவேற்றாளருக்கும், பொறுப்புரிமையாளருக்கும் கடன் வாங்குவதற்கு மறைமுகமான அதிகாரம் கிடையாது. எனினும், இறந்தவரின் கடனைத் திர்ப்பதற்காக அவர்களுக்குக் கடன் வாங்கும் அதிகாரம் அளிக்கப்பட்டால், இறந்தவரின் சொத்துக்களை அடமானமாக வங்கியர் ஏற்றுக் கொள்ள வேண்டும். பொதுவாக இச்சொத்துக்கள் மீது இறந்தவரது கடனீந்தோருக்கு முதல் உரிமை உண்டு என்பதை வங்கியர் கருத்திற் கொள்ளுதல் வேண்டும். எனவே தனது நலனைக் கருதி, நிறைவேற்றாளரின் சொந்தச் சொத்துக்களையும் பிணையமாக ஏற்பது நல்லது. எந்தக் காரணத்தை முன்னிட்டும், நிறைவேற்றாளர் அல்லது பொறுப்புரிமையாளர் தமது சொந்தத் தேவைக்காகக் கடன் வாங்கும்போது, இறந்தவரின் சொத்துக்களை அடமானமாக வைக்கக்கூடாது. வங்கியர் ஏற்றுக் கொள்ளவும் கூடாது.

(5) சொந்தக் கணக்கும் பொறுப்புரிமை கணக்கும்

பொறுப்புரிமையாளர் அல்லது நிறைவேற்றாளர் கணக்கும், பொறுப்புரிமைக் கணக்கும் ஒரே வங்கியில் இருக்குமாயின் :-

(அ) அவ்விரு கணக்குகளையும் இணைத்தல் கூடாது.

(ஆ) அவற்றின் மீது பற்றுரிமையும், ஈடுசெய் உரிமையையும் செலுத்த இயலாது.

(இ) பொறுப்புரிமையின் பெயரில் வந்த காசோலையை, அக்கணக்கினைச் செயற்படுத்தும் பொறுப்புரிமையர் கணக்கில் வசூலிக்கக் கூடாது. அவ்வாறு வசூலித்தால், வங்கியர் தமக்கு மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 131இன்படி அளிக்கப்பட்ட சட்டமுறைப் பாதுகாப்பை இழக்க நேரிடும்.

*ஓ.ஆர்.எம். எதிராக நாகப்பச் செட்டியார்* (O.R.M. Vs Nagappa Chettiar) என்ற வழக்கில் ஒரு பொறுப்புரிமைக் கணக்கிலிருந்து அதனைச் செயற்படுத்தும் பொறுப்புரிமையரின் அதிகப் பற்று காண்பிக்கும் கணக்கிற்கு பணத்தை மாற்றியது பெருந்தவறு என்றும் அதற்கு வங்கியர் பொறுப்பேற்க வேண்டும் எனவும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**(6) பொறுப்புரிமை முறிவு (Breach of Trust)**

பொறுப்புரிமைக் கணக்கில் உள்ள தொகையை அதனால் பயன்பெறுநரின் நலனுக்காகவே பயன்படுத்த வேண்டும். பொறுப்புரிமையர் தனது சொந்த நலனுக்காகப் பயன்படுத்தினால் அதனைப் 'பொறுப்புரிமை முறிவு' என அழைப்பர். இஃது சட்டப்படி ஒரு பெருந்தவறாகும். ஒரு பொறுப்புரிமை அமைப்பின் கணக்கில் உள்ள தொகையை, பயன்பெறுநருக்கல்லாமல், பொறுப்புரிமையாளர் தனது சொந்தத் தேவைக்காகப் பயன்படுத்தும் பொருட்டு, காசோலை வரைந்தால், அதனை வங்கியர் அவமதித்தல் ஏற்றுக்கொள்ளத்தக்கது என *காரி எதிராக ஜான்ஸ்டன்* (Gary Vs Johnston) என்ற வழக்கில் முடிவு எடுக்கப்பட்டது.

**(7) குறிப்பாகக் காட்டுதல்**

மேற்கண்ட கணக்குகளை எளிதாகக் கண்டுகொள்ளும் வண்ணம், அக்கணக்கின், தலைப்பில் 'பொறுப்புரிமை கணக்கு' என்று தெளிவாகக் குறியிட்டுக் காண்பித்தல் நல்லது. இக்குறி, பொறுப்புரிமை முறிவையும் தடைசெய்யும் கருவியாக அமையும்.

**(8) அதிகாரத்தை மற்றவருக்கு அளித்தல்**

பொறுப்புரிமையரும், நிறைவேற்றாளர்களும் தங்களது அதிகாரத்தை வேற்றவருக்கு அளிக்க இயலாது. நிறைவேற்றாளர்கள் தங்கள் அதிகாரத்தை தங்களில் ஒருவருக்கு அளிக்கலாம். ஆனால், பொறுப்புரிமையர் அவ்வாறு செய்ய இயலாது. எனவே அதிகாரத்தை பொறுப்புரிமையர் வேற்றவருக்கு அளிப்பதை வங்கியர் ஏற்றுக்கொள்ளக் கூடாது.

### (9) பெண்டிர் நிறைவேற்றாளராகச் செயற்படல்

ஒரு மணமான பெண் நிறைவேற்றாளராக நியமிக்கப் படலாம். அவரது செய்கைகளுக்கு அவரது கணவர் பொறுப்பேற்க இயலாது. ஆனால், அவர் நிறைவேற்றாளராகச் செயற்படும்போது அவரது கணவர் தலையிட்டால், மனைவியின் செயல்களுக்கு அவரே பொறுப்பேற்க வேண்டும்.

## கூட்டுக்கணக்கு

இருவர் அல்லது இருவருக்கு மேற்பட்ட எண்ணிக்கையினர் இணைந்து வங்கியின் கணக்குத் தொடங்கினால் அக்கணக்கு, கூட்டுக்கணக்கு எனப்பெறும்.

கூட்டுக் கணக்கினைத் தொடங்கும்பொழுது வங்கியர் அக்கணக்கினைத் தொடங்குபவர்களிடமிருந்து திருத்தமான, தெளிவான செயலுரிமை ஆணையினை எழுத்துருவில் பெறவேண்டும். செயலுரிமை ஆணையில் கணக்கினைச் செயற்படுத்துதற்குரிய விதிமுறைகள் கூறப்பட்டிருத்தல் வேண்டும். கணக்கைச் செயற்படுத்தும் அதிகாரம் பெற்றவரின் பெயர், மற்றும் அவரது அதிகார வரம்பு போன்றவையும் செயலுரிமை ஆணையில் தெளிவாக இடம்பெறல் வேண்டும்.

### செயலுரிமை ஆணையின் உள்ளடக்கம் பின்வருமாறு :

### (1) காசோலை வரைதல்

கூட்டுக்கணக்கில் காசோலை வரையும் அதிகாரம் அக்கணக்கினைத் தொடங்கியுள்ள அனைவருக்குமா? சிலருக்கா? அல்லது ஒருவருக்கு மட்டுமா? என்ற வினாக்கட்குத் தெளிவான விடையினை வங்கியர் தெரிந்து கொள்ளல் வேண்டும். பொதுவாக, விண்ணப்பப் படிவத்திலேயே அதற்கான நிபந்தனைகளைக் குறித்திருப்பர். விண்ணப்பப் படிவத்தில் அனைவரும் கையொப்பமிட வேண்டும். மேற்கண்ட வினாக்கட்கு விடை காணும் பொருட்டு விண்ணப்பப் படிவத்தில்

கீழ்க்கண்டவை இடம்பெற்றிருக்கக் காணலாம் :-

(அ) இருவரும் அல்லது இருவரில் எஞ்சியவர்

(ஆ) முன்னவர் அல்லது எஞ்சியவர் (Former or survivor)

(இ) அனைவரும்

(ஈ) எவரேனும் ஒருவர் அல்லது எஞ்சியவர்

வங்கியியல் நடைமுறைப்படி, கூட்டுக்கணக்கு வைத்திருப்பவர் அனைவரிடமிருந்தும் அனுமதி பெறாமல், ஒருவருக்கு மட்டும் வங்கியர் பணம் செலுத்த இயலாது என்று *ஹஸ்பண்ட் எதிராக டேவிஸ்* (Husband Vs Davis) என்ற வழக்கின் வாயிலாக அறியப்பட்டது. மேலும் காசோலை வரையும் அதிகாரத்தை அளித்தவர்கள் அதனை எப்போது வேண்டுமானாலும் நீக்கிவிடலாம். அவ்வாறு நீக்கும்போது அதனை வங்கியருக்குத் தெளிவாகத் தெரிவித்துவிடல் வேண்டும். கூட்டுக்கணக்கினைச் செயற்படுத்தும் அதிகாரம் பெற்றவர் இறந்துவிட்டால் அல்லது நொடித்துப்போனால் அவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரம் தானாகவே முடிவடையும்.

**(2) மேல்வரைப்பற்று பெற அதிகாரம் (Power to overdraw)**

காசோலை வரையும் அதிகாரம் பெற்றவர்களுக்கு, மேல்வரைப்பற்று பெறவும், சொத்துக்களை அடமானம் வைக்கவும், பாதுகாப்பிற்காக வங்கியில் வைக்கப்பட்ட உடைமைகளைத் திரும்ப எடுக்கவும் அதிகாரம் உண்டா? என்பது குறித்து செயலுரிமை ஆணையில் குறிப்பிட்டிருக்க வேண்டும். அவ்வாறு மேல்வரைப்பற்று வைக்க அதிகாரம் அளிக்கப் பட்டிருக்குமானால் கூட்டுக்கணக்கு வைத்திருப்போரின் பொறுப்பு கூட்டுப் பொறுப்பாக இருப்பதோடு, தனித்தனிப் பொறுப்பாகவும் அமையும்படி செய்தல் வேண்டும். இத்தகைய ஏற்பாட்டின்படி கடனைத் திரும்பப் பெறும்போது கூட்டுக்கணக்கு வைத்துள்ள அனைவரிடமிருந்தும் மொத்தமாகக் கடனை வசூலிக்கவும் இயலும்; தனித்தனியாக ஒவ்வொருவரிடமிருந்தும் வசூலிக்கவும்

கூடும். எனவே வங்கியருக்கு இழப்பு ஏற்பட வாய்ப்பில்லை. பொதுவாக, கூட்டுக்கணக்கின் மீது மேல்வரைப்பற்று கேட்டால், கூட்டுக்கணக்கில் இணைந்துள்ள அனைவரிடமிருந்தும் உறுதி பெற்ற பின்னரே கடன் வழங்க வேண்டும்.

### (3) எஞ்சியவர் உரிமை

செயலுரிமை ஆணையில் எஞ்சியவர் உரிமை குறித்தும் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். பொதுவாக, கூட்டுக்கணக்கு வைத்திருப்பவர்களில் ஒருவர் இறந்துவிட்டால் எஞ்சியிருப்பவர்களுக்கு கணக்கிலுள்ள முழுத்தொகையும் அளிக்கப்படும். வங்கியர் - வாடிக்கையர் ஒப்பந்தத்தின்போதே இந்த உரிமை மறைமுகமாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. *ஷீல்ட்ஸ் கார்போல்ட் எல்லிஸ் எதிராக டேல்ஸ்* (Shields Corbould Ellis Vs Dales) என்ற வழக்கின்படி இறந்துபோனவரின் உரிமைப்பின்னோருக்கு (வாரிசுதாரர்) வங்கியர் பொறுப்பேற்கத் தேவையில்லை. நடைமுறைப்படி இறந்து போனவரின் பெயரை கூட்டுக்கணக்கிலிருந்து நீக்கிவிடுவர். எனவே எஞ்சியிருப்பவர்களே உரிமைப்பின்னோருக்குக் கணக்குக் கொடுக்க வேண்டிய பொறுப்பினராவர். எனினும், வங்கியர் மற்றும் வாடிக்கையர் நலனைக் கருதி, எஞ்சியவர் உரிமை பற்றிய விவரம் செயலுரிமை ஆணையில் தெளிவாகக் குறிக்கப்படுதல் நல்லது.

### (4) மற்றவருக்கு அதிகாரம் அளித்தல்

கூட்டுக்கணக்கு வைத்திருப்பவர்கள் தங்களது கணக்கினைச் செயற்படுத்தும் அதிகாரத்தை வெளியார் ஒருவருக்கு மாற்றியிருக்கும் செய்தியை வங்கியருக்கு உடனடியாகத் தெரிவித்தல் தேவை. அதிகாரத்தைப் பெற்றிருப்பவரது மாதிரிக் கையொப்பம், அதிகார வரம்பு போன்றவற்றையும் அத்துடன் அறிவித்தல் அவசியம். இங்ஙனம் கூட்டுக்கணக்கினைச் செயற்படுத்தும் அதிகாரம் பெற்ற வெளியார், தான் பெற்ற அதிகாரத்தை மீண்டும் மற்றொருவருக்கு அளிக்க இயலாது என்பது குறிப்பிடத்தக்கது.

**(5) கடன் பெறுதல்**

கூட்டுக்கணக்கு வைத்திருக்கும் அனைவரும் எழுத்துருவில் கூட்டுக் கோரிக்கை தந்தால் மட்டுமே வங்கியரிடமிருந்து கடன் பெறலாம். அவ்வாறின்றி ஒரு தனிப்பட்டவரின் கடன் கோரிக்கைக்கு வங்கியர் இணங்கமாட்டார்.

**(6) கூட்டுக்கணக்கு வைத்திருப்போரில் ஒருவரின் இறப்பு அல்லது நொடித்த நிலை**

கூட்டுக்கணக்கு வைத்திருப்போரில் ஒருவர் மனக் கோட்டியராகி விட்டாலோ அன்றி நொடித்துப்போய் விட்டாலோ, கூட்டுக்கணக்கின் மீதான நடவடிக்கைகளை வங்கியர் நிறுத்திவிட வேண்டும். பின்னர் நொடித்த வாடிக்கையரின் பொறுப்புரிமையாளர் இடும் ஆணையின்பேரில் கணக்கை வங்கியர் செயற்படுத்த வேண்டும். எஞ்சியவர் உரிமை இவண் பொருந்தாது. ஒருவேளை கூட்டுக்கணக்கு, பற்று இருப்பைக் காண்பிக்குமாயின், கிளைடோன் விதி செயல்படாமல் தடுக்கவும், நொடித்த வாடிக்கையரின் பொறுப்பை நிர்ணயிக்கவும், வங்கியர் அக்கணக்கினை முடித்து இருப்பு கட்டி வேறொரு புதிய கணக்கைத் தொடங்குதல் தேவை.

கூட்டுக்கணக்கு வைத்திருப்போரில் ஒருவர் இறந்துவிட்டால், கணக்கினைச் செயற்படுத்துவதற்கான புதிய செயல்முறை ஆணையைப் பெறவேண்டும். இந்நிலையில் எஞ்சியவர் உரிமையை நிலை நாட்டலாம்.

**(7) கணவன் மனைவியின் பெயரில் கூட்டுக்கணக்கு**

கணவன் மனைவி இவர்களின் சார்பாக வங்கியில் கூட்டுக் கணக்குத் தொடங்கலாம். எஞ்சியவர் உரிமை விதி இக்கணக்கிற்குப் பொருந்துமா என்ற வினா எழுந்தால் அதற்குத் தெளிவான விடை காணல் இயலாது. எஞ்சியவருக்குப் பணத்தைக் கொடுப்பதற்கான தெளிவான ஆணை இருப்பின், எஞ்சியவர் உரிமைக்கு இடமுண்டு. இல்லையெனில், எஞ்சியவர் உரிமை ஒரு கேள்விக்குறியே!

*ஃகுரான் டட்டா எதிராக இராம் டட்டா* (Guran Dutta Vs Ram Dutta) என்ற வழக்கில், கணவன் இறந்துவிட்டால், கூட்டுக் கணக்குகளை மனைவிக்கு வழங்கப்படும் அன்பளிப்பாகக் கருத இயலாது என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

கணவன் இறந்தபின்னர் கூட்டுக்கணக்கு குறித்து முரண்பாடுகள் ஏதும் இல்லையெனில், கூட்டுக்கணக்கில் உள்ள தொகையை மனைவிக்கு அளிக்கலாம். ஆனால், மனைவிக்கும், இறந்த கணவரின் உரிமைப் பின்னோருக்கும் (வாரிசுதாரர் களுக்கும்) வங்கிக் கணக்கில் உள்ள இருப்புத் தொகை குறித்து முரண்பாடு ஏற்படின், அவர்களை நீதிமன்றத்தில் முறையிடும்படி வங்கியர் கூறுவர். நீதிமன்றம் அக்கணக்குத் தொடங்கியவரின் நோக்கத்தின் அடிப்படையில் தீர்ப்பு வழங்குவதை நடைமுறையாகக் கொண்டுள்ளது.

கணவன் திடீரென்று இறந்துவிட்டால், தனது மனைவிக்கு இக்கணக்கு பாதுகாப்பாகத் திகழவேண்டும் என்ற நோக்கோடு தொடங்கியிருந்தால், அவர் இறந்தபின்னர் பணம் அவரது மனைவியைச் சாரும். மேற்கண்டவாறு *ஃபாலி எதிராக ஃபாலி* (Foley Vs Foley) என்ற வழக்கில் முடிவு கூறப்பட்டுள்ளது.

கணவன், மனைவி இவர்களுடைய வசதிக்காக கூட்டுக்கணக்கைத் தொடங்கியிருந்தால், கணவர் இறந்தபின் கணக்கிலுள்ள பணத்தின்மீது மனைவி எஞ்சியவர் உரிமை கொண்டாட முடியாது. அவர் இறந்தபின்னர் கூட்டுக் கணக்கிலுள்ள பணம் அவருடைய சொத்துக்களோடு சேர்க்கப்படுமே ஒழிய, அவருடைய மனைவியிடம் சேர்க்கப்படாது. *மார்ஷல் எதிராக க்ரட்வெல்* (Marshall Vs Crutwell) என்ற வழக்கில் மேற்கண்ட தீர்ப்பு வழங்கப்பட்டது.

கூட்டுக்கணக்கு, கணவன் மனைவி இருவரின் பெயரிலும் தொடங்கப்பட்டிருக்குமானால் அதன் நோக்கத்தை எவ்வாறு அறிவது? என்ற வினா எழலாம். அக்கணக்குச் செயற்படும் முறையிலிருந்து அதனைக் கண்டு கொள்ளலாம். சான்றாக,

கணவன் மனைவி இருவரும் கூட்டுக்கணக்கில் பணம் செலுத்தவும் எடுக்கவும் செய்வார்களேயானால், இக்கணக்கு அவர்களது வசதிக்காகத் தொடங்கப்பட்ட ஒன்று என்பது தெளிவு. ஆனால், கணவன் மட்டும் பணம் செலுத்தவும் எடுக்கவும் செய்வாரேயானால், தனது மனைவிக்குப் பாதுகாப்பளிக்கும் நோக்கத்துடன் கூட்டுக் கணக்கைத் தொங்கியுள்ளார் என அறியலாம். மேற்கூறிய சிக்கல்களைத் தவிர்ப்பதற்காக, இவ்வாறான கணக்குகளைத் தொடங்கும்போதே 'எவரேனும் ஒருவர் அல்லது எஞ்சியர்' அல்லது 'முன்னவர் அல்லது எஞ்சியர்' போன்ற விவரங்களை வங்கியர் தெளிவாகத் திரட்டிக்கொள்ளல் தேவை.

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

*(1) 'எஞ்சியவர் உரிமை' பற்றி நீவிர் அறிவது யாது?*

*(2) இளையருக்கு சட்டம் அளிக்கும் சிறப்பு உரிமைகள் யாவை?*

*(3) இளையர் பெயரில் கணக்குத் தொடங்கும் போது வங்கியர் மேற்கொள்ள வேண்டிய முன்னேற்பாடுகள் யாவை?*

*(4) மணமான மகளிர் பெயரில் கணக்குத் தொடங்கும் போது வங்கியர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள் யாவை?*

*(5) வங்கியர் நிறைவேற்றாளர் பெயரில் கணக்குத் தொடங்கும்போது எத்தகைய முன்னெச்சரிக்கைகளைக் கையாள வேண்டும்?*

*(6) ஒரு வங்கியர் என்ற முறையில் கூட்டுக்கணக்கு ஒன்றினைத் தொடங்கும்போது நீவிர் கையாளும் முன்னெச்சரிக்கைகள் யாவை?*

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

**(1) கூட்டு வணிக நிறுவனம் ஒன்றின் பெயரில் கணக்குத் தொடங்கும்போது வங்கியர் மேற்கொள்ள வேண்டிய முன்னெச்சரிக்கைகள் யாவை?**

**(2) கூட்டுப்பங்கு கம்பெனி ஒன்றின் பெயரில் கணக்குத் தொடங்கும்போது வங்கியர் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள் யாவை?**

**(3) கீழ்க்கண்டவற்றைப் பொறுத்தவரையில் வங்கியர் மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகளைக் குறிப்பிடுக:-**

**(அ) விளையாட்டு மன்றம் கணக்கு ஆரம்பித்தல்**

**(ஆ) பொறுப்புரிமையாளர் கணக்கு ஆரம்பித்தல்**

**(இ) மனக்கோட்டியர் கணக்கு ஆரம்பித்தல்**

# 5

# காசோலை
## (Cheque)

"வாடிக்கையர்தம் கணக்கிலுள்ள வைப்புத் தொகையை, தேவையின்போது வங்கியிலிருந்து எடுக்க உதவும் ஆணை ஆவணமே காசோலை".

'காசோலை' இன்றைய வணிக உலகின் உயிர்நாடியாகத் திகழ்கிறது. பணத்தைச் செலுத்துதற்கும் பெறுதற்கும் பயன்படும் கருவியான காசோலை இன்று அனைத்து வணிக வங்கிகளிலும் புழக்கத்தில் உள்ளது. வங்கிகள் அனைத்தும் தத்தமக்குரிய காசோலைகளை அச்சிட்டு வாடிக்கையருக்கு வழங்குகின்றன. அச்சிடப்பட்ட காசோலையை, தேவையான இடங்களில் மட்டும் நிறைவுசெய்து, கையொப்பமிட்டு பணத்தைச் செலுத்தவும் எடுக்கவும் எளிதானதொரு கருவியாகப் பயன்படுத்துகின்றனர். பொருளாதார வளர்ச்சிமிக்க இன்றைய நாகரிக உலகில் 'காசோலை' பணத்தாளைப் போலவே செயற்படுகிறது.

### காசோலையின் பயன்கள்

வணிக வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரியும் காசோலைகள் வணிக உலகில் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளன.

(1) பணத்தாள்களை அச்சிடுவதற்காகும் செலவைக் காட்டிலும் குறைந்த செலவில் காசோலைகளை அச்சிட்டு விடலாம். மேலும், செலவுமிக்க நாணயங்களின் புழக்கத்தையும் இவை மிகவும் குறைக்கின்றன.

(2) ஒரு காசோலையை எவ்வளவு பெருந்தொகைக்கானாலும் வரையலாம். எனவே கையாளுவதற்கு எளிமையான ஒரு ஆவணமாகக் காசோலை அமைகிறது.

(3) 'கிறலிடும்' முறையின் வாயிலாக காசோலை மிகுந்த பாதுகாப்புமிக்க ஆவணமாகிறது.

(4) பணம் பெறுபவரின் பெயர் தெளிவாகக் குறிக்கப்படும் வசதியிருப்பதால் தவறுதலான செலுத்துதலுக்கு உள்ளாகும் வாய்ப்பில்லை.

(5) பணம் செலுத்தப்பட்ட காசோலை தானே ஒரு ஆதாரச்சிட்டு அல்லது சான்றுச்சீட்டாகச் (Voucher) செயற்படும் தன்மையது ஆதலின் இரசிது தருவது தேவையற்றதாகிறது.

(6) காசோலை ஒரு மாற்றுமுறை ஆவணமாதலால், இதனை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு மாற்றுவது என்பது மிகவும் எளிதாகிறது.

(7) பணத்தை காசோலைகள் மூலம் மற்றோரிடத்திற்கு அனுப்பக்கூடுமாதலால் அனுப்பும் செலவு மிகவும் குறையும்.

(8) ஒரு காசோலையில் பொய்யாவணம் புனைதல் கடினம். அவ்வாறு எவரேனும் பொய்யாவணம் புனைந்து விட்டால் வங்கியரே அதற்குப் பொறுப்பேற்க வேண்டுமேயன்றி வாடிக்கையர் பொறுப்பேற்கத் தேவையில்லை. இவ்வாறு பலவகையிலும் வாடிக்கையருக்கு நலம் பல புரியும் காசோலை பற்றி அறிய விழைவது இயல்பே!

**காசோலையின் இலக்கணம்**

*1881*ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 6இன்படி "கோரினாலன்றி செலுத்தப்படாத வகையில், குறிப்பிட்ட ஒரு வங்கியர் மீது எழுதப்பட்ட ஒரு மாற்றுச்சீட்டே காசோலை" எனப்படும்.

ஒரு மாற்றுச்சிட்டின் இலக்கணத்தை அறிவதன் வாயிலாக ஒரு காசோலையின் இலக்கணத்தைத் தெளிவாகக் காணலாம்.

**மாற்றுச்சிட்டின் இலக்கணம்**

*1981*ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 5இன்படி "எழுதுபவர், ஒரு குறிப்பிட்ட தொகையை, ஒரு குறிப்பிடப்பட்டுள்ள நபருக்கோ அல்லது அவரின் ஆணையின்படியோ அல்லது கொணர்பவருக்கோ செலுத்துமாறு விடுக்கும் நிபந்தனையற்ற எழுத்துவடிவிலான ஆணைச்சீட்டே மாற்றுச் சீட்டு" எனப்படும்.

ஒரு காசோலையை ஒரு குறிப்பிட்ட வங்கியர் மீது எழுதப்பட்ட மாற்றுச் சிட்டு என்று அழைத்தாலும், மாற்றுச் சிட்டினின்றும் பலவகையில் காசோலை மாறுபடுகிறது. அதனால்தான் சால்மர் (Chalmer) என்ற வங்கியியல் அறிஞர் பின்வருமாறு கூறியுள்ளார் :-

"எல்லாக் காசோலைகளும் மாற்றுச்சீட்டே ; ஆனால் எல்லா மாற்றுச்சீட்டுகளும் காசோலை ஆகா".

**காசோலைக்கும் மாற்றுச்சிட்டிற்கும் உள்ள வேறுபாடுகள்**

காசோலை மாற்றுச்சிட்டினை ஒத்திருந்தாலும், இரண்டிற்கும் பல வேறுபாடுகள் உள்ளன. அவையாவன :-

| காசோலை | மாற்றுச்சீட்டு |
|---|---|
| 1. ஒரு காசோலை ஒரு அச்சடிக்கப்பட்ட படிவத்திலேயே வரையப்படுகிறது. | 1. ஒரு மாற்றுச்சீட்டினை ஒரு அச்சடிக்கப்பட்ட படிவத்தில்தான் வரையவேண்டும் என்று அவசிய மில்லை. |
| 2. காசோலை எவர்மீது வரையப்பட்டுள்ளதோ அவர் அதனை ஏற்கத்தேவையில்லை. | 2. மாற்றுச்சீட்டுக்கு ஏற்பு மிகவும் அவசியம். |
| 3. வங்கியில் உள்ள வாடிக்கையரின் இருப்புத்தொகை மீதே காசோலை வரையப்படுகின்றது. | 3. எந்தவிதமான இருப்புத் தொகையையும் கருத்திற் கொண்டு வரையப்படுவதில்லை. |
| 4. பணத்தை உடனடியாக செலுத்துவதற்குரிய ஆவணமே காசோலை. | 4. பொதுவாக ஒரு குறிப்பிட்ட தவணைக்காலம் முடிந்த பின்னரே பணம்செலுத்துமாறு மாற்றுச்சீட்டு வரையப்படும். |
| 5. காசோலை வரைபவரின் பொறுப்பு ஆறு மாத காலத்திற்கு நீடிக்கும். | 5. தக்க காரணமின்றி காலம் தாழ்த்தி சமர்ப்பிக்கப்படும் மாற்றுச்சீட்டு செல்லாததாகிவிடும். |
| 6. காசோலையை முத்திரையிடத் தேவையில்லை. | 6. மாற்றுச்சீட்டிற்கு முறையான முத்திரை தேவை. |
| 7. பாதுகாப்பிற்காக, காசோலை பொதுவாகவும் மற்றும் சிறப்பாகவும் கிறலிடப்படுகின்றது. | 7. மாற்றுச்சீட்டு இவ்வாறு கிறலிடப்படுவதில்லை. |
| 8. காசோலையை எழுதியவர், அதன்மீது பணம் வழங்க வேண்டாம் என்ற தடை ஆணையைப் பிறப்பிக்கலாம். | 8. மாற்றுச்சீட்டைப் பொறுத்தவரை தடை ஆணை பிறப்பிக்க இயலாது. |
| 9. காசோலை அவமதிக்கப்படும்போது, அதற்குக் குறிப்பும் சான்றிதழும் தேவையில்லை. | 9. மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டால் குறிப்பும் சான்றிதழும் தேவை. |

| காசோலை | மாற்றுச்சீட்டு |
|---|---|
| 10. காசோலை அவமதிக்கப்பட்டால், அவமதிப்புச் செய்தியை அந்தக் காசோலை வரைந்தவருக்கு அறிவிக்கத் தேவையில்லை. | 10. மாற்றுச்சிட்டு அவமதிக்கப்பட்ட செய்தியை அறிவித்தல் வேண்டும். |
| 11. மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 85 மற்றும் 131இல் அளிக்கப்பட்டிருக்கும் சட்டமுறை பாதுகாப்பு காசோலைக்கு மட்டும் கிட்டும். | 11. எந்தவிதமான சட்டமுறை பாதுகாப்பும் மாற்றுச் சிட்டுக்குக் கிடைக்கப் பெறுவதில்லை. |
| 12. காசோலையைப் பொறுத்த-வரையில் கருணை நாட்களுக்கு அனுமதி கிடையாது. | 12. மாற்றுச்சிட்டிற்கு மூன்று நாட்கள் கருணை நாட்களாக அனுமதிக்கப் படுகின்றன. |
| 13. காசோலை எப்பொழுதுமே ஒரு வங்கியர் மீதுதான் வரையப் படுகின்றது. | 13. மாற்றுச்சிட்டு ஒரு வங்கியர் மீதோ அல்லது மற்ற எந்த நபர் மீதோ வரையப்படலாம். |
| 14. காசோலையில் பணம் செலுத்துவதற்கான முதன்மையான பொறுப்பு அதனை வரைபவர் மீதே உள்ளது. | 14. மாற்றுச்சிட்டில் பணம் செலுத்துவதற்கான முதன்மையான பொறுப்பு வரையப்படுபவர் மீதே உள்ளது. |
| 15. காசோலை ஒரு கொணர்பவர் காசோலையாகவோ அல்லது ஆணை காசோலையாகவோ இருக்கலாம். | 15. மாற்றுச்சிட்டு ஆணை மாற்றுச்சிட்டாக மட்டும்தான் இருக்க முடியும். |

## காசோலையின் சிறப்பியல்புகள் (Features of a cheque)

ஒரு காசோலையின் தன்மைகள் பின்வருமாறு :

### (1) எழுத்துவடிவிலான ஆவணம் (Instrument in writing)

காசோலை எழுத்தால் எழுதப்பட்ட ஆவணமாக இருத்தல் வேண்டும். ஒரு வாடிக்கையர் வங்கியரிடம் சென்று வாய்ச்சொல்லின் வாயிலாக, தனக்குப் பணம் வழங்குமாறு கோரினால் அது காசோலையாகாது. காசோலை ஒரு எழுதப்பட்ட ஆவணமே. ஆனால் வங்கிச் சட்டத்தில் காசோலையை எழுதப் பயன்படுத்தும் எழுதுகோல் பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை. எனினும், வங்கியர் தமது பாதுகாப்பிற்காகவும் மற்றும் தமது வாடிக்கையரின் நன்மையையும் கருதி, காசோலையை பேனாவைக் கொண்டோ அல்லது தட்டச்சு போன்றவற்றைக் கொண்டோ எழுதுவதை நடைமுறைப்படுத்தி வருகின்றனர். வரைபென்சிலின் வாயிலாக எழுதினால் மிகவும் எளிதாக காசோலைகளில் திருத்தங்கள் செய்யப்பெறலாம். இவ்வாறு கருநிலைத் திருத்தம் ஏற்பட அதிக வாய்ப்புகள் உள. எனவே பென்சிலால் எழுதப்பட்ட காசோலையை வங்கியர் ஏற்பதில்லை.

### (2) நிபந்தனையற்ற ஆணை (Unconditional order)

காசோலை செலுத்துதற்குரிய ஒரு 'ஆணையாகச்' செயற்படுகின்றது. அது ஒரு 'வேண்டுகோள்' ஆகாது. எனவே, 'தயவு செய்து செலுத்துக' அல்லது 'அன்பு கூர்ந்து செலுத்துக' போன்ற சொற்களைக் காசோலையில் வரையக் கூடாது. காசோலையை ஒரு ஆணை என்று சொல்வதால், 'ஆணையிடுகிறேன், செலுத்து', 'உத்தரவிடுகிறேன், செலுத்து' போன்ற சொற்களையும் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில், காசோலையில் காணப்படும் 'செலுத்துக' என்ற சொல்லே ஒரு ஆணையாகும்.

மேற்கூறிய ஆணை ஒரு நிபந்தனையற்ற ஆணையாக இருத்தல் அவசியம். ஏதாவது ஒரு நிபந்தனை காசோலையில்

காணப்படின், அதனை ஒரு காசோலையாகவே கருத இயலாது. ஆனால், காசோலையின் தொகையை ஒரு குறிப்பிட்ட கணக்கில் பற்று வைக்குமாறு ஆணையிடப்பட்டிருந்தால், அந்த ஆணை ஒரு நிபந்தனையற்ற ஆணையாகவே கருதப்படும். ஏனெனில் காசோலையைச் செலுத்தும்போது ஒரு கணக்கில் பற்று வைப்பது வங்கியரின் கடமையே. மற்றபடி, வேறெந்த நிபந்தனையும் செய்யுமாறு வங்கியருக்கு காசோலையின் வாயிலாக ஆணையிடப்பட்டிருந்தால், அந்த ஆவணம் காசோலை என்று கருதப்பட மாட்டாது. சான்றாக *பெபின்ஸ் ஜீனியா & சன்ஸ் எதிராக லண்டன் & சவுத் வெஸ்டர்ன் பேங்க்* (Babins Junior & Sons Vs London & South Western Bank) என்ற வழக்கில் கீழ்க்கண்ட நிபந்தனை காசோலையில் காணப்பட்டது :-

"கீழே கொடுக்கப்பட்டுள்ள இரசீதினை தேதியிட்டு, முத்திரையிட்டு கையெழுத்திட்டுக் கொடுத்தால் செலுத்துக ...."

மேற்கூறிய வழக்கில், அந்த ஆவணம் காசோலையாகாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இரசீதினைப் பெற்ற பின்னரே பணத்தைச் செலுத்துமாறு வங்கியருக்கு, காசோலையில் ஒரு நிபந்தனை இடப்பட்டிருப்பதால், அது காசோலையாகாது. ஆனால், இந்த நிபந்தனை ஒரு காசோலையில் பணம் பெறுபவருக்கு இடப்பட்டிருந்தால் அது அந்த காசோலையைப் பாதிக்காது. ஒரு வங்கியரைப் பொறுத்தவரையில் அது ஒரு நிபந்தனையற்ற ஆவணமாகவே கருதப்படும்' என்று *நாதன் எதிராக ஆக்டன்ஸ்* (Nathan Vs Ogdens) என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

**(3) ஒரு குறிப்பிட்ட வங்கியர் மீது எழுதப்படல் (on a specified banker)**

காசோலை ஒரு குறிப்பிட்ட வங்கியர் மீதே எழுதப்பட வேண்டும். குறிப்பிட்ட வங்கியர் என்பது, ஒரு வாடிக்கையர் எந்த வங்கியில் கணக்கு வைத்துள்ளாரோ அந்த வங்கியரைக் குறிக்கும். பொதுவாக அவ்வங்கியின் பெயர், முகவரி போன்றவை காசோலையிலேயே அச்சிடப்பட்டிருக்கும். ஒரு

குறிப்பிட்ட வங்கியின் ஒரு குறிப்பிட்ட கிளையின் மீது எழுதப்பட்ட காசோலையை அதே வங்கியின் மற்றொரு கிளையில் முன் ஒப்பந்தமின்றி பணமாக்க முடியாது.

## (4) ஒரு குறிப்பிட்ட பெறுநர் (certain payee)

காசோலையில் பணம் பெறும்படி குறிப்பிடப் பட்டுள்ளவரே, 'பெறுநர்' எனப்படுவார். காசோலை ஒரு குறிப்பிட்ட நபருக்கோ அல்லது அவருடைய ஆணைப்படிக்கோ அல்லது கொணர்பவருக்கோ செலுத்தும்படியான ஆவணமாக இருத்தல் அவசியம். இதனை, வங்கியியல் அறிஞர் சர் ஜான் பேஜட் இவ்வாறு கூறியுள்ளார். "ஒரு சாதாரண காசோலையில் வரைபவர், வரையப்படுபவர், பெறுநர் அல்லது பெறுநர் இல்லையெனில், கொணர்பவர் ஆகியோர் இருத்தல் அவசியம்". ஆகவே பணம் பெறுபவர் ஒரு குறிப்பிட்ட நபராக இருக்க வேண்டும். கொணர்பவருக்குரிய காசோலையாக இருப்பின், பெறுநர் பெயரைக் குறிப்பிடத் தேவையில்லை. சட்டப்படி, நபர்கள் எனப்படுவோர் 'தனிப்பட்ட ஆள்' ஒருவரைக் குறிப்பதாக மட்டுமின்றி நிறுமம், சங்கம், கல்லூரி, உள்ளாட்சி நிறுவனங்கள் போன்ற அமைப்புக்களையும் குறிப்பதாக அமையும்.

ஒருவரின் நியமனப் பெயரில் (Designation) காசோலை வரையப்பட்டிருந்தாலும் அது ஒரு குறிப்பிட்ட பெறுநருக்கு வரையப்பட்டதாகவே கருதப்படும். சான்றாக, பணம் பெறுபவரை கல்லூரி முதல்வர், செயலர், மேலாண்மையர், நிர்வாகி என்றும் பல நியமனப் பெயரில் கூடக் குறிப்பிடலாம். நியமனப் பெயர் தவறாகக் குறிக்கப்பட்டிருந்தாலும், காசோலைக்கு அதனால் பாதிப்பேதும் ஏற்படாது. இவ்வாறே, ஒரு காசோலையில் இருவரோ அல்லது அதற்கு மேற்பட்ட பெறுநர்களோ இருக்கும்படியாக வரையப்படலாம். இப்படிப்பட்ட காசோலைக்கு, குறிப்பிடப்பட்டுள்ள எல்லா நபர்களும் கையொப்பமிட்டால்தான் பணம் கிடைக்கும். சில வேளைகளில் காசோலை 'இல்லாத பெறுநர்' ஒருவர் மீது வரையப்பட்டிருக்கலாம். சான்றாக 'நிலாவில் உள்ள மனிதன் அல்லது கொணர்பவருக்குச் செலுத்துக், 'கூலி அல்லது கொணர்பவருக்குச்' செலுத்துக என்று

காசோலையில் எழுதப்பட்டிருந்தால், அக்காசோலையை ஒரு கொணர்பவர் காசோலையாகக் கருதி பணம் வழங்க வேண்டும் என்று *நார்த் அண்டு சவுத் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் லிமிடெட் எதிராக நேஷனல் புரவின்சியல் பேங்க் லிமிடெட்* (North and South Insurance Corporation Ltd. Vs Provincial Bank Ltd) என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டது.

**(5) தொகை வரையறுக்கப்பட்டிருத்தல் (a certain sum of money)**

செலுத்தப்பட வேண்டிய தொகை எவ்வளவு என்பதை காசோலையில் திட்டவட்டமாகக் குறித்தல் அவசியம். தொகையை எண்ணாலும் எழுத்தாலும் தெளிவாகவும் துல்லியமாகவும் குறித்தல் மிகவும் அவசியமானவொன்றாம். 'ரூ.5000க்குக் குறைவாகச் செலுத்துக' என்றெல்லாம் தெளிவில்லாமல் குறிப்பிட்டிருந்தால், அதனை ஒரு காசோலையாகக் கொள்ள இயலாது.

**(6) கோருவதால் செலுத்துதற்குரியதாதல் (payable on demand)**

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 6 மற்றும் 19இன்படி ஒரு காசோலை என்பது பணம் கேட்டவுடன் செலுத்துதற்குரிய ஆவணமாகும். எனவே ஒரு குறிப்பிட்ட தவணை நாளுக்குப் பிறகு பணம் செலுத்தும்படி காசோலையில் வரைந்திருந்தால் அக்காசோலை, காசோலை எனப்படுவதற்குத் தகுதியற்றதாகி விடும். மேலும், பின்தேதியிட்ட காசோலைக்கு அதிற்கண்ட நாள் வரும்வரை பணம் செலுத்தப்பட மாட்டாது. காசோலையில் குறிப்பிட்ட நாளன்றுதான் அது ஒரு செலுத்துகைக்குரிய ஆவணமாக மாறும். எனவே அக்காசோலையில் குறிப்பிட்டுள்ள தேதியன்று வங்கியர் பணத்தை வழங்கலாம்.

**(7) வரைபவர் கையொப்பமிடல் (signed by the drawer)**

ஒரு காசோலையை வரைபவர், அதில் கையொப்பமிடல் அவசியம். காசோலையில் கையொப்பம் இல்லையெனில், வங்கியர் அதனை ஏற்க மறுத்துவிடுவர். மேலும், காசோலையில் காணப்படும் அதனை வரைந்தவரின் கையொப்பம், அவரின்

மாதிரிக் கையொப்பத்தை ஒத்து இருத்தல் அவசியம். இல்லையெனில், வங்கியரால் காசோலை ஏற்கப்படமாட்டாது. நிறுமங்கள் மற்றும் கூட்டுருக்கள் போன்ற வாடிக்கையரின் கணக்கைப் பொறுத்தவரையில், அக்கணக்கினைச் செயற்படுத்துதற்காக நியமிக்கப்பட்டவர்களின் கையொப்பங்கள் அந்நிறுவனக்கையொப்பமாகக் கருதப்படும்.

## காசோலையின் மாதிரிப் படிவம்

| | ரூ. | பை. | |
|---|---|---|---|
| எண் 24682<br>தேதி . . . . . 19<br>பணம் பெறுபவர் . . . . . . .<br>ரூபாய் (எழுத்தால் குறிப்பிடுக)<br>. . . . . . . . . . . . . . . . | | | எண் 24682<br>சேரன் வங்கி<br>பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :<br>75, வேங்கைச் சாலை,<br>கோயம்புத்தூர்.<br>மதுரை - 625 021.<br>. . . . . 19 |
| இருப்பு கீ/கொ | | | எனக்கு அல்லது . . . . . . . . . . . . . . . |
| தொகை வைப்பாக செலுத்தியது | | | அவர்களுக்கு அல்லது இதைக் கொணர்பவருக்கு<br>ரூபாய் (எழுத்தால் குறிப்பிடுக)..........................<br>..........................................................<br>..................................மட்டும் செலுத்துக. |
| மொத்தம் | | | |
| கழி : | | | ரூ. |
| இக்காசோலையின் தொகை | | | |
| இருப்பு | | | (வரைபவரின் கையொப்பம்) |

### அச்சடிக்கப்பட்ட படிவம்

மேற்கூறிய மாதிரிப்படிவம் போன்று எல்லா வங்கிகளும் ஒரு பொதுவான அச்சடிக்கப்பட்ட படிவத்தைத் தமது வாடிக்கையருக்கு வழங்குகின்றனர். வாடிக்கையர் தங்களுக்கு வங்கியரால் வழங்கப்பட்டுள்ள காசோலையையே வங்கியிலிருந்து பணம் பெறுவதற்குப் பயன்படுத்த வேண்டும். ஒரு சாதாரண

துண்டுத்தாளில் வரையப்படும் காசோலை பாதுகாப்பற்றது என்பதால் இந்திய வங்கியர் அதை ஏற்க மறுக்கின்றனர். காசோலை அச்சடிக்கப்பட்ட படிவமாக இருப்பதால் வாடிக்கையருக்குப் பல நன்மைகள் ஏற்படுகின்றன. அவையாவன:

**அச்சடிக்கப்பட்ட படிவத்தின் நன்மைகள்**

(1) ஒரு அச்சடிக்கப்பட்ட காசோலை மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 5 மற்றும் 6 இல் கூறப்பட்டுள்ள சட்டப்பூர்வமான தேவைகளை நிறைவு செய்கின்றது.

(2) அச்சடிக்கப்பட்ட படிவம் இல்லையெனில், வாடிக்கையர் ஒரு தாளினை, சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அளவின் படி கத்தரித்து காசோலை தயாரிப்பது என்பது மிகவும் தொல்லைதரும் செயலாம். இத்தொல்லையிலிருந்து விடுவிக்க, அச்சடிக்கப்பட்ட படிவம் தயார் நிலையில் செயல்படுகிறது.

(3) மேலும் ஒரு அச்சடிக்கப்பட்ட படிவத்தில், வாடிக்கையர் ஒரு சில பகுதிகளை மட்டும் நிரப்ப வேண்டியிருப்பதால் அவருடைய பணி மிகவும் குறைவாகவே உள்ளது.

(4) ஒரு அச்சிடப்பெற்ற படிவமாக காசோலை இருப்பதால் அதனைக் கொண்டு மோசடி செய்ய வாய்ப்பில்லை. மாதிரிக் கையொப்பத்தைத் தெரிந்து வைத்துக் கொண்டாலும், காசோலையில் அச்சிடப்பெற்றுள்ள நிரல் எண்தனைப் பிறர் அறிந்து கொள்ளவே இயலாது. எனவே அச்சிடப்பெற்ற காசோலை மூலம் மோசடி நடைபெறுதல் கூடாத செயலாம்.

(5) அச்சிடப்பட்ட படிவத்தில் முக்கிய மாற்றங்கள் ஏதேனும் ஏற்படின் அதனைக் கண்டுபிடிப்பது எளிது.

(6) ஒரு அச்சிடப்பட்ட காசோலை மூலம் வங்கியருக்கு, செலுத்துகை நிறுத்தலாணை அனுப்புவது எளிதாகின்றது. ஏனெனில், ஒவ்வொரு படிவத்திலும் நிரல் எண் இருப்பதினால் அந்த எண்ணையும் மற்ற விவரங்களையும் வங்கியருக்கு எளிதாகத் தெரிவித்துவிடலாம்.

(7) அச்சிடப்பட்ட காசோலையின் அயற்பகுதி (Counterfoil) வாடிக்கையருக்கு நினைவுக்குறிப்புப் படியாக பயன்படுகிறது.

(8) வங்கியரைப் பொறுத்தவரையில் அச்சிடப்பட்ட காசோலை அவரது இயக்கச் செலவுகளை (operating expenses) மிகவும் குறைக்கின்றது. அச்சிடப்பட்ட காசோலை கையாளுவதற்கு மிகவும் எளிதானதும் செலவற்றதுமாக உள்ளது. காசோலையில் காணும் முக்கிய தகவல்களை வங்கியர் ஒரு நொடிப்பொழுதில் அறிந்து கொள்ளும்படி எளிமை மிக்க படிவமாக விளங்குகிறது.

**காசோலையும், வங்கிப் பணவிடையும்**

வங்கிப் பணவிடை என்பது ஒரு வங்கிக் கிளையானது தனது தலைமை அலுவலகத்தின் மீதோ அல்லது மற்றொரு கிளை மீதோ ஒரு குறிப்பிட்ட தொகையை ஒரு குறிப்பிட்ட நபருக்குச் செலுத்துமாறு விடுக்கும் ஆணையேயாகும். வங்கிப் பணவிடையையும், காசோலையைக் கீறலிடுவது போன்று கீறலிடலாம். ஒரு வங்கிப் பணவிடைக்கும் காசோலைக்குரிய சட்டப்படியான பாதுகாப்பு உண்டு. எனினும், ஒரு காசோலைக்கும் மற்றும் ஒரு வங்கிப் பணவிடைக்கும் வேறுபாடுகளும் உள்ளன. அவையாவன :

| காசோலை | வங்கிப் பணவிடை |
|---|---|
| 1. காசோலை வாடிக்கையருக்கு மட்டும் வழங்கப்படுகின்றது. | 1. வங்கிப் பணவிடை வாடிக்கையர் அல்லாதவருக்கும் வழங்கப்படுகின்றது. |
| 2. காசோலையில் வரைபவரும் வரையப்படுவோரும் இரண்டு தனிப்பட்ட நபர்கள் ஆவர். | 2. வங்கிப்பணவிடையில் வரைபவரும் வரையப்படுவோரும் ஒருவரே. |
| 3. காசோலை கொணர்வோருக்கு செலுத்தும்படியாக வரையப்படலாம். | 3. வங்கிப் பணவிடை ஒரு குறிப்பிட்ட நபருக்கோ அல்லது அவரது ஆணைப்படியோ செலுத்துமாறு மட்டும்தான் வரையப்படக்கூடும். |
| 4. காசோலை வரைபவர் ஒரு செலுத்துகை நிறுத்துதலாணை மூலம் அதனை நிறுத்திவைத்து விடலாம். | 4. வங்கிப் பணவிடையின் செலுத்துதலை அவ்வாறு நிறுத்தி வைக்க இயலாது. |
| 5. காசோலையை அவமதிப்புச் செய்ய வாய்ப்புண்டு. | 5. வங்கிப் பணவிடை அவமதிப்புச் செய்யப்படுவதில்லை. |
| 6. காசோலை ஒரு வாடிக்கையரால் தனது வங்கியர் மீது எழுதப்படும் ஆவணம். | 6. வங்கிப் பணவிடை ஒரு வங்கியரால் தன்னுடைய மற்றொரு கிளை வங்கியருக்கு எழுதப்படும் ஆவணம். |
| 7. காசோலையை உள்ளூர் செலுத்துதலுக்காக பயன்படுத்தலாம். | 7. பொதுவாக வங்கிப் பணவிடையை உள்ளூர் செலுத்துதற்காக பயன்படுத்த இயலாது. |
| 8. காசோலை காணாமற் போய்விடின், மாற்றுக் காசோலை பெற இயலாது. | 8. வங்கிப் பணவிடை காணாமற் போய்விடின், மாற்று பணவிடை பெற்றுக்கொள்ளலாம். |

## காசோலை வரைதல்

நடப்புக் கணக்கோ - அல்லது சேமிப்புக் கணக்கோ வைத்திருக்கும் ஒரு வாடிக்கையர் வங்கியர் மீது காசோலையை வரையலாம். இவ்வாறு வரையும்போது, அவர் மிகுந்த கவனத்துடன்

செயல்பட வேண்டும். சிறிதளவு கவனமின்மையுடன் செயற்பட்டால்கூட காசோலை செல்லாத ஆவணமாகிவிடும். மேலும், காசோலையில் வரையப்பட்டிருக்கும் தொகை, வாடிக்கையரது கணக்கிலிருக்கும் தொகையைக் காட்டிலும் மிகுதியான தொகையாக இருத்தல் கூடாது. தனது கணக்கிலிருக்கும் தொகைக்கு அதிகமாக காசோலை வரைந்தால் அக்காசோலை வங்கியரால் அவமதிக்கப்படும். ஒருவேளை, அதிகப்பற்றிற்கான முன் ஒப்பந்தம் வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையே இருப்பின், அக்காசோலையை மதிக்க வாய்ப்புண்டு.

### பணமின்றி காசோலை வரைதல் சட்டப்படி குற்றமே

ஒரு வாடிக்கையர் தனது கணக்கில் போதுமான தொகை இல்லாத போது, மேல்வரைப்பற்றிற்கு முன் ஒப்பந்தமுமின்றி காசோலை வரைந்தால், அது சட்டப்படி கிரிமினல் குற்றமாகும் என்று மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 138இல் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இந்த விதி 1989ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வந்துள்ளது.

### சட்டப்படி குற்றமாவது யாது?

கீழ்க்கண்ட சூழ்நிலைகளில் பணமில்லாமல் காசோலை வரைவது சட்டப்படி குற்றமாகும் :

(1) கைமாறு கருதி ஒரு கடனை முடிப்பதற்காக காசோலை வரையப்பட்டிருக்க வேண்டும்.

(2) காசோலையை ஏற்றுக்கொள்ளற்குரிய காலத்திற்குள்ளேயே வங்கியில் சமர்ப்பித்திருக்க வேண்டும். ஏற்றுக்கொள்ளற்குரிய காலம் என்பது அதனை எழுதிய தேதியிலிருந்து ஆறு மாதக் காலத்தைக் குறிக்கும்.

(3) காசோலை, அதனை வரைந்தவரின் கணக்கில் போதுமான தொகை இல்லை என்ற ஒரே காரணத்திற்காக அவமதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

(4) அந்தக் காசோலையின் மீது பணம் பெற வேண்டியவர், அவமதிக்கப்பட்ட காசோலையின் பேரில் பணம் தரும்படி, அவமதிக்கப்பட்ட காசோலையை தனக்கு திருப்பி அனுப்பப்பட்ட நாளிலிருந்து பதினைந்து நாட்களுக்குள்ளாக அதனை வரைந்தவருக்கு எழுத்துமூலம் கேட்டிருக்க வேண்டும்.

(5) அக்காசோலையை வரைந்தவர், மேற்ககண்ட செய்தியைக் கேட்டறிந்ததிலிருந்து பதினைந்து நாட்களுக்குள்ளாகப் பணத்தைத் திரும்பச் செலுத்தத் தவறியிருக்க வேண்டும்.

காசோலையைப் பெற்றவர், அவமதிக்கப்பட்ட காசோலையை வரைந்தவரிடம், அதில் குறிப்பிடப்பட்ட தொகையைக் கேட்டு, அவர் 15 நாட்களுக்குள்ளாகத் தர மறுத்தால், 16வது நாளிலிருந்து காசோலையைப் பெற்றவர் அதனை வரைந்தவர் மீது வழக்குத் தொடர உரிமை உண்டு என்று *மகாலெட்சுமி எண்டர்பிரைஸஸ், கல்கத்தா எதிராக ஸ்ரீ விஷ்ணு டிரேடிங் கம்பெனி* (M/s. Mahalakshmi Enterprises Vs Shree Vishnu Trading Company) என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. எனவே, அந்த 16வது நாளிலிருந்துதான், பணமின்றி காசோலை வரைந்த சட்டத்தை மீறிய குற்றவாளியாக அதனை வரைந்தவர் கருதப்படுவார்.

மேலும் *கிருஷ்ணன் எதிராக நாராயணன்* என்ற வழக்கில் 138ம் பிரிவு அமுலுக்கு வருமுன் எழுதப்பட்ட காசோலை, அந்தப் பிரிவு அமுலுக்கு வந்தபின் அவமதிக்கப்பட்டிருப்பின், அந்தக் காசோலைக்கும் அந்தப் பிரிவு பொருந்தும் என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

அவமதிக்கப்பட்ட காசோலையின் மூலம் பணம் பெறவேண்டியவர், குறிப்பிட்ட 15 நாட்களுக்குள் அந்தக் காசோலையை வரைந்தவருக்கு பணத்தைக் கேட்டு தகவல் அனுப்பாவிடில், வரைந்தவர் பொறுப்பாளி ஆக மாட்டார் என்று *குரியன் எதிராக ஸ்ரீதரன்* (K.T. Kurian Vs K.K. Shreedharan) என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

ஒரு கணக்கு முடிக்கப்பட்டதின் காரணமாக காசோலை அவமதிக்கப்பட்டிருப்பின் பிரிவு 138 பொருந்தாது என்று *பிரசன்னா எதிராக விஜயலட்சுமி* (Prasanna Vs Vijayalakshmi) என்ற வழக்கில் முடிவு செய்யப்பட்டுள்ளது.

பிரிவு 138இன் கீழ் காணப்படும் காலவரையறை ஒரு பின்தேதியிட்ட காசோலையைப் பொறுத்தவரையில் காசோலையில் காணப்படும் தேதியிலிருந்து கணக்கிட வேண்டுமே தவிர அக்காசோலை அளித்த நாளிலிருந்து கணக்கிடக் கூடாது என்று *அனில்குமார் சாஹினி எதிராக குல்சான் ராய்* (Anil Kumar Sawhney Vs Culshan Rai) என்ற வழக்கில் தீர்ப்பு அளிக்கப்பட்டுள்ளது.

## 138ஆம் பிரிவின் கீழ் வழக்குத் தொடர காலவரையறை

மேற்கூறியபடி, ஒரு காசோலை அவமதிக்கப்பட்டு அதற்காக, அதனை வரைந்தவரிம் பணம் கேட்டு, அவர் 15 நாட்களுக்குள் தரவில்லையெனில், 138ஆம் பிரிவின்படி அந்தக் காசோலையை வரைந்தவர் மீது வழக்குத் தொடரலாம். அவமதித்த காசோலைக்கு பணம் கேட்டு பின் அது மறுக்கப்பட்டு 16வது நாளிலிருந்து வழக்குத் தொடர பணம் பெறுநருக்கு உரிமை உண்டு. அவர் அந்த 16வது நாளிலிருந்து ஒரு மாதத்திற்குள்ளாக வழக்குத் தொடரவேண்டும்.

## அவமதிப்பிற்குள்ளான காசோலையை வரைந்ததற்கான தண்டனை

அவமதிக்கப்பட்ட காசோலையை வரைந்தவர், பிரிவு 138இன் கீழ் குற்றவாளி என்று நிறுவப்பட்டால் குற்றவியல் விதிப்படி கீழ்க்காணும் தண்டனைகளைப் பெறுவர் :

ஒரு வருட சிறைத்தண்டனை அல்லது காசோலையில் வரையப்பட்ட தொகையைப்போல் இருமடங்கு அபராதம் பெறல். சில வேளைகளில் குற்றத்தைப் பொருத்து மேற்கண்ட இரண்டு விதங்களிலும் தண்டிக்கப் பெறுவதும் உண்டு.

## காசோலை வரையும் முறை

காசோலை, சிரான முறையில் செப்பமாக வரையப்படல் வேண்டும். காசோலை வரைவதில் ஒரு சிறு தவறு நிகழ்ந்தாலும், அது வங்கியரால் அவமதிக்கப்படும். ஒரு காசோலையைப் பொறுத்தவரையில், நிரப்பப்பட வேண்டிய முக்கிய பகுதிகள் பின்வருமாறு :

### (1) தேதிப் பகுதி

ஒரு வாடிக்கையர் காசோலையில் முதலாவதாக நிரப்ப வேண்டியது தேதிப் பகுதியே. காசோலை வரைபவர் தாம் காசோலை வரையும் தேதியைக் குறிப்பிடுதல் அவசியம். காசோலையில் தேதி குறிப்பிடத் தவறினால், அதுவே அக்காசோலையை வங்கியர் அவமதிப்பதற்கு ஒரு காரணமாகும். எனவே காசோலை வரைபவர், அந்தக் காசோலையை வரையும்போது தேதியைக் குறிப்பிட வேண்டும்.

அவ்வாறு வரைபவர், தேதியைக் குறிப்பிடத் தவறினால், மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 20இன்படி காசோலையைக் கொணர்பவர் அல்லது பெறுதற்குரியவர், தேதியைக் குறிப்பிடலாம். அவ்வாறு குறிப்பிடுதல் ஒரு நியாயமான காலவரைக்குள்ளேயே செய்யப்பட்டிருக்க வேண்டும்.

*கிரிபித் எதிராக டால்டன்* (Griffith Vs Dalton) என்ற வழக்கில், காசோலை வரையப்பட்ட நாளிலிருந்து ஒன்றரை வருடங்கள் கழித்து தேதியிடப்பட்டிருந்த காசோலையை வங்கியர் அவமதித்தது சரியே என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

காசோலையில் தேதி காணப்படவில்லையெனில், அதனைச் செலுத்தும் வங்கியர் கூட தேதியிடலாம். ஆனால் நடைமுறையில் வங்கியர் அவ்வாறு செய்வது கிடையாது. ஒருவேளை காசோலையில் ஜுன் 31ம் தேதி என்று ஒரு இல்லாத தேதி குறிப்பிடப்பட்டிருப்பின் அக்காசோலையை ஜுன் 30ம் தேதி அன்று செலுத்துவது தவறாகாது. அதுபோன்று காசோலையில் குறிப்பிடப்பட்டிருக்கும் தேதி ஒரு ஞாயிற்றுக்கிழமையாக

இருந்தால், அது காசோலையைப் பாதிக்காது. அதனை வங்கியர் அடுத்து வரும் திங்கட்கிழமையன்று செலுத்தலாம்.

## பின்தேதி மற்றும் முன்தேதியிடல்

### முன்தேதியிடல்

காசோலை வரைபவர் தான் எழுதும் தேதிக்கு முந்திய தேதி ஒன்றினை காசோலையில் குறிப்பிட்டால் அதனை முன்தேதியிடல் (Antedate) என அழைக்கின்றோம். சான்றாக, *1997* ஜுன் *15*ம் தேதி அன்று வரையப்படும் காசோலையில் *1997* மே *15*ம் தேதி எனக் குறிப்பிட்டால் அது முன்தேதியிட்ட காசோலையாகும். ஒரு வங்கியர், முன்தேதியிடப்பட்ட காசோலை ஒரு காலாவதியான (stale) காசோலையாகிவிட்டதா இல்லையா என்பதை கவனத்திற் கொண்டு செயற்பட வேண்டும். மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு *71 (4) (11)* இன்படி, ஒரு காசோலையை வரைந்தபின், அதனை ஏற்றுக்கொள்ளுதற்குரிய காலவரைக்குள் செலுத்துகைக்காக வங்கியில் சேர்க்க வேண்டும். ஏற்றுக் கொள்ளுவதற்குரிய காலவரை, இத்தனை காலம் என சட்டத்தால் வரையறுக்கப்படாததால் வங்கியியல் நடைமுறை பழக்கத்தின் படியே தீர்மானிக்க வேண்டியுள்ளது.

இந்திய வங்கியியல் நடைமுறை பழக்கத்தின்படி, ஒரு காசோலையில் குறிப்பிட்டுள்ள தேதியிலிருந்து ஆறுமாத காலத்திற்குள் அது வங்கியில் செலுத்தப்பட வேண்டும். ஆறுமாத காலத்திற்குப் பின் வங்கியில் சேர்ப்பிக்கப்படும் காசோலை காலாவதியான (stale) காசோலை எனப்படும். இங்கிலாந்தில் காசோலை காலாவதி நிலை அடைய ஒருவருட காலம் அனுமதிக்கப்படுகிறது.

### பின்தேதியிடல்

காசோலை வரைபவர் தான் வரையும் தேதிக்குப் பிந்திய தேதியை காசோலையில் குறிப்பிட்டால், அது பின்தேதியிட்ட காசோலை என அழைக்கப்படும். சான்றாக, *1997* ஜுன் *15*ம் தேதி வரையப்படும் காசோலையில் *1997* ஜுலை *15*ம் தேதி

எனக் குறிப்பிட்டால், அது பின்தேதியிட்ட (post-date) காசோலையாகும். அக்காசோலைக்கு ஜூலை 15ஆம் தேதி அன்றுதான் வங்கியிலிருந்து பணத்தைப் பெற இயலும். ஜூலை 15ம் தேதி அன்று, செலுத்தும் வங்கியர், இக்காசோலை ஏற்கனவே பின்தேதியிடப்பட்டிருந்த காசோலை எனக்கூறி, அதனை அவமதிக்க இயலாது. *அனில்குமார் சாஹ்னி எதிராக குல்சான் ராய்* (Anil Kumar Sawhney Vs Gulshan Rai) என்ற வழக்கில் இவ்வாறு திர்ப்பளிக்கப்பட்டுள்ளது :–

"ஒரு பின்தேதியிடப்பட்ட காசோலை, அக்காசோலையில் வரைந்திருக்கும் தேதி வரும் வரை ஒரு மாற்றுச் சீட்டாகத் திகழும். அதன்மேல், வரையப்பட்டிருக்கும் தேதியிலிருந்து அது ஒரு காசோலையாகக் கருதப்படும்".

**வங்கியரும் பின்தேதியிட்ட காசோலையும்**

பின்தேதியிட்ட காசோலையை, அந்த தேதிக்கு முன்பாகவே ஒரு செலுத்தும் வங்கியர் மதித்துப் பணம் வழங்கினால் அவர் பின்வரும் இன்னல்களுக்கு ஆளாவார் :

(1) காசோலையின் வரைவிலக்கணப்படி, அது கேட்டவுடனே கொடுக்கவேண்டிய ஆவணமாகும். ஆனால் பின்தேதியிடப்பட்ட காசோலை மேற்கூறிய வரைவிலக்கணத்தை மீறுகின்ற ஆவணமாக இருப்பதினால் அதனை ஒரு காசோலையாகவே கருதக்கூடாது. அக்காசோலைக்கு உரிய தேதிக்கு முன்பாகப் பணம் செலுத்தினால் வங்கியர் அப்பணத்தை இழக்க நேரிடும்.

(2) காசோலை என்பது வாடிக்கையர் வங்கியருக்கு விடுக்கும் செலுத்தும் ஆணையே. ஆகவே உரிய தேதிக்கு முன்பாகப் பணம் செலுத்தினால் அது வாடிக்கையரின் ஆணையை அவமதிப்பதற்கு ஒப்பாகும். இச்சூழ்நிலையில், வங்கியர் வாடிக்கையருக்கு பொறுப்பாவார்.

(3) உரிய தேதிக்கு முன் வாடிக்கையரின் கணக்கில் பின்தேதியிட்ட காசோலையின் தொகையைப் பற்று வைக்க வங்கியருக்கு எந்தவித உரிமையும் கிடையாது. அவ்வாறு பற்று வைத்தால் அந்த பற்றுப் பதிவை மீண்டும் நேர்செய்ய வேண்டிய நிலை ஏற்படும்.

(4) சில வேளைகளில் வாடிக்கையர் ஒரு காசோலையை, செலுத்துகை நிறுத்தல் ஆணை மூலம் நிறுத்தி வைக்கும் நோக்கத்தோடு அதனை வேண்டுமென்றே பின்தேதியிட்டு அனுப்பியிருக்கலாம். ஏற்கனவே அக்காசோலைக்கு வங்கியர் பணம் செலுத்தியிருந்தால் அந்தத் தடை ஆணையைச் செயலாக்க முடியாது. இதுவும் வாடிக்கையரின் ஆணையை அவமதிப்பதற்கு ஒப்பாகும்.

(5) பின்தேதியிட்ட காசோலைக்கு முன்கூட்டியே பணம் செலுத்தப்படுமாயின், அது காசோலையின் வெளிப்படையான நோக்கத்திற்குப் புறம்பாக வங்கியர் செயல்படுவதாகும். அவ்வாறு செயல்படும்போது, அந்தச் செலுத்துதல் முறைப்படி செலுத்துதல் (payment in due course) ஆகாது. எனவே வங்கியருக்கு சட்டமுறைப் பாதுகாப்பு கிடைக்காது.

(6) வாடிக்கையர் பின்தேதியிட்டு ஒரு காசோலையை வழங்கி, அதற்கு வங்கியர் பணம் செலுத்திய பிறகு வாடிக்கையர் சரியான தேதியிட்ட காசோலை ஒன்றினை அனுப்பியிருப்பாராயின், வாடிக்கையரின் கணக்கில் பணம் இல்லாத காரணத்தால் இரண்டாவது காசோலையை அவமதிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படும். அவ்வாறு அவமதித்தால் அதைத் தவறான அவமதிப்பு என்று கருதி வாடிக்கையர் இழப்பீடு கோரி வங்கியர் மீது வழக்குத் தொடரலாம்.

(7) பின்தேதியிட்ட காசோலையை அதன் உரிய தேதிக்கு முன்னர் செலுத்தியிருந்தால், அக்காசோலை முதிர்வு

அடையும் தேதிக்குமுன், வாடிக்கையர் நொடித்துவிட்டாலோ அல்லது இறந்து விட்டாலோ அவரது கணக்கில் அத்தொகையைப் பற்று வைக்க வங்கியருக்கு உரிமை கிடையாது.

(8) மேலும் பின்தேதியிட்ட காசோலை குறியிடப்பட்டிருக்குமாயின் அக்குறியிடல் (Marking) செல்லாது என்று *பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட் எதிராக பாங்க் ஆப் பரோடா* என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

ஆகவே பின்தேதியிட்ட காசோலை, அத்தேதிக்கு முன்னரே வங்கியில் சமர்ப்பிக்கப்படுமாயின், உடனே வங்கியர் அதனை 'பின்தேதியிடப்பட்டுள்ளது' என்று குறிப்பிட்டு திருப்பி அனுப்பிவிடவேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் பின்தேதியிட்ட காசோலையை உரிய தேதிக்கு முன்பாக வங்கியர் செலுத்தக் கூடாது.

### (2) பெறுநர் பகுதி

ஒரு காசோலையை வரைபவர் அக்காசோலையின் தொகையை யாருக்குச் செலுத்தும்படி விரும்புகின்றாரோ அவரே பெறுநர் எனப்படுவார். காசோலையின் இலக்கணப்படி பெறுநர் ஒரு குறிப்பிட்ட நபராக இருத்தல் அவசியம். மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 7(1)இன்படி, ஒரு காசோலை அதனைக் கொணர்வோருக்குச் செலுத்தத்தேவையில்லை என்றால், பெறுநரைக் குறிப்பிடுதல் அவசியம். ஆகவே கொணர்வோர் காசோலையைப் பொறுத்தவரையில் பெறுநரின் பெயர் குறிப்பிடத் தேவையில்லை. ஆனால், காசோலை ஆணை காசோலையாக இருப்பின், பெறுநர் பகுதியை நிரப்பித் தருதல் அவசியமாகும்.

### (3) தொகைப் பகுதி

வங்கியியல் நடைமுறைப்படி, ஒரு காசோலையின் தொகையை எழுத்தாலும், எண்ணாலும் திட்டவட்டமாகக் குறிக்க வேண்டும். எழுத்தில் ஒரு தொகையும், எண்ணில் மற்றொரு

தொகையும் குறிப்பிடப்பட்டிருந்தால், பெரும்பாலும் அக்காசோலையை மதியார். தொகையை எழுத்தில் எழுதிய பின்னர் அதைத் தொடர்ந்து எந்தவித இடைவெளியுமின்றி "மட்டும்" என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும். சான்றாக ரூபாய் நூறு மட்டும் என்று எழுதுதல் தேவை. அதுபோலவே, தொகையை எண்ணால் குறிப்பிட்ட பின்னர் அதைத் தொடர்ந்து எந்தவித இடைவெளியுமின்றி ஒரு சாய்வுக்கோடும் (stroke) மற்றும் ஒரு தட்டைக்கோடும் (dash) இட வேண்டும். சான்றாக ரூ.100/- என்றே வரையவேண்டும். காசோலை வரைபவர் தொகையைக் குறிப்பிடும்போது அத்தொகையில் ஏதாவது மாற்றங்கள் அல்லது எழுதியதன் மீதே எழுதுதல் போன்றவை இருப்பின், அதனைத் தமது முழுக்கையொப்பத்தால் உறுதிப்படுத்த வேண்டும்.

**(4) கையொப்பப் பகுதி**

கையொப்பப் பகுதி ஒரு முக்கிய பகுதியாகும். மேற்கூறிய பகுதிகளை காசோலையில் நிரப்பிவிட்டு, கடைசியாக அதனை வரைபவர் கையொப்பமிட வேண்டும். அக்காசோலையில் உள்ள அவரது கையொப்பம் அவரது மாதிரிக் கையொப்பத்தை ஒத்திருக்க வேண்டும். அவ்வாறு இல்லாவிடின், வங்கியர் காசோலையைத் திருப்பி அனுப்பிவிடுவர். எழுத்தறிவற்றோரைப் பொறுத்தவரையில், அவர்கள் தங்களது இடது கைப் பெருவிரல் குறி இடவேண்டும். அதுவே அவர்களது கையொப்பமாகக் கருதப்படும்.

## வங்கியர் காசோலை

வாடிக்கையர் காசோலை பற்றிய செய்திகளையே இதுவரை ஆராய்ந்தோம்; வாடிக்கையர் காசோலை தவிர 'வங்கியர் காசோலை'யும் இன்று வங்கியரிடையே புழக்கத்திற்கு வந்துள்ளது. ஒரு வங்கியர் தமக்குத் தாமே வரைந்து கொள்ளும் காசோலையை 'வங்கியர் காசோலை' எனப்படும். பாரத மாநில வங்கிதான் 1976ஆம் ஆண்டில் முதன்முதலாக வங்கியர் காசோலையை அறிமுகப்படுத்தியது.

உள்ளூர் செலுத்துதலுக்கு மட்டுமே வங்கியர் காசோலையைப் பயன்படுத்துவர். வங்கிப் பணவிடையை உள்ளூர் செலுத்துதலுக்கு பயன்படுத்த இயலாததாகையால் வங்கியர் காசோலை உள்ளூர் செலுத்துகைக்கு மிகுந்த அளவில் பயன்படுத்தப்படுகிறது. வங்கியர் காசோலையை எந்த வங்கிக் கிளை அளிக்கிறதோ அதே வங்கியில்தான் பணமாக்க இயலும். வங்கியர் காசோலையை மற்றொருவருக்கு மாற்றித் தர இயலாது. வங்கிக் காசோலைக்கு எந்தவிதமான கழிவும் கிடையாது. எனினும், உள்ளூர் செலுத்துகைக்குப் பயன்படுவதால் வங்கியரிடையே இக்காசோலை பெரிதும் விரும்பிப் புழங்கப்பெறும் நிலையை அடைந்துள்ளது.

## பயிற்சி வினாக்கள்

### ஒரு பக்க விடைக்குரியவை

*(1)* காசோலையின் இலக்கணம் தந்து அது ஒரு நிபந்தனையற்ற ஆணை என்பதனை நிறுவுக.

*(2)* "எல்லாக் காசோலைகளும் மாற்றுச் சீட்டே; ஆனால் எல்லா மாற்றுச் சீட்டுகளும் காசோலை ஆகா" விவாதிக்க.

*(3)* காசோலை மற்றும் வங்கிப் பணவிடை - இவற்றை வேறுபடுத்துக.

*(4)* எச்சூழ்நிலைகளில் பணமில்லாமல் காசோலை வரைவது சட்டப்படி குற்றமாகும்?

*(5)* பணமில்லாமல் காசோலை வரைவது பற்றி மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 138இல் கூறப்பட்டுள்ள விதிகளைக் கூறுக.

*(6)* பின்தேதியிட்ட காசோலையை ஒரு வங்கியர் அந்த தேதிக்கு முன்பாகவே மதிப்பாரானால், அவர் என்னென்ன இன்னல்களுக்கு ஆளாவார்?

(7) பின்தேதியிட்ட காசோலையை காலாவதியான காசோலையிலிருந்து வேறுபடுத்துக.

(8) வங்கியர் காசோலை என்பது யாது? அதுவும் வாடிக்கையரின் காசோலையும் ஒன்றா?

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

---

(1) காசோலையின் இலக்கணம் தந்து அதனின் சிறப்பியல்புகளை விவரிக்க.

(2) மாற்றுச்சீட்டின் இலக்கணம் தந்து அதனை காசோலையிலிருந்து வேறுபடுத்துக.

(3) முன்தேதியிட்ட காசோலை மற்றும் பின்தேதியிட்ட காசோலை என்பனவை பற்றி நீவிர் அறிவது யாது? அவைகளினால் ஒரு வங்கியருக்கு ஏற்படும் இன்னல்கள் யாவை?

(4) பணமில்லாமல் காசோலை வரைவது பற்றி மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 138இல் கூறப்பட்டுள்ள விதிகளை தக்க வழக்குகளின் வாயிலாக விளக்கமாக விவரிக்க.

6

# கருநிலைத்திருத்தம்
## (MATERIAL ALTERATION)

"ஒரு ஆவணத்திலுள்ள சட்டரீதியான மூலச் செய்தியை மாற்றி விடும்படியாக, அந்த ஆவணத்தில் செய்யப்படும் திருத்தமே கருநிலைத்திருத்தம்".

**ஒரு காசோலை வரைந்தபின், அதனை வரைந்தவரின் ஒப்புதலின்றி பல மாற்றங்கள் அக்காசோலையில் ஏற்படலாம். அவ்வாறு ஏற்படும் மாற்றங்கள், கருநிலைத் திருத்தமாகவோ அல்லது கருநிலைத் திருத்தமல்லாமலோ அமையலாம். ஒரு காசோலையில் ஏற்படக்கூடிய திருத்தம், அதனின் அடிப்படைத் தன்மையையே பாதிக்குமானால் அதனைக் கருநிலைத்திருத்தம் எனக்கூறலாம்.** "ஒரு ஆவணத்தில் ஏற்படக்கூடிய திருத்தம், அந்த ஆவணம் திருத்தத்திற்கு முன் சட்டரீதியாக எச்செய்தியைப் பேசியதோ அச்செய்தியைத் திருத்தத்திற்குப் பின் வேறுவகையாக பேசவைப்பதே" **கருநிலைத் திருத்தம் எனக் கூறலாம். இவ்வாறு திருத்தம் செய்யப்பட்ட காசோலை செல்லாத காசோலையாக மாறிவிடும்.**

***எந்தவித திருத்தங்கள் கருநிலைத்திருத்தங்களாகக் கருதப்படும்?***

**ஒரு திருத்தம் கருநிலைத்திருத்தமாகக் கருதப்பட, கீழ்க்காணும் தன்மைகளைப் பெற்றிருத்தல் வேண்டும்:-**

**(1) ஆவணத்தில் இடம்பெறும் திருத்தம் அந்த ஆவணத்தின் அடிப்படைத் தன்மையைப் பாதிக்குமாறு இருத்தல் வேண்டும்.**

(2) ஆவணத்தின் மீது தொடர்புடைய நபர்களின் உரிமைகளும் பொறுப்புகளும் மாற்றப்பட்டிருத்தல் வேண்டும்.

(3) ஆவணத்தின் சட்டரீதியான தன்மையை மாற்றியிருத்தல் வேண்டும்.

(4) ஆவணம் முன்பு கூறிய செய்தியை மாற்றி வேறு செய்தியைக் கூறுவதாக அமைதல் வேண்டும்.

(5) திருத்தம் காசோலை வரைபவருக்குத் தெரியாமல் நடந்திருக்க வேண்டும்.

(6) திருத்தம் காசோலையை அனுப்பிய பின்னர் செய்யப்பட்டதாக இருத்தல் வேண்டும்.

**கருநிலைத் திருத்தத்தின் விளைவு**

ஒரு காசோலையில் கருநிலைத்திருத்தம் செய்யப்பட்டிருப்பின், மாற்றுமுறை ஆவணச் சட்டம், பிரிவு 87ன்படி அந்தக் காசோலை ஒரு செல்லாத காசோலையாகிவிடும். எனவே அக்காசோலையைச் செலுத்தும் வங்கியர் அவமதிப்புச் செய்ய வேண்டும். கருநிலைத் திருத்தம் செய்யப்பட்ட ஒரு காசோலை சட்டப்படி செல்லாத தன்மையைப் பெற்றுவிடும்.

மேலும், காசோலையில் யார் கருநிலைத் திருத்தம் செய்கின்றாரோ, அவர் அக்காசோலையின் மீது தொடர்ந்து பொறுப்பாளியாகவே இருப்பார். அவருக்கு முந்தைய நபர்கள் அனைவரும் தங்களது பொறுப்பிலிருந்து விடுபட்டுவிடுவர். ஆனால், அவருக்குப் பின்னால் அக்காசோலையைப் பெறும் அனைவரும் அக்காசோலையின் மீது தொடர்ந்து பொறுப்பாளியாகவே இருப்பர்.

**வழக்கின் வாயிலான சான்று**

*சிலிங்ஸ்பி அன்டு அதர்ஸ் எதிராக வெஸ்ட்மின்ஸ்டர் பாங்கு*

(Slingsby & Others Vs Westminster Bank) என்ற வழக்கில் 'ஜான் பிரஸ்ட் & கம்பெனிக்குச்' செலுத்தும்படியாக எழுதப்பட்ட காசோலை 'ஜான் பிரஸ்ட் & கம்பெனி கம்பர்பெர்ச் & பாட்ஸ் வழியாக' (per Cumberbirch & Potts) என்று கருநிலை மாற்றம் செய்யப்பட்டு, வெஸ்ட்மின்ஸ்டர் வங்கியிடம் அதனை வசூலிக்கும்படியாக ஒப்படைக்கப்பட்டது. இக்கருநிலை மாற்றம் செய்யப்பட்டதை அறியாது வெஸ்ட்மின்ஸ்டர் வங்கியும் கம்பர்பெர்ச் & பாட்ஸ் ஆணைப்படி அக்காசோலையை வசூலித்தது. பின்னர் இதைக் கண்டுபிடித்த சிலிங்ஸ்பி அன்டு பிரதர்ஸ், கருநிலை மாற்றத்தைக் கருத்திற் கொள்ளாத காரணத்திற்காக வெஸ்ட்மின்ஸ்டர் வங்கி மீது வழக்குத் தொடர்ந்தது. வழக்கை விசாரித்த ஃபின்லே என்ற நீதிபதி, வெஸ்ட்மின்ஸ்டர் வங்கி பொறுப்பாகாது என்ற திட்டவட்டமான தீர்ப்பை வழங்கினார். ஏனெனில், அக்காசோலை வெஸ்ட்மின்ஸ்டர் வங்கியரிடத்து வந்தபோது அது காசோலையாகக் கருதப்பட இயலாது. மேலும் அந்த வங்கி ஒரு வசூலிக்கும் வங்கியாகவே செயல்பட்டது. ஒரு செல்லாத காசோலை மீது வங்கியரைப் பொறுப்பாளியாக்க முடியாது. ஆனால், இதே காசோலை செலுத்தும் வங்கியரிடம் வந்து அவர் அதன்மீது பணம் செலுத்தியிருப்பாராயின், அவர் பொறுப்பாளியாவார். மேற்கூறிய வழக்கில், செலுத்தும் வங்கியராகச் செயற்பட்டது டிஸ்ட்ரிக் பேங்க். ஆகவே ஸ்லிங்ஸ்பி & அதர்ஸ், டிஸ்டிரிக் பேங்க் மீது பின்னர் வழக்குத் தொடரவே டிஸ்ட்ரிக் பேங்க் கருநிலை மாற்றம் செய்யப்பட்ட காசோலையைச் செலுத்தியதால் அந்த வங்கி அதற்குப் பொறுப்பேற்க வேண்டும் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

## கருநிலைமாற்றத்துக்குச் சான்றுகள்

காசோலையில் ஏற்படும் சில மாற்றங்களே கருநிலை மாற்றமாகக் கருதப்படும். இம்மாற்றங்கள் காசோலையின் வெளிப்படையான நோக்கத்தையே மாற்றுவதாக அமைகின்றன. இவ்வகையான கருநிலை மாற்றங்களுக்கான சான்றுகள் பின் வருமாறு:-

**(1) தேதியைத் திருத்துதல் அல்லது மாற்றம் செய்தல் (Alteration of date)**

ஒரு காசோலையில் தேதியானது இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. ஏனெனில் ஒரு காசோலையில் பணம் பெறுவதற்கான காலவரையறையை இந்த நாள்தான் தீர்மானிக்கின்றது. எனவே தேதியை திருத்தம் செய்வதின் மூலம், ஒரு காசோலையை முன்தேதியிட்ட அல்லது பின்தேதியிட்ட காசோலையாக எளிதாக மாற்றிவிடலாம். காசோலையை வரைந்தவரின் ஒப்புதலின்றி இத்திருத்தம் செய்யப்பட்டிருப்பின் அதனைக் கருநிலைத் திருத்தம் எனலாம்.

**(2) செலுத்தப்படும் இடத்தை திருத்துதல் (Alteration of place of payment)**

வாடிக்கையர், எந்த ஒரு குறிப்பிட்ட வங்கியில், எந்த ஒரு குறிப்பிட்ட கிளையில் தமது கணக்கினை வைத்துள்ளாரோ, அந்த வங்கிக்கிளையின் மீது வரையப்படும் ஆவணமே காசோலை. எனவே, கிளையின் பெயர் காசோலையில் திருத்தம் செய்யப்பட்டிருப்பின், அதனைக் கருநிலைத் திருத்தமாகக் கருதி, அக்காசோலையை, செலுத்தும் வங்கியர் அவமதித்து விடுவர்.

**(3) கிறலைத் திருத்துதல் (Alteration of crossing)**

சட்டப்படி, கிறல் ஒரு காசோலையின் முக்கிய பகுதியாகக் கொள்ளப்படுகிறது. எனவே கிறல் தொடர்பான எந்தத் திருத்தமும் ஒரு காசோலை வரைபவரின் ஒப்புதலின்றி செய்யப்பட்டிருப்பின், அது ஒரு கருநிலைத் திருத்தமாகவே அமைகின்றது. சான்றாக :

(அ) 'மாற்றுமுறைத் தன்மை அற்றது' என்று கிறலில் காணப்படும் சொற்களை அகற்றிவிடல்.

(ஆ) கிறலை, அதனை வரைந்தவரின் ஒப்புதலின்றி நீக்கிவிடல்.

(இ) சிறப்புக் கிறலைப் பொதுக்கிறலாக மாற்றுதல்.

**(4) 'ஆணை' என்ற சொல்லைக் 'கொணர்பவர்' எனத் திருத்துதல் (Alteration of the word 'order' into 'bearer')**

ஒரு ஆணைக் காசோலையில் காணப்படும் 'ஆணை' என்ற சொல்லைக் 'கொணர்பவர்' எனத் திருத்தம் செய்தால், அந்தக் காசோலை, கொணர்பவர் காசோலையாக மாறிவிடும். அக்காசோலை மூலமாக யார் வேண்டுமென்றாலும் பணம் பெற இயலும். இத்திருத்தம் அக்காசோலையை வரைந்தவரின் நோக்கத்திற்கு எதிரானது. எனவே இத்திருத்தம் ஒரு கருநிலைத் திருத்தம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஒரு காசோலையில் காணப்படும் 'கொணர்பவர்' என்ற சொல்லை 'ஆணை' என்று திருத்தம் செய்தால், அத்திருத்தம் ஒரு கருநிலைத் திருத்தமாகாது. ஏனெனில் யார் வேண்டுமென்றாலும் பணம் பெறலாம் என்ற காசோலையை, ஒரு குறிப்பிட்ட நபர்தான் பெறமுடியும் என்று பொருள்படும்படி திருத்துவதில் எந்தத் தவறும் இல்லை.

**(5) பணம் பெறுபவரின் பெயரைத் திருத்துதல் (Alteration of payee's name)**

ஒரு காசோலையில் பணம் பெறும் உரிமை உடையவரின் பெயரை அதனை வரைந்தவர் குறிப்பிடுதல் அவரது கடமை. அப்பெயரை மாற்றம் செய்தால், பணம் பெறுபவர் வேறொரு நபராக மாறிவிடுவார். எனவே, அத்திருத்தம் ஒரு கருநிலைத் திருத்தமாகும். *ஸ்லிங்ஸ்பி & அதர்ஸ் எதிராக டிஸ்ட்ரிக் பாங்க்* (Slingsby & Others Vs District Bank) என்ற வழக்கில் பணம் பெறுபவரின் பெயர் காசோலை வரைந்தவராகிய ஸ்லிங்ஸ்பி & அதர்ஸ் அவர்களுக்குத் தெரியாமல் திருத்தப்பட்டிருந்தது. அத்திருத்தம் ஒரு கருநிலைத் திருத்தம் என்றும், அக்காசோலை செல்லாதது என்றும், மற்றும் அதனைச் செலுத்திய தவறுக்கு 'டிஸ்ட்ரிக் வங்கியே' பொறுப்பு ஏற்க வேண்டும் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

**(6) தொகையைத் திருத்துதல் (Alteration of amount)**

ஒரு காசோலையில் மிகவும் முக்கியமான பகுதி தொகைப் பகுதியேயாகும். நேர்மையற்றவர்கள் மோசடி செய்யும்

நோக்கோடு தொகையைத் திருத்தம் செய்ய முற்படுகின்றனர். அவர்கள் தொகையை எளிதாக மாற்றி எழுதி அதிக இலாபம் அடையும் நோக்குடன் செயல்படுகின்றனர். சான்றாக, ரூ.10க்கு எழுதப்பட்ட காசோலையை மிகவும் எளிதாக ரூ.1000க்கு அல்லது ரூ.10,000க்கு எனத் திருத்திவிடலாம். இத்திருத்தத்தைக் கண்டுபிடிப்பது எளிதன்று. தொகையை எழுதியதை அடுத்து வெற்றிடமாக விடப்பட்டிருக்கும் இடத்தில் இத்தகைய திருத்தங்களைச் செய்கின்றனர். எனவே செலுத்தும் வங்கியர் காசோலைக்குப் பணம் வழங்குமுன் காசோலையில் எழுதப்பட்ட தொகையைக் கவனமாகப் பரிசீலனை செய்ய வேண்டும்.

சில சூழ்நிலைகளில், காசோலையை வரைபவரின் கவனக்குறைவால் அக்காசோலையில் திருத்தங்கள் செய்ய மிகுதியான வாய்ப்புண்டு. இவ்வாறான திருத்தங்களுக்கு வாடிக்கையரின் செய்கையே துணைபுரிவதால், இத்திருத்தங்கள் வாடிக்கையர் தாமாகவே அனுமதித்த திருத்தங்கள் போலத் தோன்றக் கூடியவை. எனவே, இத்திருத்தங்களுக்கு ஒரு வங்கியர் பொறுப்பாளி ஆவாரா? என்ற வினா நம்மிடை எழுவது இயல்பே! இதற்கான விடையினைக் கீழ்க்காணும் குறிப்புகள் வாயிலாக நாம் அறியலாம் :-

(1) ஒரு காசோலையில் தொகை திருத்தம் செய்யப்பட்டு அத்திருத்தம் வெளிப்படையாகத் தோன்றுமானால், செலுத்தும் வங்கியர் அக்காசோலையை மதிக்கக் கூடாது. அவர் அக்காசோலையை மதிப்பாரானால், அதனை மதித்த குற்றத்திற்காக அதனை வரைந்தவருக்கு அவர் பொறுப்பாளி ஆவார்.

(2) ஒரு காசோலையில் துல்லியமாக, கண்டுபிடிக்கவே இயலாத வண்ணம் திறமையுடன் தொகை திருத்தப்பட்டிருந்தாலும், வங்கியர் அக்காசோலையை அவமதிக்க வேண்டும். இல்லையெனில், அவரே அதற்குப் பொறுப்பேற்க நேரிடும். வங்கியர் களங்கமற்றவராகச் செயலாற்றியிருப்பினும் தவறுக்குப் பொறுப்பாளியாகவே கருதப்படுவார்.

(3) மேற்கூறிய விதிக்கு ஒரு விதிவிலக்குண்டு. அதாவது, ஒரு வாடிக்கையர் காசோலையை வரையும்போது அதில் மோசடி செய்யத் தூண்டும் வகையில் வரைந்திருப்பாராயின், பின்னர் 'அக்காசோலை மோசடியினால்' ஏற்படும் இழப்புகட்கு அதனை வரைந்த வாடிக்கையரே பொறுப்பாளியாவார். சான்றாகக் காசோலை வரையும்போது, தனது கவனக்குறைவால், தொகைக்கு முன்னும் பின்னும் இடம்விட்டு ஒரு வாடிக்கையர் வரைந்திருப்பாராயின், அதனால் நிகழக்கூடிய தொகைத்திருத்தமாகிய குற்றத்திற்கு வங்கியர் பொறுப்பாளியாக மாட்டார். எனவே ஒரு வாடிக்கையர் மிகுந்த கவனத்துடன் தமது காசோலையை வரைய வேண்டும். வாடிக்கையர் மிகுந்த கவனத்துடன் தமது காசோலையை வரையவேண்டிய செயல் அவர் தமது வங்கியருக்குச் செய்யவேண்டிய கடமையாம் என்று எடுத்துக் கொள்ளலாம்.

(4) ஒரு திருத்தத்தைப் பொறுத்தவரை வங்கியரும் மற்றும் வாடிக்கையரும் குற்றமற்றவர்களாக இருப்பின், அத்திருத்தத்தால் ஏற்படும் இழப்புக்கு வங்கியரே பொறுப்பாளியாவார்.

**சான்றுகளாகச் சில வழக்குகள்**

**(1) யங் எதிராக க்ரோட் (Young Vs Grote)**

மேற்கூறிய வழக்கில் யங் என்பவர் தனது மனைவியிடம் தனது வாணிபத்திற்காகப் பயன்படுத்தும் பொருட்டு தான் கையொப்பமிட்ட வெற்றுக் காசோலைகளைக் கொடுத்திருந்தார். ஒருமுறை அவரது மனைவி ஒரு அலுவலகரிடம் கூலி செலுத்துவதற்காக £ 30-2-3க்கு காசோலை வரையும்படி உத்தரவிட்டார். அந்த அலுவலகர் அத்தொகையை, £ 350-2-3க்கு என்று எளிதாக எண்ணிலும், எழுத்திலும் திருத்துவதற்கு ஏற்றாற்போல் வரைந்திருந்தார். இதனைக் கண்டுபிடிக்க முடியாததால் அந்தக் காசோலை மதிக்கப்பட்டது. இதனைக் கண்டுபிடித்து யங் வங்கியர் மீது வழக்குத் தொடுத்தார்.

வழக்கின் தீர்ப்பில் வங்கியர் பொறுப்பேற்கத் தேவையில்லை என்று அறிவிக்கப்பட்டது. வாடிக்கையரின் கவனமின்மையால் ஏற்படும் இழப்புக்கு வங்கியர் பொறுப்பாகார் என்றும், மேலும் அத்திருத்தம் வெளிப்படையாகத் தோன்றவில்லை என்பதால் வாடிக்கையரே பொறுப்பாளியாவார் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது.

**(2) லண்டன் ஜாயின்ட் ஸ்டாக் பாங்க் எதிராக மேக்மில்லன் அன்டு ஆர்தர் (London Joint Stock Bank Vs Macmillan and Arthur)**

மேக்மில்லன் அன்டு ஆர்தர் ஒரு கூட்டாண்மை நிறுவனமாகச் செயல்பட்டது. அந்த நிறுவனத்தினர் காசோலை வரையும் பொறுப்பை ஒரு அலுவலகரிடம் ஒப்படைத்திருந்தனர். ஒரு சமயம், அந்த அலுவலர் £ 2க்கு ஒரு காசோலை வரைந்தார். காசோலை வரையும்போது தொகையை எண்ணால் மட்டும் குறிப்பிட்டிருந்தார். தொகைக்கு முன்னும் பின்னும் வெற்றிடமாக இருந்தது. அந்தக் காசோலையில் கூட்டாண்மை நிறுவனத்தின் கையொப்பத்தைப் பெற்ற பிறகு, அந்த அலுவலகர் காசோலையின் தொகையை மிகவும் எளிதாக £ 120 என திருத்தி தொகையை எழுத்தாலும் குறிப்பிட்டுவிட்டார். இதனை அறியாது, வங்கியர் அக்காசோலைக்குப் பணம் செலுத்திவிட்டார். இந்த மோசடியைக் கண்டுபிடித்த பின்னர், அந்த கூட்டாண்மை நிறுவனம் வங்கியர் மீது கருநிலைத்திருத்தம் செய்யப்பட்ட காசோலைக்குப் பணம் செலுத்தியதற்காக வழக்கு தொடுத்தது.

மேற்கூறிய வழக்கில், வாடிக்கையரின் கவனக்குறைவால் வரையப்பட்ட காசோலையில் ஏற்படும் இழப்புக்கு வங்கியர் பொறுப்பாளியாக மாட்டார் என்று திட்டவட்டமான தீர்ப்பு வழங்கப்பட்டது. மேற்கூறிய வழக்கில் நீதிபதி ஃபின்லே கீழ் வருமாறு கூறியுள்ளார் :–

"ஒரு வங்கியரைத் தவறாக வழி நடத்தா வண்ணம் ஒரு வாடிக்கையர் மிகுந்த கவனத்துடன் காசோலையை வரைதல் வேண்டும். மோசடியைத் தூண்டும் அளவிற்குக் காசோலையை வரைவாரானால், அவர் தமது கடமையை மீறின குற்றத்திற்காளாவார். அதனால் ஏற்படும் இழப்பிற்கு அவரே வங்கியருக்குப் பொறுப்பாளி ஆவார்".

### (3) ஹால் எதிராக ஃபுள்ளர் (Hall Vs Fuller)

மேற்கூறிய வழக்கில் £ 2க்கு எழுதப்பட்ட காசோலை அழிக்கப்பட்டு £ 200 என திருத்தப்பட்டிருந்தது. இதற்கு வாடிக்கையர் பொறுப்பாளி அல்லர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது. ஏனெனில், வாடிக்கையர் தமது கவனக்குறைவால் அக்காசோலையை வரையவில்லை. ஒரு திருத்தத்தைப் பொறுத்த வரையில் வாடிக்கையரும் மற்றும் வங்கியரும் குற்றமற்றவராகச் செயற்படும்போது, வங்கியரே அதற்குப் பொறுப்பாளியாவார்.

**(4) ஸ்கோல்ஃபீல்ட் எதிராக ஏர்ல் ஆஃப் லேன்டஸ்பரோ (Scholefield Vs Earl of Landesborough)** என்னும் வழக்கில், மேற்கூறிய விதிகள் யாவும் காசோலைக்கு மட்டுமே பொருந்தக் கூடியவை எனவும், மாற்றுச் சீட்டிற்கு இவை பொருந்தா எனவும் தீர்ப்பு வழங்கப்பட்டது.

### வேற்று ஆள் செய்யும் கருநிலைத் திருத்தம்

காசோலை ஒன்றில் வேற்று ஆளொருவர் செய்கின்ற கருநிலைத் திருத்தம் காசோலையை உடையவர் செய்கின்ற திருத்தமாகவே கொள்ளப்படும். காசோலையை மோசடிக்குட்படாமல் பாதுகாத்து வைத்தல் அவரது கடமையாதலால், அதனை மீறி நிகழும் திருத்தங்கட்கு அவரே பொறுப்பேற்க வேண்டும்.

### கருநிலைத் திருத்தமும் வங்கியரும்

(1) கருநிலைத் திருத்தம் செய்யப்பட்ட காசோலை ஒரு செல்லாத (invalid) காசோலையாகக் கருதப்படுகிறது. எனவே, செலுத்தும் வங்கியர் அக்காசோலைக்குப் பணம் செலுத்தக்கூடாது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் அந்தக் காசோலையை மதிக்கக் கூடாது.

(2) அக்காசோலையில் "திருத்தம் செய்யப்பட்டுள்ளது, வரைந்தவரின் ஒப்புதல் தேவை" என்று குறிப்பிட்டு, வரைந்தவரின் ஒப்புதலுக்காக அதனைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும்.

(3) அக்காசோலையை எழுதியவர் தனது முழுக் கையொப்பம் மூலமாக கருநிலைத் திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். வரைபவரின் கையெழுத்துச் சுருக்கத்தை ஏற்றுக் கொள்ளக்கூடாது

(4) இருவர் அல்லது அதற்கு மேற்பட்டோர் அக்காசோலையை வரைந்திருந்தால், அனைவரும் தங்களது முழுக்கையொப்பம் மூலமாக கருநிலைத் திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும்.

(5) வாடிக்கையர் ஒரு கூட்டுப் பங்கு நிறுவனமாக இருந்தால், அந்நிறுமத்தின் கணக்கைச் செயற்படுத்தும் அதிகாரம் கொண்டவர்கள் கருநிலைத்திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும்.

(6) ஒரு கூட்டு வாணிப நிறுவன வாடிக்கையரைப் பொறுத்தவரையில், யாரேனும் ஒரு கூட்டாளி கருநிலைத் திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்கலாம்.

(7) கருநிலைத் திருத்தம் செய்யப்பட்ட காசோலையை வங்கியர் மதிப்பாரானால், கவனக்குறைவாகப் பணியாற்றியதாகக் கருதப்பட்டு, சட்டமுறையிலான பாதுகாப்பை இழக்க நேரிடும்.

(8) கருநிலைத்திருத்தம் செய்யப்பட்ட காசோலைக்கு வங்கியர் பணம் செலுத்துவாராயின், அக்காசோலைக்குரிய பணத்தை வாடிக்கையரின் கணக்கில் பற்று வைக்கும் உரிமை வங்கியருக்குக் கிடையாது. எனவே அந்த பற்றுப் பதிவை வங்கியர் மாற்றியாக வேண்டிய நிலை ஏற்படும்.

(9) கருநிலைத்திருத்தம் வெளிப்படையாகத் தோன்றாத போது அக்காசோலையில் வங்கியர் பணத்தை முறைப்படி செலுத்தியிருந்தால் அவருக்கு மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 89இன் கீழ்

சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப்படும். மேற்கூறிய விதிப்படி *பிரம்ம ஷம் ஸ்ரீ ஜங்க் பகதூர் எதிராக சார்டர்ட் பாங்க் ஆப் இந்தியா, ஆஸ்திரிலேயா மற்றும் சைனா* (Brahma Shum Shere Jung Bahadur Vs Chartered Bank of India, Australia and China) என்ற வழக்கில் வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது.

(10) கருநிலைத் திருத்தம் செய்யப்பட்ட காசோலையில் அதனை வரைந்தவரின் ஒப்புதல் இடம் பெற்றிருந்தால், அக்காசோலைக்கு வங்கியர் பணம் செலுத்தலாம்.

## கருநிலையாகாத் திருத்தம் (Immaterial Alteration)

ஒரு காசோலையின் அடிப்படைத் தன்மை அல்லது வெளிப்படையான நோக்கம் மாறாமலும், வேறு எந்தவிதமான பாதிப்புக்கும் இடமில்லாமலும் அதில் திருத்தங்கள் செய்திருந்தால் அதனைக் 'கருநிலையாகாத் திருத்தம்' என்பர்.

### சான்றுகள்

(1) "கொணர்பவர்" காசோலையை "ஆணைக்" காசோலையாக மாற்றம் செய்தல்.

(2) வரைபவரின் ஒப்புதலோடு செய்யப்படும் திருத்தங்கள்.

(3) ரூபாய் என்ற சொல்லை இருதரம் குறிப்பிட்டுவிட்டபின்னர் அதில் ஒன்றை நீக்கிவிடல்.

## சட்டம் ஏற்கும் திருத்தங்கள்

காசோலையில் நிகழும் சில திருத்தங்கள் கருநிலைத் திருத்தங்கள் போன்றவை எனினும், சட்டத்தின் மூலம் ஒப்புதல் பெற்றவையாகையால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

அவையாவன :

(1) மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 20இன் படி எவரேனும் ஒரு ஆவணத்தின் வெற்றுப் பகுதியை நிரப்புதல்.

(2) மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 49இன் படி, வெற்றுப்புறக்குறிப்பை (Blank Endorsement) முழுப்புறக் குறிப்பாக்குதல் (Full Endorsement).

(3) மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 125இன் படி, கிறல் இல்லாத காசோலை மீது கிறல் இடல்.

**கருநிலைத் திருத்தத்தைத் தடுப்பதற்கான வழிமுறைகள்**

வாடிக்கையர் மற்றும் வங்கியர் நலன் கருதி, ஒப்புதல் அளிக்கப்படாத திருத்தங்களைத் தடுக்கும் நோக்கோடு, இன்றைய வங்கியர் பல வழிமுறைகளைக் கையாளுகின்றனர். அவையாவன:

(1) வேதியற் பொருட்களின் துணைகொண்டு திருத்தங்கள் செய்ய இயலாவண்ணம், காசோலை அச்சிடுவதற்கு வேதியற் பொருட்களால் மாற்றம் ஏற்படுத்த முடியாத சிறப்புத் தன்மை கொண்ட தாள் பயன்படுத்தப்படுகிறது.

(2) காசோலையில் எழுதியுள்ள எழுத்துக்களை அழித்து கருநிலைத்திருத்தம் செய்ய இயலாவண்ணம், காசோலை முழுவதிலும் ஒரு குறிப்பிட்ட வடிவம் அல்லது வங்கியர் பெயர், மிக மிகச் சிறிய எழுத்துக்களால் அச்சடிக்கப்பட்டிருக்கும்.

(3) எழுத்தை மாற்றும் நோக்குடன் அழிக்க முயற்சித்தால், அதன் மேற்பரப்பும் சேர்ந்து எளிதில் அழிந்துவிடக் கூடிய தன்மை கொண்ட தாளால் ஆனது காசோலை என்பதால் அழிக்கும் முயற்சியை எளிதில் மேற்கொள்ள இயலாது.

(4) மேலும் கருநிலைத் திருத்தம் செய்யப்பட்டதைக் கண்டறிய பொறியியல் நுட்பம் மற்றும் பாதுகாப்புத் திறன் கொண்ட கருவிகளைப் பயன்படுத்துகின்றனர்.

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

(1) கருநிலைத்திருத்தம் என்பது யாது? எவ்வித திருத்தங்கள் கருநிலைத்திருத்தங்களாகக் கருதப்படும்?

(2) கருநிலைத்திருத்தத்தின் விளைவினை ஒரு வழக்கின் வாயிலாக விளக்குக.

(3) சட்டத்தின் மூலம் ஒப்புதல் பெற்ற திருத்தங்கள் பற்றி நீவிர் அறிவது யாது? தக்க சான்றுகளுடன் விளக்குக.

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

(1) கருநிலைத்திருத்தம் யாது என்பதனை தக்க சான்றுகளுடன் விளக்குக.

(2) "ஒரு வங்கியரைத் தவறாக வழி நடத்தா வண்ணம் ஒரு வாடிக்கையர் மிகுந்த கவனத்துடன் காசோலையை வரைதல் வேண்டும்" இக்கூற்று காசோலையில் தொகை திருத்தம் செய்யப்படுவதற்கு எவ்வாறு பொருந்தும் என்பதனை தக்க வழக்குகளின் வாயிலாக விவரிக்க.

(3) கருநிலைத்திருத்தம் மற்றும் கருநிலையாகாத் திருத்தம் இவற்றை தக்க சான்றுகளுடன் வேறுபடுத்துக. கருநிலைத் திருத்தத்தைப் பொறுத்தவரை ஒரு வங்கியரின் கடமை யாது?

# கீறல்
# (CROSSING)

"மோசடி செய்தல், ஏமாற்றுதல், பொய்யாவணம் புனைதல் போன்ற தீமைகளிலிருந்து காசோலையைப் பாதுகாக்க உதவும் கருவியே கீறல்".

கிறலிடப்படாத காசோலை பாதுகாப்பற்றது. கிறலிடப்படாத காசோலையைக் கொணர்பவர் நேரடியாக வங்கியரிடம் அதனைக் கொடுத்து மிக எளிதாகப் பணத்தைப் பெற்று விடலாம். இதனால் இவ்வகைக் காசோலை மூலம் மோசடி செய்தல், ஏமாற்றுதல், பொய்யாவணம் புனைதல் போன்ற குற்றங்களைப் புரிதல் எளிதாகின்றது. இத்தகைய தீமைகளிலிருந்து காசோலையைப் பாதுகாக்கும் பொருட்டே கிறலிடும் முறை உருவாயிற்று.

'இன்னல்வழி இன்பம் பிறப்பது' போல வங்கியர் காசோலைகளைப் பரிமாற்றம் செய்து கொள்வதில் ஏற்பட்ட இடர்வழியே பிறந்ததுதான் 'கிறல்'. கிறலிடும் முறையை உருவாக்கிய தீர்வகத்தின் தோற்றத்திற்குக் காரணமாயிருந்த வங்கி அலுவலர் இர்வின் (Irwin) அவர்களை கிறலின் தந்தை எனல் பொருந்தும்.

வங்கியியல் தொடக்க காலத்தில் காசோலைகளைத் தீர்வகத்திற்குக் கொண்டு செல்லும் வழியில் அலுவலர்களைத் தாக்கி அவர்களிடமிருந்து காசோலைகளை வழிப்பறி செய்தனர். இவ்வாறு காசோலைகளைக் கவர்தல் அலுவலரிடையே அச்சத்தை விளைவித்தமையால் தற்காப்புக் கருதியும், ஆபத்தைத் தவிர்க்கவும் தத்தமது வங்கியின் முத்திரைகளைக் காசோலைகள் மீது பதித்து எடுத்துச் செல்லலாயினர். முத்திரை அடையாளம் அவரவர் கணக்குகளை எளிதாக்கி வேலையை விரைந்து முடிக்க உதவியதுடன், திருடப்பட்ட காசோலைகளை இனம் கண்டுகொள்ளவும் துணைபுரிந்தது. இதனால் திருடப்பட்ட

காசோலைகளைப் பணமாக்கவும் இயலவில்லை. முத்திரை மூலம் விளைந்த இத்தகைய நன்மைகளைக் கண்ட மக்கள் தாமும் தமது காசோலைகளில் முத்திரை இடுவது போலக் கிறலிடத் தொடங்கினர். ஆனால் தீர்வகத்திற்கு வெளியே கிறலுக்கு ஒப்புதல் அளிக்கப்படவில்லை. சட்டமும் அதற்கு இடம் தரவில்லை.

1856ஆம் ஆண்டு முதன்முதலாக இங்கிலாந்தில் கிறலுக்குச் சட்ட முறையிலான ஒப்புதல் கிடைத்தது. 1856ஆம் ஆண்டு, சட்டம் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டது :–

(1) ஒரு காசோலையில் 'அண்டு கம்பெனி' என்ற சொற்களைப் பயன்படுத்தியோ அன்றி பயன்படுத்தாமலோ கிறலிடப்பட்டிருக்குமாயின், அக்காசோலையை ஒரு வங்கியர் மூலமாகவே செலுத்தும் வங்கியருக்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

(2) ஒரு காசோலை ஒரு குறிப்பிட்ட வங்கியர் பெயரில் கிறலிடப்பட்டிருக்குமாயின், அக்காசோலையின் பணத்தை அந்த குறிப்பிடப்பட்ட வங்கியருக்கோ அல்லது அவருக்குப் பதிலாக முகவராகச் செயல்படும் வேறொரு வங்கியருக்கோ மட்டும்தான் செலுத்த வேண்டும்.

ஆனால் *சிம்மன்ஸ் எதிராக டெய்லர்* (Simmons Vs Taylor) என்ற வழக்கில் கிறல் ஒரு காசோலையின் முக்கிய பகுதி அல்ல என்றும் அதனை அழித்துவிடல் (erasure) ஒரு மோசடி இல்லை என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது. பின்னர் இதேபோன்று, *பெல்லாமி எதிராக மார்ஜொரி வங்கி* (Bellamy Vs Morjori Bank) என்ற வழக்கிலும் கிறல் ஒரு காசோலையின் முக்கியமான பகுதி அல்ல என்ற தீர்ப்பு வழங்கப்பட்டது.

வழக்குகளின் முடிவுகள் கிறலுக்குத் தக்க இடம் அளிக்காததால், மறுபடியும் 1958ஆம் ஆண்டு ஒரு சட்டம் பிறப்பிக்கப்பட்டது. காசோலை ஒருமுறை கிறலிடப்பட்டிருப்பின், அது அக்காசோலையின் முக்கிய பகுதியாகிறது என்ற கூற்றை 1958ஆம் ஆண்டுச் சட்டம் வலியுறுத்தியது. மேலும் மோசடி செய்யும் நோக்கோடு, காசோலையில் காணப்படும் கிறலை

எவரேனும் அழித்தாலோ அல்லது திருத்தினாலோ அவர் ஆயுள் முழுவதும் இடமாற்றல் தண்டனைக்கு ஆளாவார் என இச்சட்டம் திட்டவட்டமாக அறிவித்தது.

பின்னர், *1856*ஆம் ஆண்டுச் சட்டம் மற்றும் *1958*ஆம் ஆண்டுச் சட்டம் இவைகளைக் களைந்துவிட்டு (repeal) *1876*ஆம் ஆண்டு ஒரு புதிய சட்டம் 'கிறலிடப்பட்ட காசோலைகள் சட்டம்' (Crossed Cheques Act) என்று இயற்றப்பட்டது. இச்சட்டம் கிறலுக்கு முழுமையான ஒப்புதல் வழங்கியது. இவ்வாறு காசோலைக்குப் பாதுகாப்பு நல்குவதற்குரிய கருவியாம் கிறலிடும் முறை படிப்படியாக வளர்ந்தது. பின்னர், இந்தியாவிலும் இம்முறை பரவிற்று.

**கிறலின் வகைகள்**

*1881*ஆம் ஆண்டு இந்திய மாற்றுமுறை ஆவணச் சட்டம் கிறலை இரு வகையாகப் பிரிக்கின்றது. அவையாவன :-

(1) பொதுக்கிறல்

(2) சிறப்புக்கிறல்

## பொதுக்கீறல்

*1881*ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு *123* பொதுக்கிறலை கீழ்க்கண்ட வண்ணம் வரையறுக்கின்றது :-

"இரு இணையான சாய்வுக் கோடுகளையோ, அல்லது 'அண்டு கம்பெனி' என்னும் சொற்றொடர்களையோ அல்லது அவற்றின் சுருக்கத்தையோ கொண்டுள்ள இரண்டு இணையான சாய்வுகோடுகளையோ, மற்றும் 'மாற்றுமுறை தன்மையற்றது' என்ற சொற்றொடருடனோ அன்றித் தனித்தோ, காசோலையின் முகப்பிலே சேர்த்தால், அச்சேர்க்கை கீறல் என்று கொள்ளப்படும். மேலும், அக்காசோலை பொதுக் கீறலிடப்பட்டதென்றும் கருதப்படும்".

**பொதுக்கிறலின் தேவைகள் (Essentials of general crossing)**

(1) இரண்டு கோடுகள் பொதுக்கிறலுக்கு இரண்டு தூண்களாகக் கருதப்படுகின்றன. இரு கோடுகளின்றி பொதுக்கிறலில்லை.

(2) அந்த இரு கோடுகளும் சாய்ந்த இணை கோடுகளாக (transverse and parallel) இருப்பது மிகவும் அவசியம். அந்த இரண்டு கோடுகளும் நேர்க்கோடுகளாகவோ, படுக்கைக் கோடுகளாகவோ அல்லது கணக்கியல் குறிகளான கூட்டல் மற்றும் பெருக்கல் குறிகளாகவோ இருத்தல் கூடாது. கீழ்க்கண்டவை பிரிவு *123*இன் படி, கிறல் எனக் கருதப்படமாட்டா :-

(அ)



(ஆ)



(இ)



(ஈ)



(உ)



(3) அந்த இரண்டு இணை சாய்வுக் கோடுகளையும் காசோலையின் முகப்பில் இடப்புற மூலையில் வரைய வேண்டும். இக்கோடுகளை வரையும்போது, காசோலை எண் மாறாதவாறு பார்த்துக் கொள்ளவேண்டும். இக்கோடுகள் காசோலையில் காணப்படும் சில எழுத்துக்கள் மீது படும்படி வரைதல் தேவை.

கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைபடம் மேற்கூறிய விதிகளைத் தெளிவாக்கும் :




(4) அந்த இரு இணைசாய்வுக் கோடுகளுக்கிடையில் 'அண்டு கம்பெனி' என்ற சொற்றொடர்களையோ அல்லது அதனின் சுருக்கத்தையோ குறிப்பிடலாம். ஆனால் இங்கு சொற்கள் இன்றியமையாதன அல்ல. இரு இணைசாய்வுக் கோடுகளே இன்றியமையாதனவாதலால், இவற்றை விடுத்து விட்டு, சொற்களை மட்டும் வரைந்தால் அதனைக் 'கிறல்' என ஏற்க இயலாது. பொதுவாக, காசோலை வரைபவர், அதனைப் பெறுபவரின் வங்கியின் பெயர் தெரியாத சூழ்நிலையில் 'அண்டு கம்பெனி' என்று எழுதுவது நடைமுறையாகும்.

(5) அதுபோலவே, 'மாற்றுமுறைத் தன்மையற்றது' என்ற சொற்றொடர்களை இரு இணைச்சாய்வுக் கோடுகட்கிடையே எழுதலாம். இரு இணைசாய்வுக் கோடுகளில்லாவிடில், அவற்றையும் கிறலாகக் கொள்ள இயலாது.

**பொதுக்கிறலின் மாதிரி/வகை (Forms of general crossing) :**







* குறிப்பு : ஒரு பொதுக்கிறலுக்கு இரு இணைசாய்வுக் கோடுகளே போதுமானவை. எனவே இந்தக் கோடுகளுக்கிடையே எந்தச் சொற்றொடரையும் பயன்படுத்தலாம்.

**பொதுக்கிறலின் முக்கியத்துவம்**

(1) பொதுக்கிறல் என்பது செலுத்தும் வங்கியருக்கு இடப்படும் ஆணையே.

(2) அந்த ஆணைப்படி, செலுத்தும் வங்கியர் ஒரு பொதுக் கிறலிடப்பட்ட காசோலைக்குரிய பணத்தை, நேரடியாக தனது பணம் செலுத்துமிடத்திலேயே (Counter) செலுத்தக்கூடாது. மற்றொரு வங்கியர் மூலமாகவே பணம் செலுத்தப்பட வேண்டும். அதாவது, வாடிக்கையர் தமது வங்கிக் கணக்கின் வாயிலாகத்தான் ஒரு பொது கிறலிடப்பட்ட காசோலைக்குப் பணம் பெற இயலும். மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 126இல் "ஒரு காசோலை பொதுக்கீறலிடப்பட்டிருப்பின், அதனைச் செலுத்தும் வங்கியர் ஒரு வங்கியருக்கேயல்லாமல் வேறொரு நபருக்குச் செலுத்தலாகாது" என்று தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

(3) செலுத்தும் வங்கியர் ஒருவர் கீறலைக் கருத்திற்கொள்ளாது, பணத்தை நேரடியாகச் செலுத்தினால் :-

(அ) அவ்வாறு செலுத்துதல், முறைப்படி செலுத்துதல் ஆகாது. எனவே, செலுத்தும் வங்கியர் சட்டமுறைப் பாதுகாப்பை இழக்க நேரிடும்.

(ஆ) அத்தகைய செலுத்துதல், தமது வாடிக்கையரின் ஆணைக்கு மீறிச் செயல்பட்டதாகக் கருதப்படும். ஆகவே, வாடிக்கையரின் கணக்கைப் பற்று வைக்க வங்கியருக்கு அதிகாரம் கிடையாது.

(இ) இதனால் காசோலையை வரைந்தவருக்கு ஏற்படும் இழப்புகட்கு வங்கியர் பொறுப்பாவார்.

(ஈ) மேலும், ஒரு மூன்றாம் நபருக்கு இழப்பு ஏற்பட்டாலும் ,அதனை ஈடுசெய்ய வேண்டியது வங்கியரின் பொறுப்பாகும். பொதுவாக ஒரு வங்கியருக்கும், ஒரு மூன்றாம் நபருக்கும் எந்தவித ஒப்பந்தமும் கிடையாது. எனவே பொது விதிப்படி வங்கியர் மூன்றாம் நபருக்குப் பொறுப்பாளியாக மாட்டார். ஆனால் கிறலைப் பொறுத்தவரையில் ஒரு வங்கியர் மூன்றாம் நபருக்குப் பொறுப்பாவது ஒரு விதிவிலக்கேயாம்.

(4) ஒரு காசோலையைப் பொதுக்கிறலிடுவதன் மூலமாக, அதன்மீது உரிமை இல்லாதவர்கள் பணம் நேரடியாகப் பெறுவது தடுக்கப்பட்டு காசோலைக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுகின்றது. ஆனால் அது குறைந்த பாதுகாப்பே அளிக்கிறது. எப்படியெனில், பொதுக் கிறலிடப்பட்ட ஒரு காசோலையின் மீது உரிமை இல்லாதவர், அதில் பெறுபவரின் கள்ளக்கையொப்பமிட்டு தமது வங்கியின் வாயிலாக அக்காசோலைக்குப் பணம் பெறலாம். எனினும், இதனைக் கண்டுபிடித்துவிடலாம். இவ்வாறான கையாடலைத் தவிர்ப்பதற்குச் சிறப்புக் கிறல் கொண்டுவரப்பட்டது.

## சிறப்புக்கீறல்

*1881ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 124 சிறப்புச்கிறலுக்குப் பின்வருமாறு இலக்கணம் தருகின்றது:*

"ஒரு வங்கியின் பெயரை 'மாற்றுமுறைத் தன்மையற்றது' என்ற சொற்றொடர்களுடனோ அல்லது தனித்தோ, ஒரு காசோலையின் முகப்பில் குறுக்கே சேர்த்தால், அச்சேர்க்கை சிறப்புக்கீறல் எனக் கருதப்படும். அக்காசோலை அந்த வங்கியரின் பெயரில் சிறப்புக் கீறலிடப்பட்டதென்றும் கருதப்படும்".

**சிறப்புக் கிறலின் தேவைகள் (Essentials of special crossing)**

(1) பொதுக்கிறலில் காணப்படும் இரு இணை சாய்வுக் கோடுகள் சிறப்புக் கிறலுக்குத் தேவையே இல்லை.

(2) காசோலையின் முகப்பில் குறுக்காக வங்கியின் பெயரைக் குறிப்பிடுவது மிகவும் அவசியமான வொன்றாம். அந்த வங்கியின் பெயரே சிறப்புக் கிறலின் சிறப்புக் கூறாகும்.

(3) வங்கியின் பெயர் காசோலையின் இடப்பக்க மூலையில், அந்தக் காசோலையின் எண் மாறுபடாத வண்ணம் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

(4) இரு இணை சாய்வுக் கோடுகளும் மற்றும் 'மாற்றுமுறைத் தன்மையற்றது' என்ற சொற்றொடரும் ஒரு சிறப்புக் கிறலுடன் இணைக்கப்படலாம்.

**சிறப்புக் கிறலின் மாதிரி/வகைகள் (Forms of specia crossing)**

(அ)

சேரன் வங்கி லிமிடெட்

(ஆ)

சேரன் வங்கி லிமிடெட்

(இ)

சேரன் வங்கி லிமிடெட்
மாற்றுமுறைத் தன்மையற்றது

(ஈ) (உ)

சேரன் வங்கி லிமிடெட்
பெறுநர் க/கு மட்டும்

சேரன் வங்கி லிமிடெட்
பெறுநர் க/கு மட்டும்
மாற்றுமுறைத் தன்மையற்றது

## சிறப்புக் கிறலின் முக்கியத்துவம்

(1) சிறப்புக் கிறல் என்பது ஒரு செலுத்தும் வங்கியருக்கு இடப்படும் ஆணையே.

(2) அந்த ஆணைப்படி, ஒரு செலுத்தும் வங்கியர், சிறப்புக் கிறலில் எந்த வங்கியரின் பெயர் குறிக்கப்பட்டுள்ளதோ, அந்த வங்கியருக்கு மட்டுமே பணம் செலுத்த வேண்டும். மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 126இல் "ஒரு காசோலை சிறப்புக் கீறலிடப்பட்டிருப்பின், அதனைச் செலுத்தும் வங்கியர் அந்தக் கீறலில் குறிப்பிடப்பட்டிருக்கும் வங்கியருக்கோ அல்லது அவருக்குப் பதிலாக ஒரு முகவராக அந்தக் காசோலையை வசூலிக்கும் வங்கியருக்கோ அல்லாமல் வேறொரு நபருக்குச் செலுத்தலாகாது" என்று தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

(3) ஒரு சிறப்புக் கிறலில் பெயர் குறிப்பிடாத வங்கியரொருவர், முகவராகவும் செயல்படாத நிலையில் காசோலையைச் சமர்ப்பித்தால், செலுத்தும் வங்கியர் அக்காசோலைக்குப் பணம் தராமல் திருப்பி அனுப்பிவிட வேண்டும்.

(4) பொதுக் கிறலைக்காட்டிலும் சிறப்புக் கிறல் ஒரு காசோலைக்கு மிகுந்த பாதுகாப்பு அளிக்கின்றது. ஏனெனில், காசோலையைப் பெறுபவரின் வங்கியருக்கே சிறப்பாகக் கிறலிட்டிருப்பதால், அதைப் பெறுபவரின் வங்கியரே அந்தக் காசோலையை வசூலிக்க வேண்டும். அந்த வங்கியர், பெறுபவரின் கையொப்பத்தை நன்கு அறிந்திருப்பார். எனவே அவர் பெறுபவரையன்றி மற்ற எந்த நபருக்கும் வசூலிக்க மாட்டார். மேலும் பொய்யாவணம் புனைதல் இருப்பின், அதனையும் அவர் எளிதாகக் கண்டுபிடித்துவிடுவார். எனினும், இந்த சிறப்புக் கிறலும் காசோலைக்கு ஒரு முழுமையான பாதுகாப்பை அளிக்காது. சிறப்புக் கிறலில் வங்கியின் பெயரே குறிப்பிடப்பட்டிருக்கும். வங்கியின் கிளை குறிப்பிடப் பட்டிருக்காது. எனவே, காசோலை மீது உரிமை இல்லாத ஒருவர், பெறுபவரின் கள்ளக்கையொப்பமிட்டு, பெறுபவர் கணக்கு வைத்திருக்கும் கிளையைத் தவிர, ஏதேனும் வேறொரு கிளை மூலமாக அந்தக் காசோலையைப் பணமாக்கிக் கொள்ளலாம். இது போன்ற மோசடிகளைத் தவிர்க்கவே மாற்றுமுறைத் தன்மையற்ற கிறல் மற்றும் பெறுபவர் கணக்குக் கிறல் போன்ற கிறல்கள் வங்கியியல் நடைமுறைக்கு வந்துள்ளன.

### மாற்றுமுறைத் தன்மையற்ற கிறல் (Not Negotiable Crossing)

மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 123இன் படியும் 124இன் படியும் "மாற்றுமுறைத் தன்மையற்ற" என்ற சொற்றொடர்கள் பொதுக்கிறலிலோ அல்லது சிறப்புக் கிறலிலோ சேர்க்கப்பட்டால் அது மாற்றுமுறைத் தன்மையற்ற கிறல் என்று அழைக்கப்படும்.

**மாற்றுமுறைத் தன்மையற்ற கிறலின் மாதிரி/வகை**

(அ)

& கோ
மாற்றுமுறைத் தன்மையற்றது

(ஆ)

சேரன் வங்கி லிமிடெட்
மாற்றுமுறைத் தன்மையற்றது

(இ)

மாற்றுமுறைத் தன்மையற்றது

**மாற்றுமுறைத் தன்மையற்ற கிறலின் முக்கியத்துவம்**

(1) மாற்றுமுறைத் தன்மையற்றது என்பது உரிமை மாற்றம் தன்மையற்றது (Transferability) என்பதைக் குறிக்காது. மாற்றுமுறைத் தன்மையற்ற கிறல் அந்தக் காசோலையின் உரிமை மாற்றுத் தன்மையை

எந்தவிதத்திலும் பாதிப்பதில்லை. அந்தக் காசோலையை ஒரு நபரிடமிருந்து மற்றொரு நபருக்கு மாற்றமுடியும்.

(2) ஆனால், இவ்வாறு கிறலிடப்பட்டுள்ள ஆவணத்திற்குரிய மாற்றுமுறைத் தன்மையை (Negotiability) அந்தக் கிறல் அழித்துவிடுகின்றது. எனவே இவ்வாறு கிறலிடப்பட்ட ஆவணம் ஒரு மாற்றுமுறை ஆவணமாகாது. இதனால், இவ்வகை ஆவணத்தில் மாற்றுபவருக்குள்ள உரிமையைக் காட்டிலும் சிறந்த உரிமையை மாற்றப் பெறுபவர் பெற இயலாது. மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 130ன் படி "மாற்றுமுறைத் தன்மையற்ற என்ற சொற்றொடர்களைக் கொண்ட பொதுவாகவோ அல்லது சிறப்பாகவோ கீறலிடப்பட்ட ஒரு காசோலையைப் பெறுபவர், அவர் எந்த நபரிடமிருந்து அந்தக் காசோலையைப் பெற்றாரோ அவரது உரிமையைக் காட்டிலும் ஒரு சிறந்த உரிமையை அக்காசோலை மீது தானும் பெற இயலாது. பிற நபர்களுக்கும் கொடுக்க இயலாது" என்ற தெளிவான விதி இக்கிறலின் முக்கியத்துவத்தை நன்கு வெளிக்கொணர்கிறது.

(3) இக்கிறல் ஆவணத்தைப் பெறும் நபருக்குக் கொடுக்கப்படும் ஒரு எச்சரிக்கையாகவே கருதப்படுகின்றது. அந்த எச்சரிக்கையாதெனில் "கவனமாகச் செயல்படு - இது ஒரு களவாடப்பட்ட ஆவணமாக இருக்கலாம்". ஏனெனில் களவாடப்பட்ட பொருட்கள் மீது திருடிய கள்வனுக்கு உள்ள உரிமையைக் காட்டிலும் அதிக உரிமையை அத்திருட்டுப் பொருளை வாங்குபவர் பெற இயலாது. மேற்கூறிய விதி மாற்றுமுறை ஆவணங்களுக்குப் பொருந்தாது. ஆனால், ஒரு ஆவணத்தின் மீது மாற்றுமுறைத் தன்மையற்றது என்று கிறலிட்டாலே, அது மாற்றுமுறைத் தன்மையை இழந்து மாற்றுமுறையற்ற ஆவணமாக

செயல்படுகின்றது. எனவேதான் சர் ஜான் பேஜட் என்ற வங்கியியல் அறிஞர், இக்கிறல் ஒரு ஆவணத்தைப் பெறும் நபருக்குக் கொடுக்கப்படும் அறிவுறுத்தல் தான். எனவே செலுத்தும் வங்கியரைப் பொறுத்தவரையில் இது "பொருளற்றதொன்று; அதைப் புறக்கணிப்பதும் சரியே" என்று அழகாகக் கூறியிருக்கின்றார்.

(4) ஒரு மாற்றுமுறைத் தன்மையற்ற கிறலிடப்பட்ட காசோலை அளிக்கப்பட்டால், அதனை மாற்றப்பெறுபவர் அவருக்கு முன்னால் உள்ள புறக்குறிப்பாளிகளையும், அவர்களுக்கு அக்காசோலையின் மீது உள்ள செம்மையான உரிமையையும் அறிந்தே செயல்பட வேண்டும். ஏனெனில் இக்காசோலை மாற்றப் பெறுபவருக்கு அதனை மாற்றித் தந்த நபரைக் காட்டிலும், அதிக உரிமையை அக்காசோலை மீது பெற இயலாது.

(5) இக்கிறலின் முக்கிய நோக்கம் ஒரு காசோலையின் உண்மையான உரிமையாளருக்கு முழுப் பாதுகாப்பு அளிப்பதே. இவ்வகை கிறலிடப்பட்ட காசோலைகளில் மோசடி செய்வது மிகவும் கடினம். அப்படி மோசடி செய்தாலும், உண்மையான உரிமையாளரைத் தவிர வேறு எந்த நபருக்கும் காசோலையின் மீதான உரிமை கிடைக்காது. எனவே இக்கிறலிடப்பட்ட காசோலையைத் தபால் மூலம் பாதுகாப்பாக எங்கு வேண்டுமானாலும் அனுப்பலாம்.

*ஹிபர்னியன் பாங்கு லிமிடெட் எதிராக கைசின் மற்றும் ஹேன்சன்* (Hibernian Bank Ltd. Vs Gysin and Hansan) என்ற வழக்கில் 'மாற்றுமுறைத் தன்மையற்றது' என்ற சொற்கள் ஒரு ஆவண[illegible]ல் காணப்படுமாயின், அந்த ஆவணம் மாற்றுமு[illegible]வணத்திற்குரிய ஒரு முக்கிய தன்மையை இழந்துவிடுகிறது. அத்தன்மை யாதெனில் 'குறையின்றி மாற்றுதல்' (transfer free from defects).

மேலும், *கமிஷனர் ஆஃப் ஸ்டேட் சேவிங்ஸ் பேங்க் ஆஃப் விக்டோரியா எதிராக பெர்மிவான் வ்ரைட் & கோ* (Commissioners of State Savings Bank of Victoria Permewan Wright & Co) என்ற வழக்கில் ஒரு கிறலிடப்பட்ட காசோலையில் காணப்படும் 'மாற்றுமுறைத் தன்மையற்றது' என்ற சொற்றொடர்கள் அக்காசோலையோடு தொடர்புகொள்ளவரும் நபர்கள் யாவருக்கும் கொடுக்கப்படும் ஒரு எச்சரிக்கையின் அறிகுறியே. 'கவனமாகச் செயல்படு; இக்காசோலை திருடப்பட்டதாக இருக்கலாம்' என்று கூறுவது போல் உள்ள எச்சரிக்கையே என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. எனவே ஒரு செலுத்தும் வங்கியர் இவ்வகை கிறலைப் பொருட்படுத்தத் தேவையில்லை என்பது நன்கு புலனாகிறது.

**பெறுபவர் கணக்குக் கிறல் (A\c Payee crossing)**

ஒரு பொதுக்கிறலிலோ அல்லது சிறப்புக் கிறலிலோ 'பெறுபவர் கணக்கு' என்ற சொற்றொடர்கள் சேர்க்கப்பட்டால், அது பெறுபவர் கணக்குக் கிறல் என்று அழைக்கப்படும். இவ்வகைக் கிறலைப் பற்றி சட்டத்தில் எதுவும் குறிப்பிடப்படவில்லை. எனினும் இது வங்கியியல் நடைமுறையிலே உருவாக்கப்பட்ட ஒன்றாகும்.

**பெறுபவர் கணக்குக் கிறலின் மாதிரி/வகை (Forms of A\c Payee crossing)**

(அ)

பெறுபவர் கணக்கு

(ஆ)

& கோ
பெறுபவர் கணக்கு

(இ) (ஈ) (உ)

சேரன் வங்கி லிமிடெட்
பெறுபவர் கணக்கு

வருமான வரி கணக்கு

அருண் கணக்கு

**பெறுபவர் கணக்குக் கீறலின் முக்கியத்துவம்**

(1) மற்ற கீறல்களைப்போல் அல்லாமல் இக்கீறல் ஒரு வசூலிக்கும் வங்கியருக்கு இடப்படும் ஆணையாகும்.

(2) அந்த ஆணைப்படி, ஒரு வசூலிக்கும் வங்கியர் கீறலில் குறிப்பிடப்பட்ட நபருக்கு மட்டும்தான் வசூலிக்க வேண்டும். இக்காசோலையை மற்றவருக்கு வசூலிக்க முடியாது.

(3) அவ்வாறு வசூலித்தால், அது அவரது கவனக்குறைவே என்று கருதப்படும். அச்சூழ்நிலையில் அவருக்குக் கிடைக்க வேண்டிய சட்டமுறைப் பாதுகாப்பை அவர் இழக்க நேரிடும்.

(4) பெறுபவர் கணக்குக்கீறல் ஒரு காசோலையின் உரிமை மாற்றுத் தன்மையைப் பாதிக்காது என்றாலும், வங்கி நெறிமுறைப்படி இவ்வாறு கீறலிடப்பட்ட காசோலையை மற்றவருக்கு மாற்ற முடியாது. பொதுவாக ஒரு செலுத்தும் வங்கியர் இதனைப் பொருட்படுத்தத் தேவையில்லை. ஆனால் அக்காசோலையில் பெறுபவரைத் தவிர வேறெந்த நபரின் புறக்குறிப்பும் காணப்படுமாயின், ஒரு

செலுத்தும் வங்கியர் அக்காசோலையை மதிக்காமல் திருப்பி அனுப்பிவிட வேண்டும். இவ்வாறு இவ்வகை கிறலிடப்பட்ட காசோலையை நடைமுறையில் மாற்ற முடியாது என்ற நிலை உருவாக்கப்பட்டுள்ளது.

(5) இவ்வகைக் கிறலும் ஒரு காசோலைக்கு மிகுந்த பாதுகாப்பை அளிக்கின்றது. பெறுபவரைத் தவிர மற்ற நபர்கள் இக்காசோலையில் பணம் பெற இயலவே இயலாது.

## இரட்டைக் கிறல் (Double crossing)

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 125இன் படி "ஒரு காசோலை ஒரு வங்கியருக்கு சிறப்புக் கீறலிடப்பட்டிருப்பின், அவ்வங்கியர் அதனை, தனது முகவராக செயல்பட்டு வசூலிப்பதற்காக மற்றொரு வங்கியருக்குக் கீறலிடலாம்". இவ்வாறு கிறலிடுதலை இரட்டைக்கிறல் என அழைக்கின்றோம்.

**இரட்டைக்கிறலின் மாதிரி**

சேரன் வங்கி லிமிடெட்
சோழன் வங்கிக்கு
வசூலிக்கும் முகவராக

இம்மாதிரியான இரட்டைக்கிறல் நடைமுறையில் கையாளப் படவில்லை. இதனைக் காசோலையின் பின்பகுதியில் ஒரு புறக்குறிப்பு போன்று குறிப்பிடுவது இன்றைய பழக்கமாகும். அதனின் மாதிரி கிழே தரப்பட்டுள்ளது.

| |
|---|
| சோழன் வங்கிக்கு செலுத்து<br>வசூலிக்கும் முகவராக<br>சேரன் வங்கிக்காக<br>(கையொப்பம்)<br>மேலாளர். |

## இரட்டைக்கிறலின் முக்கியத்துவம்

(1) இரட்டைக் கிறலிடும் உரிமை வசூலிக்கும் வங்கியருக்கு மட்டுமே உண்டு.

(2) வசூலிக்கும் வங்கியர் காசோலையைத் தனது முகவர் என்ற நிலையில் வசூலிப்பதற்காக மட்டுமே மற்றொரு வங்கியருக்குக் கிறலிடலாம்.

(3) மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 127இன் படி ஒரு முகவராகச் செயல்பட்டு வசூலிப்பதற்குத் தவிர மற்றபடி ஒரு காசோலையை இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வங்கியருக்குக் கிறலிடப்பட்டிருப்பின், அக்காசோலை செல்லாதது ஆகிவிடும். செலுத்தும் வங்கியர் அக்காசோலை மீது பணம் செலுத்தாமல் அதனைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும்.

## கிறலிடுவதற்குரியார் யார்?

(1) ஒரு காசோலையை வரைபவர், அதனை அளிக்கும் பொழுது அதைக் கிறலிடலாம்.

(2) ஒரு கிறாத காசோலையை வைத்திருப்பவர் அதனைக் கிறலிடலாம். மேலும், அவர் ஒரு பொதுக்கிறலைச் சிறப்புக் கிறலாக மாற்றலாம். ஏற்கனவே காசோலையில் காணப்படும் கிறலில் 'மாற்றுமுறைத் தன்மையற்றது' அல்லது 'பெறுபவர் கணக்கு' என்ற சொற்றொடர்களைச் சேர்க்கவும் உரிமை உண்டு.

(3) எந்த வங்கியருக்கு ஒரு காசோலை சிறப்புக்கிறலிடப்பட்டுள்ளதோ, அந்த வங்கியர், அக்காசோலையை வசூல் செய்யும்பொருட்டு, அதனைத் தமது முகவராகிய மற்றொரு வங்கியருக்கு மீண்டும் சிறப்புக் கிறலிடலாம்.

**கிறலை நீக்கல்**

ஒரு கிறலை நீக்குவது பற்றி சட்டம் ஏதும் கூறவில்லை. ஆனால் நடைமுறையில் கிறலை நீக்குவது ஒரு பழக்கமாக அங்கிகாரம் பெற்றுள்ளது. கிறலை நீக்குவதற்கு அந்தக் காசோலையை வரைந்தவருக்கு மட்டும்தான் அதிகாரம் உண்டு. அவர் காசோலை மீது "ரொக்கம் செலுத்துக" என்று எழுதி அதற்குத் தனது முழுக்கையொப்பத்தின் வாயிலாக ஒப்புதல் அளிக்க வேண்டும். அவ்வாறு செய்தால் கிறல் நீங்கிவிடும். ஆனால், ஒரு கிறலிடப்பட்ட காசோலையை அளித்த பின்பு, அதனை வரைந்தவருக்குக்கூட அக்கிறலை நீக்க அதிகாரம் கிடையாது என்று சர் ஜான் பேஜட் என்ற வங்கியியல் அறிஞர் குறிப்பிட்டுள்ளார்.

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

(1) பொதுக்கிறலுக்கு இலக்கணம் தந்து அதனின் தேவைகளை வெளிக்கொணர்க.

(2) பொதுக்கிறலின் முக்கியத்துவம் யாது?

(3) சிறப்புக் கிறல் பற்றி நீவிர் அறிவது யாது? அது பொதுக்கிறலிலிருந்நது எங்ஙனம் வேறுபடுகின்றது?

(4) மாற்றுமுறைத் தன்மையற்ற கிறலின் முக்கியத்துவத்தை எடுத்துரைக்க.

(5) பெறுபவர் கணக்கு கிறலின் மாதிரி தந்து அதனின் முக்கியத்துவத்தை விளக்குக.

(6) இரட்டைக்கிறல் என்றால் என்ன? அதனின் முக்கியத்துவம் யாது?

(7) ஒரு காசோலைக்கு மிகுந்த பாதுகாப்பு அளிக்கும் கிறல் யாது?

(8) ஒரு சிறப்புக் கிறலின் சிறப்புத் தன்மை யாது?

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

(1) காசோலையில் கிறலிடுதல் என்றால் என்ன? பல்வேறு வகை கிறலின் சிறப்பியல்புகளையும் அவற்றின் முக்கியத்துவத்தையும் சான்றுகளுடன் விளக்குக.

(2) காசோலையின் முகப்பில் இரண்டு இணை சாய்வு கோடுகளுக்கிடையே கீழ்க்கண்டவற்றை எழுதுவதன் நோக்கத்தையும் முக்கியத்துவத்தையும் விளக்குக :—

(அ) சேரன் வங்கி லிமிடெட்

(ஆ) மாற்றுமுறைத் தன்மையற்றது

(இ) பெறுபவர் கணக்கு
சேரன் வங்கி லிமிடெட்

(ஈ) அண்டு கம்பெனி.

# 8

# புறக்குறிப்பு
## (ENDORSEMENT)

"காசோலையை உரிமை மாற்றம் செய்யும் நோக்கோடு அதன் பின்புறத்தில் அக்காசோலைக்குரியவர் கையொப்பமிடுவது புறக்குறிப்பு எனப்படும்".

இன்றைய வணிக உலகில், காசோலை பணத்தைப் போலவே செயற்படுவதால் பணத்தின் இடத்தைப் பெற்றுவிட்டது. கடன்களைத் தீர்த்துக் கொள்வதற்காக காசோலையை ஒருவருக்கொருவர் உரிமை மாற்றம் செய்து கொள்ளலாம். உரிமை மாற்றம் செய்தல், காசோலையின் தன்மையைப் பொறுத்து அமையும்.

பொதுவாக காசோலையை இருவகையாகப் பிரிக்கலாம். அவையாவன :

(1) கொணர்பவர் காசோலை

(2) ஆணைக் காசோலை

ஒரு காசோலையில் அதைக் கொணர்பவருக்குப் பணம் செலுத்துமாறு வரையப்பட்டிருந்தால் அது கொணர்பவர் காசோலை எனப்படும். ஒரு கொணர்பவர் காசோலையைப் பிறருக்கு மாற்றுவது மிகவும் எளிது. அதனை யாருக்கு உரிமை மாற்றம் செய்ய வேண்டுமோ அவருக்கு 'வெறுமனே பட்டுவாடா' (mere delivery) செய்தால் போதும். அவருக்கு அக்காசோலையின் மீது உரிமை கிடைத்துவிடும்.

ஒரு காசோலையில் ஒரு குறிப்பிட்ட நபருக்கே பணம் செலுத்துமாறு வரையப்பட்டிருப்பின் அது ஆணைக் காசோலை எனப்படும். ஒரு ஆணைக் காசோலையைப் பிறருக்கு உரிமை மாற்றம் செய்ய வேண்டுமானால், அதில் 'புறக்குறிப்பிட்டு பட்டுவாடா' செய்ய வேண்டும். ஆணைக் காசோலையைப் புறக்குறிப்பின்றி உரிமை மாற்றம் செய்ய இயலாது. 'புறக்குறிப்பு' என்றால் என்ன என்பதை அறிய முயல்வோம்.

## புறக்குறிப்பின் தோற்றம்

புறக்குறிப்பு என்ற சொல் இன்டார்சம் (Indorsum) என்ற இலத்தின் சொல்லிலிருந்து தோன்றியதாகக் கருதப்படுகிறது. இன்டார்சம் என்பதற்குப் 'பின்பக்கத்தில்' என்று பொருளாகும். இப்பொருளடிப்படையில் ஒரு ஆவணத்தின் பின்புறத்தில்தான் புறக்குறிப்புச் செய்யப்படும்.

## கொணர்பவர் காசோலைக்கு, புறக்குறிப்பு தேவையா?

சட்டப்படி, ஒரு கொணர்பவர் காசோலையை, புறக்குறிப்பின்றி வேறொருவருக்கு உரிமை மாற்றம் செய்யலாம். ஆனால் நடைமுறையில், வங்கியர், கொணர்பவர் காசோலையிலும் அதனைக் கொணர்பவரை புறக்குறிப்பிட்டுத் தரும்படி வேண்டுகின்றனர். மேற்கண்டவாறு புறக்குறிப்புப் பெறுதல் உரிமை மாற்றம் செய்து கொள்வதற்காக அல்ல. பணத்தைப் பெறுபவர் யார்? என்பதை அறிந்து கொள்ளவும், பணத்தை வழங்கியதற்கான ஒரு சான்றாகவுமே புறக்குறிப்பிடும் வண்ணம் வேண்டுகின்றனர். ஒருவேளை கொணர்பவர் காசோலையை வைத்திருப்பவர் அதனைப் புறக்குறிப்பிட மறுத்தால், வங்கியர் அவரிடமிருந்து, காசோலைத் தொகை ரூ.500க்கு மேல் இருப்பின், ஒரு முத்திரையிடப்பட்ட இரசீதுதனைக் கொடுக்கும்படி வேண்டுவர். இவ்வாறு, சட்டப்படி, 'கொணர்பவர்காசோலைக்குப் புறக்குறிப்பு தேவையில்லை என்பது அறியப்படுகிறது.

**புறக்குறிப்பின் இலக்கணம்**

**1881ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச் சட்டம் 15ஆம் பிரிவு**

“ஒரு மாற்றுமுறை ஆவணத்தை எழுதியவர் அல்லது உடையவர் அந்த ஆவணத்தை வேறு ஒரு நபருக்கு உரிமை மாற்றம் செய்வதற்காக அதன் முன் பக்கமோ அல்லது பின் பக்கமோ அல்லது அதனுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு துண்டுத் தாளிலோ கையொப்பமிட்டால், அதனை அவர் புறக்குறிப்பு செய்ததாகவும் அவர் புறக்குறிப்பிடுபவர் என்றும் அழைக்கப் படுவார்” என்று புறக்குறிப்பு மற்றும் புறக்குறிப்பாளர் பற்றித் தெளிவாகக் கூறுகிறது.

மேற்கண்ட இலக்கணத்தின்படி, ஒரு ஆவணத்தை மற்றொருவருக்கு உரிமை மாற்றும் நோக்குடன், அந்த ஆவணத்தின் பின்புறமோ அல்லது முன்புறமோ அந்த ஆவணத்தின் உரிமையாளர் கையொப்பமிட்டால், அது புறக்குறிப்பு என அழைக்கப்படும். ஆவணத்தை உரிமை மாற்றம் செய்பவரைப் ‘புறக்குறிப்பிடுபவர்’ அல்லது ‘புறக்குறிப்பாளர்’ என்றும், யாருக்கு உரிமை மாற்றம் செய்யப்படுகிறதோ அவரை “புறக்குறிப்பாளி” என்றும் அழைக்கின்றனர்.

சட்டப்படி ‘புறக்குறிப்பு’ ஒரு ஆவணத்தின் முன்புறத்திலோ அல்லது பின்புறத்திலோ இடம்பெறலாம். ஆனால், இந்தியப் பிணையங்கள் சட்டம் 1886, பிரிவு 6இன்படி, புறக்குறிப்பு ஒரு ஆவணத்தின் பின்புறத்தைத் தவிர வேறெந்த இடத்திலும் இருக்குமாயின், அது செல்லாதது ஆகிவிடும். எனவே, நடைமுறையில் ஒரு ஆவணத்தின் பின்புறத்திலேயே புறக்குறிப்பு இடம்பெறுகிறது.

**புறக்குறிப்பிணைத்தாள் (Allonge)**

ஒரு காசோலை பலமுறை மாற்றப்படும்போது ஒவ்வொரு

முறையும் அதனை உரிமை மாற்றம் செய்ய விரும்புவர் கையொப்பமிடுவதால் அதன் பின்பக்கத்தில் மேலும் கையொப்பமிடுவதற்கு இடம் இல்லாமல் போய்விடும். அச்சமயம், அக்காசோலையுடன் ஒரு முத்திரைத்தாளை இணைத்து அதில் புறக்குறிப்புச் செய்யலாம். இவ்வாறு இணைக்கப்பட்ட தாளுக்குப் புறக்குறிப்பிணைத்தாள் (Allonge) என்று பெயர். பின்னர் அத்தாளின் மீது வேண்டிய புறக்குறிப்புகளை இடலாம்.

**புறக்குறிப்பின் முக்கியத்துவம்**

புறக்குறிப்பிடுபவர் தன்னுடைய புறக்குறிப்பின் வாயிலாக, ஒரு புறக்குறிப்பாளிக்கும் மற்றும் அவ்வாறு புறக்குறிப்பிட்ட காசோலையை வைத்திருப்பவர்களுக்கும் :-

(1) அவர் தான் புறக்குறிப்பிடும் ஆவணத்தின் மீது செம்மையான உரிமையைப் பெற்றுள்ளார் என்றும்,

(2) தான் புறக்குறிப்பிடும்போது, அந்த ஆவணத்தில் உள்ள அனைத்து விவரங்களும் உண்மையானவையே என்றும்,

(3) தான் புறக்குறிப்பு செய்யும் முன்பு உள்ள அனைத்து புறக்குறிப்புகளும் உண்மையானவையே என்றும்,

(4) தான் புறக்குறிப்பிட்ட ஆவணம் அவமதிக்கப்பட்டு அதனால் புறக்குறிப்பாளிக்கோ அல்லது அந்த ஆவணத்தை வைத்திருக்கும் எந்த நபருக்கோ நட்டம் ஏற்பட்டால், அதை ஈடு செய்வேன் என்றும்,

(5) தான் புறக்குறிப்பிட்ட ஆவணத்தை மறுபடியும் உரிமை மாற்றம் செய்ய புறக்குறிப்பாளிக்கு அதிகாரம் உண்டு என்றும் உறுதியளிக்கிறார்.

இவ்வாறு ஒரு எளிய புறக்குறிப்பானது மேற்கண்ட விரிவான பொருளைத் தன்னுட் கொண்டுள்ளது.

## புறக்குறிப்பும் உரிமை மாற்றமும் (Assignment)

புறக்குறிப்பும் உரிமை மாற்றமும் ஒத்திருப்பினும் அவற்றிடையே வேறுபாடுகளும் சில உள.

(1) ஒரு பொருளின் மீதோ அல்லது ஆவணத்தின் மீதோ ஒருவருக்குரிய சட்டப்பூர்வமான உரிமையை மட்டும் வேறொரு நபருக்கு மாற்றித் தருவது உரிமை மாற்றம் எனப்படும். உரிமை மாற்றம் செய்பவரின் பொறுப்பு உரிமை மாற்றம் செய்த உடனே முடிந்துவிடும். ஆனால் புறக்குறிப்பு என்பது சட்டப்பூர்வமான உரிமையை மாற்றுவதோடு அமையாமல், அந்த ஆவணத்தின் மீது பணம் செலுத்தப்படும் வரை பொறுப்பேற்கச் செய்கிறது.

(2) மேலும், உரிமை மாற்றத்தில், உரிமை மாற்றம் பெறுபவரின் உரிமை, உரிமை மாற்றம் செய்பவரின் உரிமையைப் பொறுத்தே உள்ளது. உரிமை மாற்றம் செய்பவருக்கு உரிமை இல்லையெனில், உரிமை மாற்றம் பெறுபவருக்கும் எந்தவித உரிமையும் கிடைக்காது. ஆனால், புறக்குறிப்பாளருக்கு உரிமை இல்லாவிடினும், புறக்குறிப்பாளிக்குச் சிறந்த உரிமை கிடைக்க வாய்ப்புண்டு. புறக்குறிப்பாளி முறைப்படி வைத்திருப்போராகத் திகழும்போது (Holder in due course) அவருடைய உரிமை, புறக்குறிப்பாளரின் உரிமையைவிட சிறந்ததாகக் கருதப்படும்.

## புறக்குறிப்பின் வகைகள் (Kinds of endorsement)

புறக்குறிப்பின் வகைகள் பின்வருமாறு :-

### (1) வெற்றுப் புறக்குறிப்பு (Blank endorsement)

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 16(1)இன்படி ஒரு புறக்குறிப்பாளர் தன்னுடைய கையொப்பத்தை மட்டும் இட்டால், அது வெற்றுப் புறக்குறிப்பு எனப்படும். அவர் தான்

கையொப்பமிட்ட ஆவணத்தை யாருக்கு மாற்ற வேண்டும் என்று குறிப்பிடாமல், வெறுமனே விட்டு விடுவதால் இதற்கு வெற்றுப் புறக்குறிப்பு என்று பெயரிடப்பட்டுள்ளது. இதனைப் பொதுப்புறக்குறிப்பு (General endorsement) என்றும் அழைக்கின்றனர். இவ்வகை புறக்குறிப்பின் மூலம் ஆணைக் காசோலை ஒன்று கொணர்பவர்காசோலையாக மாற்றப்படுகிறது.

சான்றாக, ஒரு காசோலை அ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்டுள்ளது என வைத்துக்கொள்வோம். அக்காசோலையின் பின்புறத்தில் அ. அருண் வெறுமனே கையொப்பமிட்டால் அது வெற்றுப் புறக்குறிப்பு ஆகும்.

**(2) முழு புறக்குறிப்பு அல்லது சிறப்புப் புறக்குறிப்பு (Full endorsement or special endorsement)**

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 16(1) இன்படி, புறக்குறிப்பில், ஒரு புறக்குறிப்பாளர் தனது கையொப்பத்துடன் ஒரு குறிப்பிட்ட நபருக்கு அல்லது அவரது ஆணைப்படி காசோலையின் தொகையைச் செலுத்துமாறு ஒரு கட்டளையையு சேர்த்தால், அது முழு புறக்குறிப்பு எனப்படும் புறக்குறிப்பாளரின் பெயரையும் குறிப்பிட்டு புறக்குறிப்பாளர் கையெழுத்திடுவதினால், இது முழு புறக்குறிப்பாகக் கருதப்படுகின்றது. கொணர்பவர் காசோலை ஒன்று இவ்வகை புறக்குறிப்பின் மூலம் ஆணைக் காசோலையாக மாற்றமடைகிறது.

*சான்று :*

அ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலை பின்வருமாறு அதன் பின்புறத்தில் புறக்குறிப்பு செய்யப்பட்டுள்ளது :

**கொணர்பவர் காசோலை என்றும் கொணர்பவர் காசோலையே**

பொதுவாக ஒரு கொணர்பவர் காசோலையில் காணப்படும் புறக்குறிப்புக்கு ஒரு வங்கியர் போதிய கவனம் செலுத்தத் தேவையில்லை. ஆனால், ஒரு கொணர்பவர் காசோலையை முழு புறக்குறிப்பின் வாயிலாக ஒரு ஆணைக் காசோலையாக மாற்றலாம் என்று முன்பு பார்த்தோம். அதற்கு பாம்பே உச்ச நீதிமன்றமும் ஒப்புதல் அளித்திருந்தது. மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 50இன் கீழ், கொணர்பவர் காசோலை ஒன்றை சட்டப்படி ஒரு சிறப்புப் புறக்குறிப்பின் மூலம் ஒரு ஆணைக் காசோலையாக மாற்றலாம் என்று தீர்ப்பு வழங்கியது.

இந்தத் தீர்ப்பு வங்கியருக்கு ஏற்றதாக அமையவில்லை. ஏனெனில், ஒரு ஆணைக் காசோலையைப் பொறுத்தவரை, அதில் காணப்படும் எல்லா புறக்குறிப்புகளையும் மிகவும் கவனமாக ஆராய்ந்து அவைகள் செவ்வையானவைதாமா என்றும், அவைகள் மெய்யான கையொப்பங்கள் தாமா எனவும் பார்க்க வேண்டும். வங்கியருக்கு இதனால் ஆணைக் காசோலையைப் பொறுத்தவரை பணிப்பளு கூடுதலாக இருக்கும். கொணர்பவர் காசோலையைப் பொறுத்தவரையில் வங்கியருக்குப் பணிப்பளு மிகுதியாய் இராது. ஆனால் கொணர்பவர் காசோலைக்கு ஒரு ஆணைக் காசோலைக்குரிய இடத்தை பாம்பே நீதிமன்றம் வழங்கியதால் வங்கியர்தம் பணிப்பளுவும் பொறுப்பும் மிகவே, அவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட துன்பம்தனை நீக்கும்படி முறையிட்டனர். எனவே, 1934ஆம் ஆண்டு மாற்றுமுறை ஆவணச்சட்டம் திருத்தப்பட்டு 'ஒரு கொணர்பவர் காசோலை என்றும் ஒரு கொணர்பவர் காசோலை' யாகவே கருதப்படும் என்ற விதியினை வகுத்துள்ளது. இக்கருத்துரு வழங்கப்பட்டபின் ஒரு வங்கியரின் நிலை நிறைவுதரும் நிலையாக மாறியுள்ளது.

**(3) வரையறை புறக்குறிப்பு (Restrictive endorsement)**

ஒரு ஆவணத்தின் மீதான உரிமை மாற்றுத் தன்மையைத் தடைசெய்யும் நோக்கத்துடன் செய்யப்படும் புறக்குறிப்பு வரையறை புறக்குறிப்பு எனப்படும். இவ்வாறு புறக்குறிப்பிட்ட

காசோலையைப் பெறும் ஒரு புறக்குறிப்பாளி, தான் பெற்ற காசோலையை மற்றொரு நபருக்கு உரிமை மாற்றம் செய்ய இயலாது. இவ்வகை புறக்குறிப்பில், புறக்குறிப்பாளியின் பெயரினை அடுத்து, "மட்டும்" என்ற சொல் சேர்க்கப்படுகின்றது. சான்றாக : அ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக என வரையப்பட்ட காசோலையில், பின்வருமாறு அதன் பின்புறத்தில் புறக்குறிப்பு செய்யப் பட்டுள்ளது.

"பெ. எழிலுக்கு மட்டும் செலுத்துக"

கையொப்பம் : அ. அருண்.

**(4) நிபந்தனைப் புறக்குறிப்பு (conditional endorsement)**

ஒரு புறக்குறிப்பாளர் ஒரு நிபந்தனையைப் புறக்குறிப்பில் குறிப்பிட்டு அந்த நிபந்தனையை நிறைவேற்றிய பின்னரே காசோலைத் தொகையை புறக்குறிப்பாளிக்குச் செலுத்தும்படி ஆணையிட்டால், அது நிபந்தனைப் புறக்குறிப்பு எனப்படும். இவ்வாறு குறிப்பிட்ட நிபந்தனை நிறைவேறிய பின்னரே, புறக்குறிப்பாளிக்கு பணத்தைப் பெறும் உரிமை கிடைக்கும்.

*சான்று*

அ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலையில் பின்வருமாறு அதன் பின்புறத்தில் புறக்குறிப்பு செய்யப்பட்டுள்ளது :

(அ) "பெ. எழில் தனது வீடு கட்டுமானப் பணி நிறைவேறிய உடன் செலுத்துக"

கையொப்பம். அ. அருண்

(ஆ) "பெ. எழில், க. மகிழினியை மணந்தால் செலுத்துக"

கையொப்பம் : அ. அருண்.

இவ்வகை புறக்குறிப்பைப் பெரும்பாலும் நடைமுறையில் கையாளுவதில்லை. ஏனெனில், இவ்வகைப் புறக்குறிப்பு ஒரு செலுத்தும் வங்கியரை மிகவும் இக்கட்டான சூழ்நிலைக்கு ஆளாக்குகிறது. நிபந்தனைப் புறக்குறிப்பு, காசோலையின் ஒரு முக்கிய தன்மையான "நிபந்தனையற்ற ஆணையை" இழக்கச் செய்வதால், இதனை ஒரு காசோலை என்றே கருத இயலாது. எனவே அக்காசோலையை ஒரு வங்கியர் திருப்பி அனுப்பி விடலாம். பொதுவாக, செல்வாக்குமிக்க வாடிக்கையரே மேற்கண்டவாறு நிபந்தனைகளை இடுவதால் செலுத்தும் வங்கியர் ஒரு இக்கட்டான நிலைக்கு ஆளாவார். இங்கிலாந்தில், மாற்றுச்சீட்டுச் சட்டம் பிரிவு 33இன்படி, ஒரு வங்கியர் இவ்வகையான நிபந்தனைகளை நிறைவேற்றியோ அல்லது நிறைவேற்றாமலோ காசோலைக்குப் பணத்தைச் செலுத்தலாம். எக்காரணத்தை முன்னிட்டும் அந்த வங்கியர் பொறுப்பாளி ஆக மாட்டார் என பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. ஆனால், இந்தியாவில் இவ்வாறான விதி சட்டத்தில் கிடையாது. இந்திய வங்கியரைப் பொறுத்தவரையில், அவர்கள் இருமுறைகளைக் கையாளலாம் :-

(1) இவ்வகையான காசோலையை 'நிபந்தனையுடன் கூடிய ஆணை' என்று கருதி அவமதித்து விடலாம். அல்லது

(2) அவ்வாறான நிபந்தனையை நிறைவேற்றிய பின்னர் அக்காசோலைக்கு பணத்தைச் செலுத்தலாம். அவ்வாறு செய்யும் போது, வங்கியருக்கு ஏதேனும் இழப்பு ஏற்படின் அதை வாடிக்கையர் ஈடுசெய்ய பிணையேற்றுக் கொள்ள வேண்டும். மேற்கூறியவாறு, இந்தியாவில் நிபந்தனைப் புறக்குறிப்பைப் பொறுத்தவரையில் ஒரு வங்கியரின் நிலை தெளிவாக இல்லை.

ஒரு நிபந்தனைப் புறக்குறிப்பின் வகைகள் பின்வருமாறு:

(அ) பொறுப்பு தவிர் புறக்குறிப்பு (Sans Recourse Endorsement)

மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 52இன்படி

"மாற்றுமுறை ஆவணம் ஒன்றின் புறக்குறிப்பாளர் அந்த ஆவணத்தின் மீதான தன்னுடைய பொறுப்பை சொற்கள் மூலமாக வெளிப்படையாகத் தவிர்த்து விடுதல் பொறுப்பு தவிர் புறக்குறிப்பு" எனப்படும்.

இவ்வாறு, ஒரு புறக்குறிப்பாளர் தான் புறக்குறிப்பிடும் ஆவணத்திற்குப் பணம் மறுக்கப்படும்பொழுது தனக்கு எந்தவிதமான பொறுப்பும் கிடையாது என்று தனது புறக்குறிப்பில் அறிவிப்பதற்கு 'பொறுப்பு தவிர் புறக்குறிப்பு' என்று பெயர். இவ்வகை புறக்குறிப்பில், புறக்குறிப்பு செய்யப்பட்ட ஆவணம் அவமதிக்கப்பட்டால், அந்த புறக்குறிப்பாளர் பொறுப்பேற்க மாட்டார். அந்த ஆவணத்திற்கு பணம் மறுக்கப்படுங்கால், புறக்குறிபபாளரை பணம் செலுத்தும்படி கோர இயலாது. மேலும் பணம் செலுத்தக் கோரி வழக்குத் தொடரவும் முடியாது.

*சான்று*

அ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலையின் பின்புறத்தில், பின்வருமாறு புறக்குறிப்பு செய்யப்பட்டுள்ளது :

"பெ. எழில் அல்லது அவரது ஆணைப்படி என்னுடைய பொறுப்பில்லாமல் செலுத்துக"

கையொப்பம் : அ. அருண்.

மேற்கூறிய சான்றில், காசோலை அவமதிக்கப்படுமாயின், அ. அருண் எவருக்கும் பொறுப்பாளி ஆக மாட்டார்.

(ஆ) செலவு தவிர் புறக்குறிப்பு (Sans Frais Endorsement)

புறக்குறிப்பாளர் ஒருவர், ஆவணம் ஒன்றில் புறக்குறிப்பிடும் பொழுது 'செலவு தவிர்' என்ற சொல்லைக் கையாண்டிருப்பாரானால், அந்த ஆவணத்திற்குப் பணம் மறுக்கப்படும்பொழுது அதன்கண் காணப்படும் தொகைக்கு மட்டுமே அவர் பொறுப்பாளியாவாரேயன்றி ஆவண

அவமதிப்பினால் நிகழக்கூடிய செலவுகளுக்கு அவர் பொறுப்பாளியாகார். இவ்வாறு செலவுகளைத் தவிர்த்து விடும் காரணத்தால் இதனைச் செலவு தவிர் புறக்குறிப்பு என்கிறோம்.

பொதுவாக, ஒரு மாற்றுச்சீட்டு அவமதிப்பிற்குட்படும்போது, அதனை வைத்திருப்பவர் சான்றுறுதி அதிகாரியிடம் (Notary Public) சென்று, அவமதிக்கப்பட்ட அச்சீட்டை மறுப்புக்குறிப்பிட்டு மறுப்புச் சான்றிதழ் (Noting and protesting) பெற்று வைத்துக் கொள்வது வழக்கம். இதற்கான செலவுகளை அந்த ஆவணத்தை எழுதியவரும் மற்றும் புறக்குறிப்பிட்டவர்களும் ஏற்கவேண்டும் என்பது விதி. ஆனால், புறக்குறிப்பு செய்பவர், ஒரு ஆவணத்தின் மீது ஏற்படக்கூடிய எல்லாச் செலவுகளையும் தவிர்க்கும் நோக்கோடு புறக்குறிப்புச் செய்ய விரும்பினால், செலவு தவிர் புறக்குறிப்பினைக் கையாளலாம். இதற்காக, இவர் தமது புறக்குறிப்பில் 'செலவுகள் தவிர்க்கப்பட்டன' என்னும் சொற்களை சேர்த்துக் கொள்ளுதல் அவசியம்.

*சான்று*

எ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலையின் பின்புறத்தில் பின்வருமாறு புறக்குறிப்பு செய்யப்பட்டுள்ளது :

"பெ. எழில் அல்லது அவரது ஆணைப்படி செலுத்துக,
செலவுகள் தவிர்க்கப்பட்டன"

கையொப்பம் : எ. அருண்.

(இ) கடமை தவிர் புறக்குறிப்பு (Facultative endorsement)

ஒரு புறக்குறிப்பாளர் தமது உரிமைகளில் ஏதேனும் சிலவற்றை விட்டுக்கொடுத்து புறக்குறிப்பிடுவராயின், அதனை கடமை தவிர் புறக்குறிப்பு என அழைக்கின்றோம். பொதுவாக, ஒரு ஆவணம் அவமதிக்கப்படும்போது, மறுப்பு அறிவிப்பு கொடுக்க வேண்டிய கடமை புறக்குறிப்பாளிக்கு உண்டு. ஆனால்,

இவ்வகை புறக்குறிப்பில், ஒரு புறக்குறிப்பாளி மறுப்பு அறிவிப்பு புறக்குறிப்பாளருக்கு கொடுக்காமலேயே அவரை பொறுப்பாளி யாக்கலாம். ஏனெனில் இவ்வகை புறக்குறிப்பிடுபவர் தான் மறுப்பு அறிவிப்பு பெறும் உரிமையை விட்டுக் கொடுத்து விடுகின்றார். அதே சமயத்தில், புறக்குறிப்பாளி மறுப்பு அறிவிப்பு கொடுக்கவேண்டிய கடமையையும் தவிர்த்து விடுகின்றார்.

*சான்று*

எ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலை பின்வருமாறு அதன் பின்புறத்தில் புறக்குறிப்பிடப்பட்டுள்ளது :

"பெ. எழில் அல்லது அவரது ஆணைப்படி செலுத்துக மறுப்பு அறிவிப்பு தேவையில்லை"

கையொப்பம் : எ. அருண்.

(5) பகுதி புறக்குறிப்பு (Partial endorsement)

ஒரு ஆவணம் அதனுடைய ஒரு பகுதி தொகைக்கு மட்டுமே புறக்குறிப்பு செய்யப்பட்டிருப்பின், அது பகுதி புறக்குறிப்பு என்று அழைக்கப்படும். இவ்வகை புறக்குறிப்பிற்குச் சட்டத்தில் ஒப்புதல் அளிக்கப்படவில்லை. மாற்றுமுறை ஆவணச் சட்டம் பிரிவு 56இன்படி, பகுதிபுறக்குறிப்பு ஒரு செல்லாத புறக்குறிப்பாகக் கருதப்படும்.

*சான்று*

எ. அருண் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக ரூ.1000க்கு வரையப்பட்ட காசோலையின் பின்புறம் கீழ்க்கண்டவாறு புறக்குறிப்பிடப்பட்டுள்ளது :

"பெ. எழில் அல்லது அவரது ஆணைப்படி ரூ.500 செலுத்துக"

**(6) சார்பு புறக்குறிப்பு (Prepro endorsement)**

காசோலைக்குரியவர், அதில் புறக்குறிப்புச் செய்யாமல் புறக்குறிப்பு செய்வதற்குரிய அதிகாரத்தைச் சட்டப்படி வேறு ஒருவருக்கு அளிப்பாரானால் அவர் சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட முகவராகின்றார். அம்முகவர் அல்லது பதிலாள் ஒருவரால் செய்யப்படும் புறக்குறிப்பு சார்பு புறக்குறிப்பு எனப்படும். இவ்வாறு காசோலைக்குரியவர் தன் சார்பாளரான ஒருவரிடம் புறக்குறிப்பிடும் பணியை ஒப்படைத்து விட்டதை முன்கூட்டியே வங்கியருக்குத் தெரிவித்துவிட வேண்டும். இல்லையெனில், இவ்வகை புறக்குறிப்பை வங்கியர் ஏற்றுக்கொள்ள மாட்டார்.

*சான்று*

லக்கி டிரேடர்ஸ் அல்லது அவர் ஆணைப்படி செலுத்துவதற்காக வரையப்பட்ட காசோலை பின்வருமாறு அதன் பின்புறத்தில் புறக்குறிப்பிடப் பட்டுள்ளது :

"மாடர்ன் டிரேடர்ஸ் அல்லது அவர்களது ஆணைப்படி செலுத்துக"

லக்கி டிரேடர்ஸ் சார்பாக

கையொப்பம் : பார்த்திபன்

**முறையான புறக்குறிப்பின் நெறிகள்**

ஒரு முறையான புறக்குறிப்பு என்பது முழுமையானதாகவும் சட்டத்தின்படி ஏற்றுக்கொள்ளத்தக்கதாகவும் இருத்தல் அவசியம். ஒரு புறக்குறிப்பு முறையானதாக அமைய வேண்டுமானால், கீழ்க்கண்ட நெறிகள் பின்பற்றப்பட வேண்டும் :

**(1) நன்மதிப்பு மற்றும் மரியாதை அடைமொழிகள்**

ஒரு காசோலைக்குரியவர் அல்லது ஒரு புறக்குறிப்பாளி

காசோலையை புறக்குறிப்பிடும்போது தான் சாதாரணமாக எப்படி கையொப்பமிடுவரோ அவ்வண்ணமே புறக்குறிப்பிலும் கையொப்பமிட வேண்டும். மரியாதை அடைமொழிகள் மற்றும் சிறப்புப் பட்டங்கள் புறக்குறிப்பில் சேர்க்கப்படக் கூடாது. அவைகள் முன்னடை மொழிகளாகவோ (Prefixes) அல்லது பின்னடை மொழிகளாகவோ (Suffixes) புறக்குறிப்பில் காணப்படக் கூடாது. சான்றாக மரியாதைக்குரிய அடைமொழிகளான திரு, திருமதி, செல்வி, செல்வன், டாக்டர்(மரு.), பத்மஸ்ரீ போன்றவை புறக்குறிப்பில் தவிர்க்கப்பட வேண்டும்.

(2) எழுத்துப்பிழை

பெறுபவர் பெயர் காசோலையில் தவறான எழுத்துப் பிழைகளோடு குறிக்கப்பட்டிருப்பின், காசோலையை புறக்குறிப்பிடும்போது, அவர் அதைப் போன்றே புறக்குறிப்பிலும் குறிக்க வேண்டும். தேவையானால், தனது சரியான பெயரை அடைப்புக்குள் எழுதலாம்.

*சான்று*

"இலக்குவணன்" என்ற பெயர் "லக்குவணன்" என்று காசோலையில் தவறாகக் குறிப்பிட்டிருந்தால், அவர் புறக்குறிப்பிடும்போது லக்குவணன் என்றே கையொப்பமிட வேண்டும். அடைப்புக்குள் இலக்குவணன் என்று எழுதிக் கொள்ளலாம்.

*(3) மகளிர்*

ஒரு திருமணமாகாத பெண் காசோலையில் புறக்குறிப்பிடும் போது, புறக்குறிப்பில் அவருடைய முதல் பெயரையும் அதைத் தொடர்ந்து துணைப் பெயரையும் குறிக்க வேண்டும். திருமணமான பெண்டிர் காசோலையில் புறக்குறிப்புச் செய்யும்போது, தனது பெயர் முதலிலும் தனது கணவர் பெயர் தனது பெயரைத் தொடர்ந்து வருமாறும் புறக்குறிப்பிட வேண்டும்

## (4) கல்வியறிவு இல்லாதவர்

ஒரு படிக்காத நபர் ஒருவர், ஒரு காசோலையில் புறக்குறிப்பிடும் போது, அவரின் இடதுகை பெருவிரல் ரேகை புறக்குறிப்பில் இடம்பெற வேண்டும். இதற்குச் சான்று பகர்வோராக மற்றொரு நபர் கையெழுத்திட்டு தனது முகவரியைக் குறிப்பிட வேண்டும். அந்த நபர் வாடிக்கையருக்கும் வங்கியருக்கும் நன்கு தெரிந்த நபராக இருக்க வேண்டும். அவர் ஒரு வழக்கறிஞராக இருந்தால் நல்லது.

*சான்று*

பழனிமுத்து என்ற படிக்காத நபருக்குரிய காசோலையை அவர் பின்வருமாறு புறக்குறிப்பிடலாம்.

கையொப்பம் : இடது கை பெருவிரல் ரேகை

சான்றாவர் : எல். இராவணன், வழக்கறிஞர்,
7, கீழ மாசி வீதி, மதுரை.

## (5) காலமான வாடிக்கையர்

ஒரு காலம் சென்ற வாடிக்கையரின் பெயரில் வரையப்பட்டுள்ள காசோலையை அவரின் சட்டப்பூர்வமான வாரிசுதாரர் புறக்குறியிடலாம்.

*சான்று*

அறிவு வடிவன் என்ற காலமான நபருக்குரிய காசோலையை பின்வருமாறு புறக்குறிப்பிடலாம் :-

"இரா. வெற்றிச்செழியன் அல்லது அவரது ஆணைப்படி செலுத்துக"

கையொப்பம் : ஆதன் அறிவுவடிவன்
காலம்சென்ற அறிவுவடிவனின் புதல்வர்

## (6) கூட்டாண்மை நிறுவனம்

ஒரு கூட்டாண்மை நிறுவனத்திற்குச் செலுத்த வேண்டிய காசோலையில், அந்த நிறுவனத்தின் பெயரிலேயே, அதன் சார்பாக கையொப்பமிட ஒப்புதல் பெற்ற எந்தக் கூட்டாளியும் புறக்குறிப்பிடலாம். இல்லையெனில், அந்தக் கூட்டாளி அந்த நிறுவனத்தின் சார்பாக புறக்குறிப்பில் கையொப்பமிடலாம்.

*சான்று*

'மால் அன்டு கம்பெனி'க்குரிய காசோலையை, பின்வருமாறு புறக்குறிப்பிடலாம் :

(அ) மால் அண்டு கம்பெனி

(ஆ) மால் அண்டு கம்பெனி சார்பாக

செந்தில்
கூட்டாளி

(இ) மால் அண்டு கம்பெனிக்காக

இளங்கோவன்
மேலாண்மையர்.

## (7) கூட்டுப்பங்கு கம்பெனி

கம்பெனி ஒரு புனைவு நபராதலால், கம்பெனிச் சட்டம் 46ஆம் பிரிவின்படி, கம்பெனியின் பெயரை மட்டும் எழுதி புறக்குறிப்பிடலாம். ஆனால், நடைமுறையில் அவ்விதமான புறக்குறிப்பை வங்கியர் ஏற்றுக் கொள்வதில்லை. பொதுவாக, ஒரு கம்பெனியைக் கட்டுப்படுத்தும் தகுதி அதன் இயக்குநர்கள், மேலாண்மை இயக்குநர், செயலர் போன்ற நபர்களுக்குத்தான் உண்டு. அவர்களுள் காசோலையில் கையொப்பமிட அனுமதி பெற்றவரே அதில் புறக்குறிப்பிடவும் அதிகாரமுள்ளவராவார்.

*சான்று*

வானதி அன்டு கம்பெனி லிமிடெட் என்ற கம்பெனிக்குரிய காசோலையைப் பின்வருமாறு புறக்குறிப்பிடலாம்.

"சுடர் அன்டு கம்பெனி லிமிடெட் அல்லது அவர்களது ஆணைப்படி செலுத்துக"

(அ) வானதி அன்டு கம்பெனி சார்பாக

கையொப்பம் : இளந்திரையன்
நிர்வாக மேலாளர்.

(ஆ) வானதி அன்டு கம்பெனிக்காக

கையொப்பம் : இளங்கோ
செயலர்.

**(8) சங்கம், மாநகராட்சி, கல்வி நிறுவனம் போன்றவை**

பொழுதுபோக்குச் சங்கம், மாநகராட்சி, கல்வி நிறுவனம் போன்றவற்றைப் பொறுத்தவரையில், அவற்றின் சார்பாக காசோலையில் கையொப்பமிட அனுமதி பெற்றவரே, ஆவணங்களிலும் புறக்குறிப்புச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யும்போது, அவர் எந்த அதிகாரத்தின் அடிப்படையில் அல்லது எந்த ஒப்பந்த ஆற்றல் அடிப்படையில் கையொப்பமிட்டுள்ளார் என்பதைச் சுட்டிக்காட்டல் தேவை.

*சான்று*

(அ) நண்பர்கள் சங்கத்திற்காக

கையொப்பம் : மணியன்
தலைவர்

(ஆ) மதுரை மாநகராட்சிக்காக

கையொப்பம் : கபிலன்
மாநகராட்சித் தலைவர்

**(9) நிறைவேற்றாளர் (Executor), காப்பாட்சியாளர் (Administrator) மற்றும் பொறுப்பாண்மையர் (Trustee)**

நிறைவேற்றாளர், காப்பாட்சியர் மற்றும் பொறுப் பாண்மையர் போன்றோர், ஒரு வாடிக்கையர் இறந்தபின் அவரது சொத்துக்களைப் பேணுதற்குரியோராக நியமிக்கப் படலாம். இவர்களில் ஒருவர் அல்லது அனைவரும் சொத்தினைப் பேணுவோராக நியமனம் செய்யப்படலாம். இந்நிலையில் இவர்களில் ஒருவர் அல்லது அனைவரும் ஆவணத்தில் புறக்குறிப்பிடலாம்.

*சான்று*

(அ) "மதுரை மாநகராட்சிக்குச் செலுத்துக"

கையொப்பம் : மாறன்
கிரன்
மறைந்த பரதன் அவர்களின் நிறைவேற்றாளர்கள்.

(ஆ) "மதுரை மாநகராட்சிக்குச் செலுத்துக"

மறைந்த பரதன் அவர்களின் நிறைவேற்றாளராகிய எனக்காகவும் மற்றும் இணை நிறைவேற்றாளர்களுக்காகவும்

கையொப்பம் : கிரன்.

குறிப்பு : பொறுப்பாண்மையரைப் பொறுத்தவரையில், ஒரு பொறுப்பாண்மையர் பிற பொறுப்பாண்மையாளர்களின் சார்பாகக் கையொப்பமிடக் கூடாது. ஆகவே எல்லாரும் புறக்குறிப்பில் கையொப்பமிட வேண்டும்.

### (10) கூட்டு பெறற்குரியவர்கள் (Joint payees)

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களுக்குச் செலுத்துமாறு எழுதப்பட்டுள்ள காசோலையில், அவர்கள் ஒவ்வொருவரும் புறக்குறிப்பிட வேண்டும். சில சமயங்களில், அவர்கள் அனைவரின் சார்பாக, ஒருவரை மட்டும் காசோலையில் கையொப்பமிட அனுமதித்திருந்தால, அவரே காசோலையில் புறக்குறிப்பும் செய்யலாம். அவர்களில் எவரேனும் இறந்து போய்விட்டால், எஞ்சியுள்ளோர் காசோலையில் புறக்குறிப்பிடலாம்.

### (11) ஆள்சாரா பெறற்குரியவர் (Impersonal payee)

ஆள்சாரா பெறுநருக்குச் செலுத்த வேண்டிய காசோலையை, அதனைச் சார்ந்த அதிகாரி புறக்குறிப்பிடலாம்.

*சான்று*

வருமான வரிக்காகச் செலுத்துக என்ற காசோலையை வருமான வரி அதிகாரி புறக்குறிப்பிடலாம்.

### (12) பதிலாள்

ஒரு முகவர் தன்னுடைய முதல்வருக்காக ஆவணத்தில் புறக்குறிப்புச் செய்யலாம். அவ்வாறு செய்யும்போது, அவர் 'முதல்வருக்காக' அல்லது 'முதல்வருக்குப் பதிலாக' அல்லது 'முதல்வர் சார்பாக' செய்கிறேன் என்று ஆவணத்தில் குறிப்பிட்டுக் கையொப்பமிட வேண்டும். இது அவர், தானே முதல்வராகச் செயல்படவில்லை என்பதைக் காட்டுகிறது.

*சான்று*

"பாண்டியனுக்கு அல்லது அவரது ஆணைப்படி செலுத்துக."

(அ) பேகன் என்பவருக்காகவும், அவர் சார்பிலும்

கையொப்பம் : பாரி

(ஆ) பேகன் அவர்கள் சார்பில்

கையொப்பம் : பாரி

(இ) பேகன் அவர்களின் சார்பில் அவருடைய அனுமதி பெற்ற சட்ட முகவர்

கையொப்பம் : பாரி

**(13) வாணிப நோக்கமற்ற நிறுவனம் (Non-trading concern)**

ஒரு வாணிப நோக்கமற்ற நிறுவனத்திற்குரிய காசோலையில் புறக்குறிப்புச் செய்யும்போது எந்த நபருக்கு காசோலை வரைய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதோ அந்த நபரின் கையொப்பமும், அவரது பதவி நிலை (status) மற்றும் நிறுவனத்தின் பெயர் முத்திரை ஆகியவை புறக்குறிப்பில் காணப்பட வேண்டும்.

*சான்று*

"மதுரை காற்பந்துச் சங்கம் அல்லது அவர்களுடைய ஆணைப்படி செலுத்துக"

நெல்லை காற்பந்துச் சங்கத்திற்காக

கையொப்பம் : வழுதி
தலைவர்.

**(14) பிற நெறிமுறைகள்**

(அ) புறக்குறிப்புச் செய்யும்போது பேனாவினால் எழுதுவது மிகவும் நல்லது.

(ஆ) காசோலையில் குறிப்பிடப்பட்ட பணத்தைப் பெறும் உரிமையுடையவர், புறக்குறிப்பிடும் உரிமையைப் பெறுவர். அவரைத்தவிர, வேறொருவர் இடும் புறக்குறிப்புச் செல்லாது.

(இ) ஆவணத்தின் முழு மதிப்பிற்கும் புறக்குறிப்பு இடப்பட வேண்டும். பகுதி தொகைக்கு மட்டுமே இடப்பட்ட புறக்குறிப்புச் செல்லாது.

(ஈ) வங்கியர் அறியாத மொழியில் காசோலையின் புறக்குறிப்பு அமைந்திருக்குமானால் அதனை வங்கியர் தகுந்த காரணம் கூறி அவமதித்துவிடலாம்.

## பயிற்சி வினாக்கள்

**ஒரு பக்க விடைக்குரியவை**

(1) கொணர்பவர் காசோலைக்கு, புறக்குறிப்பு தேவையா?

(2) புறக்குறிப்பின் இலக்கணம் தந்து அதன் முக்கியத்துவத்தை விளக்குக.

(3) புறக்குறிப்பு மற்றும் புறக்குறிப்பிணைத்தாள் - இவற்றை விளக்குக.

(4) புறக்குறிப்பிற்கும் உரிமை மாற்றத்திற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

(5) "கொணர்பவர் காசோலை என்றும் கொணர்பவர் காசோலையே" - விவாதிக்க.

(6) நிபந்தனைப் புறக்குறிப்பினை தக்க சான்றுகளுடன் விளக்குக.

**மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை**

(1) புறக்குறிப்பின் இலக்கணம் தந்து அதனின் பல்வேறு வகைகளை விளக்குக.

(2) நிபந்தனைப் புறக்குறிப்பு என்றால் என்ன? அதனின் பல்வேறு வகைகள் யாவை?

(3) புறக்குறிப்பின் பொருளையும் மற்றும் முக்கியத்துவத்தையும் வெளிக்கொணர்க. அதனின் ஏதாவது நான்கு வகையினைத் தெளிவாக விளக்குக.

(4) புறக்குறிப்பின் இலக்கணம் தருக. ஒரு முறையான புறக்குறிப்பின் நெறிகள் யாவை?

# 9

## குறியிடுதல்
## (MARKING)

"செலுத்தும் வங்கியர் தன்னுடைய வாடிக்கையரின் காசோலை "பணம் செலுத்தத் தகுதி பெற்றது" என்று வழங்கும் சான்றே குறியிடுதல் எனப்படும்".

வாடிக்கையரின் காசோலையில் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்களின் அடிப்படையில் அக்காசோலைக்குப் பணம் செலுத்தப்படும் என்று செலுத்தும் வங்கியர் உறுதியளிப்பதையே குறியிடல் அல்லது சான்று அளித்தல் (Certification) என அழைக்கின்றோம். அவ்வாறு சான்று அளிப்பதற்கு உரிமை பெற்ற அதிகாரி ஒருவர் காசோலையின் முகப்பில் அதன் குறுக்குப் பக்கமாக "பணம் செலுத்தத் தகுதி பெற்றது" (Good for payment) அல்லது "ஏற்கப்பட்டது" அல்லது "சான்று அளிக்கப்பட்டுள்ளது" (Certified) என்பன போன்றவற்றுள் ஏதேனும் ஒரு சான்றுமொழியை எழுதி, வங்கி அலுவலக முத்திரையுடன் கையொப்பமிடுதலே குறியிடலாகிறது.

**குறியிடலும் ஏற்பும்**

காசோலையில் காணப்படும் குறியிடலை, பொதுவாக மாற்றுச் சீட்டில் காணப்படும் ஏற்புடன் ஒப்பிட்டு இரண்டும் ஒத்தவை எனத் தவறாகக் கணிக்கின்றனர். குறியிடலும், ஏற்பும் ஒன்றாகா.

(1) இந்தியாவில் குறியிடலுக்குச் சட்டம் அனுமதி அளிக்கவில்லை. ஆனால், மாற்றுச் சீட்டிற்கு ஏற்பு என்பது சட்டப்படி மிகவும் தேவையான ஒன்று. காசோலையைப் பொறுத்தவரையில், அது

பணத்தைச் செலுத்துதலுக்காக வங்கியரிடம் நேரடியாகச் சமர்ப்பிக்கப்படுகின்றது. ஆனால், மாற்றுச்சிட்டு, அதன்மீது ஏற்பு பெற்ற பின்னரே செலுத்துதலுக்காகச் சமர்ப்பிக்கப்படுகின்றது. எனவே 'ஏற்பு' காசோலைக்குத் தேவையற்றது; மாற்றுச் சிட்டிற்கு மிகவும் தேவையானது.

(2) ஒரு மாற்றுச் சிட்டை ஏற்பவரின் பொறுப்பு, அந்த மாற்றுச் சிட்டை ஏற்ற பின்னரே தொடங்குகிறது. ஆனால், ஒரு காசோலையைக் குறியிடுவதற்கு முன்பே, செலுத்தும் வங்கியர் அக்காசோலை மீது பொறுப்பேற்றவராகத் திகழ்கின்றார். எனவே குறியிடல் என்பது தேவைக்கும் மேற்பட்ட ஒன்றாகக் காணப்படுகிறது.

(3) காசோலையைப் பொறுத்தவரை, வரையப்படுபவராகச் செயற்படும் வங்கியருக்கு அதில் குறியிடுதலைச் சட்டம் கடமையாக்கவில்லை. ஆனால் மாற்றுச்சிட்டினைப் பொறுத்த வரையில், வரையப்படுபவராகச் செயற்படுபவர் அதனை ஏற்பு செய்தாக வேண்டும் எனச் சட்டம் வலியுறுத்துகிறது. மேற்கூறிய காரணங்களால் குறியிடலை ஏற்பு என ஏற்க இயலாது.

குறியிடலின் முக்கியத்துவம்

இந்தியாவில், குறியிடலைப் பற்றி எந்த விளக்கமும் சட்டத்தில் தரப்படாமையால், அதன் இன்றியமையாத் தன்மை பற்றித் தெளிவாக வரையறுக்க இயலவில்லை. ஆனால், அமெரிக்காவில், குறியிடலுக்குச் சட்டம் அனுமதி அளித்துள்ளது. எனவே, அமெரிக்காவைப் பொறுத்தவரையில், குறியீடு காசோலையில் காணப்படுமாயின், கீழ்க்கண்டவற்றிற்கு வங்கியர் உறுதியளிப்பதாகக் கொள்ளப்படும் :

(அ) காசோலை வரைந்தவரின் கையொப்பம் உண்மையானது.

(ஆ) காசோலை வாடிக்கையரின் கணக்கிலுள்ள போதுமான தொகை மீது வரையப்பட்டுள்ளது.

(இ) காசோலை பணம் பெறுபவதற்காகச் சமர்ப்பிக்கப்படும் போது திட்டமாக மதிக்கப்படும்.

இவ்வாறு, அமெரிக்காவில், குறியிடுதல், ஒரு காசோலையை மதிப்பதற்கு, செலுத்தும் வங்கியரால் சட்டப்படி அளிக்கப்படும் ஒரு உறுதிமொழி எனக் கொள்ளலாம். இவ்வகைச் சட்டம் இந்தியாவில் இல்லாமையால், குறியிடல் குறித்துத் தெளிவான விளக்கம் பெற இயலவில்லை. எனினும், அதன் இன்றியமையாமையைக் கீழ்க்கண்ட கருத்துக்கள் வாயிலாக அறியலாம் :

(1) குறியிடலின் இன்றியமையாமை ஒரு இடத்தின் நடைமுறை வழக்கத்தைப் பொறுத்து அமையும். சட்டம் குறியிடலுக்கு இடம் தராமையால், நடைமுறை வழக்கத்தைக் கொண்டு, அதன் இன்றியமையாத் தன்மையை ஆராயலாம். அவ்வாறு வங்கியியல் நடைமுறை வழக்கம், குறியிடலுக்கு அனுமதி அளித்தால், அக்குறியிடல் ஒரு காசோலையை மதிப்பதற்கு, செலுத்தும் வங்கியர் தரும் உறுதிமொழிக்குச் சமமாகும். எக்காரணத்தைக் கொண்டும் அக்காசோலையை அவ்வாறு குறியிட்ட செலுத்தும் வங்கியர் அவமதிக்க முடியாது. இந்தியாவில், தீர்வக நேரத்திற்குப்பின் வரும் காசோலைகள் மீது இவ்வாறு குறியிடுவது ஒரு வழக்கமான செயலாக இருந்தது. மற்றபடி, வங்கியியல் நடைமுறை குறியிடலுக்கு அனுமதி வழங்கவில்லை; வழங்கும் பழக்கமுமில்லை.

(2) காசோலையில் குறியிடும்படி வேண்டிக் கொண்டவரைப் பொறுத்து குறியிடல் முக்கியத்துவம் பெறும்.

பொதுவாக காசோலையை :–

(அ) வரைபவரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடலாம் அல்லது

(ஆ) பணம் பெறுநரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடலாம் அல்லது

(இ) வசூலிக்கும் வங்கியரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடலாம்.

**(அ) வரைபவரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடல்**

பணம் பெறுநரின் மனநிறைவிற்காக, காசோலையை வரைபவர், தனது வங்கியரை அதன்மீது குறியிடும்படி வேண்டலாம். இதனால், பெறுநர் அக்காசோலை அவமதிக்கப்பட வாய்ப்பில்லை என்ற மனநிறைவோடு அதனைப் பெறுவார். இச்சூழ்நிலையில், எக்காரணத்தை முன்னிட்டும் செலுத்தும் வங்கியர் இவ்வாறு குறியிடப்பட்ட காசோலையை அவமதிக்கக் கூடாது. அவர் கீழ்க்கண்ட கருத்துக்களைக் கவனத்திற்கொள்ள வேண்டும் :

(1) வாடிக்கையரின் வேண்டுகோளுக்கிணங்கி, அவர் காசோலையில் குறியிட்டால், அக்காசோலையை 'ஏற்கனவே செலுத்திவிட்ட' காசோலையைப் போல் கருதவேண்டும்.

(2) எனவே, அக்காசோலைக்குரிய பணத்தை அதனை மதிப்பதற்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும். குறியிடப்பட்ட காசோலையை மதிப்பதற்காக, அவரது பிற காசோலைகளை அவமதிப்பதில் தவறில்லை.

(3) இவ்வாறு குறியிடப்பட்ட காசோலை வங்கியரிடம் பெறுநரால் சமர்ப்பிக்கப்படும்போது அதனை அவர் அவமதிக்கவே முடியாது. வாடிக்கையர் (காசோலை வரைந்தவர்) இறந்துவிட்டாலும், அல்லது நொடிப்பு நிலை அடைந்தாலும், காசோலைக்குரிய பணத்தை மறுத்தல் கூடாது.

(4) நீதிமன்றத்தின் பற்றுகை ஆணை கூட இதற்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையைக் கட்டுப்படுத்தாது.

(5) காசோலை குறியிடப்பட்டு அதனைப் பெறுநருக்கு வழங்கியபின், அதற்குப் பணம் வழங்க வேண்டாம் என்று செலுத்துதல் தடை ஆணையை வங்கியருக்கு வாடிக்கையர் அனுப்ப இயலாது.

(6) குறியிடப்பட்ட காசோலைக்குரிய பணத்தை வாடிக்கையரின் கணக்கிலிருந்து எடுத்து "குறியிட்ட காசோலைக் கணக்கு" (marked cheque account) என்ற வேறொரு கணக்கிற்கு, குறியிட்ட உடனே மாற்றிவிட வேண்டும். அவ்வாறு குறியிடப்பட்ட காசோலைக்குப் பணம் செலுத்தியவுடனே 'குறியிட்ட காசோலைக் கணக்கில்' பற்று வைத்து அக்கணக்கை முடித்துவிட வேண்டும். சில வங்கியர் 'குறியிட்ட காசோலைக் கணக்கிற்குப்' பதிலாக அனாமத்துக் கணக்கினைப் பயன்படுத்துகின்றனர்.

இவ்வாறு காசோலை வரைபவரின் வேண்டுகோளுக்கிணங்க சான்று அளிக்கப்படின், அதனை ஒருபோதும் அவமதிப்புச்செய்ய இயலாது என்பது தெளிவாகிறது.

### (ஆ) பணம் பெறுநரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடல்

பணம் பெறுநரின் அல்லது காசோலை வைத்திருப்பவரின் வேண்டுகோளுக்கிணங்க, செலுத்தும் வங்கியர் ஒரு காசோலையில் குறியிடலாம். இவ்வழக்கம் வட அமெரிக்காவிலும் மற்றும் மேற்கிந்திய நாடுகளிலும் சட்டப்படி நடைமுறையிலுள்ளது. இவ்வாறு அந்நாடுகளில் குறியிடல் செய்ய வங்கியர் வாடிக்கையரின் அனுமதியைப் பெறத் தேவையில்லை. மேலும், குறியிடல் செய்தவுடனே, காசோலையின் மீது பணம் செலுத்த வேண்டிய வாடிக்கையரின் பொறுப்பும் தீர்ந்து விடுகின்றது. எனவே பணம் பெறுநர் ஒரு காசோலை வரைபவரின் நிலையை அடைகின்றார். அவருக்கும்

வங்கியருக்குமிடையே ஒரு புதிய ஒப்பந்தம் உருவானதாகக் கருதப்படுகின்றது. இச்சூழ்நிலையில், காசோலை வரைந்தவருக்கு இவ்வாறு குறியிடப்பட்ட காசோலை மீது எந்த உரிமையும் மற்றும் பொறுப்பும் கிடையாது. *வாட்செட் எதிராக ரோசன்* (Watched Vs Rosen) என்ற வழக்கில் காசோலை வைத்திருப்பவரின் வேண்டுகோளுக்கிணங்க, செலுத்தும் வங்கியர் அக்காசோலையில் குறியிட்டால், அக்காசோலையை வரைந்தவரும், பிற புறக்குறிப்பாளர்களும் அந்த ஆவணத்தின் மீதான தங்களது பொறுப்பிலிருந்து விடுபடுவர் என்று தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.

இந்தியாவில் இவ்வகை வழக்கம் நடைமுறையிலும் மற்றும் சட்டப்படியும் அனுமதிக்கப் பெறுவதில்லை. எனவே, ஒரு காசோலையைப் பொறுத்தவரையில், வங்கியர் தமது வாடிக்கையருக்கே பொறுப்பாளியாவாரேயன்றி மற்ற நபருக்கு பொறுப்பாளியாகமாட்டார். வாடிக்கையர் தான் வரைந்த காசோலைக்குப் பணம் செலுத்தத் தடை ஆணையிட்டால், வங்கியர் கண்டிப்பாக அதை நிறைவேற்ற வேண்டும். இக்காரணத்தை முன்னிட்டு, இந்தியாவில், பெறுநர் வேண்டுகோளுக்கிணங்கி காசோலையில் குறியிட வங்கியர் மறுத்து விடுகின்றனர். பெறுநர் வங்கியரை காசோலையில் குறியிட்டுத் தரும்படி மிகவும் வற்புறுத்தினால், வற்புறுத்தலின் பொருட்டு அக்காசோலைக்குப் பதிலாக தனது பணவிடையைத் தந்து தனது நலனை பாதுகாத்துக் கொள்ளலாம். பொதுவாக, இந்தியாவில் பெறுநரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடும் நிலை இல்லை என்றே கூறலாம்.

**(இ) வசூலிக்கும் வங்கியரின் வேண்டுகோளுக்கிணங்கக் குறியிடல்**

தீர்வு செய்வதற்காக ஒரு காசோலையில் குறியிடும் வழக்கம் இந்தியாவில் இருக்கின்றது. பொதுவாக, காசோலைகளைத் தீர்வு செய்யும் பணி, தீர்வகத்தில் ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நிகழும். தீர்வக நேரத்திற்குப் பின்வரும் காசோலையை அன்றே வசூலிக்க முடியாது. அச்சமயம், அந்தக் காசோலையின் செலுத்தும் தன்மையை அறிந்துகொள்ள.

வசூலிக்கும் வங்கியர் அதனைச் செலுத்தும் வங்கியரிடம் எடுத்துச் சென்று குறியிடுமாறு வேண்டுவார். இவ்வாறு குறியிடப் படுமாயின், மறுநாள் அதற்கான பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம். வசூலிக்கும் வங்கியரின் வேண்டுகோளுக் கிணங்கிக் குறியிடப்படும் காசோலை, வரைபவரின் வேண்டுகோளுக்கிணங்கிக் குறியிடப்படும் காசோலை போன்றே செயற்படுகிறது. இவ்வாறு குறியிடப்பட்ட காசோலையை, செலுத்தும் வங்கியர், தாம் ஏற்கனவே செலுத்திவிட்டதாகக் கருத வேண்டும். வாடிக்கையரின் இறப்பு மற்றும் நொடிப்பு நிலை, பற்றுகை ஆணை போன்றவற்றால் இக்காசோலைக்குப் பாதிப்பு ஏற்படாது. இக்காசோலைக்குப் பணம் செலுத்துவதற்காகப் போதிய தொகையை, செலுத்தும் வங்கியர் ஒதுக்கி வைத்துவிட வேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் இக்காசோலையை வங்கியர் அவமதிக்கக் கூடாது.

### குறியிடல் கடமை ஆகாது

"பணம் செலுத்தத் தகுதி பெற்றது" என ஒரு காசோலையில் குறியிடுவதற்கு, செலுத்தும் வங்கியருக்கு எந்தவித கடமையும் கிடையாது. அவ்வாறு அவர் குறியிட மறுத்தால், அந்தக் காசோலையை அவர் அவமதித்ததாகக் கருத இயலாது.

### குறியிடல் நீக்கப்பெறுதல்

ஒரு காசோலையில் காணப்படும் குறியீட்டினை, செலுத்தும் வங்கியர் எப்போது வேண்டுமானாலும் நீக்கி விடலாம். ஆனால், அக்காசோலையை வரைந்தவர் அதனை பெறுநருக்கு வழங்கும் முன்னரே குறியீடு நீக்கப்பட வேண்டும். அவ்வாறு நீக்கும்போது, வாடிக்கையர் கணக்கில் ஏற்கனவே பற்று வைக்கப்பட்ட தொகையை அவர் மறுபடியும் கவனமாக வரவு வைத்தல் அவசியம்.

### பின்தேதியிட்ட காசோலையில் குறியிடுதல்

பின்தேதியிட்ட காசோலையில் குறியிடுதல் செல்லாது என்று *பஞ்சாப் நேஷனல் பாங்க் லிமிடெட் எதிராக பாங்க் ஆஃப்*

பரோடா லிமிடெட் (Punjab National Bank Ltd. Vs Bank of Baroda Ltd.) என்ற வழக்கில் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது. மேற்கூறிய வழக்கில், ஒரு பின்தேதியிடப்பட்ட காசோலையில் 'பணம் செலுத்தத் தகுதி பெற்றது' என பாங்க் ஆஃப் பரோடா குறியிட்டிருந்ததை நம்பி பஞ்சாப் நேஷனல் பாங்க் ரூ.2,75,000ஐ தனது வாடிக்கையருக்குக் கடனாக அளித்தது. ஆனால் அக்காசோலையை பாங்க் ஆஃப் பரோடா மதிக்கத் தவறியதால் அதன்மீது வழக்குத் தொடரப் பட்டது. கிழ் நீதிமன்றத்தின் தீர்ப்பு பஞ்சாப் நேஷனல் பாங்கிற்கு ஏற்றதாக அமையவே, பேங்க் ஆஃப் பரோடா மறுபடியும் மேல் நீதிமன்றத்தில் முறையிட்டது. இதனை விசாரணை செய்த மேல் நீதிமன்றம் கிழ்க்கண்ட காரணங்களால், பின்தேதியிட்ட காசோலையில் குறியிடுவது செல்லாது என்று திட்டவட்டமானத் தீர்ப்பு வழங்கியது :-

(அ) காசோலை ஒரு மாற்றுச்சீட்டைப் போன்றே இருப்பினும், காசோலைக்கு 'ஏற்பு' தேவையற்றது. எனவே குறியிடுதலை ஏற்பு எனக் கருத இயலாது.

(ஆ) வங்கியியல் வழக்கத்தின்படி, திர்வு செய்தலுக்காக மட்டுமே அன்றி, பிறவற்றிற்குக் குறியிடும் அனுமதி இல்லை.

(இ) குறியிடப்பட்ட காசோலை பின்தேதியிடப்பட்ட காசோலையாக இருப்பதால், வங்கியர் தனது வாடிக்கையரின் கணக்கிலுள்ள வருங்காலத்து இருப்பை அவரால் கணக்கிட இயலாது. எனவே குறியிடுதலை பணம் செலுத்துவதற்காகச் செய்யப்பட்ட ஒரு உறுதிமொழி எனக்கூற முடியாது.

(ஈ) பாங்க் ஆஃப் பரோடா வங்கியின் மேலாளருக்கு, பின்தேதியிட்ட காசோலையில் குறியிடுவதற்கு அதிகாரம் அளிக்கப்படவில்லை.

எனவே, பின்தேதியிடப்பட்ட காசோலையில் குறியிடப் பட்டிருந்தால் அது செல்லாது என்பது தெளிவாகின்றது.

மேற்கூறிய வழக்கின் தீர்ப்புக்குப் பின்னர் 'குறியிடுதல்' குறித்த ஐயப்பாடுகள் தெளிவுறாத காரணத்தால், இந்திய வங்கியர் குறியிடும் பழக்கத்தைக் கைவிட்டு விட்டனர் எனலாம்.

## பயிற்சி வினாக்கள்

### ஒரு பக்க விடைக்குரியவை

*(1) 'குறியிடுதல்' என்பது பற்றி நீவிர் அறிவது யாது?*

*(2) குறியிடலுக்கும் மற்றும் ஏற்புக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?*

*(3) வரைபவரின் வேண்டுகோளுக்கிணங்க காசோலையில் குறியிடப்பட்டிருப்பின், அதனின் முக்கியத்துவம் யாது?*

*(4) இந்தியாவில் பணம் பெறுநரின் வேண்டுகோளுக் கிணங்கி காசோலையில் குறியிடும் வழக்கம் உண்டா?*

*(5) வசூலிக்கும் வங்கியரின் வேண்டுகோளுக்கிணங்க செலுத்தும் வங்கியர் காசோலையில் குறியிடும் வழக்கம் இந்தியாவில் உண்டா? என்பதைத் தெளிவாக விளக்குக.*

*(6) பின்தேதியிட்ட காசோலையில் குறியிடுதலின் விளைவுகளை விவரிக்க.*

### மூன்று அல்லது நான்கு பக்க அளவிற்கான விடைக்குரியவை

*(1) குறியிடுதலின் பொருள் பற்றியும் அதனின் முக்கியத்துவம் பற்றியும் எடுத்துரைக்க.*

*(2) "காசோலையில் குறியிடும்படி வேண்டிக் கொண்டவரைப் பொறுத்து குறியிடலின் முக்கியத்துவம் அமைந்துள்ளது" விவாதிக்க.*

10

# செலுத்தும் வங்கியர்

## (PAYING BANKER)

வாடிக்கையர் தம்மீது எழுதும் காசோலைகளுக்குப் பணம் தரும் வங்கியர், செலுத்தும் வங்கியர் எனப்படுவர். தம்மீது எழுதப்பட்ட காசோலைகள் சமர்ப்பிக்கப்பட்டபோது வங்கியர் அதற்குரிய பணத்தைக் கொடுக்க வேண்டும். காசோலைகளுக்குப் பணம் தரும் பணி மிக முக்கியப் பணியாகும். மாற்று ஆவணச்சட்டம், பிரிவு 31ன்படி இது ஒரு சட்டமுறைப் பொறுப்பு ஆகும்.

பணம் செலுத்தும்போது வங்கியர் தேவையான கவனமும் அக்கறையும் கொள்ள வேண்டும். காசோலையைத் தவறுதலாக அவமதித்தால் வாடிக்கையருக்கு நட்ட ஈடு கொடுக்க நேரிடும். அதே வேளையில், போதிய கவனமில்லாமல் தவறுதலாகக் காசோலைக்குப் பணம் கொடுத்தால், வாடிக்கையரின் கணக்கைப் பற்று வைக்க முடியாது. ஆகவே வங்கியரின் நிலைமை மிகவும் ஆபத்தானது.

காசோலையை மதிக்குமுன் வங்கியர் பின்வரும் முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

### 1. காசோலையைச் சமர்ப்பித்தல்

செலுத்தும் வங்கியர் முதலில் காசோலையைச் சமர்ப்பித்தது சரிதானா எனக் கவனிக்க வேண்டும். இதனைப் பின்வரும் காரணிகளில் கவனம் செலுத்துவதன் மூலம் அறியமுடியும்.

#### அ. காசோலையின் வகை

பொதுவாகக் காசோலைகள் இருவகைப்படும்.

1. கீறலிட்ட காசோலை 2. கீறலிடப்படாத காசோலை

வங்கியர், சமர்ப்பிக்கப்பட்ட காசோலை எந்த வகையைச் சார்ந்தது என அறிய வேண்டும். கீறலிடப்படாத காசோலைக்கு உடனடியாகப் பணம் கொடுக்கலாம். கீறலிடப்பட்டதாக இருந்தால் மற்றொரு வங்கிக்குப் பணம் செலுத்த வேண்டும். சிறப்புக் கீறலிடப்பட்டிருந்தால், எந்த வங்கியின் பெயரில் கீறலிடப்பட்டுள்ளதோ அந்த வங்கிக்கு மட்டுமே செலுத்தவேண்டும். இதற்கு மாறாக வங்கியர் பணம் செலுத்தினால் அவர், காசோலை எழுதியவர் மற்றும் உண்மையான உரிமையாளருக்கும் பொறுப்பாவார். மேலும் இது முறைப்படி செலுத்துதல் (Payment in due course) ஆகாது.

ஆ) கிளை

எந்த வங்கிக் கிளையில் கணக்கு வைக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் கிளையின் மீது காசோலை எழுதப்பட்டிருக்கிறதா என அறிய வேண்டும். பிற கிளையின் மீது எழுதிய காசோலைக்கு வங்கியர் பணம் தர வேண்டியதில்லை. அந்தக் காசோலையைத் திருப்பி அனுப்பிவிடலாம்.

இ) கணக்கு

ஒரே வங்கிக் கிளையில், வாடிக்கையர் ஒன்றுக்கு மேற்பட்ட கணக்குகள் துவங்கியிருக்கலாம். ஒவ்வொரு கணக்கிற்கும் தனித்தனிக் காசோலைப் புத்தகம் கொடுக்கப்பட்டிருக்கும். ஆகவே வங்கியர், ஒரு கணக்கிற்குக் கொடுக்கப்பட்ட காசோலை மற்றொரு கணக்கிலிருந்து பணம் பெறப் பயன்படுத்த அனுமதிக்கக் கூடாது.

ஈ) வங்கி அலுவல் நேரம்

வங்கி வேலை நாட்களில், வங்கியின் வேலை நேரத்தில் காசோலை சமர்ப்பிக்கப்பட்டதா என வங்கியர் கவனிக்க வேண்டும். வங்கியின் அலுவல் நேரமல்லாதபோது பணம் செலுத்தினால் அது முறைப்படி செலுத்தல் ஆகாது. வங்கியின் அலுவல் நேரம் சட்டப் பூர்வமாக அறிவிக்கப்படுகிறது. வங்கி விடுமுறை நாட்களும், மாற்றுமுறை ஆவணச் சட்டத்தின் கீழ்

அறிவிக்கப்படுகின்றன. ஆகவே, வங்கி விடுமுறை நாட்கள் மற்றும் வங்கி அலுவலில்லாத நேரங்களில் பணம் கொடுக்கக்கூடாது.

இருப்பினும், வாடிக்கையர் கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களில் நேரத்தைச் சிறிது நீட்டிக்கலாம்.

*உ) சிதைந்த காசோலை*

ஒரு காசோலை கிழிக்கப்பட்டிருந்தாலோ, ரத்து செய்யப் பட்டிருந்தாலோ அல்லது சிதைக்கப்பட்டிருந்தாலோ அதற்குப் பணம் தரக்கூடாது. அந்தக் காசோலை தவறுதலாகக் கிழிக்கப்பட்டிருந்தால் அதை எழுதியவர் உறுதி செய்ய வேண்டும். “தவறுதலாகக் கிழிக்கப் பட்டது” என அவர் எழுதிக் கையொப்பமிட வேண்டும். சிதைக்கப்பட்ட காசோலை பொதுவாகத் திருப்பி அனுப்பப்படுகிறது.

## 2. காசோலையின் வடிவம்

காசோலை முறையாகச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது என அறிந்தபின், வங்கியர் காசோலையின் வடிவம் முறையாக இருக்கிறதா எனச் சரிபார்க்க வேண்டும்.

*அ) அச்சிட்ட படிவம்*

ஒரு காசோலை, சட்டத்தின் தேவைகள் அனைத்தையும் நிறைவு செய்ய வேண்டும். எல்லா வாடிக்கையருக்கும் சட்டத்தின் தேவைப்படி காசோலை எழுதத் தெரியாது. ஆகவே வங்கியர் தாங்களே அச்சிட்ட காசோலைகளை வழங்குகின்றனர். வங்கியர் வழங்கிய காசோலையில் எழுதி சமர்ப்பிக்கப்பட்ட காசோலைகளை மட்டுமே வங்கியர் மதிக்க வேண்டும்.

*ஆ) நிபந்தனையற்ற ஆணை*

காசோலை நிபந்தனையற்றதாக இருக்க வேண்டும். நிபந்தனை ஏதும் இருந்தால் வங்கியர் அதனை மதிக்கக் கூடாது.

### இ) தேதி

காசோலைக்குப் பணம் தருமுன், அது தேதியிடப்பட்டிருக்கிறதா என வங்கியர் பார்க்க வேண்டும். தேதியிடப்படாத காசோலைகள் செல்லத்தக்கவையல்ல எனக் கருதமுடியாது. ஆயினும் தேதியிட்ட காசோலைகளுக்கே பணம்தர வேண்டும். முன் தேதியிட்ட காசோலையாக இருந்தால் அது காலாவதியாகி விட்டதா என்று கவனிக்க வேண்டும். காசோலையில் குறிப்பிட்டுள்ள தேதியிலிருந்து ஆறு மாதங்களுக்குப் பின் அது சமர்ப்பிக்கப்பட்டால் அந்தக் காசோலை காலாவதியானது ஆகும். பின் தேதியிட்ட காசோலைகளுக்கு உரிய நாளிலே பணம் கொடுக்கப்பட வேண்டும்.

### ஈ) தொகை

காசோலையில் எண்ணாலும் எழுத்தாலும் எழுதப்பட்ட தொகை ஒத்து இருக்கிறதா என வங்கியர் அறிவது மிக அவசியம். தொகை, எழுத்தால் மட்டும் எழுதப்பட்டிருந்தால் அந்தக் காசோலையைத் "தொகை எழுத்தால் எழுதப்பட வேண்டும்" என்ற குறிப்புடன் திருப்பி அனுப்பவேண்டும்.

காசோலையில் தொகை எழுத்தால் மட்டும் குறிப்பிடப் பட்டிருந்தால் வங்கியர் அதை மதிக்கலாம். ஆனால் நடைமுறையில் அவ்வாறு செய்வதில்லை.

எண்ணாலும் எழுத்தாலும் எழுதப்பட்ட தொகை மாறுபடும் போது வங்கியர் பின்வரும் ஏதேனும் ஒரு முறையைப் பின்பற்றலாம்.

i) "எண்ணாலும் எழுத்தாலும் எழுதப்பட்ட தொகை மாறுபடுகிறது" என்ற குறிப்போடு காசோலையைத் திருப்பி அனுப்பலாம்.

ii) எழுத்தால் உள்ள தொகைக்கு மட்டும் பணம் தரலாம்.

iii) இரண்டில் உள்ள சிறிய தொகைக்குப் பணம் தரலாம்.

ஆனால் நடைமுறையில், வங்கியர் இத்தகைய காசோலைகளைத் திருப்பி அனுப்பிவிடுவர்.

உ) கருநிலைத் திருத்தம்

காசோலையில் திருத்தம் எதுவும் இருக்கிறதா என வங்கியர் கவனிக்க வேண்டும். கருநிலைத் திருத்தம் ஏதேனும் இருப்பின் அக்காசோலையைத் "திருத்தத்தை எழுதியவர் உறுதி செய்ய வேண்டும்" என்ற குறிப்புடன் திருப்பி அனுப்ப வேண்டும். திருத்தத்தைத் தனது முழு கையொப்பத்துடன் எழுதியவர் உறுதி செய்தால், வங்கியர் அக்காசோலையை மதிக்கலாம்.

## 3. போதுமான இருப்பு

காசோலைக்குப் பணம் கொடுக்கப் போதுமான ரொக்க இருப்பு வாடிக்கையரின் கணக்கில் இருக்க வேண்டும். போதுமான இருப்பு இல்லையெனில் காசோலையைத் திருப்பி அனுப்பிவிடலாம். எந்தச் சந்தர்ப்பத்திலும் பகுதித் தொகையை தரக்கூடாது. காசோலையைத் திருப்பி முன்னால் வாடிக்கையரின் கணக்கின் நிலைமையை நன்கு சரிபார்க்க வேண்டும். மேற்வரைப் பற்று ஏதேனும் அனுமதித்திருந்தால் அதிலுள்ள தொகையையும் சேர்த்துக் கணக்கிடலாம். வாடிக்கையருக்கு அதே கிளையில் ஒன்றுக்கு மேற்பட்ட கணக்கு இருந்தால், அவைகளிலுள்ள வரவிருப்பையும் கணக்கிட்டுப் போதுமான தொகை இருந்தால் காசோலையை மதிக்கலாம்.

போதுமான தொகை இல்லாத நிலையில் "போதுமான நிதியில்லை" என்ற குறிப்புடன் காசோலையைத் திருப்பி அனுப்பலாம்.

## 4. எழுதுபவரின் கையொப்பம்

காசோலையில் எழுதுபவரின் கையொப்பம் இருத்தல் அவசியமாகும். எழுதியவர் கையொப்பம் இல்லாத காசோலை

வெற்றுக் காகிதம்தான். காசோலையிலுள்ள கையொப்பமும் மாதிரிக் கையொப்பமும் ஒத்து இருக்கிறதா என வங்கியர் கண்டறிய வேண்டும். இரண்டும் வேறுபட்டிருந்தால் அந்தக் காசோலைக்குப் பணம் கொடுக்கக் கூடாது. வங்கியர், கையெழுத்தைச் சரிவரப் பார்க்காமல் போலிக் கையெழுத்துள்ள காசோலைக்குப் பணம் கொடுத்தால் அது முறைப்படி செலுத்துதல் ஆகாது. வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு எதுவும் கிடைக்காது. கையெழுத்தை வங்கியர் எளிதில் கண்டறிய முடியாத அளவுக்குத் திறமையாக திருத்தியிருந்தாலும் அந்தக் காசோலைக்கு பணம் கொடுத்தால் வங்கியரே பொறுப்பாவார். ஆனால், வாடிக்கையர் தனது நடத்தையின் மூலம் கையெழுத்தைத் திருத்துவதற்கு வழிவகை செய்திருந்தால் வங்கியர் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்படுவார்.

### 5. புறக்குறிப்பு

காசோலையில் புறக்குறிப்பு ஏதேனுமிருந்தால் அது முறையாக இருக்கிறதா எனக் கண்டறிய வேண்டும். ஆணைக் காசோலையாக இருந்தால் இது மிகவும் அவசியம். ஏனெனில் ஆணைக் காசோலையைச் சேர்ப்பிக்குமுன் புறக்குறிப்பிடல் தேவை. புறக்குறிப்பு முறையாக இருக்கிறதா என அறியாவிடில் அது வங்கியரின் கவனமின்மையாகும்.

### 6. நீதிமன்றத் தடை

கார்னிசி உத்தரவு போன்ற நீதிமன்றத் தடை கள் இருந்தால் அந்தக் கணக்கிற்கு எதிராக வழங்கப்படும் காசோலைகளை மதிக்கக் கூடாது.

### 7. பிற முன்னெச்சரிக்கைகள்

பின்வரும் முன்னெச்சரிக்கைகளையும் வங்கியர் கவனத்தில் கொள்ள வேண்டும்.

i) காசோலைத் தடை அறிவிப்பு ஏதேனும் இருக்கிறதா என அறிய வேண்டும்.

ii) வாடிக்கையாளர் நொடித்தது, பித்தநிலை அடைந்தது மற்றும் இறந்தது பற்றிய ஏதேனும் அறிவிப்பு உள்ளதா என அறிய வேண்டும்.

**வங்கியர் காசோலைக்குப் பணம் தர மறுக்கும் சூழ்நிலைகள் (Circumstances under which a cheque can be dishonoured)**

வாடிக்கையரின் காசோலைக்குப் பணம் தர வேண்டிய சட்டப் பொறுப்பு வங்கியருக்கு உள்ளது. ஆனால் பின்வரும் சூழ்நிலைகளில் காசோலைக்குப் பணம் வழங்க மறுக்கலாம்.

**அ. தடை ஆணை**

ஒரு குறிப்பிட்ட காசோலைக்குப் பணம் கொடுக்க வேண்டாம் என வங்கியருக்கு, வாடிக்கையர் தரும் ஆணை தடையாணை எனப்படுகிறது. இந்த ஆணையைப் பெற்றவுடன் வங்கியர் காசோலைக்குப் பணம் தருவதைத் தவிர்க்க வேண்டும்.

தடையாணை எழுத்தால் இருக்க வேண்டும். அதில் தேதி, காசோலை எண், பணம் பெறுபவரின் பெயர் மற்றும் தொகை ஆகிய விபரங்கள் அடங்கியிருக்க வேண்டும். இந்த விபரங்கள் இல்லையெனில் வாடிக்கையரின் ஆணையை மதிப்பது கடினம். ஆணையில் வாடிக்கையரின் கையொப்பம் இருப்பது அவசியம்.

தடை ஆணை தெளிவாக இல்லாவிடில் வங்கியர் பொறுப்பாக மாட்டார்.

*வெஸ்ட் மின்ஸ்டர் வங்கி எதிராக ஹில்டன்*
(Westminster Bank Vs Hilton)

மேற்கூறிய வழக்கில், வாடிக்கையர் காசோலை எண் *117285* எனக் குறிப்பிடுவதற்குப் பதிலாக *117283* என்று குறிப்பிட்டார். காசோலை எண் *117285*க்குப் பணம் கொடுக்கப்பட்டது. இந்த வழக்கில் வங்கியர் பொறுப்புஅல்ல எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

*மைக்கேல் எதிராக செக்யூரிடி வங்கி*
(Michell Vs Security Bank)

இந்த வழக்கில், காசோலை டிசம்பர் 23 என எழுதப்பட்டிருந்தது. ஆனால் தடை ஆணையில் டிசம்பர் 21 எனக் குறிப்பிடப்பட்டது. இந்த வழக்கிலும், தவறுதலாகப் பணம் செலுத்தியதற்கு வங்கி பொறுப்பல்ல எனத் திர்மானிக்கப்பட்டது.

தடை ஆணை வங்கி அதிகாரிக்கு வங்கியின் அலுவல் நேரத்தில் சமர்ப்பிக்கப்பட வேண்டும். தொலைபேசி அல்லது தந்தி மூலம் தடை ஆணை கொடுக்கப்பட்டால், எழுத்தாலான ஆணை பெறும்வரை பணம் செலுத்தக்கூடாது. வாடிக்கையர் மிகவும் வற்புறுத்தினால் தகுந்த காரணத்தைக் குறிப்பிட்டுக் காசோலையைத் திருப்பி அனுப்பலாம்.

*கர்டைஸ் எதிராக சிட்டி மேலும் மிட்லேண்டு வங்கி*
(Curtice Vs City and Midland Bank)

இந்த வழக்கில் தடை ஆணை அனுப்பிய தந்தி வங்கியரின் கடிதப் பெட்டியில் போடப்பட்டது. பெட்டியைத் திறக்கும்போது தந்தி கவனிக்கப் படவில்லை. காசோலைக்குப் பணம் கொடுக்கப்பட்டது. தந்தி. வங்கி மேலாளரைப் போய்ச் சேர்ந்தபின்தான் தடைஆணையைச் செயல்படுத்த முடியும். இந்த வழக்கில் தடைஆணை மேலாளரைப் போய்ச் சேரவில்லை. ஆகவே வங்கியர் பொறுப்பல்ல எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

காசோலையை எழுதியவர் மட்டுமே தடைஆணை பிறப்பிக்க முடியும். காசோலையை உடையவர் அதைத் தவறவிட்டால், எழுதியவர் மூலமே பணம் செலுத்துவது நிறுத்த முடியும். ஏனெனில், எழுதியவருக்கு மட்டுமே வங்கியர் பொறுப்பு ஆவார். தடை ஆணை கொடுக்கப்பட்ட காசோலையைத் தவறுதலாக மதித்தால் பின்வரும் விளைவுகள் ஏற்படும்.

i) செலுத்தப்பட்ட தொகை முறைப்படி செலுத்துதல் ஆகாது.

ii) மதிக்கப்பட்ட காசோலையின் தொகையை வாடிக்கையரின் கணக்கில் பற்றெழுத முடியாது.

iii) இச்செயல் வாடிக்கையரின் ஆணையை மீறியதாகும். ஆகவே வங்கியர் பொறுப்பு ஏற்க வேண்டும்.

ஆகவே தடை ஆணையைப் பெற்றவுடன் அதனைப்பதிவு செய்ய வேண்டும். "செலுத்துதல் தடை பதிவேடு" இதற்காக ஏற்படுத்த வேண்டும். மேலும் தடை ஆணை கொடுத்த காசோலையின் விபரங்கள் அடங்கிய சீட்டு ஒன்றினை வாடிக்கையரின் கணக்கு எழுதிய பக்கத்தில் ஒட்டி வைக்க வேண்டும். காசோலையை மதிக்காதபோது "செலுத்தாதிருக்க ஆணை" என்ற குறிப்புடன் அதைத் திருப்பி அனுப்ப வேண்டும்.

## ஆ) வாடிக்கையர் மரணம்

வாடிக்கையர் இறந்தவுடன், வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் உள்ள உறவு முடிவுக்கு வருகிறது. ஆகவே வாடிக்கையர் இறந்தவுடன் அவரால் எழுதப்பட்ட காசோலைக்குப் பணம் செலுத்துவதை நிறுத்த வேண்டும். இதற்கு வாடிக்கைர் இறந்தது பற்றிய எழுத்து மூலமான தகவலின் அடிப்படையிலேயே செயல்பட வேண்டும். அவருடைய மரணத்தைப் பற்றி அறியாத வங்கியர் அவர் எழுதிய காசோலைகளை மதிக்கலாம்.

## இ) வாடிக்கையர் திவாலாதல்

ஒரு வாடிக்கையர் திவாலானவர் என்று நீதிமன்றத்தால் அறிவிக்கப்பட்ட தகவல் கிடைத்தால் வங்கியர் அவர் விடுத்த காசோலைகளை மதிக்கக் கூடாது. மாநில நொடிப்புநிலைச் சட்டப்படி (Provincial Insolvency Act) நீதிமன்றத்தில் மனுதாக்கல் செய்த நாளிலிருந்தே திவால் நிலைமை ஆரம்பமாகிறது. பொதுவாக மனு தாக்கல் செய்யப்பட்டதன் அறிவிப்பு வங்கியருக்குக் கொடுக்கப்படுகிறது. இதன் அடிப்படையில் வங்கியர் நடவடிக்கை எடுக்கலாம்.

**ஈ) வாடிக்கையர் பித்தநிலை அடைதல்**

வாடிக்கையர் ஒருவர் பித்தநிலை அடைந்துவிட்டார் என்ற அறிவிப்புக் கிடைத்தால் வங்கியர் அவருடைய காசோலைகளுக்குப் பணம் கொடுப்பதை நிறுத்தி வைக்கலாம். நீதிமன்ற ஆணை, மருத்துவர் சான்றிதழ் போன்ற நிரூபணங்களின் அடிப்படையில்தான் வங்கியர் காசோலைகளை மதிப்பதை நிறுத்த வேண்டும்.

**உ) நீதிமன்றத் தடை உத்தரவு**

நீதிமன்றத் தடை உத்தரவு என்பது ஒரு வாடிக்கையரின் கணக்கிலுள்ள தொகையை முடக்கிவைக்குமாறு வங்கியருக்கு நீதிமன்றம் தரும் ஆணையாகும். கணக்கிலுள்ள முழுத்தொகையையும் முடக்கி வைக்க உத்தரவு இருந்தால் வாடிக்கையர் விடுத்த காசோலைகளை மதிக்கக் கூடாது. பகுதித் தொகையை மட்டும் முடக்கி வைக்க உத்தரவு இருந்தால், முடக்கி வைக்கப்படாத தொகையை வழங்கலாம். நீதிமன்ற உத்தரவிலுள்ள நிபந்தனைகளை வங்கியர் கவனமாகப் படித்து அறிய வேண்டும். உத்தரவு தெளிவாக இல்லாவிட்டாலோ அல்லது வாடிக்கையரைப் பற்றித் தவறாக விவரிக்கப்பட்டாலோ அந்த உத்தரவு செயல்படாது.

கணவர் ஒருவரின் வங்கிக் கணக்குக்கு எதிராக விடுக்கப்பட்ட நீதிமன்ற உத்தரவு கணவன்-மனைவியின் இணைக்கணக்கைக் கட்டுப்படுத்தாது. கூட்டாண்மைக் கணக்கிற்கு எதிராக வழங்கப்படும் உத்தரவு கூட்டாண்மை நிறுவனத்தின் கணக்கு மற்றும் கூட்டாளிகளின் கணக்கைக் கட்டுப்படுத்தும். வாடிக்கையாளரின் கணக்கில் செலுத்தப்பட்டு வசூலாகாத காசோலைகளை உத்தரவு கட்டுப்படுத்தாது.

**ஊ) உரிமை மாற்ற அறிவிப்பு**

வங்கியிருப்பு ஒரு வாடிக்கையரின் சொத்தாகும். ஆகவே, அதை எவருக்கும் உரிமை மாற்றம் செய்ய முடியும். வங்கியருக்கு உரிமை மாற்ற அறிவிப்புக் கொடுப்பதன் மூலம் ஒருவர் மற்றொருவருக்கு வங்கியிருப்பை மாற்றம் செய்யலாம். உரிமை

மாற்றம் செய்தபின் வாடிக்கையருக்கு வங்கியிருப்பில் எவ்வித உரிமையுமில்லை. ஆகவே வாடிக்கையர் காசோலை எழுதினால் அதை வங்கியர் மதிக்கத் தேவையில்லை.

எ) பொறுப்புரிமை அமைப்பு மீறல்

பொறுப்புரிமைக் கணக்கைப் பொறுத்த வரையில் பொறுப்புரிமை அமைப்பு விதிகளுக்குப் புறம்பாக அதன் பொறுப்பாளர்கள் பணத்தைத் தங்களது சொந்த செலவுகளுக்குப் பயன்படுத்துகிறார்கள் என அறிய நேர்ந்தால், வங்கியர் அவர்கள் வழங்கும் காசோலைகளை மதிக்க வேண்டியதில்லை.

ஏ) குறைபாடுள்ள உரிமை

காசோலையைக் கொண்டு வரும் நபருக்குக் காசோலை மீது உரிமை இல்லாத போது அல்லது குறைபாடுள்ள உரிமையாக இருந்தால் அந்தக் காசோலைக்குப் பணம் தருவதை வங்கியர் மறுக்க வேண்டும்.

பிற காரணங்கள்

பின்வரும் காசோலைகளுக்கு வங்கியர் பணம் கொடுக்க மறுக்கலாம்.

1) நிபந்தனையுள்ள காசோலை

2) காலாவதியான காசோலை

3) பின் தேதியிட்ட காசோலை

4) சிதைந்த காசோலை

5) தொகை எண்ணாலும் எழுத்தாலும் மாறுபடுதல்

6) வாடிக்கையரின் கையொப்பம் போலியானது

7) முறையற்ற புறக்குறிப்பு

8) அலுவல் இல்லாத நேரத்தில் சமர்ப்பித்தல்

9) போதுமான இருப்பு இல்லாதிருத்தல்

10) கிறலிட்ட காசோலையைச் சமர்ப்பித்தல்

**காசோலையை அவமதித்தற்கான காரணங்கள்**
**(Answers to the Dishonoured Cheques)**

ஒரு காசோலைக்குப் பணம் கொடுக்க மறுக்கும்போது அதற்கான காரணங்களைக் கூறவேண்டுமென்ற சட்டப்பூர்வக் கடமை ஏதுமில்லை. ஆனால் தீர்வக (Clearing House) விதிகளுக்காக வங்கியர் பணம் மறுக்கப்பட்ட காரணங்களை குறிக்கின்றார்கள். காரணங்களைக் கூறும்போது வங்கியர் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். கொடுக்கப்படும் பதில்கள் வாடிக்கையரின் நற்பெயரைப் பாதிப்பதாகவோ அல்லது காசோலையைச் சமர்ப்பிப்பவரை தவறாகத் திசை திருப்புவதாகவோ இருக்கக்கூடாது. எல்லா வங்கிகளுமே காரணங்களை அச்சிட்ட சீட்டுக்களை வைத்திருக்கிறார்கள். சரியான காரணத்திற்கு எதிராகக் குறியிட்டு அதை மறுத்த காசோலையுடன் இணைத்துக் கொடுத்தனுப்புகின்றனர்.

**வழக்கமான பதில்கள்**

i) எ. பா. (எழுதியவரைப் பார்க்கவும்) (Refer to Drawer)

இது காசோலை மறுக்கப்படுவதற்குச் சொல்லும் அடக்கமான பதில். இது காசோலையை உடையவர் அதை எழுதியவரிடமிருந்து மறுத்தலுக்கான காரணத்தைத் தெரிந்து கொள்ளக் கூறும் பதிலாகும். எ. பா. பெரும்பான்மை வங்கியரால் பயன்படுத்தப்படுகிறது.

ii) ப. இ. (பணம் இல்லை) (No Funds)
இ. போ. (இருப்பது போதாது) (No sufficient Funds)

இந்தச் சுருக்கங்கள், வாடிக்கையரின் கணக்கில் போதுமான பணம் இல்லை என்பதைக் குறிக்கிறது.

iii) மு. பு. கு. (முறையற்ற புறக்குறிப்பு) (Endorsement Irregular)

iv) வ. வ. (வரவேண்டியவை வசூலாகவில்லை) (Effects Not Cleared)

வசூலுக்காக வங்கியரிடம் கொடுக்கப்பட்ட காசோலை அல்லது மாற்றுச்சீட்டு வசூலாகாத போது வாடிக்கையரின் கணக்கில் போதுமான பணம் இருக்காது. அந்த நிலையில் வ. வ. என்ற குறிப்பு எழுதப்படுகிறது.

v) எ. எ. வே. (எண்ணும் எழுத்தும் வேறுபடுகிறது) (Words and Figures Differ)

vi) பொ. நீ. தே. (பொறுப்பு நீக்கம் தேவை) (Discharge Required)

vii) வா. இ. (வாடிக்கையர் இறந்தார்) (Drawer Deceased)

viii) கை. வே. (கையெழுத்து வேறுபடுகிறது) (Signature Differs)

**செலுத்தும் வங்கியருக்குச் சட்டம் அளிக்கும் பாதுகாப்பு (Statutory Protection to Paying Banker)**

புறக்குறிப்பாளி அல்லது பெறற்குரியவர் போலியாகக் கையெழுத்திட்ட காசோலைக்கு வங்கியர் பணம் செலுத்தினால் அவர் அதன் உரிமையாளருக்குப் பொறுப்பாகிறார். ஆனால் இந்தத் தவறுக்காக வங்கியரைப் பொறுப்பேற்கச் சொல்வது நியாயமில்லை. ஏனெனில் புறக்குறிப்பாளி அல்லது பெறற்குரியவர் கையெழுத்தை வங்கியர் தெரிந்திருப்பார் என எதிர்பார்க்க முடியாது. ஆகவே, இச்சமயங்களில் சட்டம், வங்கியரைக் காசோலையின் உரிமையாளருக்கான பொறுப்பிலிருந்து விடுவிக்கிறது. இது சட்டமுறைப் பாதுகாப்பு எனப்படுகிறது.

இந்திய மாற்றுமுறை ஆவணச்சட்டம் *1881*, பிரிவு *85* வங்கியருக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. அப்பிரிவு பின்வருமாறு கூறுகிறது :

"ஆணைக் காசோலை ஒன்று, அதன் பெறற்குரியவர் அல்லது அவர் சார்பாகப் புறக்குறியிடும்போது, முறைப்படி செலுத்துவதன் மூலம், எழுதப் பெற்றவர் பொறுப்பு நீக்கம் பெறுகிறார்".

பிரிவு 85-இன் கீழ்ப் பாதுகாப்புப் பெற, வங்கியர் பின்வரும் நிபந்தனைகளை நிறைவேற்றியிருக்க வேண்டும்.

1) வங்கியர் ஒரு ஆணைக் காசோலைக்குப் பணம் செலுத்தியிருக்க வேண்டும்.

2) பெறற்குரியவர் அல்லது அவர் ஆணையிடுபவரால் காசோலை புறக்குறிப்பு இடப்பட்டிருக்க வேண்டும்

3) அது முறையாகச் செலுத்தப்பட்டிருக்க வேண்டும்.

ஆணைக் காசோலையில் புறக்குறியிடல் அவசியம். பெறற்குரியவர் அல்லது அவரது அங்கீகாரம் பெற்றவர் முறையாகப் புறக்குறியீடு செய்திருந்தால் அக்காசோலைக்குத் தவறாகப் பணம் கொடுத்திருந்தாலும் வங்கியர் பொறுப்பாக மாட்டார். புறக்குறிப்புச் செல்லத்தக்கதா என்று அறிய வேண்டியதில்லை. புறக்குறிப்பு முறையாக உள்ளதா என்று அறிவது அவசியம்.

## முறைப்படி செலுத்துதல் (Payment in Due Course)

சட்டமுறைப் பாதுகாப்புப் பெற, செலுத்தும் வங்கியர் பணத்தை முறைப்படி செலுத்தியிருக்க வேண்டும். இந்திய மாற்றுமுறை ஆவணச்சட்டம், 1881 பிரிவு 10 முறைப்படி செலுத்துதலை வரையறுக்கிறது.

"ஆவணம் ஒன்றின் வெளிப்படையான நோக்கத்திற்கேற்ப, நன் நம்பிக்கையுடன் மேலும் அலட்சியமின்றி, அதை வைத்திருப்பவரிடம் அதில் குறிப்பிட்ட தொகையைப் பெற அவருக்கு உரிமையில்லை என நம்புவதற்கு நியாயமாக

இடமளிக்காத சூழ்நிலையில் பணம் கொடுப்பது முறைப்படி செலுத்துதல் எனப்படும்".

முறைப்படி செலுத்துதல் என்ற கொள்கையில் மூன்று தன்மைகள் உள்ளன.

**1. ஆவணத்தின் வெளிப்படையான நோக்கம்**

ஆவணத்தில் சம்பந்தப்பட்ட நபர்களின் ஆவணம் மூலம் வெளிப்படும் எண்ணம் வெளிப்படையான நோக்கம் எனப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு வாடிக்கையர் பின் தேதியிட்ட காசோலை வழங்குகிறார். குறிப்பிட்ட சில நாட்களுக்குப் பின் தான் அக்காசோலைக்குப் பணம் தரவேண்டும் என்பது அவரது எண்ணமாகும். அந்தக் காசோலைக்கு உரிய தேதிக்கு முன்பே பணம் கொடுத்தால் அது எழுதியவரின் எண்ணப்படி கொடுக்கப்படாததாகும். ஆகவே முறைப்படி செலுத்துதல் ஆகாது.

**2. நன்னம்பிக்கையுடனும் கவனக்குறைவின்றியும் பணம் செலுத்தியிருக்க வேண்டும்**

அனைத்து வங்கி நடவடிக்கைகளுக்கும் நன் நம்பிக்கைதான் அடிப்படை. ஆகவே வங்கியர் பொதுவாக நல்ல நம்பிக்கையுடன் செயல்படுவர். சில நேரங்களில் வங்கியர் தனது கடமையில் கவனமின்றி இருக்கலாம். கவனமின்மை அல்லது அலட்சியப் போக்கு நிரூபிக்கப்பட்டால் வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப்படாது.

எடுத்துக்காட்டு

i) புறக்குறிப்பு முறையாக இருக்கிறதா என சரிபார்க்கத் தவறியது.

ii) காலாவதியான காசோலைக்குப் பணம் தருதல்.

iii) கிறலிட்ட காசோலைக்கு வாடிக்கையரிடம் நேரடியாகப் பணம் தருதல்.

*மெட்ராஸ் புரவின்சியல் கோவாபரேட்டிவ் வங்கி எதிராக சௌத் இந்தியன் மேட்ச் பாக்டரி (கலைப்பு)*

(Madras Provincial Co-operative Bank Ltd. Vs South Indian Match Factory Limited (in Liquidation)

இந்த வழக்கில், இராமச்சந்திர ராவ் என்பவர் கலைப்பாளராக நியமிக்கப்பட்ட அறிவிப்பு வங்கியருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. ஒருமுறை, ராவ் பெயரில் அவருடைய அதிகாரமுறையில் வழங்கப்பட்ட காசோலை அவருடைய சொந்தக் கணக்கில் செலுத்தப்பட்டது. இந்த வழக்கில் செலுத்தும் வங்கியர் கவனக் குறைவாக நடந்தார் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**3) பணம் பெற உரிமை உள்ளவருக்குச் செலுத்துதல்**

வங்கியர் 'உடையவருக்கே பணம் செலுத்த வேண்டும்'. அதாவது, காசோலையைச் சமர்ப்பித்தவர் அதனை வைத்திருப்பது மட்டுமின்றி அக்காசோலையின் தொகையைப் பெற உரிமை பெற்றவராகவும் இருக்கிறாரா என அறிந்தபின் பணம் கொடுக்க வேண்டும்.

இந்திய மாற்றுமுறை ஆவணச்சட்டம் 1881 பிரிவு 8 'உடையவர்' என்பதற்கு வரையறை தருகிறது.

"உறுதிச்சீட்டு, மாற்றுச்சீட்டு அல்லது காசோலையை உடையவர் என்பவர், தன் பெயரில் இவற்றை உடைமை பெறவும் மேலும் அதற்காகப் பெறவேண்டிய தொகையைச் சம்பந்தப்பட்ட நபர்களிடமிருந்து பெறவும் உரிமை பெற்றவர் ஆவர்".

ஆவணத்தின் உடைமையைப் பெற்றால் மட்டும் ஒருவர் உடையவர் ஆக முடியாது. அவருக்கு உண்மையான உரிமை இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒருவர் தடை ஆணை உள்ள காசோலையைக் கொண்டு வருகிறார். அல்லது போலிக் கையெழுத்துள்ள காசோலையைக் கொண்டு வருகிறார். அவர்

காசோலையின் உடைமையைப் பெற்றிருந்தாலும் அதன் உரிமையைப் பெறவில்லை. ஆகவே, கொணர்பவரின் உரிமை மீது சந்தேகமிருந்தால் வங்கியர் பணம் செலுத்தலாகாது. அப்படிப் பணம் செலுத்தினால் சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப்படாது.

## கொணர்பவர் காசோலைக்குப் பாதுகாப்பு

இந்திய மாற்றுமுறை ஆவணச்சட்டம் பிரிவு 85(2) கொணர்பவர் காசோலைக்கும் பாதுகாப்பு அளிக்கிறது. கொணர்பவர் காசோலை மீது செய்யப்பட்டுள்ள புறக்குறிப்பைப் பற்றிச் செலுத்தும் வங்கியர் கவனத்தில் கொள்ள வேண்டியதில்லை. ஆனால் பணம் முறையாகச் செலுத்தப்பட்டிருக்க வேண்டும்.

## கீறலிடப்பட்ட காசோலைகளுக்குப் பாதுகாப்பு

கீறலிடப்படாத காசோலைகளுக்கு மட்டும் முதலில் கொடுக்கப்பட்ட பாதுகாப்பு இப்பொழுது கீறலிடப்பட்ட காசோலைகளுக்கும் அளிக்கப்படுகிறது. இந்திய மாற்று முறைச் சட்டம், 128-வது பிரிவின் படி பாதுகாப்பைப் பெறக் கீழ்க்கண்ட இரண்டு தேவைகளை நிறைவு செய்ய வேண்டும்.

i) செலுத்தும் வங்கியர் பணத்தை முறைப்படி செலுத்தியிருக்க வேண்டும்.

ii) எந்த முறையில் பணம் செலுத்தப்பட வேண்டுமென்று கீறல் குறிப்பிடுகிறதோ அம்முறையிலேயே பணம் செலுத்தப்பட்டிருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, சிறப்புக் கீறலிடப்பட்ட காசோலைக்குத் தொகையை அக்கீறலில் குறிப்பிட்டுள்ள வங்கியருக்கோ அல்லது அதன் முகவருக்கோ செலுத்த வேண்டும். வேறு வங்கிக்குச் செலுத்தினால் பாதுகாப்பினைப் பெறமுடியாது.

## வாடிக்கையரின் கையொப்பத்தைக் கள்ளத்தனமாக இடல் (Forgery of Customer's Signature)

பெறற்குரியவர் அல்லது புறக்குறிப்பாளர் கையெழுத்து போலியாக அல்லது கள்ளத்தனமாக இடப்பட்டிருந்து மேலும் முறையாகச் செலுத்தியிருந்தால் மட்டுமே பிரிவு 85-இன்படி சட்டப் பாதுகாப்புக் கொடுக்கப்படுகிறது. வாடிக்கையரின் கையெழுத்துக் கள்ளத்தனமாக இடப்பட்ட காசோலைக்குப் பணம் செலுத்தினால் அது முறைப்படி செலுத்துதல் ஆகாது. ஏனெனில் வங்கியர் தனது ஒவ்வொரு வாடிக்கையரின் கையொப்பத்தையும் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே வாடிக்கையரின் கையொப்பம் கள்ளத்தனமாக இடப்பட்ட காசோலைக்குச் சட்டமுறைப் பாதுகாப்புக் கிடையாது.

*நேஷனல் வெஸ்ட்மின்ஸ்டர் வங்கி எதிராக பார்கிளைஸ் இன்டர்-நேஷனல் லிமிடெட் மேலும் மற்றவர்*

(National Westminster Bank Vs Barclays International and other)

வாடிக்கையரின் கையொப்பம் கண்டுபிடிக்க முடியாதபடி கள்ளத் தனமாக இடப்பட்டு அந்தக் காசோலை மதிக்கப்பட்டிருந்தால் அந்தப் பணத்தை வங்கியர் திரும்பப் பெற முடியாது என மேற்கூறிய வழக்கில் தீர்ப்பெழுதப்பட்டது.

ஆனால், வாடிக்கையர் தனது நடத்தையின் மூலம் கள்ளக் கையெழுத்திட வகை செய்தாரானால், செலுத்தும் வங்கியர் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்படுவார். வாடிக்கையர் கள்ளக் கையெழுத்திட வகை செய்தாரா இல்லையா என்பது அந்த நிகழ்ச்சியின் சூழ்நிலையைப் பொறுத்தே முடிவு செய்யப்படுகிறது.

*பாக்ஸன்டேல் எதிராக பென்னட்*

(Boxandale Vs Bennet)

இந்த வழக்கில் கையொப்பமிடப்பட்ட வெற்றுக் காசோலையை பூட்டப்படாத மேசையில் வைத்திருந்தால் அது வாடிக்கையரின் கவனமின்மை ஆகாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

*லீவிஸ் லாண்டறி கம்பெனி எதிராக பார்கிளேஸ் அண்டு கம்பெனி*

(Lews Laundary Company Vs Barclays and Company)

இந்த வழக்கில் போலிக் கையெழுத்துக்காக முன்பு ஒருமுறை தண்டனை பெற்ற நிறுவனத்தின் செயலர் நிறுவனத்தின் செல்லுப் புத்தகம் மற்றும் காசோலைப் புத்தகத்தை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். அந்தச் செயலர், இயக்குநர்களின் கையொப்பத்தை கள்ளத்தனமாக இட்டுப் பல காசோலைகளுக்குப் பணம் பெற்றார். இந்த வழக்கில் வாடிக்கையர் பொறுப்பல்ல என்றும் வங்கியரே பொறுப்பேற்க வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

*கிரீன்வுட் எதிராக மார்டின்ஸ் வங்கி*

(Greenwood Vs Martins Bank)

கிரீன்வுட் என்ற வாடிக்கையர் தனது கையொப்பத்தைத் தன் மனைவி கள்ளத்தனமாக இட்டதை வங்கியருக்குத் தெரிவிக்கவில்லை. காசோலையிலுள்ள கையொப்பம் போலியானது எனத் தெரிந்தும் உண்மையை மறைத்ததனால் வாடிக்கையர் பொறுப்பாவார் என இந்த வழக்கில் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

வாடிக்கையரின் கையெழுத்தை வங்கியர் நன்கறிந்திருக்க வேண்டும் என்பதே அடிப்படை விதி. ஆகவே போலியான கையெழுத்துள்ள காசோலைக்குப் பணம் செலுத்தினால் வங்கியர் பிரிவு 85-இன் கீழ்ச் சட்டமுறைப் பாதுகாப்புப் பெற முடியாது.

**முறைப்படி உடையவர் (Holder in Due Course)**

இந்திய மாற்றுமுறை ஆவணச் சட்டம், *1881*, பிரிவு *9* முறைப்படி உடையவரை வரையறுக்கிறது.

"ஆணைக்குச் செலுத்துதற்குரிய ஒரு உறுதிச்சீட்டு, மாற்றுச்சீட்டு அல்லது காசோலையை அதன் முதிர்வுத் தேதிக்கு

முன் அதை யாரிடமிருந்து பெறுகிறோமோ அவருக்கு அதன் உரிமையில் எவ்வித க் குறைபாடும் இல்லை என நம்புவதற்குப் போதுமான காரணங்கள் இருக்கும்போது மறுபயன் கருதி அதன் உடைமையாளராக, பெறற்குரியவராக அல்லது கொணர்பவர் அல்லது புறக்குறியாளராகப் பெறும் எந்த நபரும் முறைப்படி உரியவராவர்".

இவ்வாறாக முறைப்படி உடையவர்,

i) ஆவணத்தை நன் நம்பிக்கையோடும் கவனத்தோடும் பெற்றிருக்க வேண்டும்.

ii) அதற்குரிய மதிப்பைச் செலுத்தியிருக்க வேண்டும்.

iii) ஆவணத்தை அதன் முதிர்வுக்கு முன் பெற்றிருக்க வேண்டும்.

iv) கொணர்பவர், பெறற்குரியவர் அல்லது புறக்குறியாளர் என்ற முறையில் உடைமையாளராக இருக்கவேண்டும்.

முறைப்படி உடையவரின் உரிமைகளும் அவர் பெறும் சலுகைகளும்

கீழ்வருவன முறைப்படி உடையவருக்கு அளிக்கப்பட்டுள்ள சில உரிமைகளும் சலுகைகளும் ஆகும்.

i) முறைப்படி உடையவர் ஆவணத்தின் உரிமையாளரை விட மேலான உரிமை பெறுகிறார்.

ii) முன்பு புறக்குறிப்புச் செய்தவர்களின் உரிமை குறைபாடாக இருந்தால் அது முறைப்படி உடையவரின் உரிமையைப் பாதிக்காது.

iii) அவர் மற்றவர்களுக்கு மேலான உரிமையை மாற்றம் செய்ய முடியும்.

iv) ஆவணத்திற்குக் கடைசியாகப் பணம் செலுத்தும் வரை அதோடு தொடர்புடைய ஒவ்வொரு நபரும் முறைப்படி உடையவருக்குப் பொறுப்பாவார்.

v) பணம் பெறுபவருக்கு ஆவணத்தைப் புறக்குறிப்புச் செய்யத் தகுதியில்லை என்ற காரணத்தால் முறைப்படி உடையவரின் உரிமையைத் தவிர்க்க முடியாது.

vi) ஆவணத்தை எழுதியவர் கூட முறைப்படி உடையவருக்கு எதிராக ஆவணம் செல்லத்தக்கது அல்ல என்று கேட்க முடியாது.

ஆகவே, முறைப்படி உடையவரின் உரிமை உயர்வானது.

**தவறுதலாகச் செலுத்திய பணத்தைத் திரும்பப் பெறுதல் (Recovery of Money paid by Mistake)**

ஒரு வங்கியில் தினமும் ஆயிரக்கணக்கான நடவடிக்கைகள் நடைபெறுவதால் தவறுகள் நடக்க வாய்ப்புண்டு. தவறுதலாக வங்கியர், உரிமையில்லாத ஒருவருக்குப் பணம் செலுத்த நேரிடலாம். அவ்வாறு தவறுதலாகக் கொடுத்த பணத்தைத் திரும்பப்பெற முடியுமா? இந்த விசயத்தில் சட்டம் இதுவரை தெளிவாக இல்லை. தவறு செய்த ஒரு நபர் அதைத் திருத்திக் கொள்ள அவருக்கு உரிமை உண்டு என்பதே பொதுவிதி. தவற்றினைத் திருத்தும் போது அது மற்றொருவருக்குப் பாதமாக இருக்கக் கூடாது. இதே முறையில் தவறுதலாகச் செலுத்திய பணத்தை மற்றவருக்குப் பாதகமில்லாமல் திரும்பப் பெறலாம்.

பின்வரும் சந்தர்ப்பங்களில் தவறுதலாகச் செலுத்திய பணத்தைப் பெற முடியும்.

1) பணத்தைப் பெறத் தனக்கு உரிமையில்லை என நன்கு தெரிந்தும் பெற்றிருந்தால், வங்கியர் அப்பணத்தைத் திரும்பப் பெற உரிமையுண்டு.

2) தவறு, உண்மைத் தவறாக (Mistake of Fact) இருந்தால் செலுத்திய பணத்தைத் திரும்பப் பெறலாம். எடுத்துக்காட்டாக, வங்கியர் முருகன் என்பவருக்கு அவர் இராமன் எனத் தவறுதலாக நினைத்துப் பணம் கொடுக்கிறார். இது இரு நபர்களை அடையாளம் கண்டு கொள்வதில் ஏற்படும் உண்மைத்தவறு. பணத்தை வங்கியரிடம் திரும்பக் கொடுக்க முருகனுக்குச் சட்டப்படியான கடமை இருக்கிறது.

3) பணம் செலுத்துபவருக்கும் பெறுபவருக்கும் இடையிலான தவறாக இருந்தால் பணத்தைத் திரும்பப் பெற முடியும்.

பின்வரும் சந்தர்ப்பங்களில் பணத்தைத் திரும்பப் பெறமுடியாது.

1) சட்டம் தெரியாது என்பது சட்டத்திலிருந்து தப்பிப்பதற்கான வழியன்று. சட்டம் தெரியாது என்பதால் அல்லது சட்டத்தைத் தவறாகப் புரிந்து கொண்டதால் தவறாகக் கொடுத்த பணத்தைத் திரும்பப் பெற முடியாது.

*ஹோல்ட் அண்டு கம்பெனி எதிராக மர்கான்*

(Holt and Co Vs Markhan)

இந்த வழக்கில், சட்ட விதிகளைச் சரிவர அறியாததால், அரசாங்கத்தின் சார்பாக ஹோல்ட் அண்டு கம்பெனி மர்கான் என்பவருக்கு ரூ.310 அதிகமாக தவறுதலாகச் செலுத்தியது. மர்கான் அவசரநிலை அதிகாரிகள் பட்டியலில் இருந்தார். அவர்களுக்கு ஒய்வூதியம் குறைவாகவே வழங்கப்பட வேண்டும். தவறுதலாக விதிகளைப் புரிந்து கொண்டதனால் அதிகத் தொகை கொடுக்கப்பட்டது.

இந்த வழக்கில் அதிகமாகக் கொடுக்கப்பட்ட தொகையைத் திரும்பப் பெற முடியாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

2) முறைப்படி உடையவருக்கு மாற்றுமுறை ஆவணத்தின் மீது தவறுதலாகப் பணம் செலுத்தப்பட்டால் ஒரு குறிப்பிட்ட காலம் முடிந்தபின் அதைத் திரும்பப் பெற முடியாது.

3) ஒரு நபர் நன் நம்பிக்கையுடன் தவறுதலாகப் பணத்தைப் பெற்று அதன் அடிப்படையில் அவருடைய நிலைமை மாறுமானால் தவறுதலாகப் பெற்ற பணத்தைத் திரும்பச் செலுத்த வேண்டியதில்லை.

# 11

## வசூலிக்கும் வங்கியர்
## (Collecting Banker)

செலுத்தும் வங்கியரிடமிருந்து, காசோலைக்கான தொகையைத் தன்னுடைய வாடிக்கையருக்காக, வசூல் செய்துதர ஏற்றுக் கொள்பவர் வசூலிக்கும் வங்கியர் எனப்படுவர். காசோலைகளை வசூல் செய்து தருவது சட்டபூர்வமான பொறுப்பு அன்று. இருப்பினும் எல்லா வங்கியரும் இந்தப் பணியைச் செய்வதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. கிறலிடப்பட்ட காசோலைகளுக்கு ஏதாவது ஒரு வங்கியர் மூலமே வசூலுக்கு அனுப்பப்பட்டுப் பணம் பெற முடியும். மேலும் பணம் செலுத்துவது மட்டுமே ஒரு வங்கியின் பணியாக இருக்க முடியாது. காசோலைகளை வசூல் செய்யும் பணியை மேற்கொள்ளும்போது வங்கியர் மிகவும் கவனமாகச் செயல்பட வேண்டும். ஏனெனில், எந்தவித ஒப்பந்த உறவும் இல்லாதவர் களுக்குக் கூட, தவறு நடந்தால், வங்கியர் பொறுப்பேற்க வேண்டும். கவனமில்லாமல் அல்லது அலட்சியமாக நடந்தால் வங்கியர் பல துன்பங்களுக்கு ஆட்படவேண்டும்.

காசோலைகளை வசூலிக்கும்போது, வங்கியர் இருநிலைகளில் செயல்படுகிறார்.

1. மதிப்புக்கு உடையவர் (Holder for value)

2. வாடிக்கையரின் முகவர் (Agent)

பின்வரும் சந்தர்ப்பங்களில் வங்கியர் மதிப்புக்கு உடையவர் ஆகிறார்.

(அ) வசூலுக்குக் கொடுக்கப்பட்ட காசோலைக்குரிய பணம் வசூலாகி வாடிக்கையரின் பணக்கில் வரவெழுதுமுன் அவரைப் பணம் எடுத்துக் கொள்ள அனுமதிப்பது.

(ஆ) கிறலிடப்படாத காசோலை ஒன்று வசூலுக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டு, அதற்குரிய தொகை வசூலாகுமுன் கொடுப்பது.

(இ) காசோலை வசூலாகிக் கணக்கில் வரவெழுதுமுன் அந்தத் தொகையை மேல்வரைப் பற்றுக்கு நேர் செய்வது.

ஒரு வங்கியர் மதிப்புக்கு உடையவராக இருக்கும்போது, முறைப்படி உடையவருக்குள்ள உரிமைகள் அனைத்தும் உண்டு. ஒரு ஆவணத்தில் அதன் உரிமையாளருக்கு உள்ள உரிமையை விட முறைப்படி உடையவரின் உரிமை உயர்வானது. அந்த ஆவணம் போலியானதாக இருந்தால் அதன் உரிமையாளருக்குள்ள உரிமையே உயர்வானது. ஆகவே, போலிக் கையொப்பமுள்ள காசோலையை வசூல் செய்தால் அதன் உண்மையான உரிமையாளருக்கு வங்கியர் பணத்தைத் திருப்பிச் செலுத்த வேண்டும். ஆனால் அந்தத் தொகையை யாருக்காகக் காசோலையை வசூல் செய்தாரோ அந்த வாடிக்கையரிடமிருந்து பெறமுடியும். வாடிக்கையரால் பணத்தைச் செலுத்த இயலாத நிலையில் வங்கியர் நட்டத்தை ஏற்கவேண்டும்.

நடைமுறையில் காசோலைக்கான தொகை வசூலாகுமுன் எந்த வங்கியரும் வாடிக்கையரின் கணக்கை வரவெழுதுவதில்லை. ஆகவே, காசோலையை வசூலிக்கும் போது வாடிக்கையரின் முகவராகவே வங்கியர் செயல்படுகின்றனர். வாடிக்கையருக்குக் காசோலை மீது எவ்வளவு உரிமை இருக்கிறதோ அதே அளவுதான் வாடிக்கையரின் முகவர் என்ற நிலையில் வங்கியருக்கு உரிமை உண்டு. வாடிக்கையருக்குக் காசோலை மீது உரிமை இல்லாவிட்டாலோ அல்லது குறைபாடான உரிமை இருந்தாலோ முகவர் என்ற முறையில் வங்கியருக்கு அதன்மீது முறையான உரிமை கிடையாது. ஆகவே மற்றொருவருக்கு உரிய காசோலை ஒன்றைத் தமது வாடிக்கையருக்காக வசூல் செய்தால் அது தவறான தலையீட்டால் (conversion) பணம் பெற்றதற்கு ஒப்பாகும். ஆகவே பணத்தைக் காசோலையின் உரிமையாளருக்குத் திருப்பிச் செலுத்த வேண்டிய பொறுப்பிற்கு உட்படுத்தப்படுவார்.

தவறான தலையிடல் என்பது சட்டத்திற்குப் புறம்பாக மற்றொருவரின் பொருள்களை முரணாகக் கையாளுவதாகும். பொருள்கள் என்பதில் கடனுறுதிச்சீட்டு, மாற்றுச்சீட்டு மற்றும் காசோலை அடங்கும். ஒருவர் தவறாகத் தலையிட்டால் அதற்குத்தானே சொந்தப் பொறுப்பு ஏற்க வேண்டும். இந்தப் பொறுப்பு ஒருவர் முகவராகச் செயல்படும் போது மட்டுமே உண்டு.

வசூலிக்கும் வங்கியர், கபடமில்லாமல் செயல்பட்டால் கூட மற்றவர்களின் பொருள்களை முறணாகக் கையாளும் போது, பொறுப்பேற்க வேண்டும். ஆனால், தன்னுடைய அன்றாட வேலையின்போது எண்ணற்ற காசோலைகளைப் பெறும் வசூலிக்கும் வங்கியர், தம்முடைய வாடிக்கையர் ஒவ்வொருவருடைய உரிமையும் செல்லத்தக்கதா எனப் பரிசீலனை செய்வது மிகக் கடினம். ஆகவே மாற்றுமுறை ஆவணச்சட்டம், 1881, பிரிவு 131-இன் கீழ் வசூலிக்கும் வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது.

### சட்டமுறைப் பாதுகாப்பு (Statutory Protection)

மாற்றுமுறை ஆவணச்சட்டம் 1881, பிரிவு 131 பின்வருமாறு விளக்கமளிக்கிறது.

"வாடிக்கையர் சார்பாக நல்லெண்ணத்துடனும், கவனக்குறைவின்றியும் பொது அல்லது சிறப்புக் கீறலிடப்பட்ட காசோலைக்குப் பணம் பெற்றபோது, அந்தக் காசோலையின் உரிமை குறைபட்டது என நிரூபணம் ஆனால், பணம் பெற்ற காரணத்திற்காக வசூலிக்கும் வங்கியர் அக்காசோலையின் உண்மையான உரிமையாளருக்கும் பொறுப்பாகமாட்டார்".

பின்வரும் நிபந்தனைகளை நிறைவேற்றினால் மட்டுமே வசூலிக்கும் வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு அளிக்கப் படுகிறது.

1. கீறலிடப்பட்ட காசோலைகளையே வசூலித்திருக்க வேண்டும்.

2. வாடிக்கையருக்காக முகவர் என்ற முறையில் கிறலிடப்பட்ட காசோலைகளை வசூலித்திருக்க வேண்டும்.

3. காசோலைகளை நன்னம்பிக்கையுடனும் கவனக் குறைவின்றியும் வசூலித்திருக்க வேண்டும்.

## 1. கிறலிடப்பட்ட காசோலையாக இருக்க வேண்டும்

கிறலிடப்பட்ட காசோலையை வசூலிக்கும் போது மட்டுமே வங்கியர் சட்டமுறைப் பாதுகாப்புக் கேட்க முடியும். மேலும் வங்கியரிடம் வசூலுக்குச் சமர்ப்பிக்கப்படுமுன் காசோலை கிறலிடப்பட்டிருக்க வேண்டும். கிறலிடப்படாத காசோலைகளை வசூலுக்கு அனுப்ப வேண்டிய தேவையில்லை. வாடிக்கையாளருக்கு உரிமையில்லாத ஒரு கிறலிடப்படாத காசோலையை வங்கியர் வசூல் செய்தால் அவர் சட்டமுறைப் பாதுகாப்புப் பெறமுடியாது.

## 2. வாடிக்கையரின் சார்பில் வசூலித்தல்

வாடிக்கையரின் முகவர் என்ற நிலையில் வசூலிக்கும் காசோலைகளின் மீது மட்டுமே வங்கியர் சட்டமுறைப் பாதுகாப்பினைப் பெறமுடியும். முறைப்படி உடையவர் என்ற முறையில் வங்கியருக்குக் காசோலை மீது சொந்தப் பொறுப்பு ஏற்படுகிறது. ஆகவே, சட்டமுறைப் பாதுகாப்பினைப் பெறமுடியாது.

## 3. நன்னம்பிக்கையுடனும் கவனக்குறைவின்றியும் காசோலைக்கான தொகையைப் பெறவேண்டும்

சட்டமுறைப் பாதுகாப்பினைப் பெற வசூலிக்கும் வங்கியர் நன்னம்பிக்கையுடனும் கவனக் குறைவின்றியும் செயல்பட வேண்டும். காசோலையை வாடிக்கையரிடமிருந்து வசூலுக்காகப் பெற்றதிலிருந்து செலுத்தும் வங்கியரிடமிருந்து தொகையைப் பெறும்வரை கவனக் குறைவின்றிச் செயல்படுதல் அவசியம். பொதுவாக வங்கியர் நன்னம்பிக்கையுடனே செயல்படுவர். ஆனால் கவனக் குறைவின்றிச் செயல்படல் என்பது முக்கிய அம்சமாகும்.

சட்டமுறைப் பாதுகாப்பு பங்காதாய ஆணை மேலும் வங்கிப் வரைவோலைகளை வசூலிக்கும் போதும் கொடுக்கப்படுகிறது.

## கவனக் குறைவின் அடிப்படைகள் (Basis of Negligence)

வங்கிச் சட்டத்தில் கவனக்குறைவு என்ற சொல்லுக்குத் திட்டவட்டமான பொருள் ஏதுமில்லை. நீதிமன்றங்கள், இச்சொல்லுக்குப் பல மாறுபட்ட கருத்துக்களைக் கூறியுள்ளன. புதுப்புதுச் சூழ்நிலைகளுக்கேற்ப இச்சொல்லின் நோக்கம் மாறுபடுகிறது.

பிரிவு 131-இல் கூறப்பட்டுள்ள 'கவனக்குறைவு' என்ற சொல்லுக்குக் கொடுக்கப்பட்டுள்ள கருத்துகளில் மிகவும் அதிகமான வேறுபாடுகள் உள்ளன. வசூலிக்கும் வங்கியருக்கும் காசோலையின் உரிமையாளருக்கும் எந்தவித ஒப்பந்த உறவும் கிடையாது. இருப்பினும் பிரிவு 131-இல் கொடுக்கப்பட்டுள்ள சட்டப்பாதுகாப்பினைப் பெற வங்கியர் தான் கவனக் குறைவாகச் செயல்படவில்லை என நிரூபித்தல் அவசியம்.

*வால் பேங்க் & கம்பெனி எதிராக வெஸ்ட் மின்ஸ்டர் லிமிடெட்*

(Wal Bank & Co. Ltd Vs Westminster Ltd.)

மேற்கூறிய வழக்கில் கவனக்குறைவு என்றால் என்ன என்பதற்கு வரையறை தரப்பட்டுள்ளது.

"ஒரு சராசரி மனிதன் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் எதையெல்லாம் செய்ய வேண்டுமோ அதைச் செய்யாது இருத்தலும், எதையெல்லாம் செய்யக் கூடாதோ அதைச் செய்தலும் கவனக் குறைவு ஆகும்".

இந்த வரையறை பொதுவான ஒன்றாகும். இவைதான் கவனக் குறைவான செயல் என்று அறுதியிட்டுச் சொல்லவில்லை. இவைதாம் கவனக்குறைவான செயல்கள் எனப் பட்டியல்

போட்டுக் காண்பிப்பதும் இயலாத செயலாகும். ஏனெனில், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் வங்கியர் நடந்து கொண்ட முறையை ஆராய்ந்த பின்னரே அவர் கவனக்குறைவாகச் செயல்பட்டாரா இல்லையா என்பதை முடிவு செய்ய முடியும்.

'கவனக் குறைவு' என்ன என்பதைப் பின்வரும் நான்கு தலைப்புகளில் படிப்பதன் மூலம் தெளிவாக அறிந்து கொள்ள முடியும்.

(1) முழுக் கவனமின்மை (Gross Negligence)

(2) காசோலைகளை வசூல் செய்வது சம்பந்தமான கவனக்குறைவு (Negligence connected with immediate collection of cheque)

(3) நெருங்கிய சம்பந்தமில்லாத நிலையில் கவனக்குறைவு (Negligence under remote grounds)

(4) தொடர்புடைய கவனக்குறைவு (Contributory Negligence)

## 1. முழுக் கவனமின்மை

காசோலையை வசூல் செய்வதில் வங்கியர் முழு அலட்சியத்துடன் நடந்து கொண்டால் அவர் முழுக் கவனமின்மை என்ற அடிப்படையில் பொறுப்பாளி ஆகிறார்.

**எடுத்துக்காட்டு**

(அ) பெறற்குரியவர் கணக்குக்குக் கிறலிடப்பட்ட காசோலையைப் பெறற்குரியவர் தவிர மற்றவர் கணக்கில் வசூல் செய்தல்.

(ஆ) புறக்குறிப்பு முறையாக இருக்கிறதா என்று சரிபார்க்காமலிருத்தல்.

(இ) பிறர் சார்பாகக் கையொப்பமிருக்கும் போது அதற்கான அங்கிகாரம் இருக்கின்றதா எனப் பார்க்கத் தவறியது.

மேற்கூறிய எடுத்துக் காட்டுகளில் வங்கியர் எந்தவிதக் கவனமும் எடுத்துக் கொள்ளாததால் முழுக் கவனமின்மை என்ற அடிப்படையில் பொறுப்பாளி ஆகிறார்.

**(2) காசோலைகளை வசூல் செய்வது சம்பந்தமான கவனக்குறைவு**

காசோலையின் முன்புறத்தில், பணம் கையாடல் செய்யப்படுவதாக ஓர் எச்சரிக்கையிருந்தால் அதை வங்கியர் அலட்சியப்படுத்தக் கூடாது. வாடிக்கையரிடம் போதுமான விசாரணை செய்து அவர் தகுந்த விளக்கம் தந்தால் மட்டுமே காசோலையை வசூலுக்கு ஏற்க வேண்டும்.

*எடுத்துக்காட்டு*

(அ) முதல்வரின் கணக்கிற்கு வசூலிக்க வேண்டிய காசோலையை அவருடைய முகவரின் கணக்கிற்கு எந்தவித விசாரணையுமின்றி வசூலித்தல்.

*மிட்லேண்டு வங்கி எதிராக ரெக்கிட்*

(Midland Bank Vs Reckitt)

இந்த வழக்கில் டெர்ரிங்டன் என்ற வழக்குரைஞருக்கு ரெக்கிட் என்பவரின் சார்பாளராகச் செயல்படச் சிறப்பு அதிகாரம் கொடுக்கப்பட்டது. டெர்ரிங்டன், காசோலைகளை எழுதி மிட்லேண்டு வங்கியிலுள்ள தனது கணக்கில் வசூலுக்காகச் செலுத்தினார். மிட்லேண்டு வங்கி அதை வசூல் செய்தது.

வங்கியர் சரியாக விசாரணையின்றி வசூல் செய்ததால் அவர் சட்டமுறைப் பாதுகாப்பினைப் பெறமுடியாது எனத்தீர்ப்பு அளிக்கப்பட்டது.

(ஆ) கூட்டாண்மை நிறுவனத்திற்கு வசூல் செயய வேண்டிய காசோலையைக் கூட்டாளியின் தனிக்கணக்கிற்கு விசாரணை யின்றி வசூல் செய்தல்.

பெவான் எதிராக நேஷனல் பேங்க் லிமிடெட்

(Beven Vs National Bank Ltd.)

ஒரு கூட்டாண்மை நிறுவனத்திற்கு வசூல் செய்ய வேண்டிய காசோலையை ஒரு கூட்டாளியின் தனிக்கணக்கிற்கு வசூல் செய்ததால், இந்த வழக்கில், வசூலிக்கும் வங்கியருக்குச் சட்டமுறைப் பாதுகாப்பு இல்லை எனத் திர்ப்பளிக்கப்பட்டது.

(இ) கூட்டுப் பங்கு நிருவனத்திற்கு வசூல் செய்ய வேண்டிய காசோலையை, விசாரணையின்றி, இயக்குநர் ஒருவரின் தனிக்கணக்கிற்கு வசூல் செய்தல்.

(ஈ) பொறுப்பாண்மைக் கணக்கில் வசூலித்து வரவு வைக்குமாறு எழுதப்பட்ட காசோலையை ஒரு பொறுப்பாண்மைபரின் தனிக்கணக்கிற்கு வசூல் செய்தல்.

(உ) ஒரு தொழிலின் உரிமையாளர் கணக்கில் வசூலித்து வரவு வைக்குமாறு எழுதப்பட்ட காசோலையை அத்தொழிலில் பணிபுரியும் பணியாளர் ஒருவரின் தனிக்கணக்கிற்கு வசூல் செய்தால் அது கவனக்குறைவு எனக் கருதப்படும். ஆகவே, சட்டமுறைப் பாதுகாப்பினை வங்கியர் பெற முடியாது.

**(3) நெருங்கிய சம்பந்தமில்லாத நிலையில் கவனக்குறைவு**

அ) பொதுவாகச் சில சூழ்நிலைகளில் வங்கியர் பொறுப்பாக முடியாது. ஆனால் நெருங்கிய சம்பந்தமில்லாத சில சந்தர்ப்பங்களில் வங்கியர் பொறுப்பாளி ஆக்கப்பட்டிருக் கிறார்கள்.

***எடுத்துக்காட்டு***

மோட்டார் டிரேடர்ஸ் காரண்டி கார்பொரேஷன் எதிராக மிட்லேண்டு பேங்க்

(Motor Traders Guarantee Corporation Vs Midland Bank)

**வழக்கு :**

மிட்லேண்டு வங்கியின், பிரிஸ்டால் (Bristol) கிளையில் டர்னர் என்பவர் கணக்கு வைத்திருந்தார். அவர், வாடகைக் கொள்முதல் நிருவனம் ஒன்றினை ஏமாற்றி, வெல்ஸ் & கோ (Wells & Co) என்ற கார் நிறுவனம் பெயரில் £ *189.5* Sh. க்கு கிறலிடப்பட்ட காசோலை பெற்றார். மேலும் அந்த வாடகைக் கொள்முதல் நிறுவனத்துடன் வாடகைக் கொள்முதல் உடன்பாடு ஒன்று செய்து கொள்வதாக உறுதியளித்திருந்தார். பிறகு, பெறுபவரின் கையொப்பத்தை மோசடி செய்து தனக்குச் செலுத்தும்படி காசோலையைத் திருத்தினார். வங்கியர் போதுமான விசாரணை செய்து மனநிறைவு பெற்றபின் அந்தக் காசோலையை வசூலுக்கு ஏற்றார்.

**தீர்ப்பு :**

டர்னர் என்ற வாடிக்கையரின் காசோலைகள் அடிக்கடி அவமதிக்கப்பட்டுத் திரும்பி வந்திருக்கின்றன. அவருடைய 35 கசோலைகள் இதுவரை அவமதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே அவருடைய முன்னாள் நடவடிக்கைகள் மனநிறைவு கொள்வதாக இல்லை. வாடிக்கையரின் முன்னாள் நடத்தை இந்த நடவடிக்கையுடன் நெருங்கிய சம்பந்தமில்லாதபோதும் வங்கியர் போதிய கவனம் மேற்கொள்ளாததால் அவர் கவனக் குறைவாக நடந்து கொண்டார் என முடிவு செய்து சட்டமுறைப் பாதுகாப்பு மறுக்கப்பட்டது.

(ஆ) புதிதாகக் கணக்குத் துவங்குபவரிடம் அறிமுகக் கடிதம் பெறத் தவறுவது கவனக் குறைவாகும்.

*கார்டியன்ஸ் ஆப் செயின்ட் ஹாம்ஸ்டெட் எதிராக பார்கிளேஸ் பேங்க*

(Guardians of St.John's Hompstead Vs Barclays Bank)

இந்த வழக்கில், தெரியாத ஒருவரிடம் அறிமுகக் கடிதம்

பெற்று வங்கிக் கணக்குத் துவங்கியது கவனக்குறைவு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

(இ) நெடுங்காலமாக மிகக் குறைந்த தொகையே வரவிருப்புள்ள கணக்கில் பெருந்தொகையைப் பெறும்போது அந்தத் தொகையைப் பெற்ற வழியைப் பற்றி வாடிக்கையாளரிடம் விசாரிக்கத் தவறினால் அது கவனக் குறைவாகும்.

*லயாட்ஸ் பேங்க் எதிராக சார்டர்ட் பேங்க்*

(Lloyds Bank Vs Chartered Bank)

இந்த வழக்கில், நெடுங்காலமாக மிகக் குறைந்த நிலையில் நடவடிக்கைகள் இருந்த கணக்கில், பெருந் தொகையுடைய காசோலையை வசூலுக்கு ஏற்கும்போது சார்ட்டட் பேங்க் வாடிக்கையர் அந்தக் காசோலையைப் பெற்ற வழிமுறைகளை விசாரிக்க வில்லை. இது கவனக்குறைவு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

**(4) தொடர்புடைய கவனமின்மை**

சில நேரங்களில், வங்கியர் தனது கவனக்குறைவினை ஏற்றுக் கொண்ட பிறகு, 'வாடிக்கையரின் கவனக்குறைவுதான்' கவனக் குறைவாகச் செயல்பட நேரிட்டது என வாதாடலாம். வாடிக்கையரின் கவனக்குறைவு நிரூபிக்கப்பட்டால் வங்கியர் பொறுப்பாளி ஆவதில்லை.

*மோரிசான் & கம்பெனி எதிராக லண்டன் மேலும் கவுண்டி பேங்க் லிமிடெட்*

(Morrison & Company Vs London and County Bank Ltd)

**வழக்கு :**

அப்பாட் என்பவர் மோரிசான் கம்பெனியின் சார்பில்

காசோலைகள் எழுத அங்கீகரிக்கப்பட்டார். இரண்டு ஆண்டுகளில் அவர் சுமார் 50 காசோலைகளை எழுதித் தனது தனிக்கணக்கில் வசூலித்து வரவு செய்யும்படி ஆணையிட்டார்.

**தீர்ப்பு :**

இந்த வழக்கில் வங்கியர் தனது கவனக் குறைவினை ஏற்றுக் கொண்டார். மோரிசான் நிறுமத்தின் தணிக்கையாளர் அப்பாட் காசோலைகள் எழுதியதில் முரண்பாடுகள் உள்ளதை தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளதைக் நிறுமம் தனது கவனத்திற்குக் கொண்டு வரத் தவறிவிட்டது. இதுவே வங்கியரின் கவனக் குறைவிற்குக் காரணமாக அமைந்தது என வங்கியர் வாதிட்டார். மோரிசான் நிறுமத்தின் கவனமின்மைதான் ங்கியரின் கவனக்குறைவுக்குக் காரணம் என முடிவு சய்யப்பட்டு வங்கியர் பொறுப்பல்ல எனத் தீர்ப்பாகியது.

## வசூலிக்கும் வங்கியரின் கடமைகள் (Duties of Collecting Banker)

### (1) வசூலிக்கும் வேலையில் போதிய கவனமும் சிரத்தையும் மேற்கொள்ள வேண்டும்

காசோலைகளை வசூலிக்கும்போது வங்கியர் வாடிக்கையரின் முகவராகவே செயல்படுகிறார். முகவர் பணியாற்றும் போது கவனத்துடனும் அக்கறையுடனும் திறமையுடனும் செயல்பட வேண்டும்.

### (2) காசோலைகளைத் தாமதமின்றி வசூலுக்குச் சமர்ப்பிக்க வேண்டும்

காசோலைகளுக்குப் பணம் பெற அவற்றைத் தாமதமின்றி வசூலுக்குச் சமர்ப்பிக்க வேண்டும். காலதாமதமானால் எழுதியவரின் கணக்கில் போதிய பணமின்மை, எழுதியவர் நொடித்தல் ஆகிய காரணங்களால் வாடிக்கையருக்கு நட்டமேற்படலாம். இந்நிலைகளில் வங்கியரே நட்டத்தை ஏற்க நேரிடும்.

கோயமுத்தூர் விஜயா வங்கியின் நஞ்சப்பா சாலை கிளை 20 நாட்கள் காசோலையைத் தாமதமாக அனுப்பியதற்காகக் கோயமுத்தூர் மாவட்ட நுகர்வோர் தகராறு தீர்க்கும் நீதிமன்றம் ரூ.2000/- தண்டத்தொகை விதித்தது.

காசோலைகளை எத்தனை நாட்களுக்குள் வசூல் செய்ய வேண்டுமென இந்திய ரிசர்வ் வங்கி சமீப காலத்தில் தெளிவான ஆணை அனுப்பியுள்ளது. இதன்படி, கிளைகள் அமைந்திருக்கும் இடத்தைப் பொறுத்து 10-14 நாட்களுக்குள் வசூல் செய்ய வேண்டும். இந்தக் குறிப்பிட்ட நாட்களுக்குள் வசூலாகவில்லை எனில், வங்கியர், சேமிப்புக் கணக்கில் கொடுக்கும் வட்டியை விட 2% அதிகமாகக் கொடுக்க வேண்டும். இந்தத் தொகையை வாடிக்கையர் கேட்காவிட்டாலும் அவரது கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

**(3) காசோலை அவமதிக்கப்பட்டால் வாடிக்கையருக்கு அறிவிப்புச் செய்தல் வேண்டும்**

வசூலுக்கு அனுப்பப்பட்ட காசோலை அவமதிக்கப்பட்டால், இதனை வாடிக்கையருக்குத் தாமதமின்றி தெரிவிக்க வேண்டும். தெரிவிக்கத் தவறினால், அதனால் வாடிக்கையருக்கு ஏற்படும் நட்டத்தை வங்கியரே ஏற்க வேண்டும்.

**(4) மாற்றுச் சீட்டினை ஏற்புக்காக விரைவில் சமர்ப்பித்தல்**

வாடிக்கையர் தான் வரைந்த மாற்றுச் சீட்டினை வங்கியரிடம் கொடுத்து ஏற்புக்காகச் சமர்ப்பிக்கும்படி கோரினால் அதனைக் கால்தாமதமின்றி விரைவில் சமர்ப்பிக்க வேண்டும். பொதுவாக, மாற்றுச் சீட்டினைப் பெற்ற அதே நாள் அல்லது அடுத்த அலுவல் நாளில் ஏற்புக்காகச் சமர்ப்பிக்கப்படுகிறது. எழுதப்பெற்றவர் வங்கியரின் அருகாமையில் இல்லையெனில் பதிவு அஞ்சல் மூலம் சமர்ப்பிக்கலாம்.

**(5) மாற்றுச் சீட்டினைப் பணம் பெறச் சமர்ப்பித்தல்**

மாற்றுச் சீட்டுக்குப் பணம் பெற அதனை முறையான

இடத்தில் முறையாகச் சமர்ப்பிக்க வேண்டும். இந்திய மாற்றுமுறை ஆவணச்சட்டம், பிரிவு 66-இன்படி மாற்றுச் சீட்டினை அதன் முதிர்வு நாளில் சமர்ப்பிக்க வேண்டும். பிரிவு 22-இன்படி முதிர்வு நாள் என்பது கெடு நாளுடன் மூன்று கருணை நாட்களையும் சேர்க்க வேண்டும். தவணை முதிர்வு நாட்களுக்குப் பின்னர் வங்கியர் மாற்றுச் சீட்டைச் சமர்ப்பித்தால், அதன் விளைவாக ஏற்படும் இழப்பிற்கு வசூலிக்கும் வங்கியர் பொறுப்பாவார்.

**(6) மாற்றுச் சீட்டு அவமதிக்கப்படும் போது அவமதிப்புச் குறிப்பு மேலும் அவமதிப்புச் சான்றிதழ் பெறுவது**

மாற்றுச் சீட்டுக்குப் பணம் கொடுக்காமல் அதனை அவமதிக்கும் போது அவமதிப்புக் குறிப்பு (Noting செய்யப்படுகிறது. சான்றுறுதி அதிகாரி (Notary Public)என்னும் அரசு அதிகாரி மாற்றுச் சீட்டுக்குப் பணம் மறுக்கப்பட்டது சம்பந்தமான விவரங்களை அதே சீட்டிலோ அல்லது வேறு ஒரு தாளிலோ எழுதிக் கையொப்பமிடுவார். இது மறுப்புக் குறிப்பு அல்லது அவமதிப்புக் குறிப்பு எனப்படுகிறது. மாற்றுச் சீட்டுக்குப் பணம் மறுக்கும்போது, வங்கியர், மறுக்கப்பட்ட நாள், மறுக்கப் பட்டதற்கான காரணம் போன்ற விபரங்களடங்கிய சான்றிதழைப் பெறலாம். இது அவமதிப்புச் சான்றிதழ் எனப்படுகிறது.

மாற்றுச் சீட்டு அவமதிக்கப்படும் போது அதனை வாடிக்கையருக்கு அறிவிப்புச் செய்வது வங்கியரின் கடமையாகும். பொதுவாக அந்த மாற்றுச் சீட்டினை வாடிக்கையருக்குத் திருப்பி அனுப்பி விடுவர். வாடிக்கையரின் உத்தரவின்றி உள்நாட்டு மாற்றுச்சீட்டினை அவமதிப்புக் குறிப்புச் செய்து மேலும் அவமதிப்புச் சான்றிதழ் பெறத் தேவையில்லை. வெளிநாட்டு மாற்றுச் சீட்டாக இருந்தால் சான்றுறுதி அதிகாரியால் அவமதிப்புக் குறிப்புச் செய்து மேலும் அவமதிப்புச் சான்றிதழ் பெற்று வாடிக்கையருக்குத் திருப்பி அனுப்ப வேண்டும்.

# 12

# வங்கியரின் உரிமைகள்

## (Rights of a Banker)

பொதுவாக வங்கியருக்குப் பின்வரும் உரிமைகள் உள்ளன.

1. பற்றுரிமை
2. கூட்டு வட்டி வசூலிக்கும் உரிமை
3. கட்டணம் வசூலிக்கும் உரிமை
4. கணக்குகளை இணைக்கும் உரிமை
5. கணக்குகளை முடிவுக்குக் கொண்டுவரும் உரிமை
6. செலுத்தும் தொகையைக் கணக்குகளுக்குச் சரிக்கட்டும் உரிமை

முதல் மூன்று உரிமைகளும் 'வங்கியர்-வாடிக்கையர்' என்ற தலைப்பில் விவாதிக்கப்பட்டுள்ளன. இந்த இயலில் கடைசி மூன்று உரிமைகளும் விளக்கப்பட்டுள்ளன.

### இணைக்கும் உரிமை (Right to Set-off)

ஒரு வாடிக்கையரின் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கணக்குகளை இணைப்பது கணக்குகளை இணைக்கும் உரிமை எனப்படுகிறது. இந்தியாவில் ஒரு வாடிக்கையர் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கணக்குகளைத் தொடங்கலாம். அந்தக் கணக்குகளைப் பின்வரும் நிபந்தனைகளுக்குட்பட்டு வங்கியர் இணைக்கமுடியும்.

அ) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கணக்குகள் ஒரே வாடிக்கையரின் பெயரில் இருக்க வேண்டும்.

ஆ) அவைகள் ஒரே வங்கியில் இருக்க வேண்டும். வங்கியின் வெவ்வேறு கிளைகளில் இருக்கலாம்.

இ) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட கணக்குகளில் பற்றிருப்பும் மற்ற கணக்குகளில் வரவிருப்பும் இருக்க வேண்டும்.

ஈ) இரண்டு கணக்குகளும் ஒரே தன்மையாக இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒருவர் தனது சொந்தப் பெயரில் ஒரு கணக்கும் கூட்டாண்மையர் என்ற பெயரில் ஒரு கணக்கும் வைத்திருந்தால் அவை வெவ்வேறு தன்மையுடைவை.

உ) வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் கணக்குகளை இணைக்கும் உரிமைக்கு எதிராக எவ்வித ஒப்பந்தமும் இருக்க கூடாது.

ஊ) தற்போது வரவேண்டிய கடன்களுக்காக மட்டுமே கணக்குகளை இணைக்கும் உரிமையைப் பயன்படுத்த முடியும். எதிர்காலத்தில் ஏற்படப்போகும் கடன்களை வசூலிக்கத் தற்போதுள்ள கட்ன்களை இணைக்க முடியாது.

கணக்குகளை இணைத்தல் என்பது வரவிருப்புக்கு எதிராகப் பற்றிருப்பைச் சரிகட்டுவது அல்லது நேர் செய்வதே ஆகும். வங்கியருக்கும் வாடிக்கையருக்கும் இடையிலான பற்று-வரவு இதன் மூலம் சரிக்கப்படுகிறது.

கணக்குகளை இணைக்கு முன் வாடிக்கையரின் அனுமதியைப் பெறுதல் வேண்டும். ஆனால் பின்வரும் சந்தர்ப்பங்களில் வாடிக்கையருக்கு அறிவிப்புச் செய்யாமலே கணக்குகளை இணைக்க முடியும்.

அ) வாடிக்கையர் மரணம், திவாலாதல் மேலும் பித்த நிலை அடைதல்

ஆ) நீதிமன்றத் தடை உத்தரவு

இ) வாடிக்கையர் கொடுத்த 'கணக்குகளை இணைக்கும் உரிமைக் கடிதம்'

ஈ) காசோலை தவிர மற்ற வழிகளில் வரவிருப்பைக் கேட்கும் சந்தர்ப்பங்கள். எடுத்துக்காட்டு : வைப்பினை மற்றவருக்கு உரிமை மாற்றம் செய்தல்.

உ) வங்கியருக்கு முதல் பற்றுப் பொறுப்புள்ள சொத்துக்களின் மீது இரண்டாவது அடைமானம் ஏற்படுத்திய அறிவிப்புப் பெறுதல்

ஊ) கணக்குகளை நிறுத்தி வைக்கச் சொல்லும் ஆணை பெறுதல்

**வங்கியரின் கணக்குகளை இணைக்கும் உரிமை சில வரையறைக்கு உட்பட்டவை**

வாடிக்கையரின் கணக்கில் உள்ள வரவுக்கு எதிராகப் பின்வருபவற்றை இணைக்க முடியாது.

அ) கால முதிர்வு அடையாத கடன்

ஆ) எதிர்காலத்தில் ஏற்படப்போகும் நிச்சயமற்ற கடன்

இ) கூட்டாளி ஒருவரிடமிருந்து பெறவேண்டிய கடனைக் கூட்டாண்மைக் கணக்கிற்கு அல்லது கூட்டாண்மையிடமிருந்து பெறவேண்டிய தொகையைக் கூட்டாளியின் கணக்கிற்கு இணைத்தல்.

ஈ) ஒருவரிடமிருந்து முகவர், பொறுப்பான்மையர் அல்லது ஒரு நிறுவனத்தின் அதிகாரி என்ற முறையில் பெறவேண்டிய கடன்.

உ) வாடிக்கையரின் பொறுப்பிணைத் தீர்மானிக்காத நிலை.

ஊ) வங்கியர் கணக்குகளை இணைக்கும் உரிமை பெற்றவர் அல்ல என்ற விதி இருக்கும் நிலை.

பொதுவாக இரண்டுக்கு மேற்பட்ட கணக்கைத் தொடங்கும் நேரத்தில் வாடிக்கையரால் கையொப்பமிடப்பட்ட "இணைக்கும் உரிமைக் கடிதம்" வங்கியரால் பெறப்படுகிறது.

## கணக்குகளை முடிவுக்குக் கொண்டுவரும் உரிமை (Right to Close an Account)

கணக்குகளை முடிவுக்குக் கொண்டுவருவதன் மூலம் வங்கியருக்கும் வாடிக்கையருக்குமுள்ள ஒப்பந்த உறவு முறிவடைகிறது. இந்தக் கணக்கை மறுபடியும் செயல்படுத்த வாடிக்கையருக்குச் சந்தர்ப்பம் கொடுக்கப்படுவதில்லை. கணக்குகளை நிறுத்துவது என்பது (Stopping operation of an account) சில சம்பவங்கள் நிகழும்போது தற்சமயமாக நிறுத்தி வைப்பதாகும். அந்தச் சம்பவம் முடிந்தபின் வாடிக்கையர் மறுபடியும் கணக்கைத் தொடர்ந்து நடத்தலாம். ஆகவே கணக்கைத் தற்சமயமாக நிறுத்துவதும் கணக்கை முடிவுக்குக் கொண்டுவருவதும் வேறுபாடானவை. கணக்குகளை முடிவுக்குக் கொண்டுவரும் அல்லது கணக்குகளை நிறுத்தி வைக்கும் சந்தர்ப்பங்கள் பின்வருவன :

அ) வாடிக்கையரின் விருப்பம்

ஒரு வாடிக்கையர் தனது கணக்கை எப்பொழுது வேண்டுமானாலும் முடிவுக்குக் கொண்டுவர உரிமை உண்டு. பொதுவாகப் பின்வரும் காரணங்கள் ஏதாவது ஒன்றுக்காக வாடிக்கையர் கணக்கினை முடிவுக்குக் கொண்டு வரலாம்.

i) வட்டி வீதம், வங்கிக் கட்டணம் ஆகியவற்றில் வாடிக்கையருக்கு உடன்பாடு இல்லாதபோது,

ii) மற்ற வங்கிகள் தரும் சலுகைகள் அல்லது வசதிகள் கிடைக்காதபோது,

iii) வங்கியில் அவருக்கு நம்பிக்கை இல்லாதபோது.

ஒரு வாடிக்கையர் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர விரும்பும்போது ஒரு எழுத்தாலாகிய விண்ணப்பம் கொடுக்க வேண்டும். அதில் கணக்கு எண், எந்த நாளிலிருந்து கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் என்ற விபரங்கள் எழுதப்பட வேண்டும். விண்ணப்பத்தோடு, பயன்படுத்தப்படாத காசோலைகள் மேலும் செல்லுப்புத்தகம் ஆகியவற்றை இணைக்க வேண்டும். பொதுவாகக் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர முன் அறிவிப்பு எதுவும் வேண்டியதில்லை. ஆனால் கணக்கில் பெருந்தொகையிருந்தால் முன்அறிவிப்பு கொடுத்தல் அவசியம். வங்கியர், வங்கிக் கட்டணத்தைக் கழித்தபின் மீதமுள்ள தொகையை வாடிக்கையரிடம் திருப்பித் தந்து கணக்கை முடிவுக்குக் கொண்டுவருவர்.

### ஆ) வங்கியரின் விருப்பம்

பின்வரும் ஏதேனும் ஒரு காரணத்திற்காக வங்கியர் வாடிக்கையரின் கணக்கை முடிவுக்குக் கொண்டு வரலாம்.

1) வங்கியருக்கு அந்தக் கணக்கால் வருமானம் ஏதுமில்லாதபோது.

2) வாடிக்கையரின் நடத்தை சரியில்லாதபோது

*எடுத்துக்காட்டு :*

போலிக் கையெழுத்துயிடுதல், போதிய வரவிருப்பு இல்லாதபோது காசோலைகளை எழுதுதல் போன்றவை.

வாடிக்கையரின் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர விரும்பும்போது, வங்கியர், அவருக்கு அறிவிப்புக் கொடுக்க வேண்டும்.

*சாம்பியன் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட் எதிராக மெட்ராஸ் அண்டு திருவாங்கூர் நேஷனல் பேங்க் லிமிடெட்*

**(Champion Automobiles LImited Vs Madras and Tranvancore National Bank LImited)**

இந்த வழக்கில், அறிவிப்புக் கொடுக்காமல், ஒரு வங்கியர் வாடிக்கையரின் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர முடியாது எனத் திர்ப்பளிக்கப்பட்டது. மேலும் வாடிக்கையருக்கு எந்தச் சிரமமும் இல்லாத நிலையில் அறிவிப்புக் கொடுக்க வேண்டும். அதாவது அவருக்குக் கணக்கை முடிவுக்குக் கொண்டுவரப் போதிய கால அவகாசம் கொடுக்க வேண்டும். போதிய கால அவகாசமென்பது கணக்கின் தன்மை, வியாபாரத்தின் தன்மை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டதாகும்.

*ப்ராஸ்பரிடி லிமிடெட் எதிராக லயாட்ஸ் பேங்க்*

(Prosperity Limited Vs Lloyds Bank)

இந்த வழக்கில் ஒருமாத கால அறிவிப்புப் போதுமானதல்ல எனத் திர்ப்பளிக்கப்பட்டது.

போதுமான கால அவகாசத்திற்குப் பின்னும் வாடிக்கையர் கணக்கை முடிக்கவில்லையெனில் வங்கியர் அந்தக் கணக்கில் மேலும் பணம் பெறுவதைத் தவிர்க்க வேண்டும். கணக்கை முடித்துப் பணத்தை அனுப்புவதற்குப் பதிலாகக் கணக்கில் உள்ள தொகை திரும் வரை அல்லது கொடுக்கப்பட்ட காசோலைகள் முடியும்வரை காத்திருந்து பின்னர் கணக்கை முடிவுக்குக் கொண்டுவருதல் நல்லது.

**இ) வாடிக்கையர் மரணம்**

வாடிக்கையர் மரணம் பற்றிய அறிவிப்பு வந்தவுடன் கணக்கை நிறுத்தி வைக்க வேண்டும். வாடிக்கையரின் சந்ததிகளிடமிருந்து மரணச் சான்றிதழ் பெற்றபின் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும்.

**ஈ) வாடிக்கையர் திவாலாதல்**

ஒருவர் தான் திவாலானவர் என அறிவிக்கக் கோரி நீதிமன்றத்தில் மனு செய்த செய்தி கிடைத்தவுடன், வங்கியர் அந்த வாடிக்கையரின் கணக்கை நிறுத்தவேண்டும். அந்த வாடிக்கையர் திவாலானவர் என்று நீதிமன்றம் அறிவித்த ஆணை பெற்றவுடன் அவருடைய கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். ஒரு நிறுவன வாடிக்கையராக இருந்தால் அதன் கலைப்புப் பற்றிய அறிவிப்புக் கிடைத்தவுடன் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும்.

**உ) வாடிக்கையர் பித்தநிலை அடைதல்**

வாடிக்கையர் ஒருவர் பித்தநிலை அடைந்த செய்தி அவருடைய கணக்கை நிறுத்திவைக்கப் போதுமான சான்றாகும். இந்திய ஒப்பந்தச் சட்டப்படி, பித்தநிலை அடைந்த ஒருவர், சமநிலை ஏற்படும் போதெல்லாம் வங்கிக் கணக்கைச் செயல்படுத்தலாம். அவர் சமநிலையில் இருக்கிறார் என்ற மருத்துவரின் சான்றிதழ் பெற்ற பின்னே கணக்கைச் செயல்படுத்த அனுமதிக்கப்பட வேண்டும். பித்தநிலை, நிலையானது என்று அறிவிக்கப்பட்டால், பித்தநிலை பற்றிய ஆணையை மருத்துவரிடமிருந்து பெற்றபின் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும்.

**ஊ) நீதிமன்றத் தடை உத்தரவு**

நீதிமன்றத் தற்காலத் தடை உத்தரவு (Order Nisi)பெற்றவுடன் வாடிக்கையரின் கணக்கை நிறுத்தி வைக்கலாம். முழுமையான நீதிமன்றத் தடை உத்தரவு (Order absolute)கிடைத்தவுடன் அது முழுத் தொகையையும் முடக்கி வைக்கிறதா அல்லது பகுதியை மட்டும் முடக்கி வைக்கிறதா என அறிய வேண்டும். கணக்கிலுள்ள முழுத் தொகையையும் முடக்கி வைக்கும் ஆணையாகயிருந்தால் கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும்.

### எ) உரிமை மாற்ற அறிவிப்பு

வங்கியிருப்பை, ஒரு வாடிக்கையர் எவருக்கும் உரிமை மாற்றம் செய்யலாம். வாடிக்கையரிடமிருந்து உரிமை மாற்ற அறிவிப்புப் பெற்றவுடன் அவருடைய கணக்கை முடிவுக்குக் கொண்டு வந்து அதிலுள்ள தொகையை மாற்றம் பெறுபவரின் கணக்குக்கு மாற்றித் தரவேண்டும்.

## செலுத்தும் தொகையைக் கணக்குகளுக்குச் சரிக்கட்டல்

## (Appropriation of Payments)

ஒரு வாடிக்கையர் ஒன்றுக்கு மேற்பட்ட கணக்குகளை வைத்திருந்து அவற்றில் ஒன்று வரவிருப்பையும் மற்றொன்று பற்றிருப்பையும் காட்டினால், செலுத்தும் தொகையை எந்தக் கணக்கிற்கு ஈடுகட்டுவது என்ற கேள்வி எழுகிறது. பொதுவாக, எந்தக் கணக்கில் வரவெழுத வேண்டும் என்று குறிப்பிடும் முதல் உரிமை வாடிக்கையருக்கே உண்டு. பணம் செலுத்தும்போது, அவர் அத்தொகை எந்தக் கணக்கில் வரவெழுத வேண்டும் என்று குறிப்பிட வேண்டும்.

வாடிக்கையர், குறிப்பிடத் தவறினால், வங்கியர் தங்கள் விருப்பப்படி எந்தக் கணக்கிலும் அத்தொகையை எழுதலாம். காலாவதியான கடனைத் திர்ப்பதற்கோ அல்லது பிணையில்லாத கடன் தொகையைக் குறைப்பதற்கோ செலுத்தப்பட்ட தொகையை நேர்செய்ய வங்கியருக்கு உரிமை உண்டு. இந்த உரிமையைப் பயன்படுத்தியதை வாடிக்கையருக்கு அறிவிக்க வேண்டும். வாடிக்கையருக்கு அறிவிப்புக் கொடுப்பதன் மூலம் செலுத்தும் தொகையைக் கணக்குகளுக்கு சரிக்கட்டுவது நிறைவு பெறுகிறது.

வங்கியர் வாடிக்கையர் இருவரும் தங்கள் விருப்பத்தைக் குறிப்பிடவில்லையெனில் கிளேட்டன் விதி அமலாக்கப்படும்.

### கிளேட்டன் விதி (Rule in Clayton's case)

கிளேட்டன் விதி *தேவோனஸ் எதிராக நோபிள்* (Deyaynes Vs Noble) என்ற வழக்கில் முடிவு செய்யப்பட்டது. இந்த விதி நடப்புக் கணக்கு மேலும் ரொக்கக்கடன் போன்ற தொடர்ந்து

நடைபெறும் கணக்குகளுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது. கிளேட்டன் விதி பின்வருமாறு :

1) கணக்கில் பற்றிருப்பு இருக்கும்போது, பற்றுப் பகுதியிலுள்ள முதல் நடவடிக்கை வரவுப் பகுதியில் ஏற்படுததப்படும் முதல் நடவடிக்கையில் தீர்க்கப்படுகிறது.

2) கணக்கில் வரவிருப்பு இருக்கும்போது, வரவுப் பகுதியிலுள்ள முதல் நடவடிக்கை பற்றுப் பகுதியில் ஏற்படுத்தப்படும் முதல் நடவடிக்கையில் தீர்க்கப்படுகிறது.

இந்த விதி தொடர்ந்து நடைபெறும் கணக்கிற்கு மட்டுமே பொருந்தும். ஏனெனில் செலுத்தும் தொகையைக் கணக்குகளுக்குச் சரிக்கட்டல் என்னும் பிரச்சினை தொடர்ந்து நடைபெறும் கணக்குகளுக்கு மட்டுமே ஏற்படுகிறது. ஒரு கணக்கை முடிவுக்குக் கொண்டு வந்தபின் புதிய கணக்கைத் தொடங்கினால் இந்தவிதி பழைய கணக்கிற்குப் பொருந்தாது.

கிளேட்டன் விதியை வங்கியர் எப்பொழுதும் மனத்தில் கொள்ள வேண்டும. ஒரு கூட்டாளி கூட்டாண்மையிலிருந்து விலகும்போது கூட்டாண்மைக் கணக்கு ரூ.10,000 பற்றிருப்பைக் காட்டுகிறது. இந்தக் கணக்கை வங்கியர் முடிவுக்கு கொண்டு வரவில்லையெனில், கூட்டாளிகள் செலுத்தும் தொகை இந்தக் கணக்கிலே எழுதப்படும். எடுத்துக்காட்டாக, மீதமுள்ள கூட்டாளிகள் ரூ.10,000 செலுத்தினால் அது பற்றில் உள்ள ரூ.10,000த்தை நேர் செய்துவிடும். இது கிளேட்டன் விதியினால் ஏற்படும் விளைவாகும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் கூட்டாண்மையிலிருந்து விலகும் கூட்டாளியின் பொறுப்புத் தானாகவே தவிர்க்கப்படுகிறது. பற்றில் உள்ள ரூ.10,000த்தில் விலகும் கூட்டாளிக்கு ஏதேனும் பொறுப்பு இருந்தால் அதனை வங்கியரே ஏற்க வேண்டும். ஒரு கூட்டாளியின் அல்லது பொறுப்பாளரின் மரணம், நொடிப்பு, பித்தநிலை அடைதல் ஆகிய சந்தர்ப்பங்களில் வங்கியர் அவர்களுடைய கணக்கை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். ஆகவே கிளேட்டன் விதி வங்கியருக்கு முக்கியத்துவம் வாய்ந்தது.

# கடனும் முன்பணமும்

## (Loans and Advnces)

வங்கிகள் மற்ற வாணிபத்தைப் போல இலாபநோக்கு உடையவை. வங்கி, பணம் மேலும் கடனைச் சார்ந்த வாணிபமாகும். ஒரு வங்கி இலாபம் ஈட்டுவதற்காகத் தன்னுடைய நிதியைப் பல வழிகளில் முதலீடு செய்கிறது. வங்கிக்குப் பெரும்பகுதி வருமானம் கடன்கள், மேலும் முன்பணம் வழங்குவது மூலமாகக் கிடைக்கிறது.

வியாபாரிகள், வணிகர்கள் மேலும் தொழில் அதிபர்களுக்கு, வங்கிகள், சொத்துக்களைப் பிணையமாகப் பெற்றும், கடன் பெறுவோரின் நாணயத்தின் பெயரிலும் கடன், மேலும் முன்பணம் வழங்குகின்றன. கடன் வழங்குவதில் வங்கியருக்குப் பல்வேறு இன்னல்கள் ஏற்பட வாய்ப்புண்டு. கடன் பெற்றவர் திவாலாகிவிட்டாலோ, தொழிலில் நட்டமேற்பட்டாலோ, ஏமாற்றிவிட்டாலோ, மேலும் குறிப்பிட்ட காலத்தில் கடனைத் திருப்பித் தர தவறினாலோ வங்கியருக்கு நட்டம் ஏற்படும். ஆகவே, வங்கிகள் கடன் வழங்கும்போது முன்னெச்சரிக்கையோடு செயல்பட வேண்டும். தன்னுடைய சொந்தநலனை முன்னிட்டும் நாட்டுநலனைக் கருத்தில் கொண்டும் வங்கிகள் கடன் தொகையைப் பின்பற்ற வேண்டும்.

வங்கிகள், வழக்கமாக மூன்று கடன் கொள்கைகளைப் பின்பற்றி வந்தன. அவை :

1) பாதுகாப்பு

2) ரொக்கத்தன்மை

3) லாபத்தன்மை

இ◌.றைய வங்கிகள், சமூகப் பொறுப்புக்களையும் ஏற்க வேண்டியதிருப்பதால் அவை வழக்கமான கொள்கைகளோடு மற்ற சில கொள்கைகளையும் பின்பற்ற வேண்டியதிருக்கிறது.

**கடன் வழங்கல் கொள்கைகள் (Principles of Sound Lending)**

**1. பாதுகாப்பு (Safety)**

வங்கிகள், பொதுமக்களிடமிருந்து வைப்புக்கள் மூலம் பெற்ற தொகையையே பெரும்பாலும் கடனாக வழங்குகின்றன. தகுதியற்றவர்களுக்குக் கடன் வழங்கினால் கொடுத்த தொகை உரிய காலத்தில் திரும்பப்பெற முடியாது. இதனால், வங்கிகள் வாடிக்கையாளரின் வைப்புத் தொகையைக் கேட்ட நேரத்தில் திரும்பத்தர இயலாமல் போகலாம். இச்செய்கை வாடிக்கையாளர் வங்கியின் மீது கொண்ட நம்பிக்கையை இழக்கச் செய்யும். ஒரு வங்கியின் வெற்றி வங்கியின் மீது வைப்பாளர்களின் நம்பிக்கைதான். வைப்பாளர்களின் நம்பிக்கையைப் பெற, வங்கிகள், பாதுகாப்பான மேலும் பத்திரமானப் பிணையங்களில் முதலீடு செய்ய வேண்டும். பாதுகாப்பு என்பது (அ) கடனாளர் தந்த பிணையம் மேலும் (ஆ) கடனாளியின் திருப்பித்தரும் ஆற்றல் மேலும் கடனை வட்டியுடன் தானாகவே திருப்பிச் செலுத்தும் எண்ணம் ஆகியவற்றைச் சார்ந்துள்ளது. ஆகவே, வங்கியர் கொடுக்கப்பட்ட பிணையம் போதுமானதா,.மேலும் எளிதில் பணமாக மாற்றக் கூடியதா என்றும் கடன் பெறுபவரின் குணம், அதனுடன் நன்மதிப்பு ஆகியவற்றை உறுதி செய்தபின் கடன் வழங்க வேண்டும்.

**2. ரொக்கத் தன்மை (Liquidity)**

"ஒரு சொத்து, நட்டமில்லாமலும், குறைந்த நேரத்திலும், ரொக்கமாக மாறும் ஆற்றல், ரொக்கத்தன்மை எனப்படும்.

வாடிக்கையாளரிடமிருந்து பெற்ற வைப்புகளைக் கேட்டபோது வங்கிகள் திருப்பித்தர வேண்டும். வைப்புகளைக் கேட்ட நேரத்தில் திருப்பித்தர வேண்டுமென்றால் தொகையை

ரொக்கத்தன்மை கொண்ட சொத்துக்களில் முதலீடு செய்ய வேண்டும். நிலம், கட்டிடம், இயந்திரம் ஆகியவற்றின் மீது நீண்ட காலக் கடன் கொடுத்தால் உரிய நேரத்தில் பணத்தைத் திரும்பப்பெற முடியாது. சரக்குகள் மற்றும் சரக்குரிமைஆவணங்களைப் பிணையமாக ஏற்றுக் குறுகிய காலக் கடன் வழங்கினால், அவைகளை எளிதில் பணமாக மாற்றிக் கொள்ளலாம். இவை ரொக்கத்தன்மை கொண்டவையாகக் கருதப்படுகிறது. ஆகவே, வங்கியர் எளிதில் சந்தைப்படுத்த இயலும் பிணையங்களைப் பெற்றுக் குறுகிய காலக் கடன்களை வழங்கினால், வைப்பாளர்கள் கேட்டபோது தொகையைக் கொடுக்க இயலும்.

### 3. இலாபத்தன்மை (Profitability)

வாணிப நிறுவனங்களைப் போல வங்கிகளும் இலாபத்திற்காக நடத்தப்படுகின்றன. நாட்டுடமையாக்கப்பட்ட வங்கிகளும் இதற்கு மாறுபட்டவை அல்ல. வைப்பாளர்களுக்கு வட்டி, பங்குதாரர்களுக்கு இலாபஈடு, கட்டிடங்களுக்கு வாடகை, அலுவலர்களுக்குச் சம்பளம், வராக் கடன்களுக்கு ஒதுக்கீடு, தேய்மானம், சொத்துக்களைப் பராமரித்தல் எதிர்பாராமல் ஏற்படும் நட்டத்திற்கு ஒதுக்கிடு ஆகியவற்றிற்காக வங்கிகள் இலாபம் ஈட்ட வேண்டும். ஆகவே இலாபம் என்பது மிக முக்கியக் கோட்பாடாகும்.

ஆகவே, வங்கிகள் தம்மிடமுள்ள தொகையை இலாபம் பெறுகின்ற வகையில் முதலீடு செய்ய வேண்டும். இருப்பினும் இலாபம் ஒன்றையே குறிக்கோளாகக் கொள்ளக்கூடாது.

### 4) பிணையங்கள் (Security)

கடன் பெறுவதற்கு வாடிக்கையர் நிலம், கட்டிடம், இயந்திரம், சரக்குகள், கச்சாப்பொருட்கள் போன்றவற்றைப் பிணையங்களாகத் தரமுன்வருவர். பெற்ற கடனைத் திருப்பித்தர இயலாத நிலையில் இந்தப் பிணையங்களை, வங்கியருக்குக் கைகொடுக்கும் பிணையங்களைப் பெறுமுன், வங்கியர், அவை

போதுமானவையா, எளிதில் விற்கக் கூடியனவா மேலும் வில்லங்கம் இல்லாதவையா என்று அறிய வேண்டும். நட்டம் ஏதுமில்லாமல் எளிதில் விற்கக் கூடிய பிணையங்களையே வங்கியர் ஏற்கவேண்டும்.

**5) கடன் பெறும் நோக்கம் (Purpose of Loaan)**

கடன் வழங்குமுன், எந்த நோக்கத்திற்காகக் கடன் கோரப்படுகிறது என்பதை வங்கியர் அறிய வேண்டும். ஊக வணிகம், பதுக்குதல் போன்ற நடவடிக்கைகளுக்குக் கடன் அளிக்கக் கூடாது. ஆக்கப் பணிகளுக்காகவே கடன் வழங்கப்பட வேண்டும். மேலும் எந்த நோக்கத்திற்காகக் கடன் பெறப்பட்டதோ அந்த நோக்கத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது என உறுதி செய்தல் அவசியம். ஆக்கப் பணிகளுக்குக் கொடுக்கப்படும் கடன்கள் கடன் பெற்றவரின் சம்பாதிக்கும் திறனை அதிகரிக்கிறது. அது கடனைத் திருப்பிச் செலுத்துவதற்கு உறுதுணையாக அமைகிறது.

**7. இடர்ப்பாட்டினைப் பரவலாக்கல் (Diversification of Risks).**

வங்கியர் தன்னிடமுள்ள நிதியை ஒரே தொழிலில் முதலீடு செய்யக்கூடாது. அந்தத் தொழில் நலிவுற்றால கடனைத் திரும்பப்பெற முடியாது. அது வங்கியின் செயல்பாட்டினை மிகவும் பாதிக்கும்.

அதேபோன்று தங்களிடமுள்ள நிதியின் பெரும்பகுதியை ஒரு கடனாளருக்கோ சிலருக்கோ கடனாகத் தரக்கூடாது. அவர்கள் திவாலாகி விட்டால் கடனைத் திரும்பப் பெறுவது மிகவும் அரிது.

மேலும் ஒரே பகுதியிலுள்ள தொழில்களில் பெரும்நிதியை முதலீடு செய்யக்கூடாது.

பல்வேறு வகையான தொழில்கள் பல பகுதிகளில் நடத்தும் எண்ணிக்கையில் மிக அதிகமான வாடிக்கையருக்கு மிதமான தொகையைக் கடனாக அளிப்பதுதான் சிறந்த கொள்கையாகும்.

வங்கிகள் நாட்டுடமையாக்கப்பட்டபின், வங்கியியலில் மாபெரும் மாற்றம் ஏற்பட்டுள்ளது. இன்று வங்கிகள் நிதி அளிக்கும் நிறுவனம் மட்டுமல்ல, அவை சமுதாய நோக்கோடு செயல்படவும் வேண்டியுள்ளது. நாட்டின் குறிக்கோளை அடைவதற்கு வளர்ச்சிப் பணிகளில் ஈடுபட வேண்டியுள்ளது. வேகமாக வளர்ச்சி அடைய வேண்டுமானால், இதுவரை கவனிக்கப்படாத துறைகளும், சமுதாயத்தில் நலிந்த பிரிவினருக்கும் வங்கிக் கடன்கள் அளிக்கப்பட வேண்டும். இத்துறைகளுக்குக் கடன் வழங்க வேண்டுமென்றால் வங்கிகள் தனது பழமையான "பிணையம் பெறுதலுக்கு முக்கியத்துவம்" அளிக்கும் கொள்கையை மாற்ற வேண்டும்.

பத்திரமான கடன் என்பது வாங்கிய கடனைக் குறித்த நேரத்தில் திரும்பித் தருதலே ஆகும். குறித்தநேரத்தில் திரும்பத் தருவது என்பது ஒரு தொழிலின் சம்பாதிக்கும் ஆற்றலையும் கடன் பெற்றவரின் திருப்பித்தரும் திறனையும் பொறுத்தே அமைகிறது. ஆகவே வங்கியர் கடன் கொடுக்கும் போது கொடுக்கும் கடனின் உற்பத்தியினை முக்கிய அளவுகோலாகக் கொள்ள வேண்டும்.

## பிணை மற்றும் பிணையற்ற கடன் (Secured and Unsecured Advances)

கடன்கள், தனிநபர் பெயரிலும் மேலும் சொத்துக்களுக்கு எதிராகவும் அளிக்கப்படுகிறது. தனிநபர் பெயரில் கொடுக்கப்படும் கடன்கள் பிணையற்ற கடன்கள் எனவும் சொத்துக்களுக்கு எதிராகக் கொடுக்கப்படும் கடன்கள் பிணைக் கடன்கள் எனவும் அழைக்கப்படுகிறது.

### பிணையற்ற கடனின் சிறப்பியல்புகள்

1. கண்ணுக்குப் புலனாகும் சொத்துக்கள் எதுவும் பிணையாகக் கொடுக்கப்படுவதில்லை.
2. வாடிக்கையாளரின் திறமை, தகுதி, நாணயம் ஆகியவற்றின் அடிப்படையில் வழங்கப்படுகிறது.

3. கடன் பெறுபவர் மீதான நம்பிக்கைதான் பிணையற்ற கடனுக்கு ஆதாரம்.

வாடிக்கையரின் மீதான நம்பிக்கை மூன்று காரணிகளால் முடிவு செய்யப்படுகிறது.

1. நற்குணம் 2. திறன் 3. முதல்

**1. நற்குணம் (Character)**

நற்குணம் என்பது ஒரு மனிதனின் சொத்தாகும். நற்குணம் என்பது ஒரு மனிதனின் நேர்மை, பொறுப்பு, மதிப்பு, மேலும் கடமை தவறாமை ஆகியவற்றைக் கொண்டதாகும். மேற்கூறிய தகுதிகளை உடைய மனிதன் நற்குணம் கொண்டவனாகக் கருதப்படுகிறான். அவருக்கு எந்தவித தயக்கமும் இல்லாமல் கடன் வழங்கலாம். நற்குணம் கொண்ட வாடிக்கையாளருக்குக் கொடுக்கப்படும் கடன்கள் உரிய நேரத்தில் திரும்பச் செலுத்தப்படுகிறது. ஆகவே நற்குணம், பிணையற்ற கடன்களுக்கு அதிமுக்கியம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

**2. திறமை (Capacity)**

திறமை என்பது கடன் பெறுபவர் அவரது வாணிபத்தைத் திறம்பட நிர்வாகிக்கும் தன்மையாகும். முயற்சி, அக்கரை, அனுபவம் மேலும் மேலாண்மைத் திறன் ஆகியவை ஒரு வாணிபத்தின் வெற்றிக்கு அடிப்படையாகும். இத்தகைய குணங்களை உடையவர்களுக்குப் பிணையற்ற கடன்களை வழங்கலாம்.

**3. முதல் (Capital)**

வங்கிகள் பெரும்பாலும் நடைமுறை மூலதனம் மட்டுமே அளிக்கின்றன. கடன் பெறுபவரிடம் போதுமான அளவு நிலை மூலதனம் இருக்க வேண்டும். ஆகவே நற்குணம், திறமை தவிர, போதுமான மூலதனம் இருக்கிறதா என வங்கிகள் கவனத்தில் கொள்கின்றது.

**பிணைக்கடன்**

பிணைக்கடன் என்பது, நிலம், கட்டடம், இயந்திரம், சரக்குகள், சரக்குரிமைப் பத்திரங்கள் போன்ற கண்ணுக்குப் புலம்படும் சொத்துக்களைப் பிணையாகப் பெற்று வழங்கப்படும் கடனாகும். இவ்வகைக் கடன்களில் பிணையாகப் பெற்ற சொத்துக்களின் மீது வங்கியருக்குப் பற்றுப் பொறுப்பு ஏற்படுத்தப்படுகிறது. ஆகவே இவைகள் மிகவும் பாதுகாப்பான கடனாகும்.

வங்கி ஒழுங்காற்றுச் சட்டம், 1949, பிரிவு 5 (1) பிணைக்கடனுக்கு வரையறை தருகிறது.

பிணைக்கடன் அல்லது முன்பணம் என்பது, சந்தை மதிப்பு எந்த நேரத்திலும், வழங்கப்பட்ட கடன் அல்லது முன் பணத்தை விடக்குறைவாக இல்லாத சொத்துக்களைப் பிணையங்களாப் பெற்று வழங்கும் கடன் அல்லது முன் பணம்.

இந்த வரையறை இரண்டு முக்கியத் தன்மைகளைக் குறிப்பிடுகின்றது.

1. கடன், கண்ணுக்குப் புலப்படும் சொத்துக்களைப் பிணையங்களாகப் பெற்று வழங்கப்பட வேண்டும்.
2. 'சொத்துக்களின் சந்தை மதிப்பு, கடன் மதிப்பை விடக் குறைவாக இருக்கக்கூடாது.

பிணயங்களாகக் கொடுக்கப்படும் சொத்துக்கள் இடத்திற்கு இடம் மாறுபடுகின்றன. சென்னை, மும்பை, கல்கத்தா போன்ற பெருநகரங்களில் அரசு கடன்பத்திரங்கள், பங்குகள், கடன் பத்திரங்கள் ஆகியவை பிணையங்களாகத் தரப்படுகிறது. தொழில் நகரங்களில், மூலப் பொருட்கள் மேலும் சரக்குகள் கடன்பெறப் பிணையங்களாக அளிக்கப்படுகிறது. வேளாண் மையங்களில் வேளாண் பொருட்கள் பிணையங்களாகின்றன. இவை தவிர, அசையும் சொத்துக்கள், ஆயுள் காப்பீட்டுப் பத்திரங்கள், புத்தகக்கடன் ஆகியவற்றின் மீதும் வங்கியர் பிணைக்கடன் அளிக்கின்றனர்.

**கடன் வகைகள் (Kinds of Advances)**

வங்கியர் வழங்கும் கடன்களை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

1. கடன்கள் (Loans)
2. ரொக்கக் கடன் (Cash Crdit)
3. மேல்வரைப் பற்று (Overdraft)
4. மாற்றுச் சீட்டுக் கழிவு செய்தல் (Discounting Bills of Exchange)

**1, கடன்கள்**

ஒரு குறிப்பிட்ட தொகையை குறிப்பிட்ட வட்ட வீ தத்திற்குக் குறிப்பிட்ட காலத்திற்கு மொத்தமாக வழங்குதல் கடன் எனப்படும். மொத்தத் தொகையும் ரொக்கமாகக் கொடுக்கப்படுகிறது அல்லது கேட்பவரின் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. வரவு வைக்கப்பட்டட தொகையை அவர் எப்பொழுது வேண்டு மானாலும் பெற்றுக் கொள்ளலாம். கணக்கிலிருக்கும் தொகையை அவர் பயன்படுத்தினாலும் பயன்படுத்தாவிட்டாலும், மொத்தமாகக் குறிப்பிட்ட காலம் முடிந்தபின் அல்லது தவணைகளில் செலுத்தலாம். கடனைச் செலுத்தியபின் மீண்டும் தேவைப்பட்டால், வாடிக்கையர் புதிய கடன்தான் ஏற்பாடு செய்ய வேண்டும்.

கடன்கள் இருவகைப்படும். அவை :

1. காலக்கடன் (Term Loan)
2. தேவைக்கடன் (Demand Loan)

காலக்கடன்கள் நடுத்தரக் காலக் கடன்களாகவோ

நீண்டகாலக் கடன்களாவோ வழங்கப்படுகிறது. நடுத்தர காலக் கடன்கள் ஒராண்டு முதல் ஐந்து ஆண்டுகளுக்கு வாகனங்கள், கருவிகள் ஆகியவை வாங்கக் கொடுக்கப்படுகின்றன. நீண்டகாலக் கடன்கள், நிலம், இயந்திரம், கட்டடம் ஆகியவை வாங்குவதற்கு அளிக்கப்படுகின்றன.

தேவைக்கடன் குறுகிய காலத்திற்கு நடைமுறை முதலாக வழங்கப்படுகிறது. தேவைக்கடன்கள் கேட்கும்போது திரும்பத் தரவேண்டிய கடன்களாகும்.

**ரொக்கக் கடன்**

ரொக்கக் கடன் என்பது வங்கியருக்கும் கடனாளிக்கும் ஏற்படும் நிலையான ஏற்பாடாகும். இந்த ஏற்பாட்டின்படி தனிக்கணக்கு ஆரம்பிக்கப்பட்டு கடனாளி கேட்ட கடன் தொகை வரவு வைக்கப்படும். அந்தத் தொகை முழுவதையும் வாடிக்கையர் உடனடியாக எடுக்க வேண்டும் என்ற அவசியமில்லை. தேவையான சமயங்களில் தேவையான தொகையை எடுத்துக் கொள்ளலாம். தன்னிடம் மிகுதித் தொகையிருந்தால் வங்கிக் கணக்கில் வைத்துவிடலாம். அதுபோலப் பணம் எடுத்தலும் திரும்பச் செலுத்தலும் அடிக்கடி நடைபெற இயலும். ஆகவே ரொக்ககக் கடன் ஒரு தொடர் கணக்காகச் செயல்படுகிறது. எடுத்துக் கொண்ட தொகைக்கு மட்டுமே வட்டி வசூலிக்கப்படுகிறது.

இவ்வகைக் கடன்கள் பொதுவாகத் தகுந்த பிணையங்களாகப் பெற்றே வழங்கப்படுகிறது. அனுமதித்த தொகையை முழுமையாகப் பயன்படுத்தவில்லை எனில் தண்டத்தொகை வாடிக்கையாளரிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. இந்தத் தொகை அனுமதித்த தொகையில் பயன்படுத்தபடாத பகுதிக்கு மட்டுமே வசூலிக்கப்படுகிறது. இவ்வகைக் கடன்களில் கடன்அளவு வாணிபத்தின் தேவைக்கேற்ப மாறுபடுகிறது. ஆகவே ரொக்கக் கடன் முறை பெரிய தொழில்கள் மற்றும் வாணிப நிறுவனங்களால் பெரிதும் விரும்பப்படுகிறது.

**மேல்வரைப் பற்று**

நடப்புக் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கையர் தனது கணக்கிலுள்ள வரவு இருப்பை விட அதிகத் தொகையைத் தேவைப்படும்போது ஒரு குறிப்பிட்ட அளவுக்குள் பெற்றுக் கொள்ளும் ஏற்பாடு மேல்வரைப் பற்று எனப்படும். பொதுவாக இது ஒரு தற்காலிக ஏற்பாடாகும். இவ்வகைக் கடன்கள் பிணைக் கடனாகவே தரப்படுகிறது. உடன்பாடான தொகைக்குள், வாடிக்கையர் பணத்தைக் கணக்கிலிருந்து பெறலாம். மேலும் கணக்கில் திருப்பச் செலுத்தலாம். ஆனால் வட்டி பயன்படுத்தப்பட்ட தொகைக்கு மட்டுமே வசூலிக்கப்படுகிறது.

மேல்வரைப் பற்று, நடப்புக் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கையருக்குத் தற்காலிகத் தேவைக்காகக் கொடுக்கப்படும் கடனாகும். இது குறுகிய காலக் கடனாகும். ரொக்கக் கடன் சிறிது நீண்ட காலத்திற்குக் கடன் தேவைப்படும் எல்லா நபர்களுக்கும் வழங்கப்படுகிறது.

மேல்வரைப் பற்றில் கடன் தொகை வாடிக்கையரின் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. ரொக்கக் கடனில் அனுமதித்தத் தொகை தனிக் கணக்கில் வரவாகிறது.

ரொக்கக் கடன், தொழில் நடத்துவோர் நீண்ட காலத்திற்குப் பயன்படுத்தும் வகையில் ஏற்படுத்தப்படுகிறது. மேல்வரைப் பற்று குறுகிய காலத்திற்கு மட்டுமே பயன்படுத்தும் கடனாகும்.

**தற்காலிக மேல்வரைப் பற்று (Temporary Overdrafts)**

சில சமயங்களில் அரசு அலுவலர்கள், வியாபாரிகள், குறுந்தொழில் புரிவோர் ஆகியவர்களுக்கு நடப்புக் கணக்கில் சிறிய தொகை தற்காலிக மேல்வரைப் பற்றாகக் கொடுக்கப்படுகிறது. பணத்தைத் திரும்பச் செலுத்தப் போதுமான நிலையான வருமானம் உள்ளவர்களுக்கே இவ்வகைக் கடன் வழங்கப்படுகிறது.

## மாற்றுச் சீட்டுக் கழிவு செய்தல் - வாங்குதல்

வங்கிகள் தங்களது வாடிக்கையர்களுக்கு மாற்றுச்சீட்டைக் கழிவு செய்தல் மூலம் கடன் வசதி செய்கிறது. ஆவணத்தில் குறிப்பிட்ட தொகையிலிருந்து வட்டியைக் கழித்தபின்வரும் தொகை வாடிக்கையரின் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. மாற்றுச் சீட்டினைக் கழிவு செய்தல் பிணையற்ற கடனாகும். மாற்றுச் சீட்டிலுள்ள நபர்களின் நன்மதிப்பைப் பொறுத்தே இவ்வகைக் கடன் வழங்கப்படுகிறது.

---

மாற்றுச் சீட்டினைக் கழிவு செய்வதற்குப் பதிலாக வங்கியர், சில சமயங்களில் அவற்றை வாங்குகின்றனர். சரக்குரிமை ஆவணங்களைச் சார்ந்துவரும் மாற்றுச் சீட்டினை வங்கியர் வாங்குவர். மாற்றுச் சீட்டினை வாங்கும்போது ரொக்கக் கடன் அல்லது மேல்வரைப் பற்று அனுமதிக்கப்படுகிறது. மாற்றுச் சீட்டினை வாங்குதல் என்பது வங்கியர் அவற்றைப் பிணையங்களாக வைத்திருத்தலைக் குறிக்கும். வங்கியர் மாற்றுச் சீட்டுக்கு உரிமையாளர் ஆவதில்லை.

# 14

# பற்றுப் பொறுப்பினை ஏற்படுத்தும் முறைகள்
## (Modes of Crearting Charges)

சரக்குகள், பங்குப் பத்திரங்கள், காப்பீட்டுப் பத்திரங்கள், சரக்குரிமை ஆவணங்கள் ஆகியவை கடன்பெறப் பிணையங்களாக அளிக்கப்படுகின்றன. கடன் பெற்றவர், கடனைத் திருப்பித் தராவிடில், வங்கியருக்கு இந்தப் பிணையங்கள் கை கொடுக்கின்றன. வங்கியருக்கு இந்தப் பிணையங்கள் பயன்பட வேண்டுமெனில் அவற்றின் மீது பற்றுப் பொறுப்பினை ஏற்படுத்த வேண்டும்.

பற்றுப் பொறுப்பிணை ஏற்படுத்தும் முறைகள்

1. பற்றுரிமை (Lien)
2. அடகு (Pledge)
3. அடைமானம் (Mortgage)
4. பெந்தகம் (Hypothecation)

### 1. பற்றுரிமை

கடனாளி, தான் பெற்ற கடனைத் திருப்பித்தரும்வரை, அவர் கொடுத்த பிணையங்களை நிறுத்தி வைத்துக் கொள்ளும் கடனீந்தோரின் உரிமை பற்றுரிமை எனப்படுகிறது. பற்றுரிமை, பிணையங்களை நிறுத்தி வைக்கும் உரிமையை மட்டும் தருகிறது. பிணையங்களாகக் கொடுத்த பொருட்களை விற்கும் அதிகாரம் இல்லை.

ஆனால் வங்கியரின் பற்றுரிமை பொதுப்பற்றுரிமை ஆகும். அது உட்கிடை அடகிற்கு இணையாகும். ஆகவே வங்கியர்க்குப் பொருட்களை நிறுத்தி வைப்பது மட்டுமல்லாமல் அவைகளை நியாயமான காலக்கெடு கொடுத்தபின் விற்கும் உரிமையும் உண்டு.

### அடகு

இந்திய ஒப்பந்தச் சட்டம் 1872, பிரிவு 172 அடகிற்கு வரையறை தருகிறது.

"கடன் பெறுவதற்கு அல்லது கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்குப் பிணையப் பொருட்களை ஒப்படைவு செய்வது அடகாகும்".

மேலே கொடுக்கப்பட்டுள்ள வரையறையிலிருந்து அடகின் தன்மைகளை அறிந்து கொள்ளலாம். அவையாவன :

1. பொருட்களைக் கடன் வாங்குவதற்காகக் கொடுக்கும் பொழுது மட்டுமே அடகு ஏற்படுகிறது.

2. கடனைச் செலுத்தியவுடன் அடகுப் பொருட்கள் உரிமையாளரிடம் திருப்பித் தரப்படும்.

3. கொடுக்கப்பட்ட பொருட்கள் கடனுக்குப் பிணையமாகிறது.

சரக்குகள், பங்குப் பத்திரங்கள், சரக்குரிமை ஆவணங்கள் போன்ற எல்லாவித அசையும் சொத்துக்கள் மீதும் அடகு ஏற்படுத்தலாம். பொருட்களை அடகாகக் கொடுத்தவர் அடகு வைத்தவர் எனவும், பொருட்கள் யாருக்குக் கொடுக்கப்பட்டதோ அவர் அடகு பெறுபவர் எனவும் அழைக்கப்படுவர்.

### அடகின் சிறப்புத் தன்மைகள்

#### 1. பொருட்களை ஒப்படைத்தல் (Delivery of goods)

அடகு முழுமை அடையப் பொருட்களை ஒப்படைத்தல்

அவசியம். ஒப்படைத்தல் அடையாளமாகவோ வெளிப் படையாகவோ இருக்கலாம். வெளிப்படையாக ஒப்படைத்தல் என்பது, அடமானம் பெறுபவரிடம் அடமானம் தருபவர் பொருட்களைக் கொடுப்பது ஆகும்.

அடையாள ஒப்படைத்தலில், பொருட்களின் உடைமை (Possession) அடகு பெறுபவருக்கு மாற்றம் செய்யப்படுகிறது. பின்வரும் ஏதேனும் ஒரு முறையில் இதனைச் செய்யலாம் :

அ) சரக்குகள் வைக்கப்பட்டிருக்கும் காப்பகத்தின் சாவிகளை ஒப்படைக்கலாம்.

ஆ) சரக்குரிமை ஆவணங்களை ஒப்படைக்கலாம்.

இ) பொதுக் காப்பகத்தில் பொருட்கள் வைக்கப் பட்டிருந்தால் மாற்றத்தக்க காப்பக ஆணையை ஒப்படைக்கலாம்.

**2. சொத்துடைமை மாற்றம் (Transfer of Ownership)**

பொருட்களின் சொத்துரிமை அடகு கொடுப்பவரிடமே இருக்கும். பொருளுடைமை அடகு பெற்றவரிடம் கடனைத் திருப்பித் தரும் வரை இருக்கும்.

அடகு கொடுப்பவர் கடனை உரிய நேரத்தில் செலுத்தாவிடில், அடகு பெறுபவர் :

அ) நியாயமான கால அறிவிப்புக் கொடுத்தபின், அடகு பெற்ற பொருட்களை விற்கலாம்.

ஆ) வரவேண்டிய கடன்தொகைக்கு நீதிமன்றத்தில் வழக்குத் தொடரலாம்.

இ) பொருட்களை விற்பதற்கு வழக்குத் தொடர்வதன் மூலம் வரவேண்டிய தொகையை மீட்கலாம்.

அடகு பெற்றவர், விற்கும் உரிமையை நிலைநிறுத்த முடிவு செய்து விட்டால் அவர் தெளிவான, திட்டமான நியாயமான அறிவிப்புக் கொடுக்க வேண்டும்.

*பிரபாத் வங்கி எதிராக பாபு ராம்*

(Prabhat Bank Vs Babu Ram)

இந்த வழக்கில் அலகாபாத் உயர்நீதிமன்றம் பின்வரும் தீர்ப்பினைக் கூறியது.

கடனீந்தோர் பிணையப் பொருட்களை விற்பதற்கான முடிவையும் விற்பதற்கான தேதியைக் குறிப்பிட்டு அறிவிப்பு வெளியிட வேண்டும். கடனாளிக்குக் குறிப்பிட்ட நாளில் தொகையைச் செலுத்தச் செலுத்தச் சந்தர்ப்பம் கொடுக்கவே இந்த அறிவிப்பைக் கொடுக்க வேண்டும்.

**அடகின் நன்மைகள்**

சொத்துக்கள் மீது பற்றுப்பொறுப்பு ஏற்படுத்தும் முறைகளில் அடகினால் வங்கியருக்குச் சில நன்மைகள் உண்டு. அவையாவன :

1. அடகு பெற்ற பொருட்கள் வங்கியரின் பொறுப்பில் இருப்பதால் அவைகளை தேவையிருப்பின் விற்பது எளிது.

2. கடனாளர் அதே பொருட்களை மற்றொருமுறை பற்றுப்பொறுப்புச் செய்ய முடியாது.

3. பொருட்கள் வங்கியின் பொறுப்பில் இருப்பதால் சரக்கிருப்பினை மாற்ற முடியாது.

4. அடகு பெற்ற பொருட்களுக்கு இழப்பு அல்லது நட்டம் ஏற்பட்டால் வங்கி அவற்றைக் காப்பீட்டுக் கழகத்திலிருந்து ஈடு செய்துவிடும்.

### அடகு பெற்றவர் என்ற முறையில் வங்கியின் கடமைகள்

1. அடகு பெற்றவர் தனக்கு வரவேண்டிய கடன், அத்தொகைக்கான வட்டி, அப்பொருளைப் பாதுகாக்க ஏற்படும் செலவுகள் ஆகியவற்றைக் கடனாளியிடமிருந்து பெறும்வரை அடகு பெற்ற பொருட்களை நிறுத்தி வைத்துக் கொள்ளலாம்.

2. ஒரு குறிப்பிட்ட கடனுக்காக அடகுபெற்ற பொருளை அந்தக் கடனுக்கு எதிராக மட்டுமே நிறுத்தி வைக்க முடியும். மற்ற கடன்களுக்கு அந்தப் பொருட்களை நிறுத்தி வைக்க முடியாது.

3. அடகுப் பொருட்களைப் பாதுகாக்க வழக்கத்திற்கு அதிகமாகச் செலவு செய்தால், அடகு பெற்றவர் அந்தச் செலவுகளைப் பெற உரிமை உண்டு.

4. கடனாளி உரிய காலத்தில் தான் பெற்ற கடனைத் திருப்பித் தரவில்லையெனில், வங்கியர், கடனாளி மீது கடன் தொகைக்காக வழக்குத் தொடரலாம் அல்லது அடகு பெற்ற பொருட்களைத் தகுந்த அறிவிப்புக்குப் பின் விற்று தனக்கு வரவேண்டிய தொகையை எடுத்துக் கொள்ளலாம். அப்பொருட்களை விற்ற தொகை, கடனுக்குப் போதவில்லை யென்றால் குறைந்த தொகையைக் கடனாளியிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். அதிகத் தொகையிருந்தால் கடனாளியிடம் திருப்பித்தர வேண்டும்.

5. அடகு கொடுத்தவர், பொருட்களிலுள்ள குறைகளை வெளிப்படுத்தாமலிருந்து அதனால் வங்கியருக்கு நட்ட மேற்பட்டால் அவர் அந்த நட்டத்தை ஏற்க வேண்டும்.

### அடகு பெற்றவரின் கடமைகள்

1. ஒரு விவேகமான மனிதன் தன்னுடைய பொருட்களைப் பாதுகாக்க எந்தவித அக்கறை எடுத்துக் கொள்வானோ

அந்த அளவு அடகு பெற்றவர் அடகுப் பொருட்களைப் பாதுகாக்க வேண்டும்.

2. அடகு பெற்றவர் மற்றும் அடகு தருபவர் இருவருக்கும் ஏற்பட்ட உடன்பாட்டின்படி அடகு பெற்றவர் பொருட்களைப் பயன்படுத்தலாம். அனுமதிக்கப்படாத செயல்களுக்குப் பொருளைப் பயன்படுத்தினால், அடகு கொடுத்தவர் ஒப்பந்தத்தை ரத்து செய்யலாம். மேலும் தேவையானால், நட்ட ஈடு கோரலாம்.

3. கடனாளி தான் பெற்ற கடனைத் திருப்பித்தந்த உடன் அடகு பெற்றவர் அடகுப்பொருளை ஒப்படைக்க வேண்டும்.

4. சரியான நேரத்தில் பொருட்களை ஒப்படைக்காததால் ஏற்படும் நட்டம், சரக்கிழப்பு மேலும் சரக்கில் சீர்கேடு ஆகியவற்றிற்கு அடகு பெற்றவர் பொறுப்பு ஏற்க வேண்டும்.

5. ஒப்படைப்பு பெற்ற பொருட்களில் இலாபம் ஏதேனும் ஏற்பட்டால் அவற்றை அடகு கொடுத்தவரிடம் ஒப்படைக்க வேண்டும்.

## அடைமானம்

நிலம், மேலும் கட்டடம் போன்ற அசையாச் சொத்துக்கள் மீது பற்றுப் பொறுப்பை ஏற்படுத்தும் முறை அடைமானம் எனப்படும். சொத்துரிமை மாற்றுச்சட்டம், 1882, பிரிவு 58 அடைமானத்தை வரையறுக்கிறது.

"முன்பு கொடுத்த கடனுக்கு அல்லது கொடுக்கவிருக்கும் கடனுக்கு அல்லது தற்போது அல்லது எதிர்காலத்தில் ஏற்படும் கடனுக்குப் பணம் பெறவும் அல்லது ஒரு செயலை நிறைவேற்றுவதால் ஏற்படும் பணம் சம்பந்தப்பட்ட பொறுப்புக்களுக்காக அசையாச் சொத்திலுள்ள ஓர் உரிமையை மாற்றம் செய்வது அடைமானம்".

மேலே குறிப்பிட்டுள்ள வரையறை அடைமானத்தின் தன்மைகளைப் பின்வருமாறு விளக்குகிறது.

1. அடைமானம் அசையாச் சொத்துக்கள் மீது மட்டுமே ஏற்படுத்தப்படுகிறது. நிலம், நிலத்திலுள்ள மரங்கள் போன்றவை, கட்டடங்கள், இயந்திரங்கள் போன்றவை அசையாச் சொத்துக்கள் ஆகும். பூமியில் நிலையாகப் பதிக்கப்படாத மேலும் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றக்கூடிய இயந்திரங்கள் அசையாச் சொத்துக்கள் எனக் கருதுவதில்லை.

2. ஒரு அசையாச் சொத்திலுள்ள உரிமை மாற்றப்பட வேண்டும். அதாவது, சொத்தின் உரிமையாளர் சில உரிமைகளைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டு சிலவற்றை மாற்றித் தருகிறார்.

3. அடைமானச் சொத்து குறிப்பிட்ட ஒன்றாகயிருக்க வேண்டும். அது எல்லைகள், அளவு முதலியவற்றால் எளிதில் அறியப்படத் தக்கதாக இருக்க வேண்டும்.

4. அடைமானத்தின் நோக்கம் கடன் பெறுவதற்காகவோ அல்லது ஒரு ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதற்காகவோ இருத்தல் வேண்டும். சொத்துக்களை வேறு நோக்கங்களுக்காகக் கொடுத்தால் அது அடைமானம் ஆகாது. எடுத்துக்காட்டாக, பழைய கடனைத் தீர்ப்பதற்காகச் சொத்தினைக் கொடுத்தால் அது அடைமானம் ஆகாது.

5. அடைமானம் கொடுக்கப்பட்ட சொத்துக்கள் கடனாளியின் பொறுப்பில் இருக்கும்.

6. கடனைத் திருப்பித் தந்த உடன் சொத்திலுள்ள உரிமைகள் அடைமானம் தந்தவருக்குத் திருப்பப்படுகிறது.

7. கடனைத் திருப்பித்தராவிட்டால் அடைமானம் பெற்றவர் சொத்தை விற்று கடன் தொகையைப் பெறலாம்.

## அடைமானத்தின் வகைகள் (Kinds of Mortgages)

சொத்துரிமை மாற்றுச் சட்டம், 1882, பிரிவு 58, ஆறு வகையான அடைமானத்தைக் கூறுகிறது.

அ. சாதாரண அடைமானம் (Simple Mortgage)

ஆ. நிபந்தனைக்குட்பட்ட விற்பனை முறை (Mortgatge by Conditional Sale)

இ. ஒத்தி (Usufructuary Mortgage)

ஈ. ஆங்கில அடைமானம் (English Mortgage)

உ. தகைமை அடைமானம் (Mortgage by deposit of Title Deeds)

ஊ. முறைப்படி அமையாத அடைமானம் (Anomalous Mortgage)

## சாதாரண அடைமானம்

இவ்வகை அடைமானத்தில் சொத்துக்கள் கடனாளியின் பொறுப்பில் இருக்கும். சொத்துரிமை கடனீந்தோருக்கு மாற்றப்படுவதில்லை. ஆனால், கடனாளி பெற்ற கடனுக்கு தான் தனிப்பட்ட முறையில் பொறுப்பு என்று தன்னையே கட்டுப்படுத்துகிறார். அதாவது கடனைத் திருப்பிச் செலுத்தத் தவறினால் அடைமானம் பெறுபவர் அடைமானச் சொத்தை விற்பனைக்கு உட்படுத்தி மேலும் விற்ற தொகையைக் கடனுக்கு நேர்செய்யலாம். அடைமானம் பெறுவர் தானே சொத்தினை விற்க உரிமையில்லை. அவர், பொருட்களை விற்க நீதிமன்றத்தில் விண்ணப்பிக்கலாம். பொருட்களை விற்று வந்த பணம் கடன் தொகையை விடக் குறைவாக இருந்தால், கடன் பெற்றவர், மீதித் தொகையைப் பெற வழக்குத் தொடரலாம்.

கடன் கொடுத்தவருக்குச் சொத்துரிமை மாற்றப்படாததால் இவ்வகை அடைமானம் உடைமை பெறா அடைமானம் எனவும் அழைக்கப்படுகிறது.

## நிபந்தனைக்குட்பட்ட விற்பனை அடைமானம்

இம்முறையில் அடைமானம் தருபவர், அடைமானச் சொத்தினை அடைமானம் பெறுபவருக்குப் பின்வரும் நிபந்தனைக்களுக்கு உட்பட்டு விற்பனை செய்கிறார்.

1. கடனை செலுத்தியவுடன் விற்பனை செல்லாததாகிவிடும்.
2. கடனைச் செலுத்தியவுடன் அடைமானச் சொத்துக்களின் உரிமை அடைமானம் தந்தவருக்கு மாற்றப்படும்.
3. குறிப்பிட்ட காலத்தில் கடனைச் செலுத்தாவிடில் விற்பனை முழுமை பெற்றதாகும்.

விற்பனை செய்யப்பட்ட சொத்து கடனுக்குப் பிணையாகக் கருதப்படுகிறது. ஆகவே, அடைமானம் தருபவருக்குக் கடனைத் திருப்பியவுடன் சொத்தினைத் திரும்பப் பெற உரிமை உண்டு.

அடைமானம் பெற்றவர்க்குச் சொத்தினைத் தானே விற்கும் உரிமை இல்லை. அவர், அடைமானம் தந்தவருக்குச் சொத்தைத் திரும்பப் பெறும் உரிமையில்லை என அறிவிக்கும்படி வழக்குத் தொடரமுடியும். இந்த உரிமை, கடனைத் திரும்பித்தரும் காலம் முடிந்தபின் மேலும், அடைமானம் தந்தவர் சொத்தினைத் திரும்பப் பெறும் உரிமையை நிலைநாட்டாத போது மட்டுமே உண்டு.

## ஒத்தி

இவ்வகை அடைமானத்தில், சொத்துக்களின் உடைமை கடனீந்தோரிடம் கொடுக்கப்படுகிறது. கடனாளி தான் பெற்ற கடனைத் திருப்பித் தரும்வரை அச்சொத்துக்கள் கடனீந்தோர் வசமே இருக்கும் அச்சொத்துக்கள் மூலம் கிடைக்கும் வாடகை

போன்ற வருமானத்தைக் கடனாளி பெற்ற அசல் அல்லது அதற்கான வட்டிக்கு ஈடுகட்டுவார். இம்முறையினால் கடன் தொகை குறைய வாய்ப்புண்டு.

அடைமானச் சொத்தை விற்கவோ அல்லது விற்பனையாக உறுதி செய்யக் கூறி வழக்குத் தொடரவோ, அடைமானம் பெற்றவருக்கு உரிமையில்லை. அவர், அடைமானம் பெற்ற சொத்தைத் தம் உடைமையிலே வைத்துக் கொண்டு அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தைத் தனக்கு சேரவேண்டிய மொத்தத் தொகைக்கும் சரிக்கட்டிக் கொள்ளமுடியும்.

இத்தகைய அடைமானம் ஏற்படுத்தும்போது கடனைத் திருப்பித்தரக் காலம் எதுவும் குறிப்பிடப்படாததால், கடனாளி நீண்ட காலத்திற்குத் திருப்பிச் செலுத்துவதில்லை.

**ஆங்கில முறை அடைமானம்**

அடைமானம் தருபவர், அடைமானச் சொத்தை முற்றிலும் அடைமானம் பெறுபவருக்கு ஒரு நிபந்தனையுடன் மாற்றித் தருகிறார். ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் கடனைத் திருப்பித் தந்துவிட்டால் சொத்துரிமை அடைமானம் தருபவருக்கு மாற்றம் செய்யப்பட வேண்டும் என்பது தான் நிபந்தனை. மேலும் குறிப்பிட்ட காலத்திற்குள் கடனைத் திருப்பித்தரக் கடனாளி தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார்.

இம்முறையில் சொத்துக்கள் கடனாளியின் பொறுப்பிலேயே இருக்கும். உரிய காலத்தில் கடனாளி பணத்தைத் திருப்பித் தரத் தவறினால், கடனீந்தோர் நீதிமன்ற அனுமதியின்றிச் சொத்துக்களின் உரிமையைப் பெறமுடியும்.

**தகைமை அடைமானம்**

தகைமை அடைமானத்தில் கடன்பெற்றவர் சொத்துக்களின் ஆவணங்களை கடனீந்தோர் அல்லது அவரது முகவரிடம்

ஒப்படைக்கிறார். ஆவணங்கள் கடனுக்குப் பிணையமாகக் கொடுக்கப்படுகிறது. இவ்வகை அடைமானத்தைப் பதிவு செய்யத் தேவையில்லை. இத்தகைய அடைமானம் கல்கத்தா, மும்பை, சென்னை மேலும் அரசிதழில் அங்கீகரிக்கப்பட்ட நகரங்களில் மட்டுமே ஏற்படுத்த முடியும்.

**முறைப்படி அமையாத அடைமானம்**

மேலே குறிபபிட்டுள்ள ஐந்துவகை அடைமானத்திற்குள் அமையாத அடைமானம் முறைப்படியமையாத அடைமானம் எனப்படும். இவை அடைமானம் தருபவர் மேலும் பெறுபவரின் நிபந்தனைகளின்படி ஏற்படுத்தப்படுகிறது. பொதுவாக இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட அடைமானங்களின் சேர்க்கையாக இது அமைகிறது. மேலும் அந்தந்த இடங்களிலுள்ள வழக்கப்படி அல்லது மரபுப்படி இம்முறை அடைமானம் ஏற்படலாம்.

**சட்டமுறை அடைமானம் மேலும் தகைமை அடைமானம் (Legal Mortgage and Equitable Mortgage)**

அடைமானச் சொத்துரிமை மாற்ற அடிப்படையில் அடைமானம் இருவகையாக பிரிக்கப்படும்.

1. சட்டமுறை அடைமானம்

2. தகைமை அடைமானம்

**சட்டமுறை அடைமானம்**

சட்டமுறை அடைமானத்தில் சொத்துக்களின் மீதான சட்டப்பூர்வ உரிமைகள் அடைமானம் பெறுபவருக்கு ஒரு பத்திரம் மூலம் மாற்றிக் கொடுக்கப்படுகிறது. அடைமானத் தொகை ரூ.100 அல்லது அதற்கு மேலாக இருக்குமேயானால் பத்திரத்தைப் பதிவு செய்வதன் மூலம் இவ்வகை அடைமானம் ஏற்படுத்தப் படுகிறது. கடன் தொகையைத் திருப்பிச் செலுத்திய உடன் சட்டப்பூர்வ உரிமைகள் அடைமானம் தந்தவருக்கு மாற்றப்படும்.

இம்முறையில் பதிவு செய்தல் மேலும், முத்திரைத்தாள் செலவு ஏற்படுவதால் இது ஒரு செலவு அதிகமான முறையாகும்.

**தகைமை அடைமானம்**

சொத்துக்குரிய பத்திரங்களை அடைமானம் பெறுபவரிடம் ஒப்படைப்பதால் தகைமை அடைமானம் ஏற்படுகிறது. கடனைத் திருப்பித் தராதபோது அல்லது கேட்கும்போது சட்டமுறை அடைமானம் ஏற்படுத்தித் தருவதாக ஒரு அமைப்புப் பத்திரம் மூலம் அடைமானம் தருபவர் உறுதியளிக்கிறார்.

**முக்கியத் தன்மைகள்**

தகைமை அடைமானத்தில் மூன்று அடிப்படைத் தன்மைகள் உள்ளன.

1. அ) கடன் இருத்தல் அவசியம்.

   ஆ) உரிமைப் பத்திரம் ஒப்படைக்க வேண்டும்.

   இ) பத்திரங்களை ஒப்படைப்பதின் நோக்கம் கடனுக்குப் பிணையங்களை ஏற்படுத்துவதாக இருக்க வேண்டும்.

2. பிணையங்களைப் பதிவு செய்தல் அவசியமில்லை.

3. சொத்துரிமை மாற்றச்சட்டம், பிரிவு 58 (ஊ)ன்படி தகைமை அடைமானம் சென்னை, மும்பை மற்றும் கல்கத்தா ஆகிய நகரங்களில் மட்டுமே ஏற்படுத்த முடியும்.

*சுலோச்சனா மேலும் மற்றவர் எதிராக பாண்டியன் வங்கி*

(Sulochana and other Vs Pandyan Bank)

சொத்துரிமை மாற்றுச் சட்டம், பிரிவு 58 (ஊ)ல் மேலே குறிப்பிட்ட நகரங்கள் ஏதேனும் ஒன்றில்

'கடனாளி அவரே நேரில் பத்திரங்களை ஒப்படைக்கத் தேவையில்லை' என்று இவ்வழக்கில் முடிவு செய்யப்பட்டது. 'பத்திரங்களைக் குறிப்பிட்டுள்ள நகரங்களில் ஒப்படைக்கும் நோக்கமிருந்து அவை கடனாளியின் முகவர் மூலமாகவோ அல்லது கடனீந்தோரின் முகவர் மூலமாகவோ அனுப்பப்பட்டால் குறிப்பிடப்பட்ட நகரங்களில் ஒப்படைக்கப்பட்டதாகவே கருதப்படும்' எனவும் முடிவு செய்யப்பட்டது.

4. அடைமானம் செய்தவர் கடனைக் கொடுக்கத் தவறினால் அடைமானம் பெறுவர் தகைமை அடைமானத்தைச் சட்டமுறை அடைமானமாக மாற்றித்தர நீதிமன்றத்தில் விண்ணப்பிக்கலாம்.

5. கடன் தொகையைத் தந்தவுடன் பத்திரங்கள் அடைமானம் தருபவரிடம் தரப்படும்.

## நன்மைகள்

1. பத்திரங்களைப் பதிவு செய்யத் தேவையில்லை. ஆகவே செலவு அதிகமில்லை.

2. மிகக் குறைந்த வழிமுறைகளே உள்ளதால் மிக எளிதில் ஏற்படுத்தலாம்.

3. இவ்வகை அடைமானம் பற்றிய செய்திகள் கடனாளிக்கும் கடனீந்தோருக்கு மட்டுமே தெரியும். ஆகவே, கடனாளியின் நன்மதிப்புப் பாதிக்கப்படுவதில்லை.

## குறைபாடுகள்

1. கடனாளி கடன் தொகையைத் தராத நிலையில், அடைமானம் பெறுபவர், சொத்தை விற்க நீதிமன்ற ஆணைபெற வேண்டும். நீதிமன்ற ஆணை பெறுவதில் அதிகச் செலவும், நேரமும் வீணாகும்.

2. மற்றொரு நபர் பெயரில் சட்டமுறை அடைமானம் ஏற்படுத்தும் வாய்ப்புள்ளது. அடைமானம் பெற்றவர் பிணையங்களைக் குறுகிய காலத்திற்குக் கொடுத்தாலும், கடனாளி அதே சொத்துக்கள் மீது சட்டமுறை அடைமானம் ஏற்படுத்தலாம். அந்த நிலையில் இரண்டாவது அடைமானம் பெற்றவர் தகைமை அடைமானம் பெற்றவரை விட முன்னுரிமை பெறுகிறார்.

**பெந்தகம்**

அசையும் பொருட்கள் மீது ஏற்படுத்தப்படும் பற்றுப் பொறுப்பு பெந்தகம் எனப்படும். இம்முறையில் அசையும் பொருட்கள் போன்ற சரக்குகள், முற்றுப் பெறாப் பொருட்கள், மூலப் பொருட்கள் மீது பெந்தகம் ஏற்படுத்தப்படுகிறது.

ஹார்ட் என்பவர் பெந்தகத்திற்குப் பின்வரும் வரையறை தருகிறார் :

"ஒரு தொகைக்காகக் கடனீந்தோருக்கு, உரிமையோ அல்லது உடைமையோ மாற்றப்படாத, சொத்துக்கள் மீது ஏற்படுத்தப்படும் பற்றுப் பொறுப்பு".

ஹார்ட் என்பவரின் கருத்துப்படி சொத்தின் உடைமை மாற்றப்படாமல், கடனுக்காக வழங்கப்படும் பிணையம் பெந்தகம் ஆகும். சரக்குகள், கடன் பெற்றவர் வசம் இருக்கும். ஆனால் ஒரு பெந்தக உடன்பாட்டின்படி பொருட்களின் உடைமையைத் தேவைப்பட்டபோது மாற்றித்தர அவர் உறுதி அளிக்கிறார். ஆகவே பெந்தகம், அடகின் ஒரு பரிமாணமே ஆகும்.

சில தொழில்களுக்குப் பெந்தகம், கடன் பெற வசதியான முறையாகும். உற்பத்தித் தொழில்களுக்கு மூலப் பொருட்கள் அன்றாடம் தேவைப்படும். அவைகளை அடகாகத் தர முடியாது. பெந்தகம் மூலமாக, நிறுவனம் கடன் பெற முடிகிறது. அதே சமயம் உற்பத்தியைத் தொடர்ந்து செய்ய முடிகிறது. சரக்குக்

கிடங்கில் உள்ள பொருட்களுக்கு மேலும், மோட்டார் வாகனங்களுக்கு கடன்பெற இது எளிதான முறையாகும்.

பொருட்களின் உடைமை கடன் பெற்றவரிடம் இருப்பதால், பெந்தக முறையில் கடன் அளிப்பது பிணையற்ற கடனுக்கு இணையாகும். கடனைத் திருப்பித் தராத போதும் அல்லது உடைமையை மாற்றித் தர மறுக்கும் போதும் வங்கியருக்குப் பல சிரமங்கள் உள்ளன. கடன் தொகையைப் பெற வங்கியர் வழக்குத் தொடர வேண்டியதிருக்கும். ஆகவே, இத்தகைய முறையில் நல்ல நிதிநிலைமையும், நன்மதிப்பும் மேலும், நற்குணமும் உள்ள வாடிக்கையருக்கே கடன் வழங்கப்படுகிறது.

பெந்தக முறையில் கடன் வழங்குமுன் வங்கியர் பின்வரும் முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் :

1. சரக்கின் தரம் மேலும், அளவு ஆகியவற்றை உறுதி செய்யும் சரக்கிருப்பு அறிக்கையைத் தகுந்த இடைவெளியில் கடன் வாங்கியவரிடமிருந்து பெறவேண்டும்.

2. சரக்கிருப்பு அறிக்கையின் அடிப்படையில், வங்கியர், சரக்கிருப்பையும் மேலும் கணக்குப் புத்தகத்தையும் கண்காணிக்க வேண்டும்.

3. "அதே சரக்கினை வேறு வங்கியில் பிணையமாகக் கொடுக்கவில்லை" என்ற உறுதி மொழியை எழுத்துமூலம் பெற வேண்டும்.

4. எல்லாச் சூழ்நிலைகளிலும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வங்கியர், "பல சரத்துக்கள் கொண்ட பெந்தகக் கடிதம்" ஒன்று பெற வேண்டும்.

5. சரக்குகளைக் காப்பீடு செய்து, காப்பீட்டுப் பத்திரத்தை வங்கியர் பெயருக்குப் புறக்குறியீடு செய்து மேலும், வங்கியருக்கு உரிமை மாற்றம் செய்து பெற வேண்டும்.

6. சரக்குகள் வைத்திருக்குமிடத்தில் "சரக்கிருப்பு 'x' வங்கிக்குப் பெந்தகம் செய்யப்பட்டது" என்ற பெயர்ப் பலகை வைக்க வேண்டும்.

7. கூட்டுப்பங்கு நிறுவனத்திற்குப் பெந்தக முறையில் கடன் கொடுத்தால், கொடுத்த கடனை கூட்டுப்பங்கு நிரும பதிவாளரிடம், பற்றுப் பொறுப்பினை ஏற்படுத்திய 30 நாட்களுக்குள் பதிவு செய்ய வேண்டும்.

# பிணையற்ற கடன்
## (Unsecured Advances)

### பொறுப்புறுதிக் கடன் (Advances against Guarantee)

பொதுவாகக் கடன்கள் பிணையங்களுக்கு எதிராகவே கொடுக்கப்படுகின்றன. வாடிக்கையாளரிடம் போதுமான பிணையங்கள் இல்லையெனில் அவர் மூன்றாம் நபரின் உத்திரவாதத்தின் பெயரில் கடன் பெறலாம். அந்த மூன்றாம் நபர் கடன் பெற்றவர் கடனைத் திருப்பித்தராத நிலையில் தானே கடனைத் திருப்பித்தரச் சொந்த உறுதி தருகிறார். அந்த உறுதி பிணையமாக வங்கியரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

கடனாளி பெற்ற அல்லது பெறப்போகிற கடனுக்காக ஒரு மூன்றாம் நபர் கொடுக்கும் உறுதி பொறுப்புறுதி அல்லது உத்திரவாதம் எனப்படும். பொறுப்புறுதி கொடுப்பவர் பொறுப்புறுதியாளர் அல்லது பிணையாள் எனப்படுவார். யாருக்காகப் பொறுப்புறுதி கொடுக்கப்பட்டதோ, அவர் முதன்மைக் கடனாளி ஆவார். எவரிடம் பொறுப்புறுதி தரப்படுகிறதோ, அவர் கடனீந்தோர் ஆவார்.

இந்திய ஒப்பந்தச் சட்டம், 1872, பிரிவு 126 பொறுப்புறுதி ஒப்பந்தத்திற்குப் பின்வரும் வரையறை தருகிறது.

"ஒரு நபர் தன்னுடைய வாக்குறுதியை அல்லது பொறுப்பினை நிறைவேற்றாத போது அதை நிறைவேற்ற அல்லது அவரைப் பொறுப்பிலிருந்து விடுவிக்க ஏற்படும் ஒரு ஒப்பந்தம்".

முதன்மைக் கடனாளி கடனைத் தராதபோது, பொறுப்புறுதியாளர் பொறுப்பாகிறார் என்பதே பொறுப்புறுதி ஒப்பந்தத்தின் தன்மையாகும்.

முதன்மைக் கடனாளியின் பொறுப்பு முதன்மையானது ஆகும். உத்திரவாதமளித்தவரின் பொறுப்பு இரண்டாவதாகும்.

பொறுப்புறுதி ஒப்பந்தம் எழுத்து வழியாகவோ அல்லது வாய்வழியாகவோ ஏற்படுத்தலாம்.

## பொறுப்புறுதியின் வகைகள்

பொறுப்புறுதி இருவகைப்படும்.

1. குறிப்பிட்ட பொறுப்புறுதி
2. தொடர் பொறுப்புறுதி

### 1. குறிப்பிட்ட பொறுப்புறுதி

ஒரு குறிப்பிட்ட நடவடிக்கைக்கு மட்டுமே தரும் பொறுப்புறுதி குறிப்பிட்ட பொறுப்புறுதி எனப்படுகிறது. எடுத்துக்காட்டாக அன்பு என்பவர் ரூ.10,000 ஸ்டேட் வங்கியிலிருந்து கடன் பெறுகிறார். அதற்கு ஆனந்த் என்பவர் உத்திரவாதம் தருகிறார். ஆனந்த் என்பவர் ரூ.10,000க்கு மட்டுமே பொறுப்பாகிறார். அத்தொகை கொடுக்கப்பட்டவுடன் உத்திரவாதம் முற்றுப்பெறும். இத்தகைய உத்திரவாதத்தை கடனைக் கொடுக்கும் வரை திரும்பப் பெற முடியாது.

### 2. தொடர் பொறுப்புறுதி

ஒரு குறிப்பிட்ட நடவடிக்கைக்கு மட்டுமில்லாமல் தொடர்ந்து பல நடவடிக்கைகளுக்குக் கொடுக்கப்படும் உத்திரவாதம் தொடர் உத்திரவாதம் எனப்படும். இம்முறையில் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு உத்திரவாதம் அளிக்கப்படுகிறது. காலம் ஏதும் நிர்ணயிக்கப்படுவதில்லை. எடுத்துக்காட்டாக அன்பு என்பவர் ஆனந்த் என்பவருக்கு ரூ.50,000 கடனுக்கு வங்கி ஒன்றில் தொடர் உத்திரவாதம் அளிக்கிறார். ஆனந்த், ரூ.50,000 வரை எத்தனைத் தடவைகளும் கடன் பெறலாம், திரும்பவும் அடைக்கலாம். கடனாளி தாம் பெற்ற கடனைத் திருப்பித்தர வில்லையெனில், பொறுப்புறுதியளித்தவர், தாம் ஒப்புக் கொண்ட

தொகை அல்லது கடனாளி தரவேண்டிய தொகை ஆகியவற்றில் எது குறைவோ அதற்குப் பொறுப்பாவார்.

இவ்வகை உத்திரவாதத்தில் பொறுப்புறுதி அளிப்பவர் முன்தகவல் கொடுப்பதன் மூலம் எப்பொழுது வேண்டுமானாலும் முடிவடையச் செய்யலாம். எதிர் காலத்தில் நடைபெறும் நடவடிக்கைகளுக்கு அவர் பொறுப்பாக மாட்டார். ஆனால் முன்பு ஏற்பட்ட நடவடிக்கைகள் அவரைக் கட்டுப்படுத்தும்.

**நன்மைகள்**

உத்திரவாதத்தைப் பிணையமாக ஏற்பதில் பல நன்மைகள் உள்ளன.

1. பொறுப்புறுதியை எளிதில் பெற முடியும்.
2. முதன்மைக் கடனாளி திருப்பித்தரத் தவறியபோது, பொறுப்புறுதி அளித்தவரை வற்புறுத்த முடியும்.
3. பிணையத்தின் மதிப்பு மாறுபடாது.
4. சரக்கிணை இருப்பு வைத்தல், பாதுகாத்தல் போன்ற பொறுப்புக்கள் கிடையாது.
5. பிணையத்தைப் பெறும் வழிமுறைகள் மிகவும் எளிது.

பொறுப்புறுதி அளிப்பவர் சில படிவங்களில் கையெழுத்திடுவதன் மூலம் பொறுப்புறுதி ஒப்பந்தம் ஏற்படுகிறது.

**குறைபாடுகள்**

1. பிணையத்தின் மதிப்பு, உத்திரவாதம் தந்தவரின் நிதி நிலைமையைப் பொறுத்து அமைகிறது. பிணையாளர் நொடித்தவரானால் பிணையம் மதிப்பிழக்கிறது.
2. உத்திரவாதம் தந்தவரின் பொறுப்புச் சரியாக வரையறை செய்யப்படவில்லையெனில், அவர் பல வழிகளில் பொறுப்பிலிருந்து விடுபடலாம்.

## முன்னெச்சரிக்கைகள்

பொறுப்புறுதியை ஏற்குமுன் வங்கியர், பின்வரும் முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

### 1. பிணையாளரின் திருப்பித்தரும் திறனை அறிதல் வேண்டும்

பொறுப்புறுதியைப் பிணையமாகப் பெறும்போது வங்கியர், பிணையாளரின் நிதி நிலையை விசாரித்து அறிய வேண்டும். பிணையாளர் அதே வங்கியின் வாடிக்கையாளராக இருந்தால் சிரமம் ஏதுமில்லை. இல்லையெனில், வங்கியர் தீர விசாரிக்க வேண்டும். பெறப்பட்ட தகவல்களின் அடிப்படையில் 'பிணையம் ஏற்புடையதா' என முடிவு செய்ய வேண்டும்.

### 2. ஒப்பந்தத் தகுதி

பிணையாளர் ஒப்பந்தம் செய்யத் தகுதியானவரா என அறிய வேண்டும். இளவல் மேலும், மனநிலை சரியில்லாதவர்கள் ஒப்பந்தம் செய்து கொள்ள தகுதியில்லாதவர்கள் ஆவர்.

#### கூட்டாண்மை

கூட்டாண்மை நிறுமத்தின் பெயரில் பொறுப்புறுதி தர ஒரு கூட்டாளிக்கு உள்ளார்ந்த அதிகாரம் இல்லை.

ஆனால், எல்லாக் கூட்டாளிகளின் அனுமதி பெற்ற ஒருவர் கொடுத்த உத்திரவாதம் கூட்டாண்மை நிறுவனத்திலுள்ள எல்லாக் கூட்டாளிகளையும் கட்டுப்படுத்தும். ஆகவே, ஒரு கூட்டாண்மை நிருமம் உத்திரவாதம் தரும்போது எல்லாக் கூட்டாளிகளும் இணைந்து நிறுவனத்தின் பெயரில் எழுதிக் கொடுத்த பொறுப்புறுதி ஒப்பந்தத்தைப் பெறவேண்டும்.

#### கூட்டுப்பங்கு நிறுமம்

ஒரு கூட்டுப்பங்கு நிறுவனம், பிணையாளராகத் தெரிவிக்கப்பட்டால், வங்கியர், நிறுவனத்திற்கு உத்திரவாதம்

தர அதிகாரம் இருக்கிறதா என அறிய அதன் அமைப்புப் பத்திரத்தை ஆராய வேண்டும். மேலும் பொறுட் புறுதி தர தீர்மானம் போடப்பட்டுள்ளதா என அறிய வேண்டும்.

### திருமணமான பெண்கள்

திருமணமான பெண்கள் பொறுப்புறுதி தர முன் வந்தால் வங்கியர் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். தன்னுடைய கணவர் பெறும் கடனுக்கு அவர் மனைவி உத்திரவாதம் அளிக்க முன் வந்தால் வங்கியர், அதிக கவனம் செலுத்தல் அவசியம். ஒரு உத்திரவாத ஒப்பந்தம் நடைமுறையில் இருக்கும் போதே அவர் தனது கணவரின் வற்புறுத்தலால் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதாக நிலை நிறுத்தலாம். ஆகவே, வங்கியர் ஒரு வழக்குரைஞர் சாட்சியுடன் ஒப்பந்தத்தை ஏற்படுத்த வேண்டும்.

## 3. பொறுப்புறுதி ஒப்பந்தத்தை நிறைவேற்றுதல்

பிணையாளரின் தகுதி மேலும் நிதிநிலைமை பற்றி மனநிறைவு அடைந்த பின், வங்கியர், ஒப்பந்த உத்திரவாதத்தை நிறைவேற்றுவர். ஒப்பந்தத்தை ஏற்படுத்துவது மிக எளிது. பொறுப்புறுதி தர முன்வருபவரை வங்கிக்கு வரவழைத்து, வங்கி அதிகாரி முன்னிலையில் கையெழுத்திடச் செய்ய வேண்டும். இதற்கென வங்கிகள் பொறுப்புறுதியின் பல சரத்துக்களைக் கொண்ட படிவங்களை வைத்திருக்கின்றன.

## 4. பொறுப்புறுதியாளரின் கேள்விகளுக்குப் பதிலளித்தல்

படிவத்தில் கையெழுத்திடுமுன், பிணையாளர் வாடிக்கையாளரின் வங்கிக் கணக்கின் தன்மையை அறிய விரும்பிக் கேள்விகள் கேட்கலாம். அப்போது வங்கியர் வாடிக்கையரின் முன்னிலையில் அவரது கணக்கின் நிலையை வெளிப்படுத்தலாம்.

வங்கியர் தன்னிச்சையாகத் தகவல் சொல்லும் கடமை இல்லை

பிணையாளருக்கு வங்கியர் தரும் பதில்கள் குறிப்பிட்ட

தாகவும், ஒளிவுமறைவு அற்றதாகவும் இருக்க வேண்டும். பிணையாளரிடம் அவரைப் பாதிக்கும் எந்த உண்மைகளையும் மறைக்கக்கூடாது.

**5. ஒப்பந்தத்தில் எந்த மாற்றமும் இருக்கக்கூடாது**

பிணையாளரின் இசைவு இல்லாமல் ஒப்பந்தத்தில் எந்த மாற்றமும் செய்யக்கூடாது. மாற்றம் செய்ய நேர்ந்தால், அவருடைய ஒப்புதலோடு செய்யமுடியும். மாற்றம் செய்த சரத்துக்களில் அவருடைய சுருக்கொப்பத்தைப் பெறுதல் வேண்டும். மேலும் ஒப்பந்தத்தின் பல சரத்துக்களையும் அதன் சம்பந்தப்பட்ட அர்த்தத்தையும் பிணையாளர் புரிந்து கொண்டார் என, வங்கியர் உறுதி செய்ய வேண்டும்.

**6. தொடர் பொறுப்புறுதிக்கு முன்னுரிமை**

வங்கியர் தொடர் பொறுப்புறுதிக்கு முன்னுரிமை தரவேண்டும். அது கிளேட்டன் விதி செயல்படுவதைத் தவிர்க்கும்.

**7. முதன்மைக் கடனாளியின் இறப்பு, நொடிப்பு, மேலும் பித்தநிலை அடைதல்**

கடன் பெற்றவர் இறந்தால் அவரது வங்கிக் கணக்கு முடிவுக்கு வந்துவிடும். ஆகவே பொறுப்புறுதி முடிந்துவிடுகிறது. வங்கியர் கடனாளியின் கணக்கை நிறுத்தி வைக்கவேண்டும். மேலும், பிணையாளரிடம் இது பற்றி தெரிவிக்க வேண்டும். வங்கியர் பிணையாளர் அல்லது இறந்தவரின் நிறைவேற்றாளரிடமிருந்து கடனை வசூலிக்க வேண்டும். வாடிக்கையர் நொடித்தாலும் பித்தநிலை அடைந்தாலும் மேற்சொன்ன முறை பின்பற்றப்பட வேண்டும்.

**8. பிணையாளர் இறப்பு, நொடிப்பு மேலும் பித்தநிலை அடைதல்**

பிணையாளர் மரணம் அடைந்த செய்தி கிடைத்தவுடன், வங்கியர் முதன்மைக் கடனாளியின் கணக்கை நிறுத்த வேண்டும்.

இறந்த பிணையாளர்களின் சட்டபூர்வச் சார்பாளரிடம், அவர் தந்த உத்திரவாதம் இருக்கிறது என்று தகவல் தரவேண்டும். "உத்திரவாதம் அளிப்பவர் நொடித்துவிட்டார் அல்லது பித்தநிலை அடைந்தார்" என்ற தகவல் கிடைத்தால், வங்கியர் மேலே சொன்ன வழிமுறையை பின்பற்ற வேண்டும்.

### 9. இணை-பிணையாளர்

சில நேரங்களில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் சேர்ந்து பொறுப்புறுதி அளிக்க முன்வரலாம். அவர்கள் இணை பிணையாளர் எனப்படுவர். இந்நேரங்களில் அவர்கள் தனித்தனியாகவும், ஒட்டு மொத்தமாகவும் கடனுக்குப் பிணையாளர்கள் ஆக்க வேண்டும். இதனால், வங்கியர் கடன் தொகையை எல்லோரிடமும் அல்லது யாராவது ஒருவரிடம் கேட்க முடியும்.

### 10. உடன்பாட்டில் மாறுதல்கள் கூடாது

வங்கியருக்கும் முதன்மைக் கடனாளிக்கும் ஏற்பட்ட உடன்பாட்டில் உள்ள நிபந்தனைகளில் எவ்வித மாறுதல்களும் செய்யக்கூடாது. உடன்பாட்டில் கருநிலைத் திருத்தங்கள் இருந்தால், அது பொறுப்புறுதியாளரை ஒப்பந்தத்திலிருந்து விடுவித்துவிடும்.

பின்வருவன கருநிலைத் திருத்தங்களுக்குச் சில எடுத்துக்காட்டுகள் :

அ) கடனாளிக்குக் கடனைத் திருப்பித்தர அதிகக்கால அவகாசம் தருவது.

ஆ) ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இணைப் பிணையாளர்களை விடுவிப்பது.

இ) பிணையாளரின் ஒப்புதல் இல்லாமல் கடனாளியின் பிணையங்களைக் கொடுப்பது.

## 11. கடனைத் திருப்பிக் கேட்டல்

உடன்பாட்டின்படி கடனாளி கடனைத் தரத் தவறினால் மட்டுமே, வங்கியர் பொறுப்புறுதியாளரிடம் கேட்கமுடியும். ஆகவே, வங்கியர் முதலில் கடனாளியிடம் கேட்க வேண்டும். அவர் தரவில்லையென்றால் பொறுப்புறுதியாளரை அவரது வாக்குறுதியை நிறைவேற்றச் சொல்லி கேட்க முடியும்.

### பிணையாளர் மீது வங்கியருக்குள்ள உரிமைகள்

1. கடனாளி தான் பெற்ற கடனைத் திருப்பித்தராத போது, வங்கியர் பிணையாளரின் பொருட்கள் அல்லது வங்கிக் கணக்கில் உள்ள இருப்பு மீது பற்றுரிமை செலுத்தலாம்.

2. கடன் தொகைக்கு மட்டுமல்லாமல் அதற்கான வட்டி மேலும், வசூலிக்கும் தொகை ஆகியவற்றிக்கும் பிணையாளர் பொறுப்பாகிறார். பிணையாளரின் பொறுப்பு முதன்மைக் கடனாளியின் பொறுப்புக்கு இணையானது.

3. பிணையாளர் இறந்தாலோ அல்லது திவாலானாலோ அவருடைய வாரிசுகளிடமிருந்து கடன் தொகையை வசூலிக்க வங்கியருக்கு உரிமை உண்டு.

4. கடனாளி கடனைத் திருப்பித் தராதபோது, பிணையாளர் மீது வழக்குத் தொடர வங்கியருக்கு உரிமை உண்டு.

### உத்திரவாதம் அளிப்பவருக்கு உள்ள உரிமைகள்

1. உத்திரவாதம் செயலில் இருக்கும்போது, பொறுப்புறுதியர், எந்த நேரமும் அவருடைய பொறுப்பினை வங்கியரிடம் கேட்கும் உரிமை உண்டு. கடன் தொகை, அதற்கான வட்டி போன்ற விபரங்களைக் கேட்கும் உரிமை அவருக்கு எப்பொழுதும் உண்டு.

2. பொறுப்புறுதியாளர் கடனை அடைத்தவுடன் அவர் கடனீந்தோர் ஆகிறார். வங்கியருக்கு உள்ள அனைத்து உரிமைகளும் அவரைச் சாரும். கடனாளி கொடுத்த பிணையங்கள் பிணையாளருக்கு உரிமையாகும். மேலும் அவர் கடனாளி பெற்ற கடனுக்காக வழக்குத் தொடர்ந்து அந்தத் தொகையைத் திரும்பப் பெறலாம்.

## மாற்றுச்சிட்டினைக் கழிவு செய்தல் (Discounting of Bills of Exchange)

வங்கியர் கடன் வழங்கும் முறைகளில் மாற்றுச்சிட்டினைக் கழிவு செய்து கடன் வழங்குதல் மிக முக்கியமானது. கழிவு செய்தல் என்பது, வங்கியர் பெயருக்கு மாற்றுச் சிட்டினை மாற்றிக்கொடுப்பதாகும். மாற்றுச்சிட்டினை உடையவர் கழிவு செய்வதன் மூலம் அதன் முதிர்வுக் காலத்திற்கு முன்பே பணம் பெறமுடிகிறது. இந்த நடவடிக்கைக்கு வங்கியர் ஒரு சிறிய தொகையைக் கழிவாகப் பெறுகிறார். மாற்றுச்சிட்டு முதிர்வடையாத காலத்திற்கு வட்டி மேலும் அதன் தொகையை வசூலிக்கும் செலவுகள் அனைத்தும் கட்டணமாகப் பெறப்படுகிறது. மாற்றுச் சிட்டினைக் கழிவு செய்யும் நபர் அதன்மீது உரிமைகளையும், கடமைகளையும் இழக்கிறார். வங்கியர் "மதிப்புக்காக உடையவர்" ஆகிறார். மேலும், மாற்றுச் சிட்டின் முழுமையான உரிமையை பெறுகிறார். அவர், அதை விரும்பும்படி கையாளலாம்.

### கழிவு செய்தலின் நன்மைகள்

1. மாற்றுச்சிட்டுக்கள் பொதுவாக மூன்று மாத காலத்திற்கு எழுதப்படுகின்றன. ஆகவே மாற்றுச் சிட்டுக்குக் கடன் அளிப்பது ஒரு நிச்சயமான காலத்திற்கேயாகும். இதனால், வங்கியர், தன்னிடமுள்ள நிதியை ஒரு காலம் முடிய மற்ற காலத்திற்கு மாற்றி முதலீடு தொடர்ச்சியாகச் செய்ய முடிகிறது.

2. மாற்றுச்சிட்டு முதிர்வடைந்தவுடன் வங்கியருக்குக் கொடுத்த கடன் தொகை கிடைத்துவிடும். மாற்றுச் சிட்டை ஏற்றவர் பணம்தர மறுத்தால், வங்கியர், தன்னுடைய வாடிக்கையாளரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். மேலும், இது செலாவணித் தன்மை கொண்டதால் மாற்றுச் சிட்டை ஏற்றுக் கொண்டவர் மீது வழக்குத் தொடர முடியும்.

3. வங்கியருக்கு அவசரகாலத்தில் பணம் தேவைப்பட்டால், கழிவு செய்த மாற்றுச்சிட்டுகளை ரிசர்வ் வங்கியிடம் மறுகழிவு செய்யலாம். ஆகவே, மாற்றுச்சிட்டுக்கள் ரொக்கத் தன்மை கொண்டவையாக இருக்கின்றன.

4. கடன் கொடுக்கும் போது வங்கியருக்கு வருமானம் வட்டியாக ஒரு குறிப்பிட்ட காலம் முடிந்தபின் தான் கிடைக்கும். மாற்றுச்சிட்டினைக் கழிவு செய்யும்போது, கழிவுத் தொகையை எடுத்துக் கொண்ட பின்னர் கடன் தொகை வழங்கப்படுகிறது. ஆகவே, இது ஒரு அதிக இலாபம் கிடைக்கும் முதலீடாகும்.

5. கட்டடம், நிலம், பங்குமாற்றகப் பத்திரங்கள் ஆகியவை மதிப்பு மாறும் தன்மை கொண்டவை. ஆனால் மாற்றுச்சீட்டின் மதிப்பு எப்பொழுதும் மாறுவதில்லை.

## முன்னெச்சரிக்கைகள்

1. மாற்றுச்சிட்டின் நபர்களான எழுதுபவர், ஏற்பவர், மேலும் புறக்குறிப்புச் செய்பவர் ஆகியோரது நிதிநிலைமை மற்றும் நாணயம் ஆகியவற்றை வங்கியர் நன்கு அறிந்திருக்க வேண்டும். அவர்கள் அனைவரும் தனது வாடிக்கையராக இருந்தால், வங்கியின் ஏடுகளிலிருந்து தேவையான தகவல்களைப் பெறமுடியும். ஏற்பவர் மேலும் புறக்குறிப்பு செய்பவர் மற்ற வங்கியில் கணக்கு வைத்திருந்தால், அவர்களைப் பற்றிய தகவல்களை விசாரித்து அறிய வேண்டும்.

உ. வாணிபத்தின் போது ஏற்படுத்தப்பட்ட உண்மையான மாற்றுச் சீட்டுக்களையே கழிவு செய்ய வேண்டும்.

3. பணவசதி மாற்றுச் சீட்டினைக் கழிவு செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

4. நீண்டகாலத்திற்கு எழுதிய மாற்றுச்சீட்டினை விடக் குறுகிய காலத்திற்கு எழுதப்பட்டவைகளுக்கு முன்னுரிமை தரவேண்டும். பொதுவாக ஆறு மாதங்களுக்கு மேல் எழுதிய மாற்றுச் சீட்டினைக் கழிவு செய்யக்கூடாது.

5. மாற்றுச்சீட்டில், ஏற்பு, புறக்குறிப்பு முதலியன சட்டத்தின் தேவைக்கேற்ப முறைப்படி இருக்கிறதா என அறிய வேண்டும். மாற்றுச்சீட்டு முறைப்படி அமைந்திருக்கிறது என்றால் மட்டுமே கழிவு செய்ய வேண்டும். மேலும் புறக்குறிப்பு ஏதும் இருப்பின் அது முழுமையானதா மேலும் முறைப்படி உள்ளதா என அறிய வேண்டும்.

6. மாற்றுச்சீட்டினைக் கழிவு செய்தல் வாடிக்கையருக்குச் செய்யும் ஒரு சேவை. ஆகவே, வாடிக்கையர் கொண்டுவரும் மாற்றுச்சீட்டினையே கழிவு செய்ய வேண்டும். மேலும் தொகையை ரொக்கமாகத் தராமல் வாடிக்கையரின் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

7 மாற்றுச்சீட்டு முதிர்வு நாளில் அவமதிக்கப்பட்டால், வங்கியர் பின்வரும் முறையினைப் பின்பற்ற வேண்டும்.

வாடிக்கையர் கணக்கில் போதுமான வரவிருப்பு இருந்தால், மாற்றுச்சீட்டின் தொகையைக் கணக்கில் பற்றெழுத வேண்டும். மேலும் மாற்றுச்சீட்டினை வாடிக்கையருக்கு அனுப்பவேண்டும். தொகை பற்றெழுதப்பட்டதைத் தெரிவிக்க வேண்டும்.

வாடிக்கையரின் கணக்கில் மாற்றுச்சீட்டின் போதுமான வரவிருப்பு இல்லையெனில், அவமதித்ததற்கான அறிவிப்பும் மேலும் கடன் தொகையைத் திரும்பச் சொல்லும் வேண்டுகோளும் வாடிக்கையருக்கும், சம்பந்தப்பட்ட நபர்களுக்கும் அனுப்ப வேண்டும். வங்கியர் மாற்றுச்சீட்டினைத் தம்மிடமே வைத்துக் கொள்ள வேண்டும். அறிவிப்பு அனுப்பப்பட வேண்டிய நபர் வங்கி செயல்படும் இடத்திலேயே வசித்தால், மாற்றுச்சீட்டு அவமதித்த அதே நாளில் அவர் அறிவிப்பைப் பெறும்படி அனுப்பவேண்டும். அவர் வேறு இடத்தில் வசித்தால் அவமதித்த அன்றே அறிவிப்பை அனுப்ப வேண்டும். இல்லாவிடில் வங்கியர் மாற்றுச்சீட்டு மீது தொகையைப் பெறும் உரிமையை இழப்பார்.

# 16

# கடன்களுக்கான பிணையங்கள்
## (Securities for Advances)

"ஒரு நம்பிக்கையான வாடிக்கையருக்கு, அவருக்குப் போதுமான அனுபவம் உள்ள தொழிலில், ஒரு உற்பத்தி நோக்கத்திற்கு மேலும் அந்தக் நோக்கத்திற்கு மட்டுமே கடனைப் பயன்படுத்துவோர் என்று அறிந்த பின், மேலும் கடனை காலத்தில் தொழிலின் வருமானத்தில் இருந்து அல்லது குறிப்பிட்ட தேதியில் முதிர்வாகும் ஆவணங்களிலிருந்த திருப்பித் தருவார் என்று தெரிந்து கொடுப்பது சீரிய கடனாகும்" - எல்.சி. மாதூர் மேற்கூறிய அடிப்படைத் தன்மைகள் மட்டுமின்றிக் கொடுத்த கடன் சில எதிர்பாராத சூழ்நிலைகளில் திரும்பி வருவது தடைப்படலாம் என்பதால், வங்கியர் தேவையான பிணையங்களைப் பாதுகாப்பிற்காகப் பெறுவது அவசியமாகிறது.

வங்கியர் வழங்கும் மொத்தக் கடனில் சுமார் 90 சதவீதக் கடன்கள், பலவகையான பிணையங்களை ஈடாகப் பெற்றே வழங்கப்படுகிறது. பிணையங்களின் மீது பற்றுப்பொறுப்பு ஏற்படுத்தப் படுவதால் அவை வங்கியருக்குப் பாதுகாப்பினை தருகிறது. கடன் திரும்ப வரவில்லையெனில், பெற்ற பிணையங்களை விற்றுக் கடன் தொகையை வசூல் செய்ய வங்கியர் உரிமை பெறுகின்றார். வங்கியரின் நிலைமை பாதுகாப்பாக இருந்தாலும், அவருடைய கவனமின்னையால் இழப்பு நேர வாய்ப்புண்டு. ஆகவே, பிணையக் கடன் வழங்கும்போது வங்கியர் சில கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க அறிவுறுத்தப்படுகிறது.

### பிணையத்தின் பொது விதிகள் (Principles of Sound Security)

**1. கடன் கேட்பவருக்குப் பிணையங்கள் மீது உரிமை (Validity of the title of the Borrower)**

பிணையங்களுக்கு எதிராக வாடிக்கையர் கடன்

கேட்கும்போது, வங்கியர், பிணையத்தின் மீது அவருக்குள்ள உரிமை செல்லத்தக்கதுதான் என உறுதி செய்ய வேண்டும். மேலும், தகுந்த ஆவணங்கள் மூலம் உரிமை வங்கியர் பெயருக்கு மாற்றப்படவேண்டும்.

**2. ரொக்கத் தன்மை (Liquidity)**

வாடிக்கையர் தரும் பிணையங்கள் எளிதில் நட்டமில்லாமல் விற்கக் கூடியதாக இருக்கவேண்டும். ஆகவே, ரொக்க மாற்றுத் தன்மையுள்ள உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள், மூலப்பொருள்கள், சரக்குகள் ஆகியவற்றைப் பிணையமாக ஏற்கலாம்.

**3. குறைபாடற்ற பிணையங்கள் (Free from Defects)**

பிணையங்களை ஏற்றுமுன், வங்கியர் அவை குறைபாடற்றவைகளா என அறிய வேண்டும். பகுதி செலுத்திய பங்குகள், விடுமதிப்பில்லாத ஆயுட் காப்பீட்டுப் பத்திரம் ஆகிய குறைபாடுள்ளள பிணையங்களை ஏற்கக்கூடாது.

**4. பத்திரமாக்கல் (Documentation)**

கடன் நிபந்தனைகள் மேலும், பிணையம் ஏற்றுக் கொண்ட நிபந்தனைகள் ஆகியவற்றை எழுதி அதில் கடன் பெறுபவரின் கையெழுத்தும் வாங்கப்பட வேண்டும். இதுபோன்று பெறப்படும் உடன்பாடு பத்திரமாக்கல் எனப்படும். இந்த உடன்பாடு வங்கியர் மற்றும் கடனாளியின் உரிமைகளையும் பொறுப்புக்களையும் குறிப்பிடுகிறது.

ஒவ்வொரு விதமான கடனுக்கும் வெவ்வேறு வகைப் பத்திரங்களைப் பெறவேண்டும். பத்திரம் பெறுவது பிணையத்தின் தன்மையைப் பொறுத்தது இருக்கிறது. வங்கியர் பொறுத்தமான பத்திரங்களைப் பெற்று அவைகளைச் சரியாக நிறைவேற்ற வேண்டும். கூட்டுப் பங்கு நிறுமக் கடன் பெற்றால், கூட்டுப்பங்கு நிறுமப் பதிவாளரிடம் பற்றுரிமை, பதிவு செய்யப்பட வேண்டும்.

பத்திரங்கள் பெறுவது சம்பந்தமாக எவ்வித விதிகளும் இல்லை. ஒவ்வொரு வங்கியும் அதனுடைய படிவங்களை வைத்திருக்கின்றன.

## 5. எச்சத்தொகை (Margin)

வாடிக்கையர் கொடுத்த பிணையத்தின் முழுமதிப்பின் அளவுக்கு வங்கியர் கடன் கொடுப்பதில்லை. அவர் அதன்மீது எச்சத் தொகை ஏற்படுத்துகிறார். எடுத்துக்காட்டாக, வாடிக்கையர் ரூ.50,000 மதிப்புள்ள கட்டடத்தைப் பிணையாகக் கொடுத்தால், வங்கியர் ரூ.25,000 மட்டுமே கடன் அனுமதிப்பார். அவர் கட்டடத்தின் மதிப்பில் 50 சதவீதம் மட்டுமே கடனாக வழங்க முனைகிறார். அதாவது அவர் 50 சதவீத எச்சத்தொகை ஏற்படுத்துகிறார்.

பின்வரும் காரணங்களுக்காக எச்சத்தொகை ஏற்படுத்தல் அவசியமாகிறது.

1. பிணையத்தின் மதிப்பு மாறுபடக் கூடியது. அதன் மதிப்புக் குறைந்தால், கடனின் ஒரு பகுதி பிணையமற்றதாகிறது. இதனால் சொத்தினை விற்றுக் கடன் தொகையை முழுமையாகப் பெறமுடியாது.

2. நாட்கள் செல்லச் செல்லக் கடன் மீது வட்டி அதிகரித்துக் கொண்டே போவதால், கடனாளி செலுத்த வேண்டிய பொறுப்பும் அதிகமாகிறது.

3. சொத்தின் விலை நிலையாக இருந்தாலும், தேய்மானம் மேலும் தரம் கெடுதல் ஆகியவற்றால் அதன் மதிப்புக் குறைகிறது. எடுத்துக்காட்டாகச் சரக்குகளின் தரம் கெடுவதும், கட்டடம், இயந்திரங்கள் ஆகியவற்றில் தேய்மானம் ஏற்படுவதும் இயல்பானதாகும்.

4. பிணையங்களின் மீது எச்சத்தொகை ஏற்படுத்துவது கடனாளியைக் கடனைத் தவறாது செலுத்தத் தூண்டுகிறது.

பிணையத்தின் தன்மையைப் பொறுத்தே எச்சத்தொகை ஏற்படுத்தப்படுகிறது. பிணையமாகத் தரப்பட்ட சொத்தின் தேவை நிரந்தமானதாகவும் அதன் மதிப்பு ஏறக்குறைய நிலையானதாகவும் இருந்தால், வங்கியர் குறைந்த எச்சத் தொகையை ஏற்படுத்துவர். எடுத்துக்காட்டாகத் தங்க நகைகளுக்கு 5 சதவீதம் முதல் 10 சதவீதம் எச்சத்தொகை மட்டுமே ஏற்படுத்தப்படுகிறது.

நிறுமங்கள் வெளியிடும் பங்குகளுக்குப் பத்திரங்களின் வகை மேலும் அதை வெளியிடும் நிறுவனத்தைப் பொறுத்தே எச்சத்தொகை நிர்ணயிக்கப்படுகிறது. பொதுவாக முன்னுரிமைப் பங்குகளுக்கு 25% மேலும் சாதாரணப் பங்குகளுக்கு 40 சதவீத எச்சத்தொகையும் ஏற்படுத்தப்படுகிறது.

அரசு வெளியிடும் பத்திரங்களுக்கு 5% முதல் 10% வரை எச்சத்தொகை போதுமானது. சரக்குகளுக்கு, அதன் தேவை மேலும் அதன் தன்மை எச்சத்தொகையை தீர்மானிக்கிறது. கோதுமை, பருத்தி போன்ற பொருள்களுக்குக் குறைவான எச்சத்தொகையும் மேலும் அழுகும் பொருள்களுக்கு அதிக எச்சத்தொகையும் ஏற்படுத்தப்படுகிறது.

ஆடம்பரப் பொருள்களின் விலையில் அதிக ஏற்ற இறக்கம் இருப்பதால், அதிக எச்சத்தொகை நிர்ணயிக்கப்படுகிறது.

ரிசர்வ் வங்கி அவ்வப்போது வெளியிடும் வழிகாட்டலுக்கு இணங்கி, வங்கிகள் எச்சத்தொகை நிர்ணயிக்கின்றன. கடைசியாக வாடிக்கையரின் நன்மதிப்பும் எச்சத்தொகையை நிர்ணயிக்கும் காரணியாகும்.

### 6. பிணையங்களை பணமாக்கல் (Realisation of Security)

குறிப்பிட்ட காலத்தில் கடனைத் திருப்பவில்லையெனில் வங்கியர் நியாயமான கால அவகாசத்திற்குத் தகவல் தந்த

பின்னர் பிணையங்களை விற்று கடன் தொகையைத் திரும்பப் பெறலாம். நியாயமான கால அவகாசம், பிணையத்தின் தன்மையையும் மேலும் தகவல் தர, சூழ்நிலையையும் பொறுத்தே அமைகிறது. எடுத்துக்காட்டாக நிலம் மற்றும் கட்டடத்திற்குக் கொடுத்த கடனுக்குக் கூடுதலான காலஅவகாசமும் கோதுமை, அரிசி மேலும் பஞ்சு போன்ற வேளாண் பொருள்களுக்குக் குறைவான காலமும் தேவைய்யாகிறது. பிணையத்தை விற்று வந்த பணம் கடன் தொகையை விடக் குறைவாக இருந்தால் வங்கியர் குறைவான தொகைக்கு வழக்குத் தொடர முடியும்.

17

# பொருள்களின் மீது கடன் அளித்தல்
## (Advances against Goods)

இப்பொழுது, வங்கிகள் வழங்கும் கடனில் 60 சதவீதத்திற்கும் அதிகமான கடன்கள் உற்பத்திப் பொருள் மற்றும் வேளாண்பொருள்களின் மீது அளிக்கப்படுகிறது.

பின்வரும் நன்மைகளால் பொருள்கள் ஏற்கத்தக்க பிணையமாகக் கருதப்படுகிறது.

### 1. சந்தையிடல் எளிது

கடனாளி உரிய காலத்தில் திருப்பிச் செலுத்தத் தவறியபோது பொருள்களைச் சந்தையில் விற்பது எளிது. சந்தை ஆண்டு முழுவதும் நடைபெறுவதால் எப்போது வேண்டுமானாலும் பொருள்களை விற்க இயலும். சந்தை எப்பொழுதும் இருப்பதால் பொருள்கள் நம்பகமான மேலும் பாதுகாப்பான பிணையமாகிறது. விலையில் அதிக ஏற்ற றெக்கமிராது. சாதாரணக் காலங்களில் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்களான அரிசி, கோதுமை, பருத்தி முதலியவற்றின் விலைகள் நிலையாகவே இருக்கின்றன.

### 2. குறுகிய காலக் கடன்

பொருள்களின் மீது குறுகிய காலத்திற்கு அதுவும் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் மட்டுமே கடன் அனுமதிக்கப்படுகிறது. ஆகவே நீண்ட காலத்திற்குப் பணத்தை முடக்கிவைக்கும் அவசியமில்லை. நீண்ட காலத்திற்குக் கடன் தருவது சிறந்த வங்கிக்கடன் கோட்பாட்டிற்கு எதிர்மாறாகும்.

### 3. மதிப்பிடல் எளிது

அரிசி, கோதுமை, தானியங்கள் மேலும் பல்வேறு பயறு வகைகளின் விலையை எளிதில் மதிப்பிட முடியும். செய்தித்தாள்களில் வெளியிடப்படும் சந்தை அறிக்கை மேலும் வானொலியில் ஒலிபரப்பப்படும் சந்தை நிலவரங்களிலிருந்து பொருள்களின் விலையை அறிந்து மதிப்பிடலாம்.

## குறைபாடுகள்

### 1. தரம் குறையும் தன்மை

பொருள்களை, குறிப்பாக வேளாண் பொருள்களை அறிவியல் முறையில் பாதுகாக்கவிடில் அதன்தரம் குறையும் அபாயம் உள்ளது. உப்பு, சர்க்கரை முதலியன ஈரத்தால் பாதிக்கப்படும். காய்கறிகள், பழங்கள் ஆகியவை அழுகும் தன்மை கொண்டவை. வெங்காயம், ரப்பர் போன்றவை எடைகுறையும் தன்மை உடையவை. ஆகவே பொருள்களைப் பிணையமாகப் பெறுவதில் தரம்குறையும் அபாயம் எப்பொழுதும் உண்டு.

### 2. விலைச்சரிவு

அடிப்படைத் தேவையான பொருள்கள் தவிர மற்றப் பொருக்ளின் விலை ஏற்ற இறக்கத்திற்கு உட்பட்டவை; மேலும் தேவை மாற்றங்களினால் பொருள்களின் விலை இறங்கக்கூடும்.

### 3. தரம் மற்றும் அளவில் ஏமாற்றுதல்

முறையான தரப்படுத்தலும் வகைப்படுத்தலும் இல்லாத போது பொருள்களில் கலப்படம் செய்வது எளிது. எடுத்துக்க ப் பலவகையான அரிசியைக் கலக்கலாம். உயர்தரப் பாருளோடு தரம்குறைந்த பொருள்களைக் கலக்கலாம். இந்தியாவில் பொருள்கள் தரப்படுத்தல் ஆரம்பநிலையிலேயே இருக்கிறது. ஆகவே தரமற்ற பொருள்களை ஒப்படைந்து கடன்பெற வாய்ப்பு உண்டு. வங்கியரால்

பிணையமாகத் தரப்பட்ட ஒவ்வொரு மூட்டையையும் அல்லது பெட்டியையும் பிரித்துப் பார்த்துக் குறிப்பிட்ட தரத்தில் பொருள்கள் இருக்கிறதா எனச் சரிபார்ப்பது மிகக் கடினம்.

### 4. பாதுகாப்பு

பொருள்களைப் பிணையமாக ஏற்கும்போது அவற்றைப் பாதுகாக்கக் காப்பங்கள் ஏற்படுத்துவது அவசியமாகிறது. காப்பகங்களில் பொருள்கள் கெட்டுவிடாமலும், திருட்டுப் போகாமலும் பாதுகாக்க வேண்டியது வங்கியரின் கடமையாகிறது. இது வங்கியரின் வேலைப்பழுவை அதிகமாக்குகிறது.

### 5. பொருள்களை விற்பது கடினம்

வாடிக்கையர் கடனைத் திருப்பிச் செலுத்தவில்லையெனில் பொருள்களை அதுவும் அதிகஅளவில் இருந்தால் அவைகளை விற்பதில் சிரமங்கள் உள்ளன.

உள்ளூர்ச் சந்தையில் நிலவும் விலை நிலவரப்படி பிணையங்கள் மற்ற சந்தையில் விற்க வேண்டுமானால் போக்குவரத்துப் போன்ற செலவுகள் ஏற்படுகின்றன. மேலும் ஒழுங்குமுறைச் சந்தைகள் அதிகம் இல்லாத நிலையில் பொருள்களை உரிய விலைக்கு விற்பது எளிதான வேலைல்ல.

## வங்கியர் மேற்கொள்ள வேண்டிய முன்னெச்சரிக்கைகள்

### 1. கடன் கேட்வரின் நாணயம்

கடன் கேட்பவர் நம்பிக்கை உரியவராகவும் மேலும் வாணிகத்தில் நல்ல அனுபவம் உள்ளவராகவும் இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒரு வாடிக்கையர் 1000 மூட்டை அரிசியைப் பிணையமாகத் தரும்போது வங்கியரால் ஒவ்வொரு மூட்டையையும் சரிபார்த்து அது அரிசிதானா அல்லது வேறுபொருளா என அறியமுடியாது. வாடிக்கையரின் நேர்மையின் மீதுள்ள நம்பிக்கையில்தான் அதனை ஏற்கமுடியும். மேலும் அனுபவமுள்ள வணிகர், தொழில் நுட்பங்களை

நன்கறிந்தவராதலால் நட்ட மேற்படும் நடவடிக்கைகளைத் தவிர்க்க முடியும். முன் அனுபவமில்லாத வணிகர் நட்டம் அடையச் சந்தர்ப்பங்கள் அதிகமுண்டு. இதனால் வங்கியருக்குக் கடன் தொகை திரும்பக் கிடைக்காமல் நட்ட மேற்பட வாய்ப்புண்டு.

**2. கடன் பெறும் நோக்கம்**

கடனைத் திரும்பப் பெறுவது கடன் பெற்ற நோக்கத்தைப் பொறுத்தே அமைகிறது. பொருள்களை உற்பத்தி செய்து விற்பதற்குக் கடன் தாராளமாகக் கொடுக்கலாம். ஊக வாணிகத்தில் ஈடுபடுபவருக்குக் கடன் கொடுத்தால் பணத்தைத் திரும்பப்பெறுவது மிகவும் சந்தேகத்திற்குரியதே.

**3. சந்தையின் நிலையை அறிதல்**

வங்கியர் பல்வேறு பொருள்களுக்கான பல்வேறு இடங்களிலுள்ள சந்தையைப் பற்றி நன்கு அறிந்திருக்க வேண்டும். சந்தையில் நிலவும் விலை நிலவரப்படி பிணையங்கள் மீது எச்சத்தொகை ஏற்படுத்த இது அவசியமாகிறது. மேலும் சந்தையினைப் பற்றிய அறிவு இல்லையெனில் பொருள்களை மதிப்பிட முடியாது. கடன் கேட்டவர் பொருள்களின் மதிப்பை உயர்த்திக்காட்டி அதிகக் கடன்பெற வாய்ப்புண்டு.

**4. பொருள்களின் தன்மை**

கடன் அளிப்பதற்கு முன் வங்கியர் பொருள்களின் தன்மையை அறிய வேண்டும். சந்தையிட எளிதான பொருள்களுக்கு முன்னுரிமை தரவேண்டும். மேலும் தரம்கெடாத பொருள்களை ஏற்கவேண்டும். தேக்குமரம், உயர்தர அரிசி போன்றவை காலப்போக்கில் அதிகவிலை பெறும் தன்மை கொண்டவை. இப்பொருள்களை, வங்கியர் பிணையமாக ஏற்கலாம். மேலும் ஏற்கப்படும் பொருள்கள் புதியதாக இருக்கவேண்டும்.

**5. மதிப்பிடுவதில் போதிய கவனம்**

பொருள்களை மதிப்பிடுவது முக்கிய அம்சமாகும். இதன்

அடிப்படையில்தான் கடன்கொடுக்கும் தொகை கணக்கிடப் படுகிறது. பொருளினை மதிப்பிட வல்லுநர்களை நியமிக்கலாம். சந்தையில் ஏற்படும் விலை மாற்றங்களினால் ஏற்படும் நட்டத்தைத் தவிர்க்கப் போதுமான எச்சத் தொகை ஏற்படுத்த வேண்டும். மேலும் பட்டியலிலுள்ள விலையையும் சந்தையில் நிலவும் விலையையும் ஒப்பிடுவது நல்லது.

### 5. போதுமான எச்சத்தொகை

பிணையமாகத்தரும் பொருளின் மதிப்புமீது போதுமான எச்சத்தொகை ஏற்படுத்த வேண்டும். பொருள்களின் தரம் குறைதல், விலை குறைதல் மேலும் எடைகுறைதலால் ஏற்படும் பொருள் மதிப்புக் குறைவினை ஈடுசெய்யப் போதுமான எச்சத்தொகை ஏற்படுத்துதல் அவசியமாகிறது.

### 6. பிணையங்களின் உடைமையைப் பெறுதல்

கடன் வழங்குவதற்கு முன் பொருள்களின் உடைமையை வங்கியர் பெறவேண்டும். பொருள்கள் வைக்கப்பட்டிருக்கும் காப்பகத்தின் சாவியை வங்கியரிடம் ஒப்படைப்பதன் மூலம் உடைமையைப் பெறலாம் அல்லது தேவைப்படும்போது ஒப்படைப்பதாகக் கூறும் பெந்தக ஒப்பந்தம் மூலம் பெறவேண்டும்.

### 7. முறையாகச் சேமித்து வைத்தல்

பொருள்கள், ஈரம், தண்ணீர், பூச்சிகள் ஆகியவற்றால் அழிக்கப்படாமல் பாதுகாக்க வங்கியர் சிறப்புக் கவனம் மேற்கொள்ள வேண்டும். கடன் அனுமதிப்பதற்கு முன்பு, முறையான காப்பகம் இருக்கிறதா என அறியவேண்டும். காப்பகம் வங்கிக்கு அருகில் இருப்பது நல்லது. காப்பகப் பொறுப்பாளர் நம்பிக்கைக்கு உரியவராக இருக்க வேண்டும். மேலும் அவர் வங்கியரின் எழுத்துமூலமான அனுமதியுடன் தான் பொருள்களைக் கொடுக்கவேண்டும் என்று அறிவுறுத்த வேண்டும்.

**8. காப்பகப் பதிவேட்டில் பதிவு**

காப்பகப் பதிவேட்டில், பொருள்களின் மதிப்பு, அளவு, பொருள்களின் உரிமையாளர் பெயர் மேலும் பொருள்களை விடுவிக்கக் கொடுத்த அறிவுறுத்தல்கள் ஆகியவற்றை, முறையாகப் பதிவு செய்ய வேண்டும்.

காப்பகத்தின் கதவுகள் வங்கியர் பெயர் பொறிக்கப்பட்ட பூட்டினால் பூட்டப்பட வேண்டும். காப்பகத்தின் வெளிப்புறத்தில் வங்கியின் பெயர்ப்பலகை நிலையான இடத்தில் வைக்கப்பட வேண்டும். இது பொருள்கள் மீது வங்கியருக்கு உள்ள உடைமைக்கு அத்தாட்சி ஆகும்.

**9. சந்தையின் முழுமதிப்பிற்குக் காப்பீடு**

பொருள்கள் திருட்டு முதலியவற்றின் இழப்புக்கு எதிராக அதன் முழு மதிப்பிற்குக் காப்பீடு செய்யப்பட வேண்டும். நட்டமேற்படும்போது சராசரி சரத்துப் பயன்படுத்தாமல் தடுப்பதற்காகப் பொருள்களின் முழுமதிப்பிற்குக் காப்பீடு செய்வது அவசியமாகிறது.

**10. பொருள்களின் விடுவிக்கும்போது மேற்பார்வை**

கடன்பெற்றவர், கடனைத் தவணைமுறையில் திருப்பிச் செலுத்த அனுமதிக்கப்பட்டால் பொருள்களைத் திருப்பிச் செலுத்திய அளவு மட்டுமே விடுவிக்க வேண்டும். மேலும் காப்பகப் பதிவேட்டில் உள்ள சரக்கு அளவும் சரக்கிருப்பின் அளவும் ஒன்றாக இருக்கிறதா என்ற அறியக் குறித்த இடை வெளியில் சரக்கிருப்பினைக் கண்காணிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

# 18

# சரக்குரிமை ஆவணங்கள் மீது கடன் அளித்தல்
## (Advances against Documents of Title to Goods)

அன்றாட வாணிகத்தில் சரக்குரிமைப் பத்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. சரக்குரிமைப் பத்திரங்கள் அதில் குறிப்பிட்டுள்ள பொருள்களின் உடைமைக்கு அத்தாட்சியாகும். அவை, உண்மையாக உடையவருக்கு அதில் குறிப்பிட்டுள்ள பொருள்களைப் பெறுவதற்கும் மேலும் மற்றவருக்குப் புறக்குறிப்பீடு செய்து அல்லது சேர்ப்பித்தல் மூலம் மாற்றம் செய்யும் உரிமையைத் தருகிறது. இவ்வாறு, சரக்குரிமைப் பத்திரங்கள் பொருள்களின் அடையாளமாகிறது. இவைகளைச் சேர்ப்பிப்பது பொருள்களைக் கொடுப்பதற்கு இணையானது.

கீழ்க்கண்ட சரக்குரிமைப் பத்திரங்கள் வழக்கில் உள்ளன.

1. கப்பல் இரசீது (Bill of Lading)
2. துறைமுக இரசீது (Dock Warrent)
3. காப்பகச் சான்றிதழ் (Warehouse Receipt)
4. இரயில் இரசீது (Railway Receipt)
5. சேர்ப்பாணை (Delivery Orders)

### கப்பல் இரசீது

கப்பல் இரசீது அயல்நாட்டு வாணிகத்தில் பயன் படுத்தப்படும் முக்கிய ஆவணம் ஆகும். இது கப்பல் தலைவர்

அல்லது அவரால் அங்கிகரிக்கப்பட்டவரால் வழங்கப்படுகிறது. இந்த இரசிது கப்பலில் சரக்குப் பெற்றதற்கு அத்தாட்சி ஆகும். இதில் பொருளின் அளவு, மதிப்பு, சேர்ப்பிக்கும் இடம் ஆகியவை குறிப்பிடப்பட்டிருக்கும். கப்பல் இரசிது, பொருளைப் பெற்றுக் கொண்ட அதே நிலையில், அனுப்பப்பெறுபவர் அல்லது அவரது ஆணைக்குப் பொருளைச் சேர்ப்பிக்கும் ஓர் உறுதி ஆகும். ஆவணத்தில் கையெழுத்திடுவதன் மூலம், கப்பல் தலைவர், கப்பலிடப்பட்ட பொருள்களின் அளவுக்கு உத்திரவாதம் தருகிறார். பொருள்கள் கட்டுமானம் செய்யப்பட்டிருப்பின் அதன் உள்ளிருப்பவைகளுக்குப் பொறுப்பாக மாட்டார்.

கப்பல் இரசிது மூன்று பிரதிகளாகத் தயாரிக்கப்படுகிறது. இரண்டு பிரதிகள் வெவ்வெறு தபால்களில் அனுப்பப்படுகிறது. ஒரு பிரதி கப்பல் நிறுவனத்தில் வைக்கப்படுகிறது.

**கப்பல் இரசிதின் தன்மைகள்**

1. ஆவணத்தில் குறிப்பிட்டுள்ள பொருள்களைச் சேர வேண்டிய இடத்திற்கு எடுத்துச்செல்லக் கப்பல் நிறுவனம் தரும் உறுதி.

2. இந்த ஆவணங்கள் சரக்கின் உரிமையைத் தருகின்றன. ஆகவே கப்பல் தலைவரிடம் ஒரு பிரதியைச் சேர்ப்பிப்பவர் பொருள்களைப் பெறமுடியும்.

3. கப்பல் இரசிது ஒரு மாற்றுமுறை ஆவணமல்ல. இவை மாற்றுமுறை ஆவணத்தின் சில தன்மைகளைக் கொண்டுள்ளன. இவைகளைப் புறக்குறிப்பு மேலும் சேர்ப்பிப்பது மூலம் மாற்றித்தரமுடியும். ஆகவே இவற்றைப் பாதி மாற்றுமுறை ஆவணங்கள் என்று கூறலாம்.

4. கப்பல் இரசிதினைச் சேர்ப்பிப்பது பொருள்களைச் சேர்ப்பிப்பதற்கு இணையாகக் கருதப்படுகிறது.

### துறைமுக ஆணை

கப்பலிலிருந்து பொருள்களைப் பெற்றுத் துறைமுகத்திலுள்ள காப்பகத்தில் தற்காலிகமாக அவற்றை வைக்கும்போது துறைமுக நிறுவனம்/காப்பகம் வழங்கும் இரசிது துறைமுக ரசிது எனப்படும். இதில் பெற்றுக்கொண்ட பொருள்களின் விபரம் மேலும் அதில் குறிப்பிட்டுள்ள நபரிடம் பொருளைச் சேர்ப்பிக்கும் உறுதி ஆகியவை இடம்பெறுகிறது. உரிமையாளரோ அவரால் புறக்குறிப்பு இடப்பட்டவரோ இந்த இரசிதினை ஒப்படைத்துப் பொருள்களைப் பெற்றுக்கொள்ளலாம்.

### காப்பகச் சான்றிதழ்

காப்பகச் சான்றிதழ், காப்பகப் பொறுப்பாளரால் வழங்கப் படுகிறது. இதில் விவரிக்கப்பட்டுள்ள பொருள்கள் காப்பத்தில் இருக்கிறது என்றும் மேலும் கேட்கும்போது அவை குறிக்கப்பட்டுள்ள நபருக்குக் கொடுக்கப்படும் என்றும் சான்றழிக்கப்பட்டுள்ளது.

இவை சாதாரண வைப்பு இரசிது, சரக்குரிமை ஆவணமல்ல. ஆகவே மாற்றத்தக்கது அல்ல.

### இரயில் ரசிது

உள்நாட்டில் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்லும் பணியை இரயில்வே நிருவாகம் செய்கிறது. பொருள்களைப் பெற்றபின் இரயில் நிலைய அதிகாரி வழங்கும் ரசிது இரயில் ரசிது எனப்படும். இதில் பொருள்களின் விபரம், எடுத்துச் செல்லப்படும். இடம், பெறுபவரின் பெயர் ஆகியவை குறிப்பிடப்பட்டிருக்கும். இரயில் ரசிது சரக்குரிமைப் பத்திரமாகச் சட்டபூர்வமாக அங்கிகரிக்கப் பட்டது. ஆனால் இது மாற்றுமுறை ஆவணமன்று.

### சேர்ப்பாணை

காப்பகம் அல்லது துறைமுகத்தின் உரிமையாளருக்கு

அதில் பொருள்களை வைத்திருப்பவர் அனுப்பும் ஆவணமாகும். இதில் ஆணையில் குறிப்பிட்டுள்ள நபர் அல்லது அவரது ஆணைக்கு எல்லாச் சரக்குகளையும் அல்லது ஒருபகுதிப் பொருள்களைக் கொடுக்கும்படி உத்தரவிடப்பட்டிருக்கும். இவ்வாணையை வைத்திருப்பவர் காப்பகத்திலிருந்து பொருள்களை எடுத்துக்கொள்ளலாம் அல்லது மற்றொருவருக்குப் புறக்குறியிட்டு மாற்றலாம்.

## சரக்குரிமை ஆவணங்களுக்குக் கடன் அளிப்பதிலுள்ள இடர்கள்

சரக்குரிமை ஆவணங்கள் பொருள்களுக்கு எதிராக எழுதப்படுகின்றன. ஆகவே பொருள்கள் மீது கடன்கொடுக்கும் போது உள்ள அனைத்து இடர்களும் இதில் உண்டு. மேலும் பின்வரும் அதிகப்படியான இடர்கள் உள்ளன.

### 1. போலி ஆவணங்கள்

ஆவணங்கள் போலியாக இருக்கலாம். அல்லது ஆவணத்தில் குறிப்பிட்ட மூட்டைகள் அல்லது கட்டுமானங்களின் எண்ணிக்கை திருத்தப்பட்டிருக்கலாம். ஆவணங்கள் போலி யானவையா அல்லது உண்மையானவையா என்று தெரிந்து கொள்வது கடினம்.

### 2. போலியான புறக்குறிப்பு

ஆவணத்திலுள்ள புறக்குறிப்புப் போலியாக இருக்கலாம். புறக்குறிப்புத் திருட்டுத்தனமாக மாற்றப்பட்டதாக இருந்தால் வங்கியருக்குப் பொருள்கள் மீது உரிமையில்லை.

### 3. கட்டுமானப் பொருள்களின் உள்ளிருப்புக்கு உத்திரவாதம் இல்லை

கட்டுமானம் செய்யப்பட்ட பொருளாக இருப்பின் அதன் உள்ளிருப்பவைகளுக்குக் கப்பல் நிறுமம்/இரயில் நிர்வாகம் உத்திரவாதம் தருவதில்லை. ஆகவே கட்டுமானத்தின் உள்ளிருப்பவை, பொருள் விபரங்களின்படி அமையாமலிருக்கச்

சாத்தியங்கள் உண்டு. இந்நிலைகளில் வங்கியருக்குக் கட்டுமானப் பொருள்கள் ஆவணத்திலுள்ள விபரப்படி இல்லை எனக் கோரும் உரிமை இல்லை.

## 4. பொருள்கள் வழித்தடங்கலில் நிறுத்தும் உரிமை (Stoppage in transit)

பொருள்களை விற்றவர் அதற்குரிய தொகையைப் பெறாத நிலையில் அந்தப் பொருள்கள் தனது உடைமையில் இருக்கும்வரை அதன் மேல் பற்றுரிமை செய்ய அவருக்கு உரிமையுண்டு. ஆகவே வாங்குபவர் நொடித்தவரானால், சரக்குகள் எடுத்துச்செல்லும் வழியில் அதை நிறுத்தச்சொல்ல விற்றவருக்கு உரிமை உண்டு. இந்நிலையில், அந்தப் பொருள்கள் மீது கடன் வழங்கியிருந்தால், வங்கியருக்கு அதன் மீது உரிமை ஏதுமில்லை.

### முன்னெச்சரிக்கைகள்

1. உடையவருக்கு உரிமையைத் தரும் ஆவணங்களுக்கும், பொருள்களைப் பெற்றுக் கொண்டதற்காக வழங்கப்படும் இரசீதிற்கும் உள்ள வேறுபாடுகளை வங்கியர் அறியவேண்டும். கப்பல் ரசீது, துறைமுக ஆணை ஆகியவை பொருள் உரிமையைத் தருகின்றன. காப்பகச் சான்றிதழ் அத்தகைய உரிமையைத் தருவதில்லை. ஆகவே கடன்பெற்றவர் நொடித்தவரானால் கப்பல் ரசீது அல்லது துறைமுக ஆணையை உடையவர் நொடித்தவரின் சொத்தில் உரிமைகோர முடியும்.

2. சரக்குரிமை ஆவணங்களுக்குக் கடன் அளிக்கும்போது வங்கியர் வாடிக்கையர் நேர்மையானவரா மேலும் நம்பிக்கையானவரா என்று அறியவேண்டும். சரக்குரிமை ஆவணங்கள் மாற்றுமுறை ஆவணங்கள் அல்ல. ஆகவே, வாடிக்கையரின் நாணயத்தை நம்பியே கடன் வழங்கவேண்டும். மேலும் தொழிலில் வாடிக்கையருக்கு உள்ள அனுபவத்தையும் மனத்தில் கொள்ள வேண்டும்.

3. கட்டுமானம் செய்யும் நம்பிக்கையான ஒருவரிடமிருந்து கட்டுமானச் சான்றிதழ் பெறவேண்டும். இது கட்டுமானத்தில் உள்ள பொருள்களைப் பற்றிய சந்தேகத்தை நீக்கும்.

4. போதுமான எச்சத்தொகை ஏற்படுத்துதல் அவசியம். மேலும் தேவையானபோது பொருள்களை விற்கும் உரிமையைத் தரும் பெந்தகக் கடிதம் ஒன்றும் பெறவேண்டும்.

5. கடனைத் திருப்புமுன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஆவணங்களைத் தரக்கூடாது. சில தவிர்க்க முடியாத நேரங்களில் கொடுக்க நேரிட்டால் ஒரு பொறுப்பாண்மைப் பத்திரம் பெறவேண்டும். வாடிக்கையர், பொருள்கள் அல்லது பொருள்களின் விற்றுமதிப்பை வங்கியர் சார்பில் பொறுப்பாண்மையராக வைத்திருக்கச் சம்மதிக்கிறார் என்பதே பொறுப்பாண்மைப் பத்திரத்தின் நோக்கமாகும்.

6. ஆவணங்களில் தொந்தரவு தரும் சரத்துக்கள் எதுவும் இருக்கிறதா என அறிய வேண்டும். எடுத்துக்காட்டாகக் 'கட்டுமானம் உடைந்திருக்கிறது' எனக் குறிப்பீடு இருந்தால் அதனை வங்கியர் ஏற்கக்கூடாது.

7. ஆவணங்கள் வெற்றுப் புறக்குறிப்புச் செய்யப்பட்டுப் பெறப்பட வேண்டும். அவ்வாறு செய்யப்பட்டிருந்தால் பொருள்கள் மீது செலுத்த வேண்டிய கட்டணத்தை வாடிக்கையர் செலுத்த வேண்டும்.

8. தீ மற்றும் மற்ற இடர்களினால் ஏற்படும் நட்டத்தைத் தவிர்க்கப் பொருள்களின் முழு மதிப்பிற்குக் காப்பீடு செய்யப்பட வேண்டும். வங்கியர், காப்பீட்டுப் பத்திரத்தைத் தன்னிடம் சமர்ப்பிக்க வலியுறுத்த வேண்டும்.

## கப்பல் இரசிது

மேலே குறிப்பிட்டுள்ள முன்னெச்சரிக்கைகளுடன், கப்பல் ரசிதுக்குக் கடன் வழங்கும்போது பின்வருவனவற்றையும் மனத்தில் கொள்ளவேண்டும்.

1. வங்கியர், கப்பல் ரசிதின் எல்லாப் பிரதிகளையும் கேட்டுப்பெற வேண்டும். அப்படிச் செய்யவில்லையெனில் வாடிக்கையர் ஒரு பிரதியைச் சமர்ப்பித்துக் கப்பலிலிருந்து சரக்குகளைப் பெறமுடியும். வங்கியர் எல்லாப் பிரதிகளையும் தம் வசம் வைத்திருத்தல் அவசியம்.

2. கப்பல் கட்டணம் அனுப்பீடு பெறுபவரால் கொடுக்கப்பட்டதா என வங்கியர் அறியவேண்டும். கட்டணம் கொடுக்காத நிலையில் கப்பல் தலைவருக்குச் சரக்குகள் மீது பற்றுரிமை உண்டு.

3. கடல் இடர்ப்பாடுகள் அனைத்தையும் ஒன்றுசேர்ந்த காப்பீட்டுப் பத்திரம் பெறப்பட வேண்டும். காப்பீட்டுப் பத்திரத்திலுள்ள பொருள்களின் விபரமும் கப்பல் இரசிதிலுள்ள பொருள்களின் விபரமும் ஒன்றே என ஒப்பிட்டு அறியவேண்டும்.

துறைமுக ஆணையை ஏற்கும்போது பின்வரும் முன்னெச்சரிக்கைகளை பின்பற்ற வேண்டும்.

1. துறைமுகக் காப்பகத்தில் உள்ள பொருள்களை வங்கியர் தம்முடையது எனப்பதிவு செய்யவேண்டும் அல்லது தான் கடன் வழங்கப் போவதை அத்துறைமுக நிருவாகத்திற்கு எழுத்துமூலம் அறிவிக்க வேண்டும். இதன்மூலம் துறைமுகக் காப்பகத்தினர் வங்கியர் அனுமதியின்றிப் பொருள்களை விடுவிக்க மாட்டார்கள். இதனால் தவறான முறைகளில் காப்பகத்திலிருந்து பொருள்களைப் பெறுவதைத் தவிர்க்கலாம்.

2. துறைமுகக் காப்பகத்திற்கு, வாடகை மேலும் கட்டணம் தராததால் பொருள்கள் மீது பற்றுரிமை இருக்கிறதா என அறிய வேண்டும்.

3. காப்பகத்திலுள்ள பொருள்களை நேரடியாகப் பார்வையிட்டு அதன் எண்ணிக்கையைத் தெரிந்து கொள்ள வேண்டும். அது கட்டுமானம் செய்யப்பட்டதாக இருந்தால் கட்டுமானம் பிரிக்கப்படாமல் அல்லது உடைக்கப்படாமல் இருக்கிறது என உறுதி செய்ய வேண்டும். மேலும் கட்டுமானச் சான்றிதழ் பெறுவது நன்று.

**காப்பகச் சான்றிதழைப் பெறுமுன் பின்வரும் அதிகப்படியான முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்**

1. முதலில் காப்பகம் உரிமம் பெற்றதா என அறிய வேண்டும். உரிமம் பெற்ற காப்பகங்களில் உள்ள பொருள்களுக்கு மட்டுமே கடன் வழங்க வேண்டும்.

2. காப்பகச் சான்றிதழில் குறிப்பிடப்பட்டுள்ள பொருள்கள் தன்னுடையது தான் என உறுதிமொழி கூறி வாடிக்கையர் கையொப்பமிட்ட கடிதம் பெற வேண்டும்.

3. சான்றிதழ் பெற்றவுடன் காப்பகப் பொறுப்பாளருக்கு இரு பிரதிகள் அனுப்பித் தகவல் தெரிவிக்க வேண்டும். மேலும் அவரை ஒரு பிரதியில் கையெழுத்திட்டு வங்கிக்குத் திருப்பி அனுப்பச் சொல்ல வேண்டும். அல்லது சான்றிதழை வங்கியர் பெயருக்கு வழங்கச் சொல்லி வாடிக்கையரிடம் கேட்க வேண்டும்.

4. காப்பகத்தை நேரில் பார்வையிட்டு அது பொருள்களைப் பாதுகாக்கத் தகுதியான நிலையில் உள்ளதா என உறுதிசெய்ய வேண்டும்.

5. வங்கியரின் எழுத்தாலான உத்தரவு தவிர்த்து மற்ற வழிகளில் பொருள்களை விடுவிக்கக் கூடாது எனக் காப்பகப் பொறுப்பாளருக்கு ஆணையிட வேண்டும்.

6. சான்றிதழில் குறிப்பிடப்பட்ட பொருள்களுக்குக் காப்பீடு உள்ளதா என அறிய வேண்டும். மேலும் முனைமம் வாடகை மற்றும் கட்டணங்கள் முறையாகச் செலுத்தப்படுகின்றனவா என அறிவது அவசியம்.

## இரயில் இரசிது

1. நன்கு அறிந்த மேலும் நாணயமும் நம்பிக்கையும் உள்ள வாடிக்கையருக்கே இரசிதின் அடிப்படையில் கடன் அளிக்க வேண்டும்.

2. ரயில் இரசிது உண்மையானது தானா என ஆய்ந்து அறிய வேண்டும்.

3. இரசிது, வங்கியர் பெயருக்கு முறையாகப் புறக்குறிப்புச் செய்யப்பட வேண்டும்.

4 பொருள்கள் இரயில்வே நிருவாகத்தினால் காப்பீடு செய்யப்பட்டதாக இருக்கவேண்டும். அழுகும் பொருள்களாக இருந்தால் அதன் முழுமதிப்பிற்கும் காப்பீடு செய்தல் பாதுகாப்பானது.

5. பொருள்கள் அனுப்பிய தேதிக்கும் வங்கியில் ரசீதைக் கொடுக்கும் தேதிக்கும் இடையே அதிக இடைவெளி இருக்கிறதா என அறிய ரயில் ரசிதிலுள்ள தேதியை கவனத்துடன் பார்க்க வேண்டும்.

6. இரசிது பழயதாக இருந்தால், காலதாமதமாகக் கொடுக்கப்படும் காரணத்தையும் மேலும் முக்கியமாகப் பொருள்கள் சேர வேண்டிய இடத்தை அடையும் நாளையும் மேலும் அதற்குக் கொடுக்க

வேண்டிய தாமதத் தொகை ஏதும் இருக்கிறதா எனவும் கவனிக்க வேண்டும்.

7. இரயில் இரசிதுடன் இடாப்பு இணைக்கப்பட்டுள்ளதா எனப் பார்த்துப் பின்னர் ரசிதில் குறிப்பிடப்பட்டுள்ள பொருள்களின் விபரத்தை இடாப்பில் குறிப்பிட்டுள்ள சரக்கு விபரத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

8. பொருள்கள் குறைபாடு உள்ளவை அல்லது கட்டுமானம் குறைபாடு உள்ளது என இரசிது குறிப்பிட்டால் அவைகளுக்குக் கடன் தருவது கூடாது.

9. இரயில்வே கட்டணம் செலுத்தப்பட்ட இரயில்வே இரசிதுக்கு மட்டுமே கடன் அளிக்க வேண்டும். அவ்வாறு செலுத்தப்படவில்லையெனில் வாடிக்கையர் கடனைத் திருப்பாத நிலையில், வங்கியர் பொருள்களை எடுக்கும்போது கட்டணத்தைச் செலுத்த வேண்டும்.

**சேர்ப்பாணை - ஒரு முக்கிய முன்னெச்சரிக்கை**

சேர்ப்பாணையை ஒருவருக்கு வழங்கியபின், ஆணை விடுப்பவர் எப்பொழுது வேண்டுமானாலும் மறுஉத்தரவு வழங்கி, முதலில் கொடுத்த ஆணையைச் செல்லாதாக்கி விடலாம். அல்லது வங்கியருக்குச் சேர்ப்பாணை கொடுத்தபின், அதே பொருளின் மீது மற்றொரு ஆணை வழங்கி அடுத்தவருக்குப் பொருளை விற்றுவிடலாம். இவ்விதம் ஏற்படும் இடர்களைத் தவிர்க்க வங்கியர் பொருள்களைத் தம் பெயரிலேயே பதிவு செய்தபின் கடன் வழங்கவேண்டும்.

19

# பங்கு மாற்றக ஆவணங்கள் மீது கடன் அளித்தல்
## (Advances Against Stock Exchange Securities)

பங்கு மாற்றக ஆவணங்கள் என்பவை, கூட்டுப்பங்கு நிறுவனம் வெளியிடும் பங்குகள் மேலும் கடன் பத்திரங்கள், மாநில மேலும் மைய அரசுகள் வெளியிடும் கடன் பத்திரங்கள் மேலும் மாநகராட்சிகள், துறைமுகப் பொறுப்புக்கழகம் ஆகியவை வெளியிடும் கடன் பத்திரங்கள் ஆகும். பெரிய நகரங்களில் இவை கடன் பெற வங்கியரிடம் பிணையமாகத் தரப்படுகிறது. பங்கு மாற்றகப் பத்திரங்களைப் பிணையமாகப் பெறுவதில் அதிகமான நன்மைகள் இருப்பதால் அவை வங்கியரால் தாராளமாக ஏற்கப்படுகின்றன.

**நன்மைகள்**

**1. ரொக்க மாற்றுத் தன்மை**

பங்குகளை எளிதில் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம். அரசுப் பத்திரங்களை எளிதில் ரொக்கமாக மாற்றுவது மட்டுமில்லாமல் அவைகளை மையவங்கியில் கொடுத்து அவசரத் தேவைக்குப் பணம் பெறலாம்.

**2. பாதுகாப்பு**

பங்கு மாற்றகப் பத்திரங்களின் விலை பொதுவாக நிலையானவை. அரசுப் பத்திரங்களின் விலைகளில் எந்த மாற்றமும் இராது.

### 3. மதிப்பை எளிதில் அறியமுடியும்

பங்குகளின் மதிப்பைச் செய்தித்தாள்களில் வெளிவரும் சந்தை அறிக்கையிலிருந்து எளிதில் அறிந்து கொள்ளமுடியும்.

பங்குப்பத்திரம் அல்லது கடன் பத்திரங்களின் உரிமையாளரை எளிதில் தெரிந்து கொள்ளலாம். பெரும்பாலான பத்திரங்களில் உரிமையாளர் பெயர், முகவரி போன்ற விபரங்கள் எழுதப்பட்டிருக்கும். மேலும் பத்திரங்களை மாற்றிப்பெறும் வழிமுறைகள் மிகவும் குறைவு.

### 4. மாற்றுத்தன்மை

கொணர்பவர் கடன்பத்திரம், பங்கு ஆணை மேலும் அரசு உறுதிப்பத்திரம் போன்ற பத்திரங்கள் மாற்றுத்தன்மை உடையவை. இதனால் பின்வரும் நன்மைகள் உள்ளன.

1. வங்கியர், குறையேதுமில்லாத நல்லதோர் உரிமையைப் பெறுகிறார்.

2. வாடிக்கையரின் உதவியில்லாமலே பத்திரங்களை விற்க வங்கியர் உரிமை பெறுகிறார்.

3. பத்திரங்களை மாற்றுவதற்கு முத்திரை வரி ஏதுமில்லை. ஆகவே செலவு குறைவானது.

ஆவணங்களின் மீது பெறப்படும் வட்டி, பங்காதாயம் ஆகியவற்றைக் கடன் தொகைக்கு ஈடுகட்டலாம். இது கடனாளியின் பொறுப்புக் கணிசமாகக் குறைக்கிறது.

### முன்னெச்சரிக்கைகள்

### 1. பங்கு வெளியிடும் நிறுமத்தின் வாணிகத்தன்மை

பங்குகளின் மீது கடன் வழங்கும்போது அதை வெளியிடும் நிறுமத்தின் வாணிகத்தன்மை, அதன் முந்தய வரலாறு மேலும்

எதிர்கால வெற்றிவாய்ப்பு ஆகியவற்றைக் கவனத்தில் கொள்ளவேண்டும். இந்தக் காரணிகள் பங்கின் மதிப்பைப் பெரிதும் பாதிக்கின்றன. நிருவாகத்தின் திறமை, நன்மதிப்பு, அனுபவம் போன்ற அம்சங்களையும் கவனத்தில் கொள்ளுதல் அவசியம். இவை தவிர, நிறுமத்தின் இலாப நட்டக் கணக்கு மேலும் இருப்பு நிலைக்குறிப்பு ஆகியவற்றை ஆய்ந்து நிறுமத்தின் சம்பாதிக்கும் திறனை அறிய வேண்டும்.

## 2. பகுதி செலுத்திய பங்குகள்

பகுதி செலுத்திய பங்குகளுக்குக் கடன் அளிக்கக்கூடாது. வங்கியர் பகுதி செலுத்திய பங்குகளைப் பிணையமாக எப்பொழுதும் ஏற்கக் கூடாது. அதை ஏற்பதனால் பின்வரும் இடர்கள் உள்ளன.

அ) அழைப்புப் பணத்தை வாடிக்கையர் கட்ட இயலாவிடில் வங்கியர் அதைச் செலுத்துவதற்காக அதிகக் கடன் அளிக்க வேண்டும். வாடிக்கையர் அழைப்புப் பணம் செலுத்தாவிடில் பங்குகள் ஒருப்பிழப்பு செய்யப்படும். அதனால் வங்கியர் பிணையத்தை இழப்பர்.

ஆ) அழைப்புப் பணம் செலுத்தாவிடில் நிறுமத்திற்குப் பங்குகள் மீது பற்றுரிமை உண்டு.

இ) பகுதி செலுத்தப்பட்ட பங்குகளின் சட்டமுறை மாற்றத்தினைத் தன் பெயரில் பெற்றிருந்தால் வங்கியர் தானே அழைப்புப் பணத்தைச் செலுத்த நேரிடும்.

ஈ) பகுதி செலுத்திய பங்குகளை விற்றுப் பணமாக்குவது கடினம்.

## 3. பட்டியலிடப்படாத பங்குகள்

பங்கு மாற்றகத்தில் அங்கீகரிக்கப்படாத பங்குகளுக்குக் கடன் அளிப்பதில் பின்வரும் குறைபாடுகள் உள்ளன.

அ) பங்குகளின் தற்போதைய மதிப்பை அறிவது மிகக்கடினம். பங்கு மாற்றக அறிக்கையில் இத்தகைய பங்குக்ளைப் பற்றிய தகவல்கள் வெளியிடப் படுவதில்லை.

ஆ) இப்பங்குகளை விற்பது எளிதல்ல. அந்த நிருமத்தின் உறுப்பினர்கள் மட்டுமே அதனை வ்ாங்குவர். அவர்கள் நிர்ணயிக்கின்ற விலைக்குத்தான் பங்குகளை விற்கமுடியும். ஆகவே பங்கு மாற்றகத்தில் அங்கிகரிக்கப்படாத பங்குகளின் மீது கடன் அளிக்கக் கூடாது.

## 4. தனி நிறுமங்களின் பங்குகள்

தனி நிறுமங்களின் பங்குகளை ஏற்கக்கூடாது. அந்த நிறுமங்களின் நடைமுறை விதிகள் பங்குதாரர்கள் பங்கினை மாற்றும் உரிமையத் தடுக்கின்றன.

## 5. அங்கிகரிக்கப்பட்ட பட்டியல்

வங்கியர் அங்கிகரிக்கப்பட்ட பங்குகளின் பட்டியல் ஒன்றினை வைத்திருப்பர். நிறுமத்தின் நன்மதிப்பு, அதன் செயல்பாடுகள், பங்குகளின் சந்தையிடல் மேலும் பங்காதாயம் வழங்கும் திறன் ஆகியவற்றின் அடிப்படையில் இந்தப்பட்டியல் வங்கியரால் தயாரிக்கப்படுகிறது. வாடிக்கையர் தரும் பங்குப் பத்திரத்தை ஏற்குமுன் அவை அங்கிகரிக்கப்பட்ட பட்டியலில் இருக்கிறதா என அறிய வேண்டும்.

## 6. பற்றுப் பொறுப்பை ஏற்படுத்துதல்

பிணையமாகத் தரப்படும் பங்குச் சான்றிதழ்களை வங்கியர் ஆராய்ந்து அதில் கடன் கேட்பவரின் உரிமையைப் பற்றி நன்கு அறியவேண்டும். பிறகு சான்றிதழ்களைத் தன் பெயரில் மாற்றித்தரக் கேட்க வேண்டும். கொணர்பவர் பத்திரங்களாகயிருந்தால் அப்பத்திரங்களில் கடன் கேட்பவரின் கையொப்பம் பெற்ற பின்னர் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பிணையங்கள் மீது இருமுறையில் பற்றுப் பொறுப்பை ஏற்படுத்தலாம்.

1) சட்டமுறை உரிமை

2) தகைமை உரிமை

**சட்டமுறை உரிமை**

பங்கு மாற்றுப் பத்திரம் எழுதி மேலும் வங்கியரின் பெயர் பங்குகளை வெளியிடும் நிறுமத்தின் ஏடுகளில் பதிவு செய்யப்படுவதன் மூலம் சட்டமுறை உரிமை ஏற்படுத்தப்படுகிறது. மேலும் ஒரு வைப்பு அமைப்புப் பத்திரத்தில் (Memorandum of Deposit) வாடிக்கையர் கையெழுத்திட வேண்டும். அந்தப் பத்திரத்தில் பின்வரும் சரத்துக்கள் உள்ளன.

அ) பங்குகள் அல்லது கடன் பத்திரங்கள் அதன் பங்காதாயம் அல்லது வட்டியுடன் சேர்ந்து பிணையாகிறது.

ஆ) வாடிக்கையர் கடனைத் திருப்பித்தராவிட்டால் வங்கியர் பங்குகளை விற்க முடியும்.

இ) அழைப்புப் பணம் எதுவும் வங்கியர் செலுத்தினால், வாடிக்கையரின் கணக்கைப் பற்றெழுதலாம்.

ஈ) கடனைத் தந்தவுடன் அதே பங்குகளை அல்லது கடன் பத்திரத்தை வங்கியர் திருப்பித்தர வேண்டும்.

**தகைமை உரிமை**

பங்குப் பத்திரங்களை, அவைமீது பற்றுப் பொறுப்பினை ஏற்படுத்தும் நோக்கத்துடன் வங்கியரிடம் வைப்பாகக் கொடுக்கப்பட்டால் அது தகைமை முறை உரிமை மாற்றம் எனப்படும். நிறுமத்தின் ஏடுகளில் உரிமை மாற்ற பதிவு ஏதும் செய்யப்படுவதில்லை.

தகைமை உரிமை மாற்றம் பின்வரும் ஏதாவது ஒரு முறையில் பெறலாம்.

அ) பத்திரங்களை வங்கியரிடம் சேர்ப்பித்தல் (Mere Deposit of Securities) : இம்முறையில் வங்கியரிடம் பிணையமாகத் தரப்படும் பத்திரங்கள் பற்றுப் பொறுப்பு ஏற்படுத்தும் நோக்கத்துடன் சேர்ப்பிக்கப்படுகிறது.

ஆ) பத்திரங்களை, அமைப்புப் பத்திரத்துடன் சேர்ப்பித்தல் (Deposit of Securites with a Memorandum): இம்முறையில் பத்திரங்களுடன் ஒரு அமைப்புப் பத்திரமும் சேர்ப்பிக்கப்படுகிறது. அமைப்புப்பத்திரம், பிணையம் கொடுக்கப்பட்ட நோக்கத்தையும் மேலும் கடன்பெற்றவர் கடனைத் திரும்பத்தராத போது பங்குகளை வங்கியர் விற்கும் அங்கிகாரத்தையும் குறிப்பிடுகிறது.

இ) வெற்று மாற்றுப்படிவம் (Blank Transfer) : பத்திரங்களுடன் வெற்று மாற்றுப் படிவங்களுடன் இம்முறையில் பெறப்படுகின்றன. கடன் பெற்றவர் அந்தப் படிவங்களில் மாற்றுப் பெறுபவர் பெயர், தேதி ஆகிய இடங்களை நிரப்பாமல் கையொப்பம் மட்டும் இடுகிறார்.

## 7. வங்கி தனது பங்குப் பத்திரங்களின் மீது கடன் அளிக்கக்கூடாது

வங்கி தனது பங்குப் பத்திரங்களின் மீது கடன் அளிக்கக் கூடாது. வங்கி ஒழுங்காற்றுச் சட்டம் பிரிவு 20-இன்படி இது தடுக்கப்படுகிறது. மேலும் ஒரு நிறுமம் செலுத்தப்பட்ட முதலில் 30 சதவீதம் அல்லது தனது செலுத்தப்பட்ட முதல் மேலும் காப்பில் 30% இவற்றில் எது குறைவோ அந்த அளவு மட்டுமே கடன் வழங்க முடியும். பிரிவு 19(3)-இன்படி, வங்கியின் மேலாளர் அல்லது இயக்குநர் தொடர்புள்ள நிறுமத்தின் பங்குகளை வாங்குவதோ அல்லது அதன் பத்திரங்களின் மீது கடன் வழங்குவதோ கூடாது.

20

# இதரப் பிணையங்கள்
## (Miscellaneous Securities)

### *நிலமும் கட்டடமும்* (Land and Buildings)

வங்கியர், பொதுவாகக் குறுகிய காலக் கடனே அளிக்கிறார்கள். நிலம் மேலும் கட்டடத்தைப் பிணையமாகத் தருபவர்கள் நீண்ட காலக் கடனே கேட்பதால் வங்கியர் அதை விரும்புவதில்லை. இருப்பினும் மைய வங்கியின் வழிகாட்டலின்படி ஒவ்வொரு வங்கியும் ஒரு குறிப்பிட்ட அளவுத் தொகையை அடைமானத்தின் பேரில் நீண்டகாலக் கடனாக வழங்குகிறது.

நிலம் மேலும் கட்டடத்தைப் பிணையாகப் பெற்றுக் கடன் வழங்குவதில் பின்வரும் இடர்கள் உள்ளன.

### *1. கடன் கோருபவரின் சொத்துரிமையை அறிவதில் சிரமம்*

சொத்தின் மீதுள்ள உரிமையை அறிந்து கொள்வதில் பல இடர்பாடுகள் உள்ளன. சொத்து மாற்றம் மற்றும் சொத்து வாரிசுச்சட்டம் மிகவும் சிக்கலானது. எடுத்துக்காட்டாக, இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் தனித்தனி சட்டங்கள் இருப்பதால் வங்கியரால் சொத்தின் உரிமையை அறிவது மிகவும் கடினம். மேலும் பத்திரத்தின்படி ஒருவரை உரிமையார் எனக் கூறப்பட்டு அதே பத்திரத்தில் அச்சொத்துக்களை அடைமானம் செய்ய அவருக்கு உரிமையில்லை எனவும் எழுதப்பட்டிருக்கும்.

மேலும் சொத்துக்கள் வில்லங்கமில்லாதது என உறுதி செய்ய வேண்டும். அதற்குச் சட்ட நிபுணர்களின் கருத்தை

அறிய வேண்டும். சந்தேகம் ஏற்பட்டால், பதிவாளரிடம் விண்ணப்பித்து ஆவணங்களை ஆராய வேண்டும். இதனால் அதிகச் செலவும் காலதாமதமும் ஆகும்.

விவசாய நிலமாகயிருந்தால் நில உரிமையை நிரூபிப்பது மிகவும் சிக்கலானது. ஏனெனில்,

அ) நிலஉடமை பதிவு ஏடுகள் சரிவர நிர்வகிக்கப்படுவதில்லை

ஆ) விற்பனை அல்லது பிரிவினையால் ஏற்படும் மாற்றங்கள் சரிவரப் பதியப்படுவதில்லை.

இ) உரிமைப்பத்திரம் ஒரு பெரிய நிலபரப்பிற்கு இருக்கும். அதில் ஒரு பகுதி மட்டும் பிணையாகத் தரப்படும்.

**2. சொத்துக்களை மதிப்பிடுவது கடினம்**

சொத்துக்களின் மதிப்பைச் சரியாக நிர்ணயிப்பது மிகவும் சிரமம். கட்டடத்தில் பயன்படுத்தப்பட்ட பொருள்கள், வசதிகள், மேலும் கட்டடம் உள்ள இடம் ஆகியவை அதன் விலையை நிர்ணயிக்கின்றன. இதற்கு வங்கியர், பொறியாளர் அல்லது கட்டடக்கலை வல்லுநர்களின் மதிப்பீட்டையையே சார்ந்திருக்க வேண்டும்.

**3. சொத்துக்களை விற்பது எளிதல்ல**

தேவைப்படும்போது, இந்தப் பிணையங்களை விற்றுப் பணம் பெறமுடியாது. இதை விற்க தனிப்பட்ட சந்தை இல்லை. மேலும் ஏலமுறையில் விற்பது பற்றி விளம்பரப் படுத்துதல் பொது ஏலத்திற்கு ஏற்பாடு செய்தல் ஆகிய சட்டமுறைகளை நிறைவேற்றுவதில் காலதாமதமும் அதிகச் செலவும் ஆகும்.

**4. பற்றுப் பொறுப்பை ஏற்படுத்துதல்**

சட்டமுறை அடைமானம் மூலமே பற்றுப் பொறுப்பை

ஏற்படுத்த முடியும். இதற்கு முத்திரைச் செலவு, பதிவுச் செலவு மேலும் ஆவணங்களை ஆய்வு செய்ய வழக்குரைஞர் கட்டணம் ஆகிய செலவுகள் ஏற்படுகிறது.

**5. உரிமை மாற்றம் செய்வதில் தடைகள்**

சொத்துக்களை வங்கியரின் பெயருக்கு உரிமை மாற்றம் செய்வதில் பல தடைகள் உள்ளன. உதாரணமாக வேளாண் நிலங்களை விவசாயி அல்லாத ஒருவருக்கு மாற்றமுடியாது. ஆகவே விவசாயி கடனைத் திருப்பித் தராதபோது வங்கியர் அவருடைய நிலத்தைத் தன் பெயரில் மாற்றிக் கொள்ளமுடியாது. அதேபோலக் குத்தகைக்கு விடப்பட்ட நிலத்தின் மீதோ அல்லது வாடகைக்கு விடப்பட்ட வீட்டின் மீதோ கடன் கொடுத்தால், கடன் திருப்பித்தராதபோது, அந்நிலம் அல்லது வீட்டினை விற்று ரொக்கமாக்குவது கடினம். ஏனெனில் குத்தகைச் சட்டம் மேலும் வாடகைக் கட்டுப்பாட்டுச்சட்டம் குத்தகைதாரர்களுக்கும் மேலும் குடியிருப்போருக்கும் பல சட்டப் பாதுகாப்பினை அளித்துள்ளது.

**முன்னெச்சரிக்கைகள்**

**1. கடன் பெறுனரின் நிதிநிலை**

சொத்துக்களைப் பிணையமாக ஏற்றுக் கடன் வழங்குமுன் வங்கியர், வாடிக்கையரின் நாணயத்தையும் அவரது நிதிநிலையும் நன்குஅறிய வேண்டும். இவ்வகைக் கடன்களின் உண்மையான பிணையம் சொத்துக்கள் அல்ல. வாடிக்கையரின் நாணயம், அவரது வாணிக நிலைமை மேலும் அவரது நிதிநிலைமை ஆகும்.

**2. சொத்தினை மதிப்பிடல் வேண்டும்**

வாடிக்கையரின் தன்மையைப் பற்றி முழுமனநிறைவு பெற்றபின், வங்கியர் சொத்தினை மதிப்பிட வேண்டும். தனிப்பட்ட சந்தை ஏதும் இல்லாததால் மதிப்பிடல் மிகவும் சிரமமானது. கட்டட வல்லுநர்கள், நில அளவையர். சொத்துக்கள் வாங்கி விற்கும் முகவர் ஆகியோர் மூலம் சொத்தினை

மதிப்பிடலாம். நகராட்சி அல்லது பேருராட்சி மதிப்பீடு, அடுத்த நிலங்கள் அல்லது கட்டடங்களின் விற்பனை லிலை ஆகியவற்றையும் மனத்தில் கொண்டு மதிப்பிட வேண்டும்.

### 3. சொத்துரிமை ஆவணங்களின் ஆய்வு

வாடிக்கையருக்கு வில்லங்கமில்லாத சொத்துரிமை இருக்கிறதா மேலும் அதை விற்பதற்குச் சட்டப்படி உரிமை இருக்கிறதா எனஆய்ந்தறிய வேண்டும். வாடிக்கையரிடம் எல்லா ஆவணங்களையும் பெற்று அதை வங்கியின் சட்ட ஆலோசருக்கு அனுப்பி ஆராயச் சொல்ல வேண்டும்.

ஆவணங்கள் பின்வருவனவற்றை அறிவதற்காகச் சோதனையிடப்படுகின்றன.

அ) எல்லா ஆவணங்களும் ஒழுங்கு முறையில் இருக்கிறது.

ஆ) ஆவணங்கள் வில்லங்கமில்லாதவை

இ) நகராட்சி வரி, நில வரி, ஆகியவை முறையாகக் கட்டப்பட்டுளளன.

ஈ) சொத்தின் மதிப்புக் கடன் தொகைக்குப் போதுமானதாக உள்ளது.

### 4. கட்டடத்தின் முழு மதிப்பிற்கு காப்பீடு

கட்டடங்களின் மீது கடன் வழங்கும்போது அவை முழு மதிப்பிற்குக் காப்பீடு செய்யப்பட்டுள்ளதா என அறிய வேண்டும். மேலும் காப்பீட்டுப் பத்திரம் வங்கியர் பெயருக்குப் புறக்குறிப்புச் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

### 5. சட்டமுறை அடைமானம் பெறுதல் பாதுகாப்பானது

மேலே கூறப்பட்ட அனைத்தும் சரியாக இருக்கிறது என வங்கியர் அறிந்தபின் சட்டமுறை அடைமானம் அல்லது தகைமை

அடைமானம் பெறுவது பற்றி முடிவுசெய்ய வேண்டும். சட்டமுறை அடைமானம் பெற்றால், கடன் திரும்பி வராதபோது, நீதிமன்றத்தின் ஆணையில்லாமலே வங்கியர் சொத்தினை விற்றுப் பணம் பெற முடியும். தகைமை அடைமானம் பெற்றால் சொத்துக்களை விற்க நேரிடும்போது நீதிமன்றத்தின் உதவியை நாடவேண்டும். ஆகவே, சட்டமுறை அடைமானம் பெறுதல் நன்று.

தகைமை அடைமானம் பெறவேண்டிய நிலையில், சொத்துரிமை ஆவணங்களுடன் வைப்பு அமைப்புப் பத்திரம் ஒன்றும் பெற வேண்டும். இது, தேவையான போது தகைமை அடைமானத்தைச் சட்டமுறை அடைமானமாக மாற்றிக் கொள்ள ஒரு உறுதிப்பத்திரம் ஆகும்.

## 6. முதல் அடைமானம் பெறவேண்டும்

அடைமானக் கடன் வழங்கும்போது, வங்கியர், இரண்டாவது அடைமானம் பெறுபவராக இருக்கக்கூடாது. இரண்டாவது அடைமானம் பெறவேண்டிய சூழ்நிலைகளில் சொத்துரிமை ஆவணங்களை ஆய்ந்தபின் முதல் அடைமானம் பெற்றவருக்கு இச்சொத்தின் மீது மேலும் கடன் கொடுக்கக் கூடாது என்றும் கடனாளி கடனைத் திருப்பியவுடன் சொத்துரிமை ஆவணங்களைச் சேர்ப்பிக்க வேண்டும் எனவும் தகவல் அனுப்புவது அவசியம்.

சட்டமுறை அடைமானம் பெற, கடனைப் பதிவாளரிடம் பதிவு செய்யவேண்டும். இதற்கு விதிகளும் நிபந்தனைகளும் உள்ள அடைமானப் பத்திரத்தில் அடைமானம் தருபவர் கையொப்பமிட்டு மேலும் இரண்டு சாட்சியங்களும் கையொப்பமிட வேண்டும்.

## 7. போதுமான எச்சத்தொகை

சரியாகச் சொத்தினை மதிப்பிட இயலாமை, சொத்துக்களின் விலையில் ஏற்ற இறக்கம், மற்றும் அவற்றை

விற்பதில் சிரமம் ஆகிய காரணங்களால் சொத்தின் மதிப்பில் தேவையான எச்சத்தொகை ஏற்படுத்த வேண்டும். பொதுவாகச் சொத்துக்களுக்குக் கடன் அளிக்கும்போது 50% எச்சத்தொகை ஏற்படுத்தப்படுகிறது.

### 8. வருமானவரி அதிகாரியிடமிருந்து சான்றிதழ்

அடைமானம் கொடுக்கப்பட்ட சொத்தின் மதிப்பு ரூ.50,000/-க்கு மேல் இருந்தால் அடைமானம் தருபவருக்கு வருமானவரிப் பாக்கி எதுவுமில்லை என்ற வருமானவரிச் சான்றிதழ் பெறவேண்டும்.

### ஆயுள் காப்பீட்டுப் பத்திரங்கள் (Life Insurance Policy)

ஆயுள் காப்பீடு, காப்பீட்டு நிறுமத்திற்கும் காப்பீடு செய்யப்படுபவருக்கும் இடையே உள்ள ஒரு ஒப்பந்தம். இந்த ஒப்பந்தப்படி காப்பீடு நிறுமம், யாருடைய நன்மைக்காகக் காப்பீடு செய்யப்படுகிறதோ அவர் இறந்தபின் ஒரு குறிப்பிட்ட தொகை தருவதாக ஒப்புதல் அளிக்கிறது. காப்பீடு இருவகைப்படும்.

1. முழு ஆயுள் காப்பீடு

2. கால முதிர்வுக் காப்பீடு

### 1. முழு ஆயுள் காப்பீடு

முழு ஆயுள் காப்பீட்டில் முனைமம் ஒருவரின் ஆயுள் முழுவதும் செலுத்தப்படுகிறது. காப்பீட்டுத் தொகை அவர் இறந்தபோது கொடுக்கப்படுகிறது.

### 2. கால முதிர்வுக் காப்பீடு

இதில் ஒரு குறிப்பிட்ட காலம் அல்லது காப்பீடு செய்யப்பட்டவரின் மரணம் இதில் எது விரைவில் நிகழ்கிறதோ அந்தக்காலம் வரை முனைமம் செலுத்த வேண்டும். காப்பீட்டுத்

தொகை குறிப்பிட்ட கால முடிவில் அல்லது மரணம் நிகழ்ந்தபோது கொடுக்கப்படுகிறது.

**காப்பீட்டு ஒப்பந்தத்தின் தன்மைகள்**

1. காப்பீட்டு ஒப்பந்தங்கள் பரிபூரண நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்படுத்தப்படுகின்றன. அதாவது காப்பீடு செய்யப்பட்டவர் தன்னுடைய வாழ்க்கையைப் பற்றி முழு உண்மைகளையும் வெளியிட வேண்டும்.

2. காப்பீட்டு செய்யும் போது காப்பீடு செய்யும் உரிமை இருக்க வேண்டும்.

**காப்பீடு செய்யும் உரிமை யாருக்கு உண்டு?**

1. ஒரு நபர் தன் மீதும் தனது மனைவி மீதும்

2. மனைவிக்குத் தன் கணவர் மீது உரிமை உண்டு

3. பெற்றோர்களுக்குத் தம் குழந்தைகள் மீது மேலும் பிள்ளைகளுக்குத் தம் பெற்றோர் மீது

4. ஒரு கடனாளிக்குக் கடனீந்தோர் மீது காப்பீடு செய்ய உரிமை உண்டு.

**ஆயுள் காபீட்டுப் பத்திரத்தின் நன்மைகள்**

1. இது மிக எளிதில் ரொக்கமாக மாற்றக்கூடிய பிணையமாகும். காப்பீட்டு நிறுமம் காப்பீட்டுத் தொகை எந்த நேரமும் கொடுக்கத் தயாராக இருக்கும்.

2. கடனைத் திரும்பப் பெறுவது உறுதியானது. பத்திரத்தின் சரண்மதிப்பு வரை கடன் கொடுத்தால் கடன் தொகையைக் காப்பீட்டு நிறுமத்திலிருந்து எளிதில் பெறலாம்.

3. முனைமத் தொகையை முறையாகச் செலுத்தினால் சரண் மதிப்பு உயர்ந்து கொண்டே போகும். ஆகவே பத்திரத்தின் மதிப்புக் குறைய வாய்ப்பு ஏதுமில்லை.

4. பிணையத்தின் மதிப்பை அறிந்து கொள்வது எளிது.

5. பத்திரத்தை வங்கியர் பெயருக்கு மாற்றும் சட்டச் சடங்குகள் மிகவும் குறைவு.

**குறைகள்**

1. காப்பீட்டு ஒப்பந்தம் பரிபூரண நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது. காப்பீடு பெறுபவர் தன் வாழ்க்கையைப் பற்றிய முக்கிய உண்மைகளை முழுமையாக வெளியிட வேண்டும். அவர் ஏதாவது உண்மையை மறைத்தால் காப்பீடு ஒப்பந்தம் செல்லாததாகிவிடும். காப்பீடு பெறுபவர் அனைத்து உண்மைகளையும் வெளியிட்டாரா இல்லையா என்பதை வங்கியர் அறியமுடியாது.

2. முனைமத் தொகையைச் சரிவரச் செலுத்தாவிடில் பத்திரம் காலாவதி ஆகிவிடும். ஆகவே செலுத்திய தொகை திரும்பப் பெற முடியாது. மேலும் ஒரு குறைந்த அளவு காலத்திற்கு முனைமத் தொகை செலுத்தினால் மட்டுமே சரண்மதி கொடுக்கப்படும்.

3. காப்பீட்டு ஒப்பந்தத்தில் 'தற்கொலைச் சரத்து' ஒன்று உள்ளது. அதன்படி காப்பீடு பெறுபவர் தற்கொலை செய்து கொண்டால் ஒப்பந்தம் செல்லாததாகிவிடும்.

4. காப்பீடு பெறுபவருடைய வயதைக் காப்பீடு நிறுமம் ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிடில் காப்பீட்டுத் தொகையைக் கோரும்போது பிரச்சினைகள் எழ வாய்ப்புண்டு.

### முன்னெச்சரிக்கைகள்

1. வங்கியர், கால முதிர்வுக் காப்பீட்டுப் பத்திரங்களை ஏற்க வேண்டும். அவைகள் குறிப்பிட்ட காலத்தில் முதிர்வடைவதால் வங்கியருக்கு தான் அளிக்கும் கடன் எப்போது திரும்பிவரும் என்பது நிச்சயமாகத் தெரிகிறது.

2. காப்பீட்டுப் பத்திரம் வழங்கும்போது சில நேரங்களில் வயதின் அத்தாட்சியைக் கேட்பதில்லை. ஆனால் காப்பீட்டுத் தொகையை வழங்கும் நேரத்தில் வயது சரியானதா என்று அறிந்த பின்பே தொகை வழங்கப்படுகிறது. ஆகவே வயது, காப்பீட்டுக் கழகத்தால் ஒத்துக் கொள்ளப்பட்டதா என்பதை வங்கியர் சரிபார்க்க வேண்டும்.

3. கடன் கோருபவர், முனைமத் தொகையைச் சரிவரச் செலுத்தியிருக்கிறாரா என அறிய வேண்டும். மேலும் கடைசியாகச் செலுத்திய முனைம ரசீதினைக் காப்பீட்டுப் பத்திரத்துடன் சேர்த்துப் பெற வேண்டும். மேலும் முனைமம் தவறாமல் செலுத்துவதாகவும் முனைம இரசீதுகளை வங்கியருக்குச் சமர்ப்பிப்பதாகவும் வாடிக்கையரிடம் உறுதிமொழி எழுத்து மூலம் பெறவேண்டும்.

4. காப்பீட்டுப் பத்திரத்தின் சரண் மதிப்பைப் பொறுத்தே கடன் தொகையை நிர்ணயம் செய்ய வேண்டும். பொதுவாகச் சரண்மதிப்பில் 95% வரை கடனாக அளிக்கலாம்.

5. காப்பீட்டுப் பத்திரம் உரிய முறையில் வங்கியரின் பெயருக்கு உரிமை மாறுதல் செய்யப்பட வேண்டும். முறையாக முத்திரையிடப்பட்ட தனி ஆவணத்தின் மூலம் அல்லது பத்திரத்தின் மூலம் உரிமை மாறுதல் செய்யலாம். உரிமை மாறுதலை காப்பீட்டு நிறுமத்தின் ஏடுகளில் பதிவு செய்தல் அவசியம்.

6. உரிமை மாறுதல் அறிவிப்பை வங்கியர் காப்பீட்டு நிறுமத்திற்கு அனுப்ப வேண்டும்.

## தவணை வைப்பு இரசீது (Fixed Deposit Receipt)

வங்கியிலிருந்து அவசரத் தேவைக்குக் கடன்பெறத் தவணை வைப்பு இரசீது சிறந்த பிணையமாகும். விலையில் ஏற்ற இறக்கம், பற்றுப் பொறுப்பை ஏற்படுத்தல், மதிப்பிடல், உரிமையை அறிதல் ஆகிய பிரச்சனைகள் இதில் இல்லை. இருப்பினும் வங்கியர் பின்வரும் முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்ளுவது அவசியம்.

1. மற்ற வங்கிகள் வழங்கிய தவணை வைப்பு இரசீதுக்குக் கடன் தரக்கூடாது. ஏனெனில் அந்த வங்கிகளுக்கு அவை மீது பற்றுரிமை இருக்கலாம். ஆகவே கடன் தருமுன், இரசீது தமது வங்கியர் வழங்கியதா என்றும் அது கடன் கேட்பவரின் பெயரில் இருக்கிறதா என்றும் உறுதி செய்ய வேண்டும்.

2. அதே வங்கியின் மற்றொரு கிளை வழங்கிய இரசீதுக்குக் கடன் வழங்கலாம். கிளை வங்கி வழங்கிய இரசீதுக்குக் கடன் அளிக்குமுன் அந்தக் கிளைக்குப் பற்றுரிமை இருக்கிறதா என அறிய வேண்டும். இருப்பின், இரசீது வழங்கிய கிளையை, இரசீதின் மீது பற்றுரிமையைக் குறிப்பெழுதச் சொல்லிப்பெற வேண்டும்.

3. இளவல் பெயரில் உள்ள தவணை வைப்பு இரசீதுக்குக் கடன் அளிக்கக் கூடாது. கடனளிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால், கடன், இளவலின் தேவைகளுக்கே பெறப்படுகிறது என்றும் மேலும் கடன்தொகை இளவலின் பெயரில் வைப்பாக இருக்கும் என்றும் பொறுப்பாளரிடமிருந்து உறுதிமொழி பெறவேண்டும்.

4. கடனுக்குப் பிணையமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட தவணைவைப்பு இரசீது, வாடிக்கையரால், போதிய முத்திரை ஒட்டப்பட்டு மேலும் அதன் மீது கையெழுத்திடப்பட்டு வங்கியரிடம் கொடுக்கப்பட வேண்டும். இதோடு ஒரு உறுதிச்சீட்டு மற்றும் பெந்தகக் கடிதம் வாடிக்கையர் தரவேண்டும். இதனால், வைப்புத்தொகை முதிர்வடையும்போது கடனுக்கு அதை நேர் செய்து கொள்ள வங்கியர் அங்கிகரிக்கப்படுகிறார்.

5. பொதுவாக 25% எச்சத்தொகை ஏற்படுத்தப்படுகிறது. சில நேரங்களில் இதைத் தளர்த்தலாம்.

6. ரிசர்வ் வங்கியின் வழிகாட்டலின் படி கடனுக்கு வட்டி வசூலிக்கப்படுகிறது. தவணைவைப்புக்காக வட்டியின்மேல் 2% அதிகமாக வசூலிக்கப்படுகிறது.

7. கடன் அளித்தபின் இரசீதின் மீது பற்றுரிமையைக் குறிப்பெழுத வேண்டும். இதன்மூலம் வைப்பாளருக்குத் தவறுதலாக வங்கியர் பணம் வழங்குவது தவிர்க்கப்படுகிறது.

8. கூட்டுப்பங்கு நிறுமத்திற்கு தவணை வைப்பு இரசீதின் மீது கடன் வழங்கும்போது, வங்கியரின் பற்றுப்பொறுப்பை நிறுமப் பதிவாளரிடம் பற்றுப் பொறுப்பை ஏற்படுத்திய 21 நாட்களில் பதிவு செய்ய வேண்டும்.

9. மூன்றாம் நபரில் பெயரிலுள்ள இரசீது பிணையமாகக் கொடுக்கப்பட்டால் அதன் மீது கடன் வழங்கலாம். முறையாக அதன் உரிமையாளரால் விடுவிக்கப்பட்ட இரசீதினை வங்கியர் பெறவேண்டும்.

## ஏட்டுக்கடன் (Book Debts)

ஏட்டுக்கடன் என்பது ஒரு வாணிகத்திற்குக் கடனாளி களிடமிருந்து வரவேண்டிய கடனாகும். ஏட்டுக்கடனை பிணையமாக வழங்கி வங்கியரிடம் கடன்பெறமுடியும். இவற்றை முக்கியப் பிணையமாக ஏற்பதில்லை. முக்கியப் பிணையத்துடன் இவை அதிகப்படியான பிணையமாகப் பெறப்படுகிறது.

ஏட்டுக்கடனைப் பிணையமாகப் பெறுவதில் பல இடர்கள் உள்ளன

1. பிணையத்தின் மதிப்புக் கடனாளியின் கடனைத் திருப்பித்தரும் திறனைப் பொறுத்தே அமைகிறது.
2. வராக்கடன் அதிகமானால் பிணையத்தின் மதிப்புக் குறைகிறது.
3. கடனைத் திருப்பிப் பெறுவதில் காலதாமதமும் சிரமங்களும் அதிகம்.

## முன்னெச்சரிக்கைகள்

1. ஏட்டிலுள்ள கடன் செல்லத்தக்கதா எனவும் அந்தக் கடனாளிகள் நிதிநிலைமை நன்றாக இருக்கிறதா எனவும் அறியவேண்டும்.
2. வங்கியர், சட்டமுறை உரிமை மாறுதல் பெறவேண்டும். இது எழுதப்பட்டு வாடிக்கையரால் கையொப்பமிடப்பட வேண்டும். இதற்கெனக் குறிப்பிட்ட படிவம் ஏதுமில்லை. கடனாளியைக் கடன் தொகையை வங்கியரிடம் செலுத்தச் சொல்லி ஒரு ஆணைமட்டும் கொடுக்க வேண்டும்.
3. உரிமை மாறுதல் அறிவிப்பைக் கடனாளிகளுக்கு, அனுப்பி அவர்களுக்குள்ள பொறுப்பினை வங்கியர் தெரிவிக்க வேண்டும். மேலும் அறிவிப்புப்

பெற்றதையும் கடன் தொகையை உறுதிசெய்யவும் இது போன்ற உரிமை மாறுதல் அறிவிப்புப் பெற்றிருக்கிறதா என்பதையும் தெரிவிக்கச் சொல்லி வங்கியர் கேட்கவேண்டும்.

4. கடனாளிகளிடமிருந்து நேரடியாகப் பெற்ற தொகையை வங்கியருக்குச் செலுத்துவதாக, வாடிக்கையாரிடமிருந்து உறுதிக் கடிதம் ஒன்றுபெற வேண்டும்.

5. கூட்டுப்பங்கு நிறுமத்தின் ஏட்டுக்கடன் ஏற்கப்பட்டால் கூட்டுப்பங்கு நிறுமப் பதிவாளரிடம் பற்றுப் பொறுப்பைப் பதிவுசெய்ய வேண்டும்.

**தங்க நகைகள் (Gold Ornaments)**

தங்க நகைகளுக்குக் கடன் தருவதில் வங்கியருக்கு எந்தவித நட்டமுமில்லை. தங்கநகைகளின் மதிப்பு உயர்ந்து கொண்டே இருக்கிறது. மேலும் அதனை விற்று ரொக்கமாக மாற்றுவது மிக எளிது. இருப்பினும் பின்வரும் முன்னெச்சரிக்கைகள் அவசியமாகிறது.

1. வாடிக்கையருக்கே நகைக்கடன் அளிக்க வேண்டும். வாடிக்கையாளராக இல்லாவிட்டால் கடன்கேட்பவர் முறையாக அறிமுகப்படுத்தப்பட வேண்டும். நகைகள் தனக்குச் சொந்தமானவை என்ற வாடிக்கையரின் உறுதிமொழியின் அடிப்படையில் கடன் வழங்கப்படுதல் அவசியமாகிறது.

2. அடகு வைப்பவர் நகைகளின் உண்மையான உரிமையாளரா என்பதைச் சரிபார்க்க வேண்டும். இதை நிரூபிக்க அவரிடம் தக்க சான்றிதழ் கேட்டுப் பெறுதல் நல்லது.

3. கற்கள் பதிக்கப்பட்ட நகைகளின் உண்மையான மதிப்பை அறிவது கடினம். அத்தகைய நகைகளை

இயன்றவரை தவிர்க்க வேண்டும். மேலும் கடன் கேட்பவர் தவிர மற்றவரின் பெயர் அல்லது பெயரின் தலைப்பெழுத்துக்கள் உள்ள நகைகளைத் தவிர்க்க வேண்டும்.

4. அடகாகத் தந்த நகைகளுடன் ஒரு கடனுறுதிச்சீட்டும் பெறவேண்டும்.

5. கடனைத் திரும்பப் பெறும்போது அடகு பெற்ற நகைகள் திரும்பத்தரப்பட வேண்டும். மேலும் நகைகளை முழுமையாக ஏற்றுக்கொண்டதற்கு வாடிக்கையரிடம் இரசீது பெறுதல் அவசியம்.

6. நகையின் பெயரில் கடன் வழங்குகையில் தகுந்த எச்சத்தொகை ஏற்படுத்த வேண்டும். பொதுவாகக் குறைந்த எச்சத்தொகையே ஏற்படுத்தப்படுகிறது.

7. கடனைத் திருப்பித் தராதபோது, நகைகளை ஏலத்தில் விற்கலாம். விற்றுவந்த தொகை, கடனை விடக் குறைவாகயிருந்தால் கடனுறுதிச் சீட்டின் அடிப்படையில் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர முடியும்.

21

# துணைப்பணிகள்

## (Subsidiary Services)

வணிக வங்கிகள், வைப்புகளுக்குப் பாதுகாவலனாகவும் கடன் அளிப்பவராகவும் மட்டும் அல்லாமல் வாடிக்கையாளர்களுக்குப் பலதரப்பட்ட பணிகளைச் செய்கின்றன. வங்கிகளின் நடவடிக்கைகள் தொடர்ந்து மாறி, அவை இன்று சேவை நோக்குடையவைகளாகச் செயல்படுகின்றன.

வங்கிகளின் துணைப்பணிகளை இருவகையாகப் பிரிக்கலாம்.

1. முகவாண்மைப் பணிகள் (Agency Services)

2. பொதுப்பயன் பணிகள் அல்லது பலவகைப்பணிகள் (General Utility Services or Miscellaneous Services)

## I. முகவாண்மைப் பணிகள் (Agency Services)

பின்வரும் பணிகளைச் செய்யும்போது வங்கியர், வாடிக்கையரின் முகவராகிறார்.

1. பணம் செலுத்தும் மேலும் வசூலிக்கும் பணிகள் (Payment and Collection)

2. பங்கு மாற்றகப் பத்திரங்களை வாங்கலும் விற்றலும் (Purchase and Sale of Securities)

3. பொறுப்பாண்மையர் (Trustee)

4. நிறைவேற்றாளர் மற்றும் நிர்வாகி (Eexcutorand Administrator)

## 1. செலு ,துதல் மேலும் வசூலிக்கும் பணிகள்

வாடிக்கையருக்காகக் காப்பீடு முனைமம், சந்தா, வாடகை மேலும் சம்பளம் ஆகியவற்றை வங்கியர் செலுத்துகிறார்கள். மேலும் பங்காதாயம், தவணை வைப்புகளுக்கு வட்டி, கடன் பத்திரத்தின் மீது வட்டி, வாடகை உறுதிப்பத்திரத்தின் மீது பணம் ஆகியவற்றை வாடிக்கையருக்காக வசூல் செய்கிறார்கள். தனது சார்பாக இந்த வேலைகளைச் செய்ய வங்கியருக்கு அதிகாரம் அளிப்பதால், வாடிக்கையர் சிறுவேலைகள் செய்வதிலிருந்து விடுபட முடிகிறது. வங்கிகள் இந்தப் பணிக்கு மிகக் குறைந்த கட்டணமே பெறுகின்றன. ஆனால், இதன்மூலம் வாடிக்கையரின் நன்மதிப்பைப் பெறமுடிகிறது. டேனன் என்பவர் இது வங்கியின் தொழிலை உயர்த்தும் மறைமுகச் சொத்து என்று கருதுகிறார்.

வங்கியர் இன்னின்ன பணிகளைச் செய்ய வேண்டுமெனக் குறிப்பிட்டு எழுதப்பெற்ற ஒரு ஆணையை, வாடிக்கையரிடமிருந்து பெறவேண்டும். வங்கியரின் பொறுப்பு இந்தப் பணிகளுக்கு மட்டுமே உரியது. வங்கியர், பணம் செலுத்தும்போது, மேலும் பெறும்போது வாடிக்கையருக்கு அறிவிப்புக் கொடுக்க வேண்டும். வங்கியரின் நடவடிக்கைகள் உண்மையானதாகவும் மேலும் வாடிக்கையரின் ஆணைப்படியும் இருக்க வேண்டும்.

வாடிக்கையரின் ஆணை தெளிவாக இருக்கவேண்டும். விவாதத்திற்குரிய அர்த்ததைத் தரும் வார்த்தைகள் இருக்கக் கூடாது. தெளிவில்லாத நிபந்தனைகள் இருந்தால், அதனால் ஏற்படும் நட்டங்களுக்கு வங்கியர் பொறுப்பாகமாட்டார்.

இவ்விதப் பணிகளில் ஈடுபடும்போது உரியகாலத்தில் பணத்தைச் செலுத்தவேண்டும். மேலும் குறிப்பிட்ட காலத்தில் தொகையை வசூலித்து வாடிக்கையரின் கணக்கில் வரவு வைக்க வேண்டும். சில நிறுமங்கள் பங்காதாயம் பெற பங்காதாய ஆணையுடன் உரிமைச் சீட்டினை (Coupon) இணைத்திருக்கும். உரிமைச்சீட்டு வங்கியர் வசம் ஒப்படைக்கப்பட்டால், உரிமைச் சீட்டுப் புத்தகத்தில் பதிய வேண்டும். உரியகாலத்தில் அச்சீட்டினை அனுப்பிப் பங்காதாயத்தை வசூலிக்க வேண்டும்.

**2. பங்கு மாற்றகப் பத்திரங்களை வாங்குதலும் விற்றலும்**

பங்கு மாற்றகப் பத்திரங்களை வாடிக்கையருக்காக வாங்குவதும், விற்பதும் வங்கிகளின் ஒரு முக்கியப் பணியாகும். வாடிக்கையர் இந்த வேலையை ஒப்படைக்கும்போது, வங்கியர் அவரிடம் தெளிவான ஆணையை இதற்கான ஒரு சிறப்புப் படிவத்தில் பெறவேண்டும். எந்தவகையான பத்திரங்களை வாங்க அல்லது விற்கவேண்டும். வாங்க வேண்டிய உயர்ந்தபட்ச, மேலும் குறைந்தவிலை, மற்றும் யாருடைய பெயரில் வாங்க வேண்டும் என்ற விபரங்களைக் குறிப்பிட வேண்டும். இந்த விபரங்களை ஒரு பதிவேட்டில் பதிந்து வைக்க வேண்டும்.

வாடிக்கையரிடமிருந்து வாங்குவதற்குத் தாக்கீது பெற்றவுடன், வங்கியர் பங்கு மாற்றகத் தரகர் மூலம் பங்குகளை வாங்க ஆணை பிறப்பிக்க வேண்டும். இந்தியாவில் வங்கியர்கள் பங்கு மாற்றகத்தில் உறுப்பினர்களாக இல்லை. ஆகவே தரகர்களின் மூலம் செயல்படுகிறார்கள். பங்குகளைப் பெறும்போது, மாற்றுப்பத்திரம் மேலும் அதனைச் சார்ந்த ஆவணங்கள் முறையாக இருக்கிறதா எனச்சரிபார்க்க வேண்டும். பங்குகளை வாங்கியவுடன் வாடிக்கையரின் கணக்குப் பற்றெழுதப்படுகிறது. பங்குகளை விற்கும்போது விற்று வந்த தொகை கணக்கில் வரவெழுதப்படுகிறது. இந்தப் பணிக்காக வங்கியர் குறைந்த தொகையைக் கட்டணமாகப் பெறுகிறார்கள்.

பங்குகளை வாங்கும்போது, வாடிக்கையரின் பெயரை பங்குமாற்றத் தரகரிடம் தெரிவிக்கக் கூடாது. அதே போலப் பங்குகளை விற்கும்போது தரகரின் பெயரை வாடிக்கையரிடம் தெரிவிக்கக் கூடாது. அப்படித் தெரிவிப்பது வாடிக்கையருக்கும் தரகருக்கும் ஒப்பந்தத்தை ஏற்படுத்துவதற்கு இணையாகும். இச்சந்தர்ப்பங்களில் வங்கியருக்குப் பொறுப்பு ஏதும் இல்லாமல் ஆகிவிடும்.

பங்குமாற்றகப் பத்திரத்தில் முதலீடு செய்வது பற்றி வாடிக்கையருக்கு அறிவுரை தருவது மற்றொரு பணியாகும். வங்கியருக்குப் பலவகையான பத்திரங்களைப் பற்றிய விபரமும்,

பங்கு மாற்றகத்திலிருந்து தேவையான தகவல்களும் இப்பணிக்குத் தேவை. இப்பணியைத் திறம்படச் செய்ய நாணயமும் முன்னெச்சரிக்கையும் அவசியம்.

**3. பொறுப்பாண்மையர்**

பொறுப்பாண்மையராகச் செயல்பட வங்கியர் மிகவும் தகுதி வாய்ந்தவர். ஏனெனில் :

அ) வங்கியர் ஒரு நிறுவனமாக இருப்பதால், நீண்ட ஆயுள் உண்டு.

ஆ) தனியாள் பொறுப்பாண்மையரிடம் எதிர்பார்க்க முடியாத நாணயமும், நேரம் தவறாமையும் வங்கியரிடம் உண்டு.

இ) சிறந்த அறிவும் அனுபவமும் உள்ள வல்லுநர்கள் வங்கியில் இருப்பதால் பொறுப்பாண்மையைத் திறமையாக நிர்வகிக்க முடியும்.

ஈ) வங்கியர் பல பொறுப்பாண்மைகளை நிர்வகிப்பதால் நிர்வாகச் செலவு சிக்கனமானதாக இருக்கும்.

பொறுப்பாண்மையராக நியமிக்கப்பட்டவுடன், வங்கியர் சொத்துக்களின் முழு விபரங்களைப் பெற்று அவைகள் வில்லங்கமில்லாதவைகளா என அறிய வேண்டும்.

சொத்துக்களை பொறுப்பாண்மைப் பத்திரத்திலுள்ள விதிகளின்படி நிர்வகிக்க வேண்டும். அவைகளை, ஒருநபர் தன்னுடைய சொத்துக்களை எவ்விதம் கையாளுவாரோ அதே விதத்தில் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சந்தேகம் நேரிடின், ீதிமன்றத்தின் அறிவுரையைப் பெறவேண்டும். சில சந்தர்ப்பங்களில் தன்னுடைய முடிவின்படி செயல்படலாம். அச்சந்தர்ப்பங்களில் நாணயமாகவும், நேர்மையாகவும் செயல்பட வேண்டும்.

பொறுப்பாண்மைப் பணத்தை, இந்திய பொறுப்பாண்மைச் சட்டம், பிரிவு 20-இன் படி அங்கீகரிக்கப்பட்ட பத்திரங்களில் மட்டும் முதலீடு செய்யலாம். பொறுப்பாண்மைப் பத்திரத்தில் வழிமுறைகள் குறிப்பிடப்பட்டிருந்தால், அதன்படி முதலீடு செய்ய வேண்டும்.

பொறுப்பாண்மையை நிறைவேற்றும்போது பொறுப் பாண்மைப் பத்திரத்தில் கூறப்பட்ட விதிகளிலிருந்து மாறுபடக் கூடாது. அப்படி மாறுபட்டால் அது நம்பிக்கை மீறுதலாகும். மேலும் பொறுப்பாண்மைப் பணத்தை தவறுதலாகப் பயன்படுத்தியதற்காக தண்டனைக்குள்ளாவார்.

**4. நிறைவேற்றாளர் மேலும் நிர்வாகி**

நிறைவேற்றாளர் என்பவர் உயிலில் உள்ள ஆணையை உயிலில் உள்ளபடி சொத்துக்களைப் பெற்று, கடன்களை அடைத்து, மிகுதி சொத்துக்களை வாரிசுதாரரிடம் ஒப்படைக்கிறார்.

ஒருவர் உயில் ஏதும் எழுதாமல் இறந்துவிட்டால், அவருடைய கடன்களை அடைத்து சொத்துக்களை வாரிசுகளுக்கு வழங்கும் பொறுப்பை நீதிமன்றம் ஏற்றுக்கொள்ளும். இப்பணியை நீதிமன்றம் தானே செய்ய முடியாது, என்ற காரணத்தால், ஒரு வங்கியிடமோ அல்லது தனிப்பட்ட ஒருவரிடமோ இப்பணியை ஒப்படைக்கும் இப்பணியை ஒபபடைக்கப்பட்டவர் நிர்வாகி எனப்படுவர்.

வங்கியர், நிறைவேற்றாளராகவோ அல்லது நிர்வாகியாகவோ நியமிக்கப்படலாம். நிறைவேற்றாளர் என்றால், உயிலில் கொடுக்கப்பட்ட வழிமுறைகளின்படியும் நிர்வாகி என்றால், நிர்வாக உரிமைக் கடிதத்தின் (Letter of Administration) நிபந்தனைகளின்படியும் பொறுப்புக்களை நிறைவேற்ற வேண்டும். கடனீந்தோர், தாம் கொடுத்த கடனை ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் நிரூபிக்கும்படி முக்கிய நாளிதழ்களில் அறிவிக்க வேண்டும். அதன் அடிப்படையில் கடன் தொகையைச் செலுத்தவேண்டும். மிகுதி சொத்துக்களை இறந்தவரின் வாரிசுதாரர்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும்.

## II. பொதுப்பயன் பணிகள்

### 1. பாதுகாப்பு வசதி

விலை மதிப்புள்ள பொருள்களைப் பாதுகாப்புக்காக பெறுவது நவீன வங்கிகளின் மற்றுமொரு சிறப்பான பணியாகும். நகைகள், சொத்துரிமை ஆவணங்கள் மேலும் பத்திரங்கள் ஆகியவை வங்கியரால் பாதுகாப்புக்காகப் பெறப்படுகின்றன. இந்தப் பொருள்களைப் பாதுகாக்க, வங்கிகள் தீயினால் அழிக்கமுடியாத மேலும் திருடமுடியாத திடமான அறைகளை ஏற்படுத்தியுள்ளன.

#### பாதுகாப்புப் பெட்டக வசதி

பாதுகாப்புப் பெட்டகங்கள் வாடிக்கையருக்கு வாடகைக்குக் கொடுக்கப்படுகின்றன. வாடிக்கையர், பெட்டகத்தில் தனது விலை மதிப்புள்ள பொருள்களை வைத்துப் பாதுகாத்துக் கொள்ளலாம். பெட்டகத்தில், பல்வேறு அளவுகளில் எண்கள் குறிப்பிடப்பட்டுள்ள பெட்டிகள் அசைக்க முடியாதவண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. அப்பெட்டிகளின் அளவிற்குத் தகுந்தாற்போல் வாடகை நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பெட்டிகள் குறைந்தபட்சம் ஓர் ஆண்டுக்கு வாடகைக்குக் கொடுக்கப்படுகிறது. வாடகை ஒராண்டுக்கு முன்பணமாகப் பெறப்படுகிறது. இந்தப் பெட்டிகளுக்கு இரண்டு சாவிகள் இருக்கும். ஒன்று வங்கியரிடமும் மற்றொன்று வாடிக்கையரிடமும் இருக்கும். இரண்டு சாவிகளையும் ஒரே நேரத்தில் பயன்படுத்தினால் மட்டுமே இப்பெட்டியைத் திறக்க முடியும்.

வாடிக்கையருக்கு மட்டுமே இப்பெட்டிகள் வாடகைக்குக் கொடுக்கப்படுகின்றன. வாடகைக்குக் கொடுக்குமுன் வாடிக்கையரின் பெயர், விலாசம் மேலும் மாதிரிக் கையொப்பம் ஆகியவை பெறப்படுகின்றன. வாடகைதாரர் அப்பெட்டியில் என்ன பொருள்கள் வைக்கிறார் என்ற விபரங்களை வங்கியருக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. வாடிக்கையர் பெட்டியை எத்தனைத் தடவைகள் வேண்டுமானாலும்

பார்வையிடலாம். ஆனால், இப்பெட்டியைத் திறக்குமுன் வங்கியிலுள்ள பாதுகாப்பது வைப்புப் பதிவேட்டில் வாடகைதாரர் திறப்பதைக் குறித்து வைக்கப்படும். மேலும் அதில் வாடகைதாரர் கையொப்பமிட வேண்டும்.

இம்முறையில் வங்கியருக்கும் வாடகைதாரருக்கும் உள்ள உறவு குத்தகை விடுபவருக்கும் குத்தகை தாரருக்கும் உள்ள உறவே ஆகும். பாதுகாப்புப் பெட்டகத்திற்குத் தேவையான பாதுகாப்பினை வங்கியர் ஏற்படுத்த வேண்டும். வங்கியர் போதுமான அக்கறை எடுக்காவிட்டால் அதனால் ஏற்படும் நட்டங்களுக்கு அவரே பொறுப்பாவார்.

**பாதுகாப்பு வைப்பு**

வாடிக்கையாளர் தம்முடைய பொருள்களை ஒரு பெட்டியில் அல்லது பொட்டலத்தில் வைத்து வங்கியரிடம் கொடுப்பது மற்றொரு முறையாகும். அந்தப்பெட்டி, பாதுகாப்புக்காக நன்றாக மூடப்பட்டிருக்க வேண்டும். மேலும் அதன்மீது வைப்புக்காகக் கொடுப்பவரின் பெயர், விலாசம் ஆகியவை எழுதப்பட்டிருக்க வேண்டும். வங்கியர் பெற்றுக் கொண்டதற்கு இரண்டு படிவங்கள் கொண்ட இரசீது தயாரிக்கிறார். மூலப்பிரதியை வாடிக்கையரிடம் கொடுத்துவிட்டு நகலைத் தன்னிடம் வைத்துக் கொள்கிறார்.

பெட்டியில் உள்ள பொருள்களையும் அதன் மதிப்பையும் அறிவிக்கச் சொல்லி வங்கியர் கேட்கவேண்டும். பின்னர் அதன் விபரம் பாதுகாப்பு வைப்புப் பதிவேட்டில் பதியப்படும். அந்தப் பொருளை வங்கியர் தன்னுடைய உடைமையில் வைத்திருப்பார். பொருள்களைப் பாதுகாப்பு வைப்புக்குப் பெறும்போது வங்கியர் ஒப்படைவு பெறுபவர் ஆகிறார். பொருள்களைப் பாதுகாக்க ஒரு சாதாரண நம்பிக்கையான மற்றும் எச்சரிக்கையுடன் கூடிய நபர் என்னவகையான முன்னெச்சரிக்கைகளை மேற்கொள்வாரோ, அதே முறையில் நடந்து கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக அவர் பாதுகாப்பான மேலும் உறுதியான அறைகளை ஏற்படுத்த வேண்டும்.

பாதுகாப்பு வைப்பு இரசிதினை வாடிக்கையர் சேர்ப்பிக்கும்போது பொருள்களைத் திருப்பித்தர வேண்டும். பொட்டலத்திற்கு எந்தவிதச் சேதமுமின்றி அதே நிலையில் உரிமையாளரிடம் ஒப்படைக்க வேண்டும். பொருள்களை வைப்புக்குக் கொடுத்தவர் இறந்தால், அவருடைய வாரிசுதாரர்களிடம் அவற்றை சேர்ப்பிக்க வேண்டும்.

தேவையான நடவடிக்கைகள் எடுத்த பின்னும் திருட்டோ சேதமோ ஏற்பட்டால் அதற்கு வங்கியர் பொறுப்பாகமாட்டார்.

**மூன்றாவது முறை**

இந்த முறையில் இன்னின்ன பொருள்கள் வங்கியரிடம் ஒப்படைக்கப்படுகிறது என்பதை வங்கியரிடம் காட்டி அதற்குச் சான்றிதழ் பெற்று வங்கியரின் பொறுப்பில் பொருள்கள் கொடுக்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் கொணர்வோர் பத்திரங்களைக் கொடுத்து அதிலுள்ள கூப்பன்களைக் கத்தரித்து அதற்குரிய தொகையை வசூலிக்கச் சொல்வது.

## 2. கடனுறுதிக் கடிதம் வழங்குதல்

பன்னாட்டு வணிகத்தில் ஏற்றுமதியாளரும் இறக்குமதி யாளரும் ஒருவரை ஒருவர் அறிந்திருக்க முடியாததால் இறக்குமதிக்குப் பணம் கொடுப்பது ஒரு பிரச்சினையாகும். இறக்குமதியாளர் பணத்தை உறுதியாகக் கொடுத்துவிடுவார் என்ற நம்பிக்கை இருந்தால்தான் ஏற்றுமதியாளர் சரக்கை அனுப்புவர். இதற்காகச் சரக்கு ஏற்றுமதியாகும் இடத்திலுள்ள வங்கிக்கிளை ஒன்றில் இறக்குமதியாளரைக் கடனுறுதி கணக்கு ஒன்றைத் துவங்கச் சொல்லிக் கேட்பார்.

இறக்குமதியாளர் தன்னுடைய வங்கியரை அணுகி ஏற்றுமதியாளர் சார்பாக ஒரு கடனுறுதிக் கடிதம் கேட்கிறார். வங்கியர் இந்த கடனுறுதிக் கடிதத்தை தன்னுடைய கிளை அல்லது தொடர்வங்கிக்கு அனுப்புகிறார். அந்தக்கிளை வங்கி நன்கு விசாரித்து மனநிறைவு கொண்டபின் இதனை ஏற்றுமதியாளருக்கு அனுப்புகிறது.

கடனுறுதிக்கடிதம் என்பது இறக்குமதியாளரின் வங்கியால் ஏற்றுமதியாளருக்குக் கொடுக்கப்படும் கடிதமாகும். இதில் ஏற்றுமதியாளர் ஒரு குறிப்பிட்ட தொகைவரை இறக்குமதியாளர் மீது மாற்றுச்சீட்டு எழுத அங்கிகாரமும் மேலும் ஆவணங்களை சேர்ப்பிக்கும்போது தொகையைக் கொடுப்பதாகவும் உறுதி கொடுக்கப்படுகிறது. இதன் அடிப்படையில் ஏற்றுமதியாளர் சரக்குகளை அனுப்புவர்.

ஏற்றுமதியாளர் சரக்குகளைக் கப்பலில் அனுப்பும்போது தேவையான ஆவணங்களைத் தயாரித்து மேலும் இறக்குமதியாளர் மீது ஒரு மாற்றுச்சீட்டினை எழுதுகிறார். அந்தச் சீட்டினை வங்கி பெற்று அது கடனுறுதிக் கடிதத்தின்படி இருக்கிறதா எனச் சரிபார்த்த பின் தொகையை ஏற்றுமதியாளரிடம் கொடுக்கிறது. ஆவணங்கள், மாற்றுச் சீட்டினை ஏற்றபின் அல்லது பணம் செலுத்தியபின் இருக்குமதியாளரிடமிருந்து கொடுக்கப் படுகிறது. இந்த ஆவணங்களைச் சமர்ப்பித்து, இறக்குமதியாளர் கப்பலிலிருந்து பொருள்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

**கடனுறுதிக் கடிதத்தின் வகைகள்**

1. ஆவணங்களுள்ள - ஆவணங்களற்ற கடனுறுதிக் கடிதம் (Documentary and Clean Letter of Credit)

2. மாற்றக்கூடிய - மாற்ற முடியாத கடனுறுதிக்கடிதம் (Revocable and Irrevocable Letter of Credit)

3. நிலையான - சுழலும் கடனுறுதிக்கடிதம் (Fixed and Revolving Letter of Credit)

4. உறுதி - உறுதி செய்யப்படாத கடனுறுதிக் கடிதம் (Confirmed and unconfirmed Letter of Credit)

5. தன் பொறுப்பு - தன் பொறுப்பில்லாக் கடனுறுதிக் கடிதம் (With or without Recourse Letter of Credit)

### 1. ஆவணங்களுள்ள - ஆவணங்களில்லாத கடனுறுதிக் கடிதம்

மாற்றுச்சீட்டினை ஆவணங்களுடன் தான் எழுதமுடியும் அல்லது ஆவணங்களைச் சேர்ப்பிக்கும் போது தான் பணம் கொடுக்கப்படும் என்ற நிபந்தனையுடன் இது வழங்கப்படுவது.

இவ்வகைக் கடனுறுதிக் கடிதத்தில் ஆவணங்கள் இணைக்கப் படுவதில்லை. ஆவணங்கள் இல்லாமல் மாற்றுச்சீட்டு எழுதலாம் மேலும் ஆவணங்களைச் சேர்ப்பிக்காமலே பணம் கொடுக்கப்படும். இவ்வகைக் கடனுறுதிக் கடிதம் மிக நல்ல நிதி நிலைமை உள்ள வாடிக்கையருக்கே கொடுக்கப்படுகிறது.

### 2. மாற்றக்கூடிய - மாற்றமுடியாத கடனுறுதிக் கடிதம்

கடனுறுதிக் கடிதம் வழங்கும் வங்கியர் ஏற்றுமதியாளருக்கு அறிவிப்பு ஏதும் கொடுக்காமலே கடிதத்தை இரத்து செய்யலாம் அல்லது மாற்றலாம் என்ற அடிப்படையில் இது வழங்கப்படுகிறது.

ஏற்றுமதியாளரின் அனுமதியின்றி மாற்றமுடியாத கடனுறுதிக் கடிதத்தை மாற்றவோ ரத்து செய்யவோ முடியாது இவை ஒரு குறிப்பிட்ட தொகைக்கு அல்லது குறிப்பிட்ட கால முதிர்வுக்கு வழங்கப்படுகிறது.

### 3. நிலையான - சுழலும் கடனுறுதிக் கடிதம்

ஒரு குறிப்பிட்ட தொகை அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு நிலையான கடனுறுதிக் கடிதம் வழங்கப்படுகிறது. குறிப்பிட்ட தொகை வரை ஏற்றுமதியாளர் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாற்றுச் சீட்டினை எழுதலாம். குறிப்பிட்ட தொகையைப் பெற்றவுடன் கடிதம் காலாவதி ஆகிவிடும். காலம் குறிப்பிட்டிருந்தால், குறித்தகாலம் முடிந்தவுடன் காலாவதியாகிவிடும்.

சுழலும் கடிதத்தில், அனுமதிக்கப்பட்ட தொகை அனுமதிக்கப்பட்ட காலம்வரை நிலையாக இருக்கும். ஒரு மாற்றுச்சீட்டு எழுதியவுடன் தொகை குறையும். அந்த

மாற்றுச்சீட்டு மதிக்கப்பட்டவுடன் தொகை தானாகவே புதுப்பிக்கப்பட்டுவிடும். எடுத்துக்காட்டாக ஒரு கடனுறுதிக் கடிதம் ரூ.1,00,000க்கு கொடுக்கப்படுகிறது. ஏற்றுமதியாளர் ரூ.40,000க்கு ஒரு மாற்றுச்சீட்டு எழுதுகிறார். இப்பொழுது அனுமதிக்கப்பட்ட தொகை ரூ.60,000 ஆகக் குறைந்துவிடும். ஏற்றுமதியாளர் அந்தத் தொகையைக் கொடுத்தவுடன், ஏற்றுமதியாளருக்கு அனுமதித்த தொகை ரூ.1,00,000 ஆகிவிடும்.

### 4. உறுதி - உறுதியில்லாக் கடனுறுதிக் கடிதம்

கடனுறுதிக் கடிதம் வழங்கும் வங்கி அதன் கிளை அல்லது தொடர் வங்கியைக் கடனுறுதிக் கடிதத்தை உறுதி செய்ய கேட்கிறது. அவ்வாறு உறுதி செய்யப்பட்டால், ஏற்றுமதியாளருக்குப் பணம் கொடுக்கும் பொறுப்பினை அந்தக்கிளை தனியாக ஏற்றுக் கொள்கிறது. உறுதி செய்யப்பட்ட கடனுறுதிக் கடிதத்தை, அதனுடன் தொடர்புடைய எல்லா நபர்களின் ஒப்புதல் இல்லாமல் மாற்றம் செய்யவோ அல்லது இரத்து செய்யவோ முடியாது.

உறுதி செய்யப்படாத கடனுறுதிக் கடிதத்தில் செலுத்தும் வங்கியின் உறுதி ஏதும் இராது.

### 5. தன் பொறுப்பு - தன் பொறுப்பில்லாக் கடனுறுதிக் கடிதம்

ஏற்றுமதியாளர் தானே மாற்றுச்சீட்டு எழுதி மேலும் அது அவமதிக்கப்பட்டால் தானே அதனை உடையவருக்குப் பொறுப்பு ஏற்பது, தன் பொறுப்புக் கடனுறுதிக் கடிதமாகும்.

மாற்றுச்சீட்டு அவமதிக்கப்பட்டால், ஏற்றுமதியாளர் அதற்குப் பொறுப்பு ஏதும் ஏற்காவிடில் அது தன்பொறுப்பில்லாச் கடனுறுதிக் கடிதம் எனப்படும்.

### 3. பயணியர் காசோலை (Traveller's Cheque)

உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் அடிக்கடி பயணம் செய்பவர்களுக்குப் பயணியர் காசோலை பயன்படுகிறது. பின்வருவன பயணியர் காசோலையின் தன்மைகளாகும்.

1. பயணியர் காசோலையை எவரும் பெறமுடியும்.

வாடிக்கையராக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

2. இவை ரூ.50, ரூ.100, ரூ.500 மேலும் ரூ.1,000 என்ற அளவில் வழங்கப்படுகின்றன. ஒரு நபர் எத்தனைக் காசோலைகளையும் பெறலாம்.

3. எவ்வளவு தொகைக்குக் காசோலைகள் வேண்டுமோ அந்தத் தொகையை வங்கியில் முதலில் செலுத்த வேண்டும்.

4. பயணியர் காசோலையை வாங்கும்போது, அதனை வாங்குபவர் காசோலையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கையொப்பமிட வேண்டும்.

5. காசோலைக்குப் பணம் பெறும்போது பயணியர் காசோலையில் தேதி மேலும் பணம் பெறும் இடம் ஆகியவற்றை நிரப்பிக் கையொப்பமும் இடவேண்டும்.

6. பயணியர் காசோலை வழங்கும் வங்கியின் கிளைகளிலோ அல்லது அதன் அங்கீகாரம் பெற்ற வங்கியின் கிளைகளிலோ பணம் பெறமுடியும்.

7. தற்போது கடைகள், விடுதிகள் முதலியவை பயணியர் காசோலைகளை ஏற்கின்றன.

8. பயணியர் காசோலைகளுக்கு முதிர்வு காலம் எதுவும் இல்லை.

9. பயணியர் காசோலை தனிநபர் பெயரில் மட்டுமே வழங்கப்படுகிறது.

**4. நிதி இட மாற்றம் (Transfer of Funds)**

வங்கிகள் தங்களது கிளைகள் மூலம் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பணத்தை மாற்ற உதவுகின்றன. பணவிடை, அஞ்சல்வழி மாற்றம், தந்திவழி மாற்றம் ஆகியவை பணம் அனுப்பப் பயன்படுகின்றன.

### பணவிடை (Demand Draft)

"ஆணையில் குறிப்பிடப்பட்டுள்ள நபருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்குமாறு ஒரு வங்கியின் கிளை அதே வங்கியின் கிளைக்கு அனுப்பும் ஆணை பணவிடை எனப்படும்".

பணம் அனுப்ப விரும்பும் நபர், தேவையான தொகையை வங்கியில் செலுத்திப் பணவிடை பெறலாம். அதை மற்றவருக்கு அனுப்பி வைத்தால் அவர் அவருடைய இடத்திலுள்ள வங்கிக் கிளையில் பணம் பெற்றுக் கொள்ள முடியும். பணவிடை வழங்குவதற்கு வங்கிகள் சிறிய தொகையைக் கட்டணமாகப் பெறுகின்றன. கட்டணத்தொகை அனுப்பும் தொகையில் அடிப்படையில் பெறப்படுகிறது. பணவிடை பெற விரும்புவர் வங்கியின் வாடிக்கையராக இருக்க வேண்டிய அவசியமில்லை. பணவிடை செல்லுபடியாகும் காலம் வழங்கிய தேதியிலிருந்து ஆறுமாதம் ஆகும்.

### அஞ்சல்வழி மாற்றம் (Mail Transfer)

வங்கியில் ஏதாவது ஒரு கணக்கு வைத்திருப்வர்களுக்கே இந்த வசதி அளிக்கப்படுகிறது. பணம் அனுப்புபவர், அனுப்ப வேண்டிய தொகையுடன் சிறிய கட்டணத்தொகையையும் சேர்த்து வங்கியில் செலுத்துகிறார். பணத்தைப் பெற்றபின் வங்கி, தொகையை அனுப்பவேண்டிய வங்கிக் கிளைக்கு அஞ்சல் மூலம் தாக்கீது அனுப்புகிறது. பணம் அனுப்பப்பட்ட வங்கிக்கிளை அந்தத் தொகையை வாடிக்கையரின் கணக்கில் வரவெழுதுகிறது. இது பணம் அனுப்புவதற்குச் சிக்கமான, எளிதான மேலும் வசதியான முறையாகும்.

### தந்திவழி மாற்றம் (Telegraphic Transfer)

அஞ்சல் வழிப்பணம் அனுப்புதலில் காலதாமதம் ஏற்பட வாய்ப்புண்டு. ஆகவே பணம் அனுப்புவர் விரும்பினால் தந்தி அல்லது தொலைபேசி மூலம் பணமாற்றம் செய்யப்படுகிறது. இம்முறையில் மிகத்துரிதமாகப் பணம் அனுப்பப்படுகிறது. ஆனால் இதற்குச் செலவுகள் அதிகம்.

## 5. பதிலிப்பணி (Factoring)

கடனாளர்களிடமிருந்து கடன் தொகை சரிவரத் திரும்ப வரவில்லையென்றால் தொழில் நிறுவனங்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. கடன் தொகை முறையாக வராவிட்டால் ஏற்படும் பிரச்சினைகளைக் குறைப்பதற்காக வங்கிகள் பதலிச் சேவையை மேற்கொண்டுள்ளன.

இம்முறையில் வங்கி

அ) ஏட்டுக்கடனை வாங்கிக் கொள்கிறது.

ஆ) விற்பனை ஏட்டினை நிர்வகிக்கிறது.

இ) வாங்கிக் கொண்ட ஏட்டுக்கடனுக்கு, கடன் வசூலாகுமுன் வாடிக்கையருக்குப் பணம் செலுத்துகிறது.

ஈ) ஏட்டுக்கடனுக்குப் பணம் வசூலிக்கிறது.

உ) கடன் அளித்தல் சம்பந்தமாக அறிவுரை வழங்குகிறது.

இந்தப் பணியின் மூலம் தொழில் நிறுவனங்கள் கடன் வசூலிக்கும் பணியை வங்கிகள் ஏற்றுக் கொள்கின்றன. இதனால் தொழில் நிறுவனங்கள் கடனாளி மேலாண்மையை எளிதில் செய்கின்றன.

## 6. கடன் அட்டை (Credit Cards)

சேமிப்பு அல்லது நடப்புக் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கையருக்குக் கட்டணம் ஏதுமில்லாமல் கடன் அட்டைகள் வழங்கப்படுகின்றன. கடன் அட்டை வைத்திருப்போர், சில குறிப்பிட்ட கடைகளில் ஒரு குறிப்பிட்ட தொகை வரை உடனடியாகப் பணம் செலுத்தாமல் பொருள்கள் வாங்கலாம். பொருள்களை விற்ற தொழில் நிறுவனங்கள் வங்கியிலிருந்து பணம் பெறுகின்றன. வாடிக்கையரிடமிருந்து பணம்பெறும் பொறுப்பினை வங்கிகள் ஏற்கின்றன.

மேலும் வாடிக்கையருக்கு ரொக்கம் தேவைப்பட்டால்

கடன் அட்டையை வழங்கிய வங்கியின் எந்த ஒரு கிளையிலும் ஒரு குறிப்பிட்ட தொகை வரை ரொக்கம் பெற்றுக் கொள்ளலாம். கடன் அட்டை வைத்திருப்பவர்களுக்குக் கொடுக்கப்படும் வசதிகள் அதிகரித்துக் கொண்டேயிருக்கின்றன.

**7. அயல்நாட்டுச் செலவாணி பெறுதலும், வழங்குதலும் (Dealing in Foreign Exchange)**

நம்நாட்டு வாணிகர்கள் அல்லது தொழில் நிறுவனங்கள், அயல் நாட்டிலிருந்து பொருள்களை அல்லது இயந்திரங்களை இறக்குமதி செய்யும் போது, அவர்களுக்கு மைய வங்கியின் நியதிகளுக்குட்பட்டு அயல்நாட்டுச் செலாவணியை வழங்குதலும், அதே போன்று நம்நாட்டுப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் போது கிடைக்கும் அயல்நாட்டுச் செலாவணித் தொகையை நம்நாட்டுப் பணமாக வாடிக்கையருக்கு மாற்றி வழங்குவதையும் வங்கியர் மேற்கொள்கின்றனர்.

மேலும், வங்கிகள் ஏற்றுமதி இறக்குமதிக் கடன்களை அளிக்கின்றன. இயந்திரங்களை இறக்குமதி செய்ய அயல்நாட்டுச் செலாவணியில் கடன்கள் அளிக்கின்றன. வாடிக்கையர் சார்பாக வியாபார விசாரணைகளை மேற்கொண்டு அவர்களது பொருள்களுக்குத் தகுந்த இறக்குமதியாளர்களை அடையாளம் காட்டுகிறார்கள். அயல்நாடுகளிலுள்ள வியாபாரம் சம்பந்தப்பட்ட செய்திகளைப் பெற்று அவைகளை ஏற்றுமதியாளர் மேலும் இறக்குமதியாளர்களுக்குத் தெரிவிப்பது வங்கிகளின் முக்கிய அயல்நாட்டு வணிகப்பணியாகும்.

**8. பரிசுக் காசோலை (Gift Cheque)**

திருமணம், பிறந்தநாள் போன்ற முக்கிய நிகழ்ச்சிகளில் பரிசு வழங்குவதற்காக வங்கிகள் பரிசுக் காசோலைகள் வழங்குகின்றன. பரிசுக் காசோலையைப் பெறுபவர் வங்கியின் வாடிக்கையராக இருக்க வேண்டிய அவசியமில்லை. தேவையான ரொக்கத் தொகையை வங்கியில் செலுத்தி எவரும் பரிசுக் காசோலை பெறலாம். காசோலையை வழங்கும் எல்லாக் கிளைகளிலும் பணத்தைப் பெறமுடியும்.

★★★★★

## 9. உடனடி ரொக்க முறை (Teller System)

தற்காலத்தில் பெரிய வங்கிகளில் காசோலை விடுத்து ரொக்கம் பெற வேண்டுமாயின், ஒருவர் அரைமணி நேரத்திற்கும் அதிகமாகக் காத்திருக்க வேண்டும். ஏனெனில் வாடிக்கையர் விடுக்கும் காசோலையை, வங்கியில் எழுத்தர் ஒருவர் பெற்று, கணக்கு ஏட்டில் உள்ள வரவிருப்பைச் சரிபார்த்து, மேலாளருக்கு அனுப்புவார். பிறகு மேலாளர் தம்முடைய ஒப்புதலுடன் காசாளருக்கு அனுப்புவார். அதற்குப் பின்னரே, காசாளர் அதற்கான ரொக்கத்தை வழங்குவார். இத்தகைய காரணங்களினால் ரொக்கம் வழங்க மிகத் தாமதமேற்படுகிறது.

இவ்விதத் தாமதங்களைத் தவிர்க்க ஏற்பட்டதே உடனடி ரொக்கமுறை. ரொக்கம் வழங்க ஒவ்வொரு வங்கியும் ஒவ்வொரு முறையைப் பின்பற்றி வருகிறது.

ஒரு குறிப்பிட்ட அளவு தொகைக்கு மேற்படாமல் எழுதப்பட்ட காசோலையை வாடிக்கையர், செல்லேட்டுடன் வங்கியில் சமர்ப்பித்தால், அவ்வங்கியின் காசாளர் கணக்கில் உள்ள வரவிருப்பைச் சரிபார்க்காமல், உடனடியாக ரொக்கம் வழங்குவர். இம்முறையில் செயல்படுவதை உடனடி ரொக்க முறை என்று குறிப்பிடுவர். இத்தகைய முறை பல வங்கிகளால் பின்பற்றப்பட்டு வருகின்றன.

## 10. வாடிக்கையருக்கு அறிவுரை வழங்கல் (Consultancy Service)

தொழில் முனைவோர், தொழிலதிபர்கள் மேலும் வணிகர்களுக்குத் தேவையான நிதி, பொருளாதாரம், மேலாண்மை மேலும் தொழில்நுட்பம் சம்பந்தப்பட்ட ஆலோசனைகளை வங்கிகள் வழங்குகின்றன. இதற்கெனப் பல வங்கிகள் தனிப்பிரிவினை ஏற்படுத்தியிருக்கின்றன.

வங்கிகளின் பொதுப்பயன்பாட்டுப் பணிகள் அதிகரித்துக் கொண்டு இருக்கின்றன. ஏனெனில் இந்திய வங்கிகள் இலாபமீட்டுவது மட்டுமின்றிச் சமுதாயப் பொறுப்பினையும் ஏற்றுக் கொண்டுள்ளன.

★★★★★★★